# செந்தமிழ்ப் பூம்பொழில்





தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

வெளியீடு எண் 649.

உ

குருபாதம்

# செந்தமிழ்ப் பூம்பொழில்

( ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியின் அருள் மொழிகள் )

[ ஐந்தாந் தொகுதி ]

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

திருவுளப்பாங்கின்வண்ணம்

ஞானசம்பந்தம் பதிப்பகத்தில் வெளியிடப்பெற்றது.







தருமையாதீனம்

19—10—1973

14-3

உ

குருபாதம்

# முன்னுரை

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் ஞானராஜதானி. இதில், ஆதிபரமாசாரியர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் நிறுவியருளிய ஞானபீடத்தினின்றும் அவரது அருள்நோக்கின் வழியே சிவஞானம் என்றென்றும் சுடர்விட்டு ஒளிர்வது. அந்தச் சிவஞானம், உபதேச வாயிலாக மட்டுமன்றி, நூல்கள், அருளுரைகள் என்பவை வாயிலாகவும் மக்கட்கு விளங்கி வருவதாகும்.

ஆதி பரமாசாரியர் அருளிச்செய்த நூல்கள் முத்தி நிச்சயம், சிவபோக சாரம் முதலாகப் பல. பத்தாவது மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக பரமாசாரிய சுவாமிகள் திருவருட்பாக்கள் பலவற்றை அருளிச்செய்தார்கள். ஸ்ரீ வெள்ளியம்பலவாணத் தம்பிரான் சுவாமிகள் முதலிய திருக்கூட்டத்து அடியார்களும் அவ் வக்காலத்தில் செய்த நூல்களும், உரைகளும் மிகப் பலவாகும்.

அண்மையில் இவ்வாதீனத்தில் 25 ஆவது குருமகா சந்நிதானமாக வீற்றிருந்தருளி 26 ஆண்டுகட்குமேல் அருளாட்சி செலுத்தியவர்கள் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ஆவார்கள். அவர்கள் செய்தருளிய அருஞ் செயல்கள் எண்ணற்றவை. சமயத்திற்கும், சமுதாயத்திற்கும் அவர்கள் அளித்தருளிய நலங்கள் பலவற்றுள், தங்கள் ஆதீன வெளியீடாகிய 'ஞானசம்பந்தம்' திங்கள் இதழுக்கு அரிய உண்மைகள் பலவற்றை விளக்கி அருளுரைகள் பல வழங்கியருளியது குறிப்பிடத்தக்க அருட்செயலாகும். அவ்வருளுரைகள் பல அவர்கள் காலத்திலே 'செந்தமிழ்ப்பூம்பொழில்' என்ற தொகுதிகளாக அவ்வப்பொழுது வெளிவந்துள்ளன. இதுகாறும் நான்கு தொகுதிகள் அங்ஙனம் வெளிவந்துள்ளன.

எஞ்சியுள்ள அருளுரைகள் பலவும் ஒருங்கமைந்து விளங்குவது 'செந்தமிழ்ப் பூம்பொழில்' இவ் ஐந்தாவது தொகுதி.

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் திருமுறைப் பாராயணத்தில் பெரிதும் ஈடுபாடு உடையவர்கள். திருமுறைகளிலே நீதியையும், சாத்திரப் பொருளையும் கண்டு திருவுளம் மகிழ்பவர்கள். அதன் பயனாக அவர்கள் ஞானசம்பந்தத்திற்கு வழங்கிய அருளுரைகளில் பெரும்பாலன அருள்நெறியையும், அறநெறியையும் ஒருங்கிணைத்துக் காட்டுவனவாய் அமைந்துள்ளன.

இத்தொகுதியில் முதல் நான்கு அருளுரைகள் திருவள்ளுவர் கருத்தும் சமயாசாரியர் நால்வரது திருவுள்ளங்களும் ஒன்றியிருத்தலைத் தெளிவிக்கின்றன. 'திருக்குறளும், மெய்கண்ட நூல்களும்' என்னும் அருளுரை, சந்தானாசாரியர்களது திருவுள்ளமும் அவ்வாறு திருவள்ளுவர் கருத்தோடு ஒருமித்திருத்தலை விளக்குகின்றது.

'மெய்கண்ட நூல்கள்' எனப்படும் சாத்திரங்களுக்கு மூலம் பன்னிரு திருமுறைகளாகிய தோத்திரங்களே' என்பதைப் பலரும் எடுத்துக் கூறுவர். அதனை உள்ளங்கை நெல்லிக்கனிபோல இனிது விளக்கும் பன்னிரண்டு அருளுரைகள் கயிலைக் குருமணியவர்களால் வழங்கப்பெற்றிருத்தலை, 'தோத்திரமும் சாத்திரமும்' என்னும் தலைப்பில் இதன்கண் காணலாகும். 'குருவருள்' என்னும் தலைப்பின்கீழ் விளங்குகின்ற ஐந்து அருளுரைகள் திருமூலர் அருளிச்செய்த திருமந்திரத்தின் அரும்பொருள்கள் சிலவற்றைச் சிறந்தெடுத்துத் தெளிவிக்கின்றன.

மக்கள் அறிந்து கடைப்பிடிக்கத் தக்கதாகிய நன்னெறி 'பொது, சிறப்பு' என இரு வகைப்படும். அவற்றுள் பொது நெறியே 'அறநெறி' எனப்படுகின்றது. சிறப்புநெறியே சமயம். அஃது இங்கு 'அருள்நெறி' எனக் குறிக்கப்படுகின்றது. எனவே, அறநூல்கள் பொதுநூலும், சமய நூல்கள் சிறப்பு நூலும் ஆதல் தெளிவு வடமொழியில் வேதம் பொதுநூல்; சிவாகமம் சிறப்பு நூல். அவ்வாறே தமிழில் திருக்குறள் பொதுநூல்; திருமுறைகள் சிறப்பு நூல். அருள் நெறிக்கும், அறநெறிக்கும் உள்ள வேறுபாடு பொதுவும், சிறப்பும் ஆகின்ற அவ்வளவே. அதனை

நன்கு உணர்விப்பனவாக ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் வழங்கியுள்ள அருளுரைகள் இருபத்தாறு இதன்கண் அமைந்து விளங்குகின்றன. அவற்றுள் மக்கள் அடையத்தக்க பதினறு பேறுகள்போலப் பதினறு அருளுரைகள் அறநெறியை முதலாகக் கொண்டு, 'அறநெறியும் அருள்நெறியும்' என்னும் தலைப்பின்கீழ் உள்ளன. பத்து அருளுரைகள் அருள்நெறியை முதலாகக்கொண்டு 'அருள்நெறியும் அறநெறியும்' என்னும் தலைப்பின்கீழ்க் காணப்படுகின்றன. 'இத்தலைப்பின்கீழ் உள்ள பொருள்கள் இன்ன' என்பதை முதற்கண் உள்ள பொருள் அடக்கத்தினலே அறிந்து மகிழ முடியும்.

இத்தகைய அறநெறி அருள்நெறி அறிவுக் கருவூலமாய் உள்ள இச் செந்தமிழ்ப் பூம்பொழிலின் ஐந்தாவது தொகுதி மக்கட்குப் பலவகையில் நற்பயன் விளைப்பதாகும். இதில் ஆதி பரமாசாரியர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள் வரலாறும் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியின் அருள் வரலாறும் முதற்கண் இடம் பெற்று விளங்குதல் இத்தொகுதிக்குப் பெருஞ் சிறப்பைத் தருகின்றது. இத்தொகுதி இங்ஙனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களின் அருள்வழித் தோன்றலாய் ஆதீன ஞானபீடத்து அமர்ந்து, இதுபொழுது அருளாட்சி செலுத்தி வரும் 26ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் திருவுளப்பாங்கின் வண்ணம், கயிலைக் குருமணியின் 2ஆவது குருபூஜை விழா மலராக வெளிவருகின்றது.

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களது ஐந்தெழுத்து உபதேசம்போல ஐந்தாவது தொகுதியாக வெளிவருகின்ற இப்பொழில் வெளியீட்டினை அன்பர்கள் பெற்றுப் படித்து அறநெறி, அருள்நெறி, தோத்திரம், சாத்திரம் முதலியவற்றின் உண்மைகளை உணர்ந்து, குருவருட்கும், திருவருட்கும் உரியவராய், எல்லா நலங்களும் இனிது எய்துவார்களாக.

இங்ஙனம்,
அடியேன்,
சி. அருணைவடிவேல்,
ஆதீனப் புலவர்.

தருமையாதீனம்,
தருமபுரம்
19—10—'73.

உ

குருபாதம்

# பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| | | பக்கம் |
| முன்னுரை | ... ... | v |
| ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள் வரலாறு | ... | க |
| ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களின் அருள் வரலாறு | | ரு |
| திருவள்ளுவரும் திருஞானசம்பந்தரும் | ... ... | 1 |
| திருவள்ளுவரும் திருநாவுக்கரசரும் | ... ... | 8 |
| திருவள்ளுவரும் திருநாவலூரரும் | ... ... | 18 |
| வள்ளுவரும் வாதவூரரும் | ... ... | 24 |
| திருக்குறளும் மெய்கண்ட நூல்களும் | .... .... | 28 |
| தோத்திரமும் சாத்திரமும் | .... | 36 முதல் 96 |
| 1. தன்னை அடைந்தார் வினைதீர்க்கும் தலைவன் | | 36 |
| 2. ஆள் அல்லேன் எனலாமே? (1) | .... | 40 |
| 3. அடிகள் வேடங்கள் | .... .... | 46 |
| 4. தோடும் குழையும் | .... .... | 51 |
| 5. நீறணி அண்ணல் | .... .... | 56 |
| 6. விடையேறும் விமலன் | .... .... | 61 |
| 7. மதியணி வள்ளல் | .... .... | 67 |
| 8. ஒரு திருஅடி | .... .... | 72 |
| 9. தலையாயவர் தங்கடன் | .... .... | 77 |
| 10. ஆளல்லேன் எனலாமே? (2) | .... .... | 84 |
| 11. நினைப்பும் மறப்பும் | .... .... | 89 |
| 12. அகப்பூசை | .... .... | 94 |
| குருவருள் | .... | 97 முதல் 119 |
| 1. நீத்தார் நிலையம் | .... .... | 97 |
| 2. கன்னிக்குப் பிள்ளைகள் ஐவர் | .... .... | 101 |
| 3. அருள் மரபு | .... .... | 106 |

| | | | | |
|---|---|---|---|---|
| | | | | பக்கம் |
| 4. | இறைநிலை | .... | .... | 112 |
| 5. | அருள்நிலை | ... | .... | 115 |
| நெறியும் அருள்நெறியும் | | .... | 120 முதல் | 208 |
| 1. | அறநெறியும் அருள்நெறியும் | ... | .... | 120 |
| 2. | ஆதிபகவன் | .... | .... | 126 |
| 3. | வாலறிவன் | .... | .... | 130 |
| 4. | மலர்மிசை ஏகினுன் | .... | .... | 134 |
| 5. | வேண்டுதல் வேண்டாமை இலான் | | .... | 138 |
| 6. | இறைவன் | .... | .... | 142 |
| 7. | பொறிவாயில் ஐந்தவித்தான் | .... | .... | 147 |
| 8. | தனக்குவமை இல்லாதான் | .... | .... | 153 |
| 9. | அறவாழி அந்தணன் | .... | .... | 158 |
| 10. | எண்குணத்தான் | .... | .... | 164 |
| 11. | நீடிய நல்வாழ்வு | .... | .... | 170 |
| 12. | துன்பத் தொலைவு | .... | .... | 177 |
| 13. | வினைநீக்கம் | .... | .... | 182 |
| 14 | மனக்கவலை மாற்றல் | .... | .... | 191 |
| 15. | உலகியல் நீங்கல் | .... | .... | 197 |
| 16. | பிறவி நீக்கம் | .... | .... | 203 |
| நெறியும் அறநெறியும் | | .... | 209 முதல் | 264 |
| 1. | இல்லென வேண்டா | .... | .... | 209 |
| 2. | திருவடியே தஞ்சம் | .... | .... | 214 |
| 3. | ஒழுக்க வகை | .... | ... | 222 |
| 4. | கல்வி கேள்வி அறிவு | .... | .... | 229 |
| 5, | அற உணர்வு | .... | .... | 234 |
| 6. | இறை வழிபாடு | .... | .... | 239 |
| 7. | புலனடக்கம் | .... | .... | 244 |
| 8. | மெய்யறிவு | .... | .... | 251 |
| 9. | செம்பொருட்காட்சி | .... | .... | 256 |
| 10. | நீத்தார் பெருமை | .... | .... | 260 |

உ

குருபாதம்

# குரு வணக்கம்

முப்பொருள் உண்மை நாளும்
மொழிந்தருள் மெய்கண் டான்தன்

திப்பிய சந்தா னத்துத்
திருநகர்த் தருமை மேவி

இப்புவித் தொடர்பின் நீக்கி
என்னையும் அடிமை கொண்ட

சுப்பிர மணிய ஞான
சம்பந்தன் துணைத்தாள் போற்றி.

திருக்கயிலாய பரம்பரைத்



தருமையாதீனக் குருமுதல்வர்

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

குருபாதம்

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள் வரலாறு

"தமிழ்மணங் கமழும் கமலையம் பதிவாழ்
ஞானசம் பந்தனை வணங்கின்
ஈனசம் பந்தம் இல்லைவி டெளிதே"

தென்பாண்டி நாட்டிலே ஸ்ரீ வில்லிபுத்தூரிலே கார்காத்த வேளாளர் குலத்திலே சுப்பிரமணியப் பிள்ளை என்பவர் கற்பிற் சிறந்த மீனாட்சி அம்மையை மணந்து வாழ்வாங்கு வாழ்ந்து வந்தார். எல்லா நலங்களும் இருந்தும் மகப்பேறு இல்லாக் குறை மனத்தை வருத்தியது. குலதெய்வமாகவும் ஆன்மார்த்த மூர்த்தியாகவும் உள்ள ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானிடத்து நாளும் குறையை விண்ணப்பித்துச் சிறப்பொடு பூசனை புரிந்து வந்தார். சொக்கேசர் திருவருளால் மீனாட்சியம்மையிடத்து ஞானக்குழந்தை சோமவார நாளன்று உதித்தது. திருஞான சம்பந்தரைப்போல இக்குழந்தையும் சிவம் பெருக்கவேண்டும் என எண்ணிய தாய்தந்தையர்கள் குழந்தைக்கு, 'ஞானசம்பந்தர்' எனப் பெயரிட்டனர்.

ஞானசம்பந்தர் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தார். ஐந்தாண்டுப் பிராயத்தில் கலை பயிலத் தொடங்குவித்தனர். ஞானசம்பந்தர் கலைஞானம் யாவும் கல்லாமலே கற்றார்: அதுகண்டு பெற்றோர் வியப்புற்றனர். தமது ஆன்மார்த்த மூர்த்தியைத் தரிசிக்க எண்ணி ஆலவாய்ப் பதிக்குத் தம் ஞானப்புதல்வரையும் உடனழைத்துப் புறப்பட்டனர். அங்கயற்கண்ணி தன்னொடும் அமர்ந்த ஆலவாய்ப் பதியை அடைந்தனர். பொற்றாமரைப் பொய்கையில் நீராடி, புலவர் திலகமாக உள்ள ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானையும் தீந்தமிழின் சுவையாக உள்ள ஸ்ரீ மீனாட்சி அம்மையையும் வணங்கி வழிபட்டுச் சிலநாள் மதுரையிலேயே தங்கினர். பிறகு பெற்றோர் ஸ்ரீ வில்லிபுத்தூர் செல்ல எண்ணி ஆலவாய் அண்ணலிடம் விடைபெற்றனர். ஞானசம்பந்தர்மீது சொக்கேசர் திருவருள் பதிந்தமையால், ஞானசம்பந்தர் பெற்றோர்களைப் பார்த்து, 'தொடர்ந்து நின்ற தாயும் தந்தையும் இத் திருக்கோயிலில் வீற்றிருக்க இவர்களை விட்டு எப்படிப் பிரிவேன்?

என்னுடலுக்குத் தாயுந் தந்தையுமாகிய உங்களுடன்வர இயலாது' என்று கூறினர். அதுகேட்ட பெற்றோர் கலங்கினரேனும், திருவருளால் கிடைத்த குழந்தை திருவருளைப் பெருக்கமுற்படுகிறது. இதுவும் இறைவன் திருவருள்போலும் எனத் தெளிந்து ஸ்ரீ வில்லிபுத்தூருக்குத் திரும்பினர்.

ஞானசம்பந்தர் வழக்கம்போல் ஒருநாள் பொற்றாமரையில் நீராடச் சென்றார். கரையில் தொண்டர்கள் பலர் சிவபூசை புரிவதைக் கண்டுத் தாமும் அவ்வாறு சிவபூசை புரிய எண்ணினார். எண்ணத்தை இறைவன் சந்நிதானத்தில் விண்ணப்பித்தார். கருத்தறிந்து முடிக்கும் கருணை வள்ளல் அன்றிரவு ஞானசம்பந்தர் கனவில் தோன்றி 'ஞானசம்பந்தா! விரும்பிய வண்ணம் நாம் சிவலிங்கத் திருமேனி கொண்டு பொற்றாமரைத் தடாகத்தில் ஈசான மூலையில் கங்கைக்குள் இருக்கிறோம்; நாளைக் காலையில் வந்து நம்மை எடுத்துப் பூசிப்பாயாக' என அருள் பாலித்தார். துயிலுணர்ந்த ஞானசம்பந்தர் சொக்கேசர் பணித்த வண்ணமே பொற்றாமரைத் தடாகத்தில் மூழ்கிச் சிவலிங்கத் திருமேனியைக் கண்ணுக்கினிய பொருளாகப்பெற்றார். பூசனை முறை அறிய ஆசாரியன் வேண்டுமே என எண்ணி ஆலவாயண்ணலிடம் முறையிட்டார். சொக்கேசர் அன்றிரவே ஞானசம்பந்தர் கனவில் எழுந்தருளிவந்து, 'ஞானசம்பந்தா! நமது உபதேச பரம்பரையில் வந்தவர் திருவாரூர் ஞானப்பிரகாசர்; அவரிடம் சென்று உபதேசம் பெற்று நம்மை விதிப்படி பூசிப்பாயாக' என அருளினர். அவ்வண்ணமே கமலை ஞானப்பிரகாசருக்கும் கனவில் தோன்றி, வருகிற சோம வாரத்தன்று ஞானசம்பந்தனுக்கு விதிப்படி ஞானோபதேசம் செய்து சிவபூசை எழுந்தருளப் பண்ணிக்கொடுக்க' என அருளினர்.

ஞானசம்பந்தர் காலையில் எழுந்து திருவாரூருக்குப் புறப்பட்டார். திருவானைக்கா முதலிய தலங்களை வணங்கிச் சோம வாரத்தன்று காலையிலேயே திருவாரூர் சேர்ந்தார். கமலாலயத்தில் நீராடித் திருக்கோயில் சேர்ந்து வலம் வந்த ஞானசம்பந்தர், சித்தீச்சரம் தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் சிவயோகத்தமர்ந்து இருந்த ஞானப்பிரகாசரைக் கண்டவுடன் காந்தங் கண்ட இரும்பைப்போல், இவரே தமது ஆசாரியன் என்றுணர்ந்து திருவடிகளில் விழ்ந்து வணங்கினர். ஞானப்பிரகாசரும் ஞானோபதேசம் செய்து சொக்கநாதர் பூசையும் எழுந்தருளப் பண்ணிக்கொடுத்தார்.

வழக்கம்போல் ஒருநாள் திருக்கோயிலுக்கு எழுந்தருளிய ஞானப்பிரகாசர், வழிபாடு முடித்து அர்த்தயாமம் ஆகும் வரையில் சித்தீச்சரம் தக்ஷிணமூர்த்தி சந்நிதியில் சிவயோகத்திலிருந்து அர்த்தயாம பூசையைத் தரிசித்து வீடு திரும்பினர். திரும்புகையில் கைவிளக்குப் பணிவிடைக்காரன் உறங்கிவிட, அக் கைவிளக்குப் பணியை ஞானசம்பந்தரே மிக்க மகிழ்ச்சியுடன் மேற்கொண்டார். வீடு சேர்ந்த ஞானப்பிரகாசர் ‘ நிற்க ’ எனப்பணித்து உள்ளே சென்ருர். ஞானசம்பந்தர், ‘ ஆசாரியர் ஆணை, நிற்க என்பதுதானே என்று எண்ணியவராய், அவரால் நிலை நிறுத்தப்பெற்ற சிவயோக சமாதியிலே நின்ருர். அன்றிரவு பெருமழை பெய்தும் ஞானசம்பந்தர் மீது ஒருதுளி கூடப் படவில்லை. விளக்கோ சுடர்விட்டெரிந்தது. விடியலில் இந்நிலைகண்ட குருபத்தினியார் குருவுக்குத் தெரிவிக்க, ஞானப்பிரகாசரும் ஞானசம்பந்தரது பெருநிலை கண்டு வியந்து ‘ அப்பனே ! நீ ஆசாரியனுகும் தகுதியுடையாய் ; ஆகவே நீ மாயூரத்திற்கு அண்மையில் உள்ளதும், தருமனுல் பூசிக்கப் பெற்றதும், வில்வாரணிய க்ஷேத்திரமுமான தருமபுரத்தில் அமர்ந்து பக்குவ ஆன்மாக்கட்கு உண்மையை உபதேச வாயிலாக உணர்த்துவாயாக ’ என ஆணைதந்தனர். இது முதலாக ஞானசம்பந்தர் குருஞானசம்பந்தராயினர். “ தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல் ” என்பதை நினைத்தார். ஆசாரியர் ஆணையைச் சிரமேற்கொண்டார். தருமபுரம் சார்ந்தார். பல்லாண்டுகள் தருமபுரத்தில் வீற்றிருந்து. பல உயிர்கட்கு உபதேச வாயிலாக உண்மை உணர்த்தினர். சைவ சித்தாந்தத்தைத் தக்க முறையில் பரவச்செய்தார். தமது பேரின்ப அநுபவத்தை எல்லோரும் அநுபவிக்கவேண்டிப் பாடல்கள் வாயிலாக அவற்றை அருளிச்செய்தார். அவை சிவபோக சாரம், சொக்கநாதவெண்பா, முத்திநிச்சயம், சொக்கநாதர் கலித்துறை, ஞானப்பிரகாசமாலை முதலிய எட்டு நூல்களாய் இலங்குகின்றன. இவை பண்டார சாத்திரம் எனப் பகரப்பெறும்.

இவ்வாறு பல்லாண்டு ஞான அரசாட்சி புரிந்த குருஞானசம்பந்தர் சிவசமாதி கூடத் திருவுளங்கொண்டார். தமது சீடர்களில் அதிதீவிர நிலையில் உள்ள ஆனந்தபரவசருக்கு ஞானேபதேசம் செய்து தமது பீடாதிபத்தியத்தை ஒப்புவித்துச் சிவசமாதி கூடினர். அதிதீவிர நிலையிலிருந்த ஆனந்தபரவசர் ஸ்ரீகுருஞானசம்பந்தர் கோயிலுக்கு மேல்பால் சிவசமாதி கூடிவிட்டார். அஃதறிந்த ஏனைய சீடர்கள் குருஞானசம்பந்தர் சந்நிதிசேர்ந்து தங்களுக்குக் குருநாதன் இல்லை என்ற

குறையைப் போக்கிக் குருசந்தான பரம்பரை நீடு வாழ அருள் புரிய வேண்டினர். குருஞான சம்பந்தர் சமாதி நிலையினின்றும் பிரிந்துவந்து தமது சீடர்களுள் ஒருவரான சச்சிதானந்தருக்கு ஞானதீக்ஷை செய்து ஞானசமாதி கைகூடச்செய்து அவரைப் பீடத்திலமர்த்தி வைகாசி மாதம் கிருஷ்ணபக்க ஷஷ்டி திதியில் ஸ்ரீ குருஞானசம்பந்தர் சிவலிங்கத் திருவுருவின் அடியில் சீவ சமாதி கூடினர்.

கி. பி. 16 ஆம் நூற்றாண்டில் ஸ்ரீ குருஞானசம்பந்தரால் தோற்றுவிக்கப்பெற்ற இத் திருத்தருமையாதீனம் மொழித் தொண்டும், சமயத்தொண்டும், சமூகத்தொண்டும் ஒல்லும் வகை யெல்லாம் ஆற்றிவருகின்றது. இதுபொழுது ஞானபீடத்தில் எழுந்தருளியிருந்து அருளாட்சி புரிபவர்களாகிய இருபத்தாறாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஷண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் திருவுளப் பாங்கின் வண்ணம் மேற்குறித்த தொண்டுகள் பலவும் சிறப்புற நிகழ்ந்துவருகின்றன.

வாழ்க தருமையாதீனம்!

வளர்க அதன் பணிகள்!

---

## ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள் தோத்திரம்

சீரணியும் நுதலின்விழி மழுமான் நாகம்
திருந்தும்எரி பொருந்துவிடம் தெரிந்தி டாமல்
தாரணிஅன் பரையாள அவர்போல் வந்த
சைவசிகா மணிஎவர்க்கும் தலைவன் எங்கோன்
காரணியும் நெடியபொழிற் கமலை வேந்தன்
கருணைமழை பொழியும்இரு கடைக்க ணாளன்
பாரணியும் ஞானசம் பந்தன் எந்தை
பரமன்இரு சரணமலர் பரவி வாழ்வாம்.

— ஸ்ரீ சம்பந்தசரணாலயர்.

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்
ஸ்ரீ ஆனந்தபரவசர் பூங்காவில்
ஸ்ரீ காசிவிசுவநாதர் திருக்கோயில் விமான அமைப்பில் திகழும்



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியின் குருமூர்த்த ஆலய விமானம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்



25 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த

பரமாசாரிய சுவாமிகள்

# ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களின் அருள் வரலாறு

முன்னுரை :

கண்ணுதலும் கண்டக்கறையும் கரந்தருளி மண்ணிடையில் மக்கள் மலமகற்றச் சிவபரம்பொருளே குருநாதனாக எழுந்தருளி வந்து உயிர்களை ஆட்கொண்டருளுவான். கடவுள் வழிபாட்டில் குருவழிபாடு முதல் வழிபாடாகும். 'குருவேசிவமெனக் கூறினன் நந்தி' என்பது திருமந்திரம். குருநாதனைத் தரிசித்தலும், குருவார்த்தை கேட்டலும், குருநாதனின் புகழை விரித்துப் பேசுதலும், குருவின் திருவுருவைச் சிந்தித்தலும் உண்மைத் தெளிவை உயிர்கட்கு அளிப்பன; நம்மை வாழ்விப்பன.

தருமையாதீன 25 ஆவது குருமகாசந்நிதானமாய் எழுந்தருளியிருந்து இத் தாரணியெங்கும் சைவமும் தமிழும் தழைத்தினிதோங்க அருளரசு புரிந்த ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களின் அருள் வரலாறு அன்பர்கட்குப் பயன்படும் வண்ணம் இங்குத் தரப்பெறுகின்றது.

பெற்றோர் சிறப்பு :

சிதம்பரம் மிகப்பெரிய புண்ணியத்தலம். சிதாகாசப்பெருவெளியில் ஸ்ரீ நடராஜப்பெருமான் ஞானக்கூத்தியற்றி உலகை உய்விக்கும் திருத்தலம். இத் திருத்தலத்தில் சிவனடியையே இடையறாது சிந்திக்கும் சைவவேளாளராய், குருஞான சம்பந்தரின் தந்தையார் திருப்பெயரைத் தாங்கிய ஸ்ரீ சுப்பிரமணிய பிள்ளை, கணபதி ஆச்சி என்னும் மெல்லியலாரோடு இல்லறமென்னும் நல்லறமியற்றிவந்தார். சிதம்பரம் மேலைவீதியில் திருவாதிரைத் திருமடத்தின் பொறுப்பினை ஏற்று அருளறங்கள் பல செய்தும், சிவனடியார்களுக்குச் சிறப்புற மாகேசுவர பூசைகள் செய்வித்தும், தானதருமங்கள் செய்தும் வாழ்ந்து வந்தது இக்குடும்பம். கணபதி ஆச்சி நடராஜப்பெருமான் திருவருளால் மணிவயிறு வாய்த்தார்.

தெய்வக்குழந்தை கருவுற்றநாள் முதலாகக் கணபதி ஆச்சி நல்ல பல அறிகுறிகளைக் கனவிலும் நனவிலும் கண்டு மகிழ்ச்சியுற்றார்.

ஒருநாள் நள்ளிரவில் சிவனடியார் ஒருவர் சடை முடியோடு அம்மையார் கனவில் தோன்றி 'உனக்கு ஓர் ஆண்மகவு பிறக்கும். அக்குழந்தைக்குச் சிவகுருநாதன் எனப்பெயரிட்டு நம் அடியவனுக்குக' என அருள்மொழி வழங்கி மறைந்தார். வியந்து மகிழ்ந்து எழுந்த அம்மையார் இச்செய்தியை எல்லோருக்கும் அறிவித்து மனங்களித்து இன்புற்ருர்கள்.

ஆனந்த ஆண்டு (1914) ஐப்பசித்திங்கள் இரண்டாம்நாள் ஞாயிற்றுக்கிழமை அம்மையார் அவர்கள் அருட்குழந்தையை ஈன்றெடுத்தார்கள். சைவ உலகின் ஞானச்சுடர் பிறந்தது. தவ விளக்குச் சுடர்விட்டு ஒளி விசிற்று. பிறந்து மொழிபயிலும் பொழுதே பெருமான் திருவடிகளிலே காதல் சிறந்து விளங்கிற்று குழந்தை.

**கல்வி :**

'சான்ருேனுக்குதல் தந்தைக்குக் கடன்' என்ற முறையில் பெற்ருேர், பள்ளியில் சேர்த்து உலகியற் கல்வி அளித்தனர். சிதம்பரம் நாவலர் பள்ளியில் கற்பன கற்றுத் தெளிவெய்திய சிவகுருநாதர் திருமுறைகள் ஓதித் தெளிதல் வேண்டும் என்னும் அருள் வேட்கையுற்ருர். செட்டியார் தேவாரப் பாடசாலையில் முறையாக ஐந்தாண்டுகள் திருமுறைகள் ஓதிப் பயின்று தெளிவுற்ருர்.

**சிவசிந்தனை :**

நடராசப்பெருமான் திருக்கோயில் செல்லும்பொழுதெல்லாம் சிவனடியார்களைப் பணிவோடு வணங்குதலும், சிவபெருமானிடத்தில் ஆராத காதல் உடையவராய் இருப்பதையும் கண்ட பெற்ருேர்கள், இவர் இயல்பு ஏனைய குழந்தைகளினின்றும் வேறுபட்டிருப்பதை உணர்ந்து, எதிர்காலத்தில் மிகச் சிறந்த ஞானியாக விளங்குவார் என்றெண்ணினுர்கள்.

அம்மையார் கணபதி ஆச்சி அவர்களின் குடும்பத்தினர் மிக அதிகமான பக்தி ஈடுபாடுகளில் கனிந்தவர்கள். சிவனடியார்களுக்கு உணவு அளிப்பதில் தனி ஆர்வம் காட்டி வந்தவர்கள். இவ்வாறு முன்னேர்கள் செய்த நற்றவத்தின் பயனுகத்தான் நமக்கு இத்தகைய குழந்தை வந்து தோன்றியது என்ற நம்பிக்கை நாளும் நாளும் கணபதி ஆச்சிக்கு வளர்ந்தது.

**குருகுலவாசம் :**

தருமையாதின மகாவித்துவான், யாழ்ப்பாணம் சுவாமிநாத பண்டிதர் மிகச்சிறந்த அறிஞர். தேவார அடங்கன் முறைப்

பதிப்பை மிகச் செவ்விய முறையில் வெளியிட்டவர். அவர்தம் அருமை மாணவராய் அமர்ந்து பல ஆண்டுகள் கல்வி கேள்வி நலம் பெற்ருர் சிவகுருநாதர். வடமொழி தென்மொழிகளில் வல்லவரானுர். திருமுறைகளில் அழுந்திய ஈடு பாடும் புலமையும் பெற்றுச் சிறந்தார். சூரியனுர்கோயில் ஆதீனம் ஸ்ரீமீனுட்சிசுந்தரதேசிக சுவாமிகளிடம் சென்று தங்கிச் சித்தாந்த சாத்திரங்கள் முதலிய உயரிய நூல்களைக் கற்றுத் தேர்ந்து சமயங்கள், தத்துவங்கள் இவற்றை முறையாக உணர்ந்தார்.

தருமையாதீனத்தில் அடியவராய்த் துறவறம் மேற்கொண்டு சமயப்பணி செய்ய வேண்டும் என்ற எண்ணம் இவருக்கு உறுதி யாக வளர்ந்தது. அதனுல்; அப்போது தருமையாதீனத்தில் அருளாட்சி செய்துவந்த 24வது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர் களிடம் உபதேசம்பெற்று ஞானத்துறவு மேற்கொண்டு, தருமை யாதீன அடியவரானுர்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் இவர்களது பரிபாக நிலையை உணர்ந்து சொக்கநாதர் பூஜையை எழுந்தருளச் செய்து கொடுத்து அணுக்கத் தொண்டராய்த் திருமடத்தின் முக்கிய நிருவாகங்களை உடனிருந்து கண்காணித்து வருமாறு பணித்தார்கள்.

நிருவாகப் பயிற்சி :

ஆதீனத் திருமடத்தின் அன்ருட நிருவாகம், குருபூஜை விழா போன்றவற்றை இவர்கள் கண்காணித்துச் சீர்பெற நடத்திஞர் கள். மெய்கண்டான் சித்தாந்த மாநாடு, பத்தாண்டு ஆட்சி விழா முதலிய திருநாட்களில் இவர்களின் நிருவாகத்திறமை நன்கு வெளிப்பட்டது. 'ஞானசம்பந்த'த்தின் இதழாசிரியராக விளங்கிப் பல்லாண்டுகள் அதனை நன்கு நடத்திவந்தார்கள். இவைகளையெல்லாம் நன்கு அறிந்த 24வது ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் இவர்களை 20—5—1945 அன்று தமக்குப் பிற்ரேன்றலர்க அபிஷேகம் செய்வித்துத்தங்கள் அருளாட்சியை ஒப்புவித்தருளினுர்கள்.

இருபத்தாறு ஆண்டு ஆட்சியில் இவர்கள் தங்கள் ஆதீனத் துக்குட்பட்ட இருபத்தேழு ஆலயங்களுக்கும் குடமுழுக்குச் செய்வித்தும், எல்லா மூர்த்திகளுக்கும் வெள்ளி தங்க ஆபரணங் கள், கவசங்கள் அணிவித்தும், ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசாமிக்கு விலை மதிக்க முடியாத நவரத்தினக் கவசம் செய்வித்தும்,

ஒவ்வோர் ஆலயத்திற்கும் வெள்ளி மஞ்சம், வெள்ளி ரதம், வெள்ளி வாகனங்கள் அமைத்தும், ஆலயங்கள் சிறப்புடன் விளங்கச்செய்த பணி போற்றத்தக்கது. மேலும் தமது ஆட்சியில் இல்லாத பிற ஆலயங்களுக்கும் வாரி வழங்கிய பெருமை இவர்களுக்கு உண்டு. ஆலய விழாக் காலங்களில் தாமே முன்னின்று சிறப்பித்தும், ஆதீன சம்பந்தப்பட்ட இடங்களில் கட்டளைமடம் நிறுவியும், குறிப்புரை ஆராய்ச்சியுரைகளுடன் திருமுறைகளை வெளியிட்டும்சமயத்தை,வளர்த்ததுடன் பலதுறை மேதைகளைச் சிறப்பித்துப் பட்டம் வழங்கியும் ஊக்குவித்தார்கள். பாடல் பெற்ற தலங்கள் அனைத்தும் தரிசனம்செய்து புண்ணிய நதிகளில் நீராடியதோடு, செயற்கரிய செய்கையான கயிலை யாத்திரையை மேற்கொண்டு கயிலாய தரிசனம்செய்து தங்கள் பரம்பரை கயிலாய பரம்பரை என்பதை நிரூபித்துக்காட்டிக் கயிலைக் குருமணியானார்கள். அன்பர்களால் செய்விக்கப்பெற்ற கனகாபிஷேகத்தைக் கொண்டருளினார்கள்.

முத்தித் தலம் மூன்றாகிய " தில்லை ", " திருவாரூர் ", "காசி" இந்தமூன்றின்தொடர்பும்கயிலைக்குருமணி அவர்களுக்கு உண்டு. யாருக்கும் கிடைக்காத பேற்றை இவர்கள் பெற்றார்கள். தில்லையில் அவதரித்தார்கள். திருவாரூரில் தியாகராஜப்பெருமானிடமும், கமலைஞானப்பிரகாசர் தொடர்புள்ள ஸ்ரீ தட்சிணாமூர்த்தியிடமும் ஆழ்ந்த பக்திகொண்டார்கள். தில்லைக் கூத்தனைப் பலகாலும் சென்று தரிசிக்கும் நியமமுடையவர்களாயிருந்தார்கள். காசி யாத்திரையை இவர்கள் அன்பர்கள் பலருடன் பலமுறை செய்துள்ளார்கள். அதற்கேற்க,

" நோயுற் றடராமல் நொந்துமனம் வாடாமல்
பாயிற் கிடவாமல் பாவியேன் - காயத்தை
ஓர் நொடிக்குள் நீக்கியெனை ஒண்போரூ ரையாநின்
சீரடிக்கீழ் வைப்பாய் தெரிந்து "

என்று பெரியோர்கள் பலநாள் வேண்டி நின்ற பேறு இவர்கட்குக் கிடைத்தது. விரோதிகிருது யாண்டு ஐப்பசித்திங்கள் 24ஆம் நாள்(10-11-71)அஷ்டமிதிதியில் காசியைச் சென்றடைந்த அன்றே அன்பர்கட்கு அருள்மொழி வழங்கி வீற்றிருந்த நிலையிலே காசியிலே பரிபூரணமாகும் பேற்றினைப் பெற்றார்கள். ஆதீன வரலாற்றிலேயே காசியில் முத்திப் பேறு அடைந்த பெருமையும் புண்ணியமும் இவர்களுக்கே அமைந்தன.

---

உ

குருபாதம்

# திருவள்ளுவரும் திருஞானசம்பந்தரும் *

'பொதுநெறி, மெய்ந்நெறி' என நன்னெறி இருவகைப் படும். அதனுல், நன்னெறியைக் கூறும் நூல்களும், 'பொதுநூல், சிறப்பு நூல்' என இருவகைப்பட்டு நிற்கும். பொது நூல், நன்னெறியை விரும்பும் பலர்க்கும் ஏற்புடைய வகையில் அதனைப் பொதுப்படவே கூறும். அதற்குப் பயன், பின்னர் அவர் நன்னெறியைச் சிறப்பு வகையில் நன்குணர்ந்து அதன் உண்மைப் பயனைப் பெறுதலேயாகும். ஆயினும், இடைநிலைப் பயனாக அறமும், பொருளும், இன்பமும் பொதுநெறியால் உண்டாகும். பொதுநெறியால் நேரே பெறப்படும் பயன் அறம் முதலிய மூன்றுமே யாதலாலும், அவை மூன்றும் உலகில் நின்று பெறப் படுவன ஆதலாலும் பொதுநெறியை 'உலகியல்' எனக் கூறுவர் உயர்ந்தோர். எனவே, பொது நூல் உலகியல் நூலேயாதல் தெளிவு.

நன்னெறியின் உண்மைப் பயனாவது, புல், பூடு, புழு, மரம் முதலாக, சுரர், அசுரர், மனிதர் ஈறாக உள்ள தாபர சங்கமங்களில் எல்லாப் பிறப்பிலும் சென்று பிறந்து, அலைந்து, இறந்து, மீண்டும் பிறந்து இவ்வாறு உழலாமல், என்றும் ஒருநிலையாய் நின்று பேரின்பத்தை நுகர்ந்திருக்கும் வீட்டுநிலையாம். இந் நிலை, என்றும் ஒருபெற்றியாய்நிற்கும் மெய்ப்பொருளை உணர்தலாலே கிடைப்பதால், அதனை உணரும் நெறியை 'மெய்ந்நெறி' என உயர்ந்தோர் கூறுவர். இம்மெய்ந் நெறியைக் கூறுவனவே சிறப்பு நூல்கள்.

"உலகியல் வேதநூல் ஒழுக்கம் என்பதும்
நிலவுமெய்ந் நெறிசிவ நெறிய தென்பதும்"

(திருஞான - பு 8-20.)

எனச் சேக்கிழார் அருளிச் செய்தலால், 'வேதம் பொதுநூல்' என்பதும், 'சிவாகமம் சிறப்புநூல்' என்பதும் நன்கறியப்படுகின்றன.

---

* 10—10—67 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது

" வேதமொ டாகமம் மெய்யாம் இறைவன்நூல்
ஓதும் பொதுவும் சிறப்பும்என் றுள்ளன "

என்ற திருமூலர் திருவாக்கு, இதனைத் தெளிவாகவே விளக்கு கின்றது.

" சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல " (புறம் - 31)

என்ற ஆன்றோர் சொற்படி, பொருளும், இன்பமும் அறத்தின் வழிப்பட்டனவாதலின், அறம் முதலிய மூன்றையும் கூறும் பொதுநூல், 'அறநூல்' என்றே சொல்லப்படும். அதன் பயனும் அறமும், அது வழியாக வரும் பொருளும், இன்பமுமே யாம். சிறப்புநூல் மெய்ந்நெறியைக் கூறுதலால், அதுவே, 'மெய்ந்நூல்' எனப்படும். அதன் பயனும் மெய்யுணர்வும், அது வழியாக வரும் விடு பேறுமாம். ஆகவே, வேதம் பொது நூலாதலின் அதன்பயன் அறமும், சிவாகமம் சிறப்பு நூலாத லின் அதன்பயன் விடுபேறுமாம் என்பது சொல்லவேண்டா. "மதுர வாசகம்—ஓதின் முத்தி உறுபயன்—வேதம் ஓதின் மெய்ப்பயன் அறமே" என்ற சிவப்பிரகாசர் வாக்கு இங்கு நினைக்கத் தக்கது.

வடமொழியில் வேதம் பொதுநூலாய் இருத்தல்போலத் தமிழ்மொழியில் பொதுநூலாய் விளங்குவது திருவள்ளுவர் அருளிச்செய்த திருக்குறள் என்பதும், அது 'பொது மறை' என யாவராலும் போற்றப்படுவது என்பதும் அனைவரும் அறிந்தவை. வேதமும், திருக்குறளும் ஒருநிகரன என்பதை,

" ஆரியமும் செந்தமிழும் ஆராய்ந்து இதனின்இது
சீரியது என்றொன்றைச் செப்பரிதால் ; — ஆரியம்
வேதம் உடைத்து; தமிழ்திரு வள்ளுவனார்
ஓது குறட்பா உடைத்து "

என்ற திருவள்ளுவமாலைச் செய்யுள் இனிது விளக்குகின்றது.

வடமொழியில் சிவாகமம்போலத் தமிழ்மொழியில் சிறப்பு நூலாய் விளங்குவன தேவாரம் திருவாசகம் முதலிய பன்னிரு திருமுறைகள். இதனை,

" பன்மறையோர் செய்தொழிலும், பரமசிவா கமநெறியும் ‡
நன்மறையின் விதிமுழுதும் ஒழிவின்றி நவின்றனையே "

---

‡ திருமுறை - 11.

என நம்பியாண்டார் நம்பிகள், ஆளுடைய பிள்ளையார் திருக் கலம்பகத்தில்(1) அருளியவாற்ருல் அறியலாம். இத் திருவாக்கில், 'பொதுநூலில் குறிப்பாக உள்ள பொருள்களை இனிது விளக்கு வதே சிறப்புநூல்' என்னும் கருத்து அமைந்திருத்தல் காண லாம்.

வடமொழியில், 'வேதம் பொதுநூல்' என்பதைப் பலரும் உடன்படுவர். ஆயினும், 'சிவாகமம் சிறப்புநூல்' என்பதைச் சைவ சமயிகள் தவிர ஏனையோர் உடன்படமாட்டார்கள். அவர் கள் உடன்படாததனுல் சிவாகமம் சிறப்பு நூலாகாமற் போகாது. அதுபோலவே, தமிழில், 'திருக்குறள் பொதுநூல்' என்பதைப் பலரும் உடன்படுவர். ஆயினும், 'திருமுறைகள் சிறப்பு நூல்' என்பதைச் சைவ சமயிகள் தவிரப் பிறர் உடன்படார். அவர் உடன்படாதது பற்றித் திருமுறைகள் சிறப்பு நூலாகாமற் போய்விடமாட்டா. மற்றும், வடமொழியில் உள்ள பொது நூலா கிய வேதத்தை உடன்படாதவர் சிலர் இருக்கின்ருர்கள். அது போலவே தமிழில் உள்ள பொதுநூலாகிய திருக்குறளையும் முற்றிலும் உடன்படாதவரும் இருக்கின்ருர்கள். அவர்கள் தங்கள் உடன்பாடின்மையை நேரே கூருமல், சில அதிகாரங்கள், 'திருவள்ளுவர் செய்தன அல்ல' என்றும், சில குறள்களுக்கு, 'இது பொருளன்று; வேறு பொருளே உள்ளது' என்றும் இவ்வாறு கூறுவர். அவர்கள் அவ்வாறு கூறினும், திருக்குறள் என்றும், எங்கும் ஓர் ஒப்புயர்வற்ற பொதுநூலாய் விளங்குவ தன்றி வேருகாது. அது போலவே, திருமுறைகளும் யார் உடன்படினும், உடன்படாவிடினும் ஒப்புயர்வற்ற சிறப்பு நூலே யாம். இவ்வுண்மைகள் யாவும், காய்தல் உவத்தல் இன்றி நடுவு நின்று காண்பவர்கட்கு நன்கு விளங்கும்.

பொதுநூலிலும், சிறப்புநூலிலும் சொல்லப்படும் பொருள் ஒன்றே; அப்பொருளைச் சொல்லும் முறைதான் வேறு. 'வேதத் திற்கும், ஆகமத்திற்கும் யாம் பேதம் கண்டிலம்' என்று நீல கண்ட சிவாசாரியர் சிவாத்துவித பாடியத்திற் கூறியதும், இக் கருத்துப் பற்றியதே. அவ்வாறே, 'திருக்குறளிலும், திருமுறை களிலும் சொல்லப்பட்ட பொருள் ஒன்றே; சொல்லும் முறை தான் வேறு' என்பதற்கு எடுத்துக்காட்டாக, முதற்கண் உள்ள திருஞானசம்பந்தர் திருமுறைகளுள் ஒன்றிரண்டைக் காணலாம்

"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்ருர் நீடுவாழ் வார்"

என்னும் திருக்குறளில் திருவள்ளுவர், 'உலகத்தார்க்கு ஒழுக்க நெறியை இறைவனே வகுத்துக் காட்டினன்' எனக் கூறுகின்றார். ஒழுக்கநெறியாவது, 'அறம், பொருள், இன்பம், வீடு' என்னும் நான்கைப் பற்றியது என்பது வெளிப்படை. இதனைத் திருஞானசம்பந்தர் தமது திருமுதுகுன்றத் திருப்பதிகத்தில்,

"..... ...... . .................... ஐம்புலனும்
அழிந்த சிந்தை அந்தணாளர்க்கு அறம் பொருள் இன்பம் வீடு
மொழிந்த வாயான் முக்கண் ஆதி மேயதுமுது குன்றே"

(திருமுறை - 1. 53. 6.)

எனத் தெளிவாகக் குறிப்பிடுகின்றார்.

"அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது"

என்னும் திருக்குறளில் திருவள்ளுவர், 'இறைவன் பல்வேறு அறங்களையும் தனக்கு வடிவமாக உடையவன்' எனக் குறிக்கின்றார். ஞானசம்பந்தரும்,

"அருத்தனை அறவனை அமுதனை" (திருமுறை-1. 111. 1.)

என்னும் திருப்பாட்டில் இறைவனை, 'அறவன் - அறத்தின் வடிவமானவன்' எனக் கூறுகின்றார். இன்னும்,

"இன்னஉரு இன்னநிறம் என்றறிவ தேல்அரிது ;
நீதிபலவும்
தன்னஉரு வாம்என நிறைந்ததவன் நீதியொடு
தான் அமர்விடம்"

(திருமுறை - 3. 71. 4.)

என்பதும் அவர் வாக்கு 'மனத்துக்கண் மாசின்மையே அறம்' என்பதும், 'மனத்துமாசாவன, அழுக்காறு, அவா, வெகுளி, பிறர்பொருளை விரும்பல், உள்ளத்தில் 'உள்ளதை மறைத்து வேறொன்று பேசுதலாகிய பொய்ம்மை' வெகுளியை வெளிப்படுத்தும் கடுஞ்சொல் முதலியன என்பதும், இம்மாசுகள் இல்லாதவர்களே அறவோர் என்றும், உயர்ந்தோர் என்றும் போற்றப்படுவர்' என்பதும் திருவள்ளுவர் கருத்துக்கள் என்பது, திருக்குறளில் ஆங்காங்கு வரும் குறட்பாக்களில் இனிது விளங்கிக் கிடப்பது. இவைகளையெல்லாம் இங்ஙனமே ஞானசம்பந்தரும் ஆங்காங்கு அருளிச்செய்வதைக் காணலாகும்.

" ஒல்லை ஆறி, உள்ளம் ஒன்றிக் கள்ளம் ஒழிந்து, வெய்ய
சொல்லை ஆறித் தூய்மை செய்து, காமவினை அகற்றி,
நல்ல வாறே உன்றன் நாமம் நாவில்நவின் றேத்த
வல்ல வாறே வந்து நல்காய் வலிவலம்மே யவனே "

" மெய்ய ராகிப் பொய்யை நீக்கி வேதனையைத் துறந்து
செய்ய ரானார் சிந்தை யானே தேவர்குலக் கொழுந்தே "

என்பனபோன்ற திருப்பாட்டுக்கள் அவரது திருமுறைகளில் நிரம்ப உள்ளன.

'இரப்பவர்க்கு இல்லை என்னாது கொடுத்தல், சிறப்புடைய அறம்' என்று திருவள்ளுவர் கூறுவதை யாவரும் அறிவர்.

" ஈதல் ; இசைபட வாழ்தல் ; அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு "

என்பதுபோன்ற திருக்குறள்கள் அங்ஙனம் கூறுவன. இதனை ஞானசம்பந்தர் தமது தேவாரத்துள் பல இடங்களில் குறிப்பிடு தலைக் காணலாம்.

" இரவலர்துயர் கெடுவகைநினை
இமையவர்புரம் எழில்பெறவளர்
மரம்நிகர்கொடை மனிதர்கள் பயில் மறைவனம் "

( திருமுறை - 1. 22. 2, )

' இன்மையால் சென்றிரந்தார்க்கு
இல்லைஎன்னாது ஈந்துவக்கும்
தன்மையார் ஆக்கூர் " ( திருமுறை - 2. 42. 9. )

" விண்பொயத னுல்மழை வீழாதொழியி
னும்விளைவு தான்மிகவுடை
மண்பொயத னுல்வளம் இலாதொழியி
னுந்தமது வண்மைவழுவார் சண்பைநகர் "

( திருமுறை - 3. 75 7. )

என்பனபோன்ற பாடல்கள் பல.

" உரன்என்னும் தோட்டியான் ஓர்ஐந்துங் காப்பான்
வரன்என்னும் வைப்பிற்குஓர் வித்து "

என்னும் திருக்குறளில் திருவள்ளுவர், 'பஞ்சேந்திரியங்கள்' எனப்படும் ஐம்பொறிகளை யானையாக உருவகித்து, 'அவ்யானை

களைத் தம் தம் புலன்களின்மேல் தம் விருப்பப்படி செல்லாதவாறு, ஞானம் என்னும் அங்குசத்தால் அடக்கி ஆள்கின்றவர்களே வீடு பெறுதற்கு உரியவர்' என்கின்றார். திருஞானசம்பந்தரும் இவ்வாறே திருக்கேதாரத் தலத்தை,

" தொண்டர் அஞ்சுகளி றும்அடக் கிச்சுரும்பார்மலர்
இண்டை கட்டிவழி பாடுசெய்யும் இடம் "

( திருமுறை - 2. 114. 1. )

என்று குறிப்பிடுகின்றார்.

" கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை "

என்னும் திருக்குறளால், 'கடவுளது திருவடிகளை வணங்குதல், வாழ்த்தல், நினைத்தல், அவன் புகழைக் கேட்டல் முதலியவை களைச் செய்யாத மக்கட் பிறப்பினால் பயனில்லை' எனத் திருவள்ளுவர் கூறுகின்றார். இக் கருத்தினை,

" சிலையால் எயில்எய்தான் சிற்றம் பலந்தன்னைத்
தலையால் வணங்குவார் தலையா னார்களே "

( திருமுறை - 1. 80. 7. ),

" ஆமாத்தூர் அம்மானைக் — காணாத கண்ணெல்லாம்
காணாத கண்களே "

" கூறாத நாவெல்லாம் கூறாத நாக்களே "

" கேளாச் செவியெல்லாம் கேளாச் செவிகளே "

" வள்ளல் கழல்பரவா வாழ்க்கையும் வாழ்க்கையே "

" ஆமாத்தூர் - நிச்சல் நினையாதார் நெஞ்சமும் நெஞ்சமே "

( திருமுறை - 2. 47. 4,7, 8, 9, 10. )

எனச் சம்பந்தரது திருவாக்கிலும் காண்கின்றோம்.

'உலகப் பற்று நீங்குவதற்கு இறைவன் திருவடிப் பற்று வேண்டும்' என்பதைத் திருவள்ளுவர்,

" பற்றுக பற்றற்றான் பற்றினை ; அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு "

என்னும் திருக்குறளில் கூறியுள்ளார். இக்கருத்தே,

" முற்று வெண்டிங்கள் முதல்வன் பாதமே
பற்று நின்றாரைப் பற்று பாவமே " ( திருமுறை - 1. 80. 1.)

என்ற ஞானசம்பந்தர் திருவாக்கிலும் காணப்படுகின்றது.

திருவள்ளுவர், ' அரசனது கோல் செங்கோலாய் இல்லாது கொடுங்கோலாய்விடின், பசுக்கள் பால் குன்றும் ; பசுக்கள் பால் குன்றுமாயின், அந்தணர்கள் வேள்வி வேட்டல் இயலாது; வேள்வி இல்லையாயின், மழை இல்லையாய்விடும் ' என்பதை,

" ஆபயன் குன்றும், அறுதொழிலோர் நூல்மறப்பர்,
காவலன் காவான் எனின் "

" முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல் "

என்னும் குறள்களால் வெளியிடுகின்றார். ஆகவே, செங்கோல் அரசனும், பாற்பசுக்களும், நூலை மறவாது ஓதி ஒழுகும் அந்தணர்களும் இனிது வாழ்தல் உலக நலத்திற்கு இன்றியமையாதது என்பது விளங்குகின்றது. எனவே,

" வாழ்க அந்தணர், வானவர் ஆனினம் ;
வீழ்க தண்புனல் : வேந்தனும் ஓங்குக "

( திருமுறை - 3. 54. 1, )

என்று ஞானசம்பந்தர், அந்தணரையும், தேவரையும், ஆனினங்களையும், மழையையும், அரசனையும், " வாழ்க " என வாழ்த்தியது மேற்கூறிய கருத்தினால் என்பது அறியப்படுகின்றது.

இவ்வாறு பொருள் மட்டுமன்றிச் சொற்களும் திருவள்ளுவர் நூலில் உள்ளவாறே, திருஞானசம்பந்தர் திருமுறையில் அமைந்திருத்தலை, " அகர முதலானை அணியாப்ப னூரானை " என்ற இடத்தில் காணலாம்.

இதனால் திருவள்ளுவரது பொது மறையை ஓதி அறத்தைப் பெறுகின்றவர்கள், திருஞானசம்பந்தரது சிறப்பு மறையையும் ஓதி மெய்யுணர்வாகிய சிவஞானத்தையும் பெறுவார்களாக.

---

# திருவள்ளுவரும் திருநாவுக்கரசரும்*

திருஞானசம்பந்தர் ஈராண்டு நிரம்பி, மூவாண்டு தொடங்கப் பெற்றபொழுதே சீகாழியில் பிரமதீர்த்தக்கரையில் திருத்தோணிப்பெருமான் பெரிய பெருமாட்டியுடன் விடைமேல் எழுந்தருளிவந்து காட்சியளித்து ஞானப் பால் அளித்தருளப் பெற்று எல்லாக் கலைகளையும் அந்நொடியிலே ஓதாதுணர்ந்து, நாவில் தனிச் சிவஞான சம்பந்தராய் விளங்கியவர். அவருக்கு அந்தணர் பலரும் இருபிறப்பைச் சடங்கு காட்டி எய்துவிக்கும் முறைகள் எல்லாவற்றையும் செய்து, 'வருதிறத்தின் மறை நான்கும் தந்தோம்' என்று மந்திரங்களை மொழிந்த மறை யோர் முன்னே அவர், சுருதி ஆயிரம்ஓதி, அங்கமான தொல்கலை களையும் எடுத்தியம்பி,

"செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு
அந்தியுள் மந்திரம் அஞ்செ ழுத்துமே"

(திருமுறை - 33. 22. 2.)

என்ற உண்மையையும் உரைத்தருளக் கேட்டு, அவர்கள் அதிசயித்து, அவரைத் தம் கண்முன்வரு தியானப் பொருள் என்று மதித்து வணங்கித் தாங்கள் முன் ஓதி யுணர்ந்த மறை களில் உள்ள ஐயங்கள் எல்லாம் அவரால் நீங்கத் தெளிவு பெற்று வாழ்ந்தார்கள். அவரது அருள் மொழியில் திருக் குறளாகிய பொது மறையின் பொருள்கள் பொலிவு பெற்று விளங்குதல் போலவே, திருநாவுக்கரசரது திருமொழியிலும் அவை விளங்குதல் காணலாம்.

திருநாவுக்கரசர், 'மருணீக்கியார்' என்னும் பிள்ளைமைப் பெயருடன், 'புலன் கொளுவ மனம் முகிழ்த்த சுருணீக்கி மலர்விக்கும் கலைபயிலத் தொடங்கி, 'தந்தையார் களிமகிழ்ச்சி தலைசிறக்கச் செழுங்கலையின் திறங்கள் எல்லாம் முந்தை முறைமையிற் பயின்றவர். பின்னர்த் தம் பொருளைக் கல்வியில் வல்ல நாவலர் பலர்க்கு நலம் பெருக வழங்கியவர். திருவருள் பெற்றபின் பாவுற்றலர் செந்தமிழின் சொல் வளப் பதிகத் தொடை பாடிய பான்மையினால், இறைவனால் 'நாவுக்கரசு' என்று உலகேழினும் விளங்கும் நற்பெயரைப் பெற்றவர். அவரது அருள் மொழியில் பொதுமறையின் பொருள்கள் பொலிவு பெறுதல் இயற்கையே.

---

* 10—11—67 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

" ஆனத்து முன்னெழுத்தாய் நின்ருர் போலும்
அணியாரூர்த் திருமூலட் டான ரூரே "

( திருமுறை - 6. 28. 5. )

என்ற திருத்தாண்டகப் பகுதியில், இறைவனை அப்பர் ' முன்னெழுத்தாய் நின்ருன் ' என்றது, திருக்குறளில் ' அகர முதல எழுத்தெல்லாம் ' என்ற உவமையின் பொருளேயே குறிக்கின்றது.

திருவள்ளுவர், இறைவனை, ' மலர்மிசை ஏகினுன் ' எனக் குறிப்பிட்ட நிலையே, அப்பர் திருவாக்கிலும், " புண்டரிகப் புதுமலர் ஆதனத்தார் போலும்.........அடியேனை ஆளுடைய அடிகள் தாமே " † " எரியாய தாமரைமேல் இயங்கி ஞரும் இடைமருது மேவிய ஈசனுரே " * எனக் காணப்படுகின்றது. இன்னும் இவ்வாறு வரும் அவர் அருள்மொழித் தொடர்கள் பல.

' மலர் ' என்பது தாமரை மலரையே குறிக்கும் என்பது அனைவர்க்கும் உடன்பாடு. ஆயினும், அது, திருவள்ளுவரது திருக்குறளில் புறத்தில் காணப்படும் நீர்ப்பூவாகிய தாமரை மலரைக் குறியாது, அன்பால் நினைவாரது உள்ளக் கமலத்தையே குறிக்கும் ' என்ற பரிமேலழகர் உரை உண்மை உரையேயாம். ஏனெனில், புறத்திற் காணப்படும் தாமரை மலராகக் கூறின், ' மலர்மிசை ஏகினுன் ' என்பது, பிரமன் அல்லது அருகன் முதலிய ஒரு சமயக் கடவுளேயே சிறப்பாகக் குறிக்கும் ஆதலாலும், ஒருசமயக் கடவுளைச் சிறப்பாகக் குறித்துக் கூறுதல் திருவள்ளுவர் கருத்தன்று ஆதலாலும் என்க. இக்கருத்தைப் பரிமேலழகரே இக்குறள் உரையில் குறிப்பாகக் கூறிப் பிறர் உரையை மறுத்திருக்கின்ருர். எனவே, ' மலர் மிசை ஏகினுன் ' என்னும் திருக்குறளில் உள்ள, ' மலர் ' என்பது, அன்பால் நினைவாரது நெஞ்சத் தாமரையே ஆயிற்று. இதனை நாவுக்கரசர்,

" புந்தியாய்ப் புண்டரிகத் துள்ளாய் போற்றி "

( திருமுறை - 6. 5. 9. )

" பொள்ளல்இக் காயந் தன்னுள்
புண்ட ரிகத் திருந்த
வள்ளல் "

( திருமுறை - 4. 42. 6. )

---

† திருமுறை - 6. 53. 8. * திருமுறை - 6. 16. 7.

என்பனபோலப் பல இடங்களில் இனிது விளங்க அருளிச் செய்கின்றார். இருதயத்தை ஆன்ம தத்துவம், வித்தியா தத்துவம், சிவதத்துவம் என்னும் தத்துவங்களே, கொடி முதல் பொகுட்டு வரை அமைந்த தாமரை மலராகப் பாவித்து, அதன் மேல் இறைவனை வைத்து வழிபடும் முறை சிவாகமங்களில் சொல்லப்பட்டுச் சிவபூசை செய்வோர் யாவராலும் அங்ஙனமே செய்யப்பட்டு வருதல் பலரும் அறிந்தது.

"வேண்டாமை வேண்டுவதும் இல்லான் தன்னை"

(திருமுறை - 6. 1. .)

"மற்றாருந் தன்னொப்பார் இல்லா தானை"

(திருமுறை - 1. 46. 9.)

என்னும் திருத்தாண்டகப் பகுதிகள், "வேண்டுதல் வேண் டாமை இலான்", "தனக்குவமை யில்லாதான்" என்னும் திருக்குறளையே நினைப்பித்து நிற்கின்றன.

"உரன் என்னும் தோட்டியான் ஓர் ஐந்தும் காப்பான்" என்னும் திருக்குறளில் திருவள்ளுவர் ஐம்பொறிகளை யானையாகக் கூறியவாறே அப்பரும்,

"வருங்கை யானை மதகளி றஞ்சினைப்
பொருங்கை யானைகண் டீர்புக லூரரே"

(திருமுறை - 5. 46. 8.)

என்று அருளிச்செய்கின்றார்.

'ஐம்புலன்களை அடக்குதல் வேண்டும்' என்பதைத் திருவள்ளுவர்,

"அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை; விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு"

எனக் குறிப்பிடுகின்றார். இதனைச் சொல்லாத ஆசிரியர் எவரும் இல்லை. அவ்வாறே அப்பரும் இதனைப் பல இடங்களில் பல வகையாக அருளிச்செய்கின்றார். ஆயினும், அவரது திருவாக்கில் ஒரு கருத்துச் சிறப்பாகக் காணப்படுகின்றது. அஃதாவது, "இல்லறத்தைத் துறந்தவர்கள் மட்டுமே ஐம்புலன்களை வென்ற வர்கள் என்பதில்லை; இல்லறத்தில் இருந்துகொண்டே ஐம்

புலன்களை வென்றிருத்தல் கூடும்' என்பது. அதனை விளக்குவது, "நேரிழையைக் கலந்திருந்தே புலன்கள் ஐந்தும் வென்றானை"* என்னும் திருத்தாண்டகப் பகுதி. திருவள்ளுவர்க்கும் இது கருத்து என்பது,

"ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி"

என்னும் திருக்குறளால் அறியலாம். எவ்வாறு எனின், அகலிகையோடு கூடிவாழ்ந்து, இந்திரனைச் சபித்து அவன் ஆற்றலை அழித்த கௌதம முனிவரை அவர், "ஐந்தவித்தான்" எனக் குறிப்பிடுதலால் என்க. எனவே, இறைவனை அவர், "பொறிவாயில் ஐந்தவித்தான்" என்று அருளியதும், இறைவன் போகியாய் இருந்து உயிர்கட்குப் போகத்தை வழங்கிக் கொண்டே, யோகியாய் யோக முத்தி உதவுதல் பற்றியே என்பதும் தெளிவு. 'ஐந்து அழித்தான்' என்னாது, 'ஐந்து அவித்தான்' என்ற குறிப்பும் காணத்தக்கது. இவையெல்லாம் பரிமேலழகர்க்கும் கருத்தேயாம்.

திருவள்ளுவர் இறைவனை அறங்கள் எல்லாவற்றையும் தனக்கு வடிவாக உடையவன் என்பது பற்றி 'அற ஆழி அந்தணன்' எனக் குறிப்பிடுதல் போலவே திருநாவுக்கரசரும் இறைவனை 'அறவன், நீதி' எனக் கூறுதல் காணலாம்.

"அறவன் எம்பிரான் அன்பிலா லந்துறை
மறவா தேதொழு தேத்தி வணங்குமே"

"நீதியை, நிறைவை, மறை நான்குடன்
ஓதியை, ஒருவர்க்கும் அறிவொண்ணாச்
சோதியைச், சுடர்ச்செம்பொனின் அம்பலத்
தாதியை அடி யேன்மறந் துய்வனே"

(திருமுறை - 5-80, 7. 2 - 6.)

"நீதியாய் நிலனாகி, நெருப்பாய், நீராய்
நிறைகாலாய், இவையிற்றின் நியம மாகி
... ... ... ... ... ... ... ... ... ...
ஆதியாய் அந்தமாய் நின்றான் தன்னை
ஆரூரிற் கண்டடியேன் அயர்த்த வாறே"

(திருமுறை - 6 - 26. 6.)

---

* திருமுறை - 6 50. 3.

" இறைவன் எட்டுக் குணங்களை யுடையவன் "

என்பதை,

" கோளில் பொறியிற் குணம் இலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை "

என்னும் திருக்குறளிற் காண்கின்றோம். இதனைத் திருநாவுக்கரசர் பல இடங்களில் எடுத்தியம்புகின்றார்.

" எட்டுக் கொலாம்அவர் ஈறில் பெருங்குணம் "

( திருமுறை - 4. 18. 8. )

" எட்டு வான்குணத் தீசன் எம்மான்றனை "

( திருமுறை - 5. 89. 8. )

" எண்குணத்தார் எண்ணு யிரவர் போலும்
இடைமருது மேவிய ஈசனாரே "

( திருமுறை - 6. 16. 4. )

என்பன முதலியவற்றைக் காண்க.

" கொய்யுலாம் மலர்ச்சோலைக் குயில்கூவ
மயில்ஆலும் ஆரூரைக்
கையினல் தொழாதொழிந்து கனியிருக்கக்
காய்கவர்ந்த கள்வ னேனே "

( திருமுறை - 4. 5. 1. )

என்னும் திருநாவுக்கரசர் தேவாரமும்,

" இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று "

என்ற திருவள்ளுவர் திருக்குறளும் ஒன்றாகவே இருத்தல் வெளிப்படை.

'மனத்துக்கண் மாசு இல்லாமையே அறம்; மனத்தில் மாசுடையவர்க்கு அறம் உண்டாகாது' என்பது திருவள்ளுவரது அழுத்தமான கொள்கை. அதனைத் திருநாவுக்கரசர் பல இடங்களில் எடுத்து வற்புறுத்துதலைக் காணலாம்.

" கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை "

" கள்ள முள்ள மனத்தவர் காண்கிலார் "

" கரவிலா மனத்த ராகிக் கைதொழு வார்கட் கென்றும்
இரவுநின் றெரிய தாடி இன்னருள் செய்யும் எந்தை "

" வஞ்சகர்க் கரியர்போலும் மருவினேர்க் கெளியர்போலும் "

( திருமுறை - 4. 7. 1. 5 - 80. 6. 88. 3; 66. 7. )

" வஞ்ச நெஞ்சத் தவர்க்கு வழிகொடார்
நஞ்ச நெஞ்சர்க் கருளும்நள் ளாறரே "

" உள்ளம் உள்கலந் தேத்தவல் லார்க்கலால்
கள்ளம் உள்ளவ ருக்கருள் வான்அலன் "

" நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன்
பொக்கம் மிக்கவர் பூவும்நீருங் கண்டு
நக்கு நிற்பன் அவர்தம்மை நாணியே "

( திருமுறை - 5. 68 7; 82. 4; 90 9. )

மனம் மாசின்றித் தூய்மைபெற்று விளங்குவது வாய்மை யாலேதான் என்பர் திருவள்ளுவர்.

' புறம்தூய்மை நீரான் அமையும் அகம்தூய்மை
வாய்மையாற் காணப் படும். '

இதனை அப்பர் பெருமான்,

" வாய்த்திலேன் அடிமை தன்னுள்
வாய்மையால் தூயேன் அல்லேன் "

( திருமுறை - 4. 54. 7. )

என்று அருளிச்செய்கின்றார்.

" விலங்கொடு மக்கள் அனையர், இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர் "

என்பது முதலாகக் கல்வியைத் திருவள்ளுவர் வற்புறுத்தும் இடங்கள் பல. கல்வி இல்லாதவரை, ' விலங்குகள் ' என்று அவர் இதன்கண் குறிப்பிடுகின்றார். திருநாவுக்கரசரும், கல்வி யைச் சிறப்பித்தும், கல்லாமையை இழித்தும் கூறும் இடங்கள் பல.

" காத்திலேன் இரண்டும் மூன்றும்
கல்வியேல் இல்லை என்பால் " ( ஷை. ஷை. ஷை. )

" கற்றிலேன் கலைகள் ஞானம் கற்றவர் தங்களோடும்
உற்றிலேன் ஆதலாலே உணர்வுக்கும் சேய னானேன் "

" கற்றதேல் ஒன்றும் இல்லை "

" கல்வியைக் கரையிலாத காஞ்சிமா நகர் "

( திருமுறை - 4. 78. 2, 52. 8, 43. 8. )

" கற்றூர்பயில் கடல்நாகைக் காரோணம் "

( திருமுறை - 4. 103. 2. )

" கற்றவர்கள் உண்ணும் கனியே போற்றி "

( திருமுறை - 6. 32. 1. )

கல்வியாவது இலங்கு நூல்களைக் கற்கும் கல்வியே எனத் திருவள்ளுவர் கூறுவதை மேலே கண்டோம். இலங்குதல் - விளங்குதல். அஃதாவது ஞானத்தைத்தருதல். இக் கல்வியைக் கற்றவர் வீடு பெறுவர் என்பதைத் திருவள்ளுவர்,

" கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி "

என்னும் திருக்குறளில் கூறியுள்ளார்.

கல்வியைப் போலக் கேள்வியும் இன்றியமையாதது என்பதற்கு, 'கேள்வி' என்ற ஓர் அதிகாரமும் திருவள்ளுவர் கூறுகின்றார். அதனுள்,

" கேட்பினும் கேளாத் தகையவே, கேள்வியால்
தோட்கப் படாத செவி "

என்று, கேள்வியில்லாதாரைக் கடிந்துரைக்கின்றார். திருநாவுக்கரசரும்,

" ஆளாகார் ஆளா னாரை அடைந்துய்யார்
மீளா ஆட்செய்து மெய்ம்மையுள் நிற்கிலார் ;
தோளாத சுரையோ தொழும்பர் செவி
வாளா மாய்ந்து மண்ணாகிக் கழிவரே "

( திருமுறை - 5. 90. 3. )

என அருளுகின்றார். இக் கல்வி கேள்விகளின் வழி உண்மையைச் சிந்தித்து உணரவேண்டும் என்பதையும் திருவள்ளுவர்,

" ஓர்த்துள்ளம் உள்ளது உணரின், ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு "

என்று குறிக்கின்றார். திருநாவுக்கரசரும் இதனை,

" ஓர்த்து உள்ளவாறு நோக்கி
உண்மையை உணராக் குண்டர்
வார்த்தையை மெய்யென் றெண்ணி
மயக்கில்வீழ்ந் தழுந்து வேனை "

( திருமுறை - 4. 73. 2. )

என்று அருளிச்செய்கின்றார்.

கற்றுக் கேட்டுச் சிந்திப்பதால் ' நிலைத்த பொருள் இது; நிலையாத பொருள் இது ' என்னும் பகுத்துணர்வு இனிது விளங்கும். நிலையாமையைத் திருவள்ளுவர் ஓர் அதிகாரமாகவே வைத்துக் கூறுகின்றார். அதில்,

" நெருநல் உளன்ஒருவன்; இன்றில்லை என்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு "

என்பது ஒன்று. நாவுக்கரசரும்,

" இன்றுளேன் நாளை யில்லேன்
என்செய்வான் தோன்றி னேனே "

( திருமுறை - 4. 78. 1. )

" இன்று ளார் நாளை இல்லை யெனும்பொருள்
ஒன்றும் ஓராது உழிதரும் ஊமர்காள் "

( திருமுறை - 5. 84. 9. )

எனக் குறிப்பிடுகின்றார்.

நிலையாமையை உணர்ந்தவர்க்கு, யாக்கையும், செல்வமும் நிலையா என்பது தெளிவாய் விளங்குமாகலின், அவர்கள் தங்கள், உடம்பிலும், செல்வத்திலும் பற்றில்லாதவர்களாய், இரப்பவர் யாவர்க்கும் இல்லை என்னாது வாரிவழங்குவர். இந்நிலை இல்லாதவர்களே உள்ள பொருளை ' இல்லை ' என மறைப்பர். ஈகையே எல்லாவற்றினும் உயர்ந்தது; இரத்தலே எல்லா வற்றினும் இழிந்தது என்பர் திருவள்ளுவர் முதலிய சான்றோர் பலரும்.

" ஈயென இரத்தல் இழிந்தன்று; அதனெதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று "

என்பது புறநானூறு. திருநாவுக்கரசரும் இதனை,

" இரப்பவர் தங்கட்கு ஒன்றும்—
கொடையிலேன்; கொள்வதே நான்;
கோவல்வி ரட்ட னிரே "

( திருமுறை - 4. 69 7. )

என்றும்,

" இலம்பொல்லேன் இரப்பதே; ஈயமாட்டேன்
என்செய்வான் தோன்றினேன் ஏழை யேனே "

( திருமுறை - 6. 95. 9. )

என்றும் கூறுகின்றார். இன்னும், 'ஈகையைச் செய்பவரே இறைவன் திருக்குறிப்பின்வழி நிற்பவர்கள்; இல்லை என்று மறைக்கின்றவர்கள், அவனது திருக்குறிப்பிற்குமாறாக நடப்பவர்கள்; அதனால், இறைவன் ஈபவர்க்கு அருள்செய்து, இல்லை என்பவரைக் கடுமையாகத் தண்டிப்பான்' என்பதை,

" இரப்பவர்க்கு ஈய வைத்தார்;
ஈபவர்க்கு அருளும் வைத்தார்;
கரப்பவர் தங்கட் கெல்லாம்
கடுநர கங்கள் வைத்தார் "

( திருமுறை - 4. 38. 10 )

என்னும் பகுதியால் அருளிச் செய்கின்றார்.

அறம், தவம், ஞானம் ஆகிய எல்லாவற்றிற்கும் பயன் பிறவிப் பெருங்கடலை நீந்தி முத்திக்கரையை அடைதல். அதனைத் தருவது இறைவன் திருவடியே, என்பதை,

" பிறவிப் பெருங்கடல் நீந்துவர்; நீந்தார்
இறைவனடி சேரா தார் "

என்னும் திருக்குறளால் திருவள்ளுவர் இனிது விளங்க அருளியுள்ளார். இன்னும் அவர் கடவுள் வாழ்த்து அதிகாரத்துள் இறைவனது திருவடியையே பல இடத்திலும் எடுத்துக் கூறியிருப்பதைப் பார்க்கின்றோம். திருநாவுக்கரசர் இறைவனது

திருவடியின் பெருமைகளையே தனித்தெடுத்துக் கூறும் திருப்பதிகங்கள் பலவற்றை அருளிச் செய்துள்ளார். திருவையாற்றுத் திருவடித் திருவிருத்தம், திருஇன்னம்பர்த் திருவடித் திருவிருத்தம், திருவடித் திருத்தாண்டகம் என்பன அவை. அவற்றுள், திருவையாற்றுத் திருவடித் திருவிருத்தம் இருபது திருப்பாட்டுக்களையுடையது. இவைகளில் எல்லாம் இறைவனது திருவடியின் பெருமைகள் பலவாறுகப் பேசப்படுதல் காணலாம்.

"இருள்தரு துன்பப் படலம் மறைப்ப மெய்ஞ் ஞானம் என்னும்
பொருள்தரு கண் இழந் துண்பொருள் நாடிப்பொருள் இழந்த
குருடரும் தம்மைப் பரவக் கொடுநரகக் குழிநின்று
அருள்தரு கைகொடுத்து ஏற்றும் ஐயாறன் அடித்தலமே"

"துன்பக் கடலிடைத் தோணித்தொழில்பூண்ட தொண்டர்தமை
இன்பக் கரைமுகந்து ஏற்றும் திறத்தன
.........................................
ஐயாறன் அடித் தலமே"

(திருமுறை - 4. 92. 4. 6.)

"தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே
ஏற்றுந் தகையன இன்னம்ப ரான்றன் இணையடியே"

(திருமுறை - 4. 92. 7.)

என்னும் பகுதிகள் சிறப்பாக இங்கு நோக்கத்தக்கன.

இன்னும், "உற்றூர் இலாதார்க்கு உறுதுணையாவன......... அற்றூர்க்கு அரும்பொருள் காண்க ஐயாறன் அடித்தலமே" என்பன முதலாகவும் பலவற்றைக் கூறுகின்றூர்.

"பரவுவார் பாவம் பறைக்கும் அடி"

"பணிபவர்க்குப் பாங்காக வல்ல அடி ;
பற்றற்றூர் பற்றும் பவள அடி"

(திருமுறை - 6. 6. 1, 9.)

என்பன முதலாகத் திருவடித் திருத்தாண்டகத்தில் வருவன பல.

இவற்றூல் எல்லாம் திருக்குறளின்வழித் திருநாவுக்கரசர் திருமொழியையும் மக்கள் ஓதியுணர்ந்து, திருநின்ற செம்மையைப் பெறுவார்களாக.

---

# திருவள்ளுவரும் திருநாவலூரரும்*

சைவ சமயாசாரியர் நால்வருள், சுந்தரர், 'நாவலர்' எனப்படுவார். இது, நாவலூரில் அவதரித்த காரணம் பற்றி வந்த பெயரேயாயினும், அவரது நாவன்மைக்கும் ஏற்புடைய தாகின்றது. "வாக்கிற்கு அருணகிரி" என்னும் ஒரு தனிப் பாடல் "நயத்திற்குச் சுந்தரனர்" என, இவரது திருப்பாடலேயே நயம் சிறந்து விளங்குவதாகக் கூறுகின்றது. அதற்கேற்பச் சிவபெருமானை நகை தோன்றப் பாடும் பாடல்கள் இவரது திருமுறையிலே மிகுதியாய் உள்ளன. முதல் திருப்பதிகமே இறைவனை, 'பித்தா' என்று அழைத்துத் தொடங்குகின்றது.

"பைத்தபாம் பார்த்தோர் கோவணத் தோடு
பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
பித்தரே ஒத்தோர் நச்சில ராகில்
இவரலா தில்லையோ பிரானர்" (பதிகம் - 14-1.)

"ஏனக்கொம் பும்இள ஆமையும் பூண்டங்கோர்
ஏறும் ஏறிக்
கானக்காட் டில்தொண்டர் கண்டன சொல்லியும்
காமு றவே
மானைத்தோல் ஒன்று உடுத் துப்புலித்தோல்
பியற்கும் இட்டு
யானைத்தோல் போர்ப்ப தறிந்தோமேல் நாம்இவர்க்
காட்ப டோமே." (பதிகம் - 18-4.)

"திங்கள் தங்கு சடைகள் மேலோர்
திரைகள் வந்து புரள வீசும்
கங்கை யாளேல் வாய்தி றவ்வாள்;
கணப தியேல் வயிறு தாரி;
அங்கை வேலோன் குமரன் பிள்ளை;
தேவி யார்கோற் றட்டி யாளார்;
உங்க ளுக்காட் செய்ய மாட்டோம்
ஓண காந்தன் தளியு ளீரே" (பதிகம் - 5-2.)

என்பனபோன்ற பாடல்களை மற்றைத் திருமுறைகளிற் காணுதல் அரிது. 'இவர் இங்ஙனமெல்லாம் பாடுதற்குக் காரணம்,

* 10—12—67 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

இவர்க்குச் சிவபெருமான் கொடுத்த தோழமை உரிமை' என்பர் சேக்கிழார்.

இறைவர் அப்பருக்கே, 'நாவுக்கரசு' எனப் பெயர் கொடுத்தாராயினும், அவர் தம்பால் வந்து சில பாடல்களைப் பாடிய பின்னரே, அப்பெயரைக் கொடுத்தார். நம்பியா ரூரர்க்கோ எனின், அவரை வலியச்சென்று ஆண்டு, 'ஆளப்பட்ட எனக்கு நீர் இடும் பணி யாது' என்று அவர் வினவியபொழுது. 'மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக' என்று பணித்துப் பாடச் செய்து அப்பாடல்களைக் கேட்டுப் பல இடங்களில் பொன்னும், மணியும், பிறவுமாகிய பொருள்களை மிக வழங்கினர். அவரது பாடல்களிலும் திருவள்ளுவரது திருக்குறள் அமைந்திருத்தலைக் காணலாம். திருவள்ளுவர் 'பெருநாவலர்' என்றும், 'செந்நாப் போதார்' என்றும் புகழப்பெறுபவர். அவரது திருமொழிகள் நாவலூரரது திருப்பாடல்களில் நயம் பெற விளங்கும் இடங்கள் சிலவற்றைக் காண்போம்.

நம்பியாரூரர் திருவொற்றியூரில் சங்கிலியாரை மணந்து பலநாள் அங்கே தங்கியிருந்து திருவாரூர்த் தியாகேசரது பங்குனி உத்திரத் திருவிழாவை விடுத்திருக்கமாட்டாதவராய்ச் சூள்கடந்து அங்குநின்றும் நீங்கினமையால் இருகண்களும் ஒளிமறையப் பெற்றுக் காஞ்சியை அடைந்து நம்பர் இடக்கண் தரப்பெற்று ஆரூர் நோக்கி வருகின்றவர் திருநெல்வாயில் அரத் துறையை அடைந்து பெருமானை வணங்கி, 'அடியேன் உய்வதற்கு ஒருவழி சொல்லவேண்டும்' என்று, "கல்வாய் அருகிலும்" எனத் தொடங்கி அருளிச்செய்த திருப்பதிகத்துள் திருக்குறள் தொடர்கள் பல காணப்படுகின்றன. அதன் ஏழாந் திருப் பாடலாகிய, "சிகரம் முகத்தில்" என்னும் திருப்பாட்டுள்,

"அகரம்முத லின்னெழுத் தாகிநின்றாய்
அடியேன் உய்யப் போவதோர் சூழல் சொல்லே"

என்னும் தொடர், "அகர முதல எழுத்தெல்லாம்" என்னும் முதல் திருக்குறளின் தொடராகவே உள்ளது.

இரண்டாம் திருப்பாட்டாகிய, "கறிமாமிளகும்" என்னும் பாடலில்,

"பொறிவாயில்இவ் வைந்தினையும் மவியப்
பொருதுன்னடி யேபுகும் சூழல்சொல்லே"

என்பது, "பொறிவாயில் ஐந்தவித்தான்" என்னும் திருக் குறளின் தொடரைக் கொண்டுநிற்றல் வெளிப்படை.

மூன்றுந் திருப்பாடலாகிய "புற்றுடரவம்" என்னும் பாடலில்,

"மற்றேல்ஒரு பற்றிலன் எம்பெருமான்
வண்டார்குழ லாள்மங்கை பங்கினனே,
அற்றார்பிற விக்கடல் நீந்தியேறி
அடியேன்உய்யப் போவதோர் சூழல்சொல்லே"

என்பதனுள், "பற்றுக பற்றற்றா ன் பற்றினை", "பிறவிப் பெருங் கடல் நீந்துவர் நீந்தார் - இறைவனடி சேரா தார்" என்னும் திருக்குறட் பகுதிகள் வந்துள்ளமை காணலாம். மற்றுப் பற்றெனக் கின்றி நின்திருப் பாத மேமனம் பாவித்தேன்" என்பன முதலியவும் இத்திருமுறையுள் காணத்தக்கன.

நான்காந் திருப்பாட்டாகிய, கோஒடுபர் கோங்கலர்" என்னும் பாடலுள்,

"ஒஒடு புனற்கரை யாம்இளமை;
உறங்கிவ்விழித் தாலொக்கும் இப்பிறவி"

என்பதில், "உறங்கு வதுபோலும் சாக்கா டுறங்கி - விழிப்பது போலும் பிறப்பு" என்னும் திருக்குறள் காணப்படுகின்றது.

"பத்திமையும் அடிமையையும்" என்னும் திருப்பதிகத்துள், "கற்றுளவான் கனியாய கண்ணுதலே" எனவும், திருநீடூர்ப் பதிகத்துள் "கற்ற கல்வியிலும் இனியானை" எனவும்வரும் தொடர்கள், "கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன் - நற்றாள் தொழாஅ ரெனின்" "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர் மற்றீண்டு வாரா நெறி" என்னும் திருக்குறள்களை நினைப்பிக்கும். இன்னும், கற்றுளவான் கனியாய" என்னும் பாடலுக்கு முன்னர், "ஒப்பரிய குணத்தானை இணையிலியை" என வந்துள்ள தொடரும், "எண்குணத்தான்" "தனக்குவமை யில்லாதான்" என்ற திருக்குறளின் தொடர்ப்பொருளைக் கொண்டு நிற்பனவாம்.

திருவள்ளுவர் இறைவனை, "அறவாழி அந்தணன்" என்று கூறியவாறே நம்பியாரூரரும், "அறவன்" "அந்தணர்", என்று கூறுகின்றார். (பதிகம். 34 - 11; 88 - 1.)

"கோளில் பொறியிற் குணம் இலவே எண்குணத்தான் - தாளை வணங்காத் தலை" என்னும் திருக்குறளில் திருவள்ளுவர்,

'இறைவனை வணங்காத் தலைகள் பயனில' என்று வெளிப் படையாகக் கூறி, வாழ்த்தாத நாவும், நினையாத நெஞ்சமும், பிறவும் அவ்வாறே பயனில' என்பதைக் குறிப்பாற் கூறுகின்றார். அதனால், 'தலையும், நாவும், நெஞ்சமும் இறைவனை வணங்கு தற்கும், வாழ்த்துதற்கும், நினைத்தற்குமே உரியன ஆக்குதல் வேண்டும்' என்பது பெறப்படுகின்றது. இதனைச் சுந்தரர் திருப்பாச்சிலாச்சிராமத் திருப்பதிகத்தில்,

"வைத்தனன் தனக்கே தலையுமென் நாவும்
நெஞ்சமும் வஞ்சமொன் றின்றி
உய்த்தனன் தனக்கே திருவடிக் கடிமை
உரைத்தக்கால் உவமனே ஒக்கும்"

என்று அருளிச்செய்வதைக் காண்கின்றோம்.

"இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்" என்னும் திருக்குறளில், 'அறநெறியிற் செல்வோர் உணரற்பாலன 'பிறப்பு, வீடு' என்னும் இரண்டனது கூறுபாடுகள்' என் கின்றார் திருவள்ளுவர். அவற்றைச் சுந்தரர், வீடின் பயன் என் பிறப்பின் பயன்என்" என்று அருளிச் செய்கின்றார்.

உடம்பினது இழிவைக் குறிக்குமிடத்துத் திருவள்ளுவர், "என்புதோல் போர்த்த உடம்பு" என்கின்றார். அவ்வாறே சுந்தரரும்,

"பொய்த்தன்மைத் தாய வாழ்க்கைப்
போர்வையை மெய்யென் றெண்ணும்
வித்தகத் தாய வாழ்வு
வேண்டிநான் விரும்ப கில்லேன்"

(திருப்பதிகம் - 8. 9.)

என்கின்றார்.

"சொல்லிடில் எல்லை இல்லை
சுவையிலாப் பேதை வாழ்வு
நல்லதோர் கூரை புக்கு
நலமிக அறிந்தே னல்லேன்"

"நரம்பினோ டெலும்பு கட்டி
நசையினோ டிசைவொன் றில்லாக்
குரம்பைவாய்க் குடியி ருந்து
குலத்தினல் வாழ்வு வேண்டேன்"

"உதிர நீர் இறைச்சிக் குப்பை
எடுத்தது மலக்கு கைம்மேல்
வருவதோர் மாயக் கூரை
வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்"

(திருப்பதிகம் - டி 4, 5, 8.)

என்னும் நம்பியாரூரர் திருமொழிகள், "புக்கிலமைந்தின்று கொல்லோ உடம்பினுள் - துச்சில் இருந்த உயிர்க்கு" என்னும் திருக்குறளின் பொருள் நோக்கில் அமைந்தனவாகும்.

'கடவுள் என்னும் ஒரு பொருள் உண்டோ இல்லையோ' என்னும் ஐயத்தை விடுத்துத் தெளிவெய்தினவரே இறைவனை அடைதல் கூடும் என்பதைத் திருவள்ளுவர்,

"ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து"

என்னும் திருக்குறளாற் கூறுகின்றார். அதனால், ஐயத்தையுடையவர் இறைவனை அடைதல் இயலாது என்பது தெளிவாகின்றது. அங்ஙனமே ஆளுடைய நம்பிகளும்,

"சங்கையவர் புணர்தற் கரியான்"

(திருப்பதிகம் - 10. 9.)

என அருளிச்செய்தார்.

'இறைவனை அருளாசிரியரது அருள்மொழியைச் சிந்திக்குமுகத்தான் உணர்தல் வேண்டும்' என்பதைத் திருவள்ளுவர்,

"ஒர்த்துள்ளம் உள்ள துணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு"

என்பதனால் தெரிவிக்கின்றார். அங்ஙனமே சுந்தரரும்,

"ஒர்ந்தனன் ஒர்ந்தனன் உள்ளத்துள்ளே நின்ற
[ஒண்பொருள்"

(திருப்பதிகம் - 45. 4.)

என்று அருளிச்செய்தலைக் காணலாம்.

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்னும் திருக்குறளில், 'எல்லாப் பொருளிலும் மெய்ப்பொருளாகிய இறைவனைக் காண்பதே மெய்யுணர்வு - தத்துவஞானம்' என்கின்றார் திருவள்ளுவர். அதனை வன்றொண்டர் பலவாறாக இனிதுணர்த்துவார்.

"கார்க்குன் றமழை யாய்ப்பொழி வானைக்
கலைக்கெ லாம்பொரு ளாய்உடன் கூடிப்
பார்க்கின் றஉயிர்க் குப்பரிந் தானைப்
பகலும் கங்குலும் ஆகிநின் றானை
ஓர்க்கின் றசெவி யைச்சுவை தன்னை
உணரும் நாவினைக் காண்கின்ற கண்ணை
ஆர்க்கின் றகட லைமலைதன்னை
ஆரு ரானை மறக்கலும் ஆமே"

(திருப்பதிகம் - 59. 3.)

என்பது முதலிய திருப்பாடல்கள் அத்தகையன.

'ஞானிகள் யாதொன்றையும் விருப்புவதில்லை; அவர்களால் விரும்பப்படுவது ஒன்று உண்டு எனின், அது பிறவாமை ஒன்றேயாய் இருக்கும்' என்பதைத் திருவள்ளுவர், "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை" என்பதனால் குறிக்கின்றார். நம்பியாரூரர் பல பொருள்களை இறைவனிடத்தில் வேண்டினார் போலக் காணப்படினும், சிறப்பாக அவர் இறைவனிடம் வேண்டியது மீளவும் முன்போல் பிறவாமையே என்பதனை,

"ஆட்டான் பட்டமையால் அடியார்க்குத் தொண்டு பட்டுக்
கேட்டேன் கேட்பதெல்லாம் பிற வாமை கேட்டொழிந்தேன்
சேட்டார் மாளிகைசூழ் திருமேற்றளி யுறையும்
மாட்டே உன்னை யல்லால் மகிழ்ந் தேத்த மாட்டேனே"

(திருப்பதிகம் - 21 - 2.)

என்னும் அவரது திருப்பாடலால் அறியலாம். அவர்க்குப் பிறப்பின்கண் உளதாய வெறுப்பினை,

"எம்மான் எம்மனை என் றனக் கெட்டனைச் சார்வாகார்;
இம்மா யப்பிறவி பிறந் தேஇறந் தெய்த்தொழிந்தேன்;
மைம்மாம் பூம்பொழில்சூழ் மழ பாடியுள் மாணிக்கமே
அம்மான் நின்னையல்லால் இனி யாரை நினைக்கேனே"

(திருப்பதிகம் - 24 - 3.)

என்னும் பாடலால் அறியலாம்.

இங்ஙனம் வள்ளுவரது வாயுறை வாழ்த்தோடு, வன்றொண்டரது வண்டமிழையும் மக்கள் நன்கு ஓதியுணர்ந்து இருமையும் பெற்று இன்புறுவார்களாக.

# வள்ளுவரும் வாதவூரரும் *

சைவ சமயாசாரியர் நால்வருள் மாணிக்கவாசகர், தேவாரம் அருளிச்செய்த மூவருக்குப் பின்வந்தவர் என இக்கால ஆராய்ச்சி யாளர் சிலர் கூறினும், 'சமயாசாரியர் நால்வருள் காலத்தால் முற்பட்டவர் மாணிக்கவாசகர்' என்பதே மரபு. இம்மரபினை மாற்றிக்கொள்வதற்குக் கூறப்படும் சான்றுகள் ஐயத்திற்கு இடம் தராதனவாய் இருக்கவில்லை. அன்றியும் மேற்கூறிய மரபினை நிலைநிறுத்தும் வகையில் பேரறிஞர் பலர் காட்டும் சான்றுகளும் இல்லாமல் இல்லை. நிலைமை இங்ஙனம் இருக்கும் பொழுது, முன்னை மரபின்வழி நிற்பதே முறையாகும். இந் நிலையில் காலத்தால் மிக முற்பட்டவராகிய மாணிக்கவாசகர் வாக்கில் திருவள்ளுவரது திருக்குறளின் தொடர்கள் அருகியே காணப்படுகின்றன. ஆயினும், திருக்குறட் கருத்துக்கள் ஆங் காங்குக் காணப்படுகின்றன. அங்ஙனம் வள்ளுவரது குறள் வாதவூரராகிய மாணிக்கவாசகர் வாக்கில் எங்ஙனம் காணப்படு கின்றது என்பதை ஒருசிறிது நோக்குதல் பொருந்தும்.

திருவள்ளுவர், "கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன் - நற்றாள் தொழாஅரெனின்" என்ற திருக்குறளிலும், "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர் - மற்றீண்டு வாரா நெறி" என்ற திருக்குறளிலும், 'கல்வியைக் கற்றவர்க்கே கடவுளை உணரும் நிலை உண்டாகும்' என்பதைக் குறிக்கின்றார். கடவுளை உணரும் உணர்வு, 'மெய்யுணர்வு' அல்லது ஞானம் எனப் படுகின்றது. அந்த ஞானம் முதலில் நூல்களின் வழியாகவே ஒருவர்க்கு உண்டாகும். அவ்வாறு நூல்களின் வழியாக உண்டாகும் ஞானம் 'கலை ஞானம்' எனப்படும். கலைஞானம் இல்லாமல் அனுபவ ஞானம் உண்டாகாது; ஆகவே, அநுப ஞானத்திற்கு அடிப்படை கலைஞானமாகின்றது. கலைஞானத் தையே அடையாத ஒருவர் அனுபவ ஞானத்தை எவ்வாறு அடையமுடியும்? முடியாது. அதனால் தான் திருவள்ளுவர் கல்வியைப் பெரிதும் வற்புறுத்துகின்றார். அதுபோலவே, மாணிக்கவாசகரும் அநுபவ ஞானத்திற்குக் கலைஞானம் இன்றி யமையாதது என்பதை,

"கற்றறியேன் கலைஞானம், கசிந்துருகேன்" (1)

என்று அருளிச்செய்கின்றார். இறைவனது பெருமைகளைக் கூறும்

---

* 10—1—68 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

(1) திருஏசறவு - 5.






கலைஞானத்தைப் பெருமையால் அவனை நினைந்து கசிந்துருகும் நிலைவரவில்லை என்பது இதன் கருத்து.

ஒருவன், தான் கல்வியைக் கற்காவிடினும், கற்றவர்களை அணுகியிருந்தேனும் அவரால் நல்லவற்றைக் கேட்டு அறிதல் வேண்டும் என்பதை, "கற்றில னாயினும் கேட்க; அஃது ஒருவற்கு - ஒற்கத்தின் ஊற்றாம் துணை" என்பதனால் தெரிவிக்கின்றார் வள்ளுவர். வாதவூரடிகளும் "எண்ணிலேன்திரு நாமஅஞ் செழுத்தும்என் ஏழைமை அதனாலே" என்று கூறியபின்,

"நண்ணி லேன்கலை ஞானிகள் தம்மொடும்" (2)

என்று அருளிச்செய்கின்றார்.

"தனக்குவமை யில்லாதான்" என்று வள்ளுவர் இறைவனைக் குறிக்கும் தொடர் வாதவூரர் வாக்கில்,

"தனையொப் பாரை இல்லாத் தனியை" (3)

எனக் காணப்படுகின்றது. சிவத்திற்கும், அவனது சத்திக்கும் வேற்றுமை இன்மையால் மாணிக்கவாசகர் அம்மையையும் திருக்கோவையாருள்,

"தன்னே டுவமையிலாதவள்" (51)

எனக் குறிக்கின்றார்.

வாதவூரடிகள் சிவபெருமானை, "செம்பொருட் டுணிவே"(4) என அழைப்பது, திருவள்ளுவர் இறைவனை, "செம்பொருள்" (5) எனக் குறித்திருத்தலை நினைப்பிக்கும்.

'உலகப் பற்றுக்கள் முற்றிலும் நீங்குவதற்கு இறைவனைப் பற்றவேண்டும்' என்பதையும், அதற்குக் காரணம் அவன் இயல்பாகவே எந்தப்பற்றும் இல்லாதவனாய் இருப்பதுதான் என்பதையும் திருவள்ளுவர், "பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப் - பற்றுக பற்று விடற்கு" என்பதனால் அறிவுறுத்துகின்றார். 'பற்றுக்கள் விடுவதற்கு இறைவனைப் பற்றுக'

---

(2) அதிசயப் பத்து - 6.
(3) புணர்ச்சிப் பத்து - 7.
(4) பிடித்த பத்து - 1.
(5) "பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு" (திருக்குறள் - 358.)

என்றதனல், 'அவனை அடைவதும் பற்றற்றவர்கட்கே கூடும்' என்பது தெளிவாகும். அதனல் மாணிக்கவாசகர் இறைவனை,

"பற்றென் றில்லார் பற்றும் தில்லைப்பரன்"

எனத் தமது திருக்கோவையாரில் (178) அருளிச்செய்தார். மற்றும் திருவாசகத்தில்,

"சுற்றிய சுற்றத் தொடர்வறுப்பான் தொல்புகழே
பற்றியிப் பாசத்தைப் பற்றறநாம் பற்றுவான்
பற்றியபே ரானந்தம் பாடுதுங்காண் அம்மானய்" ‡

என்ற பகுதியும் மேற்குறித்ததிருக்குறளோடு ஒத்துநிற்கின்றது.

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் - இறைவனடி சேராதார்" என்னும் திருக்குறளில் திருவள்ளுவர், பிறவியைப் 'பெருங்கடல்' என்றும் 'அதைக் கடத்தற்கு உதவும் புணை இறைவனது திருவடியே' என்றும் கூறுகின்றர். அதனையே,

"பிறவி என்னும்இக் கடலை நீந்தத்தன்
பேரருள்தந் தருளினன்"

என்ற மணிவாசகரது திருவாசகத்தில் காண்கின்றேம். 'இறைவன் அடி' என்பது, அவனது அருளையே குறிக்கும் என்பது நன்கறியப்பட்டது.

பிறவியைக் கடலாக உருவகித்துக் கூறுகின்ற மற்றேர் இடத்தில் அதனை இன்னும் மிக விரிந்த அளவில் மாணிக்க வாசகர் முற்றுருவமாகச் சித்தரித்துக் காட்டுகின்றர்.

பிறவி ஒரு பெருங்கடல். பிறவியில் ஒன்றன்பின் ஒன்ருக இடைவிடாது வருகின்ற துன்பங்கள், அக்கடலில் இடைவிடாது வருகின்ற அலைகள். மாதரது அழகிய உருவத்தோற்றம் அக்கடலின் நடுவில் எழும் புயற்காற்று; காமம் அக்கடலில் வாழும் சுருமீன். இவற்றினின்றும் பிழைத்துக் கரையேற்றுதல் எப்படி? திருவைந்தெழுத்தாகியபுணையைப்பற்றினலன்றி அஃதுஇயலாது. அப்புணையைத் தாம் பற்றிக்கிடப்பதாகவும் அதனல் அவர் இறைவன் திருவடியாகிய அளவறியப்படாத கரையை அடைந்ததாகவும் அருளிச்செய்கின்றர்.

---

‡திருஅம்மானை - 20.

" தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையால் எற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயா ரென்னுங் காலாற்
கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்டு
இனியென்னே உய்யுமாறு என்றென் றெண்ணி
அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின்றேனை
முனைவனே முதல்அந்தம் இல்லா மல்லற்
கரைகாட்டி ஆட்கொண்டாய் மூர்க்க னேற்கே. †

வள்ளுவர் காமத்துப்பாலில் தலைவன், தலைவியது குறிப்பை அறியுமிடத்து, அவளது நோக்கு ஒன்றே இருதன்மையாய் இருந்தது என்பதைக் கூறுமிடத்து, ஒருதன்மை நோயாகவும், மற்றொரு தன்மை அதற்கு மருந்தாகவும் இருந்தது எனக் கூறுவதாக ஓர் அழகிய குறளை அமைத்துள்ளார். அது,

" இருநோக் கிவள்உண்கண் உள்ளது; ஒருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து "

என்பது. வாதவூரரும் தமது திருக்கோவையாரில் அத்துறை வரும் இடத்தில் அங்ஙனமே கூறுதல் காணலாம்.

" அணியும் அமிழ்தும்என் ஆவியும் ஆயவன் தில்லைச்சிந்தா
மணிஉம்ப ரார்அறியாமறை யோன்அடி வாழ்த்தலரில்
பிணியும் அதற்கு மருந்தும் பிறழப் பிறழமின்னும்
பணியும் புரைமருங் குற்பெருந்தோளி படைக்கண்களே." ‡

திருவள்ளுவர் ஒப்புரவாளனை ஊருணி என்கின்றார். அஃதாவது ஒப்புரவாளனது செல்வம் ஊருணியில் உள்ள நீர் பலர்க்கும் பயன்படுதல்போல எல்லார்க்கும் பயன்படும் எனக் குறிக்கின்றார். அங்ஙனமே மாணிக்கவாசகரும் திருக்கோவையாரில், 'தலைவன் பலர்க்கும் பயன்படுபவன், என்பதைக் குறிக்குமிடத்தில் அவனை, 'ஊருணி, எனக் கூறுகின்றார்.

" காரணி கற்பகம் கற்றவர் நற்றுணை பாணரொக்கல்
சீரணி சிந்தா மணிஅணி தில்லைச் சிவனடிக்குத்
தாரணி கொன்றையன் தக்கோர்தம் சங்கநிதிவிதிசேர்
ஊருணி உற்றவர்க் கூரன்மற் றியாவர்க்கும் ஊதியமே " *

என்பது அப்பாட்டு.

இங்ஙனம்திருவள்ளுவரதுவாக்கோடு வாதவூரடிகளதுவாக்கினையும் யாவரும் ஒருங்கு உணர்ந்து பயன்பெறுவார்களாக.

---

† திருச்சதகம் - 31. ‡ திருக்கோவையார் - 5.
* திருக்கோவையார் - 400.

# திருக்குறளும் மெய்கண்ட நூல்களும் *

மக்கள் கைக்கொள்ளத் தக்க நெறி இரண்டு. அவை, 'உலகியல், மெய்ந்நெறி' என்பன. உலகியலாவது, இப்பிறப்பிலும், வருகின்ற பிறப்புக்களிலும் இனிது வாழ்தற்குரிய வழி. மெய்ந்நெறியாவது பிறப்பு நீங்கி உயிர் என்றும் ஒரே நிலையாய் இன்புற்றிருத்தற்குரிய வழி. இவ்விரண்டனையும் விளக்கும் நூல்கள், 'இலக்கியம், இலக்கணம்' என இருவகையாய் இருக்கும். மெய்ந்நெறி பற்றிய இலக்கிய இலக்கணங்களே சமய நூல்களாம். உலகியல் பற்றிய இலக்கியங்களிலும் சமய நூற் கருத்துக்கள் சிறப்பித்துச் சொல்லப்படும் எனினும், அவை அவ்விடத்துப் பொது வகையாகவே சொல்லப்படும். ஆகவே உலகியல் நூல்கள், 'பொது நூல்' என்றும், சமய நூல்கள் 'சிறப்பு நூல்' என்றும் சொல்லப்படும். பொது நூல்களில், திருவள்ளுவ நாயனர் அருளிச் செய்த திருக்குறள் தலையாயது. இஃது உலகியலின் இலக்கண நூலேயாம். சங்க நூல்களாகிய பத்துப்பாட்டு. எட்டுத்தொகை என்பன உலகியல் இலக்கியங்கள். இவை அனைத்தும் பொது நூல்கள்.

இனி ஐம்பெருங் காப்பியம், ஐஞ்சிறு காப்பியம், பாரதம், இராமாயணம், புராணம் முதலியவைகள் சமய இலக்கியங்கள். எனினும் தமிழில் இவை அனைத்திலும் மேம்பட்ட சமய இலக்கியங்களாய் உள்ளவை திருமுறைகளும் திவ்வியப்பிரபந்தங்களுமாம். இவை சிறப்பு நூல்கள். பொது நூல்கள் அனைவர்க்கும் உரியனவாய்ப் பயன்படும். சிறப்பு நூல்கள் அவ்வச் சமயத்தார்க்கே சிறப்பாக உரியன எனினும், எல்லாவற்றிலும், எல்லாரும் கைக்கொள்ளத் தக்க பொருள்களும் இவைகளில் உண்டு. 'மிகச்சிறந்த சமய இலக்கியங்கள்' என்று சொல்லப்பட்டவற்றுள், திருமுறைகள் சைவ சமயத்திற்கும், திவ்வியப் பிரபந்தம் வைணவத்திற்கும் உரியன என்பது யாவரும் அறிந்தது. அவைகளில் திருமுறைகளாகிய இலக்கியங்கட்கு இலக்கணமாய் அமைந்த நூல்கள் 'சித்தாந்த சாத்திரங்கள்' எனப்படும் மெய்கண்ட நூல்கள். அவை திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் முதலிய பதினான்கு என்பது அனைவராலும் நன்கறியப்பட்டது. இம் மெய்கண்ட நூல்களிலும் திருவள்ளுவர் அருளிச்செய்த பொதுமறையாகிய திருக்குறளின் சொல்லும், பொருளும் நிரம்பியிருத்தல் காணலாம்.

---

* 10—2—68 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

சாத்திரம் பதினன்கனுள் முதலில் நிற்பது திருவுந்தியார். இதனை அருளிச்செய்தவர் திருவியலூர் உய்யவந்ததேவநாயனர். இவர் சிறந்த சிவானுபூதிச் செல்வர். தமது அனுபவத்தையே இவர் தம் மாணக்கராகிய ஆளுடைய தேவநாயனர்க்குச் சாத்திரமாக அருளிச்செய்தார். அதனுள், கீழ்க்காணும் ஒரு திருவுந்தியார் உள்ளது.

பற்றை அறுப்பதோர் பற்றினைப் பற்றில்அப்
பற்றை அறுப்பர்என் றுந்தீபற;
பாவிக்க வாரார்என் றுந்தீபற.

இத் திருவுந்தி, “பற்றுக பற்றற்ருன் பற்றினை; அப்பற்றைப் - பற்றுக பற்று விடற்கு” என்னும் திருக்குறளையே கொண்டு நிற்றல் வெளிப்படை.

திருவுந்தியாரின் வழி நூலாகச் செய்யப்பட்டது திருக்களிற்றுப்படியார். இதனை அருளிச்செய்தவர், திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனர். இவர் மேற்குறித்த திருவுந்தியின் பொருளை விளக்குமிடத்து மேற்கூறியவாறே ஒரு வெண்பாவினை அருளிச்செய்தார்.

பற்றினுட் பற்றைத் துடைப்பதொரு பற்றறிந்து
பற்றிப் பரிந்திருந்து பார்க்கின்ற — பற்றதனைப்
பற்றுவிடில் அந்நிலையே தானே பரமாகும்;
அற்றம்இது சொன்னேன் அறி.

இன்னும் இவர் தமது சாத்திரத்தில் திருக்குறளைச் சிறந்த பிரமாணமாக எடுத்தோதி விளக்கம் தருகின்ருர். அவ்வெண்பாக்கள் பின்வருவன;

‘சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின்’ என்றமையால்,
சார்புணர்தல் தானே தியானமுமாம்; — சார்பு
கெடவொழுகின் நல்ல சமாதியுமாம்; கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று.

‘வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை’ என்றமையால்,
வேண்டின்அஃ தொன்றுமே வேண்டுவது —‘வேண்டின்அது
வேண்டாமை வேண்டவரும்’ என்றமையால் வேண்டிடுக,
வேண்டாமை வேண்டும்அவன் பால்.

இவைகளில்முறையே, “சார்புணர்ந்துசார்புகெட வொழுகின் மற்றழித்துச் — சார்தரா சார்தரு நோய்”, “வேண்டுங்கால்

வேண்டும் பிறவாமை; மற்றது — வேண்டாமை வேண்டவரும்'' என்னும் திருக்குறள்கள் எடுத்தோதப்பட்டிருத்தல் தெளிவு. மேல் உள்ள இரண்டு வெண்பாக்களிலும், '' என்றமையால் '' என வந்திருத்தல் சிறப்பாக நோக்கத்தக்கது.

சித்தாந்த சாத்திரங்களுள் முதன்மைபெற்று விளங்குவது சந்தாநசாரியர்களுள் முதல்வராகிய மெய்கண்டதேவர் அருளிச் செய்த சிவஞானபோதம். அதிலும் திருக்குறளின் கருத்தும் சொல்லும் காணப்படுதல் குறிப்பிடத்தக்கது. 'பதி, பசு, பாசம்' என்னும் முப்பொருள்களில் பதியாகிய கடவுள் உண்டு என்பதற்குப் பிரமாணம் கூற எடுத்துக்கொண்ட முதற் சூத்திரத்திலே மெய்கண்டார், திருவள்ளுவர் தமது முதற் குறளில் கொண்ட முறையையே கொண்டிருக்கின்ருர். அஃதாவது, 'காணப்படாதகடவுளை, 'உண்டு' என்று துணிவதற்குக் காணப்பட்ட உலகமே வழியாய் உள்ளது' என்பதே. அஃதாவது, 'காணப்படும் உலகத்தை ஒருவர் உற்றுநோக்கி நடுவு நின்று காண்பார்களாயின், 'இவ்வுலகம் அனைத்தையும் நெறிப் படத் தோற்றுவித்து நிறுத்தி ஒடுக்குகின்ற ஒருவன் இருக்கத் தான் வேண்டும்' என்ற முடிவிற்கு வாராமல்போகமாட்டார்' என்பதாம். இதனைத் திருவள்ளுவர், '' உலகு ஆதிபகவன் முதற்றே '' என்றும், மெய்கண்டார், '' அவன் அவள் அது எனும் அவை, மூவினைமையின் - தோற்றிய திதியே '' என்றும் அருளிச்செய்தனர். இன்னும், '' அகர முதல எழுத்தெல்லாம் '' எனத் திருவள்ளுவர் கூறிய உண்மையை மெய்கண்டார், '' அக் கரங்கள் இன்ரும் அகரவுயிர் இன்றேல் - இக்கிரமத்து '' எனக் கூறியுள்ளார்.

திருவள்ளுவர் காமத்துப்பாலில் கூறிய, '' கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐப்புலனும் - ஒண்டொடி கண்ணே உள '' என்ற திருக்குறளை மெய்கண்டார் அங்ஙனமே தமது சிவஞானபோதத்தில்,

> '' கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனைக்
> கண்டுடனய் மன்னுதலைக் காண் ''
>
> ( சூ. 5. அதி. 2. )

என்று அருளிச் செய்கின்ருர். ஆன்மாவைக் குறிப்பதற்கு மெய் கண்டார் பல இடங்களில் உள்ளம் - உளம் என்பதைக் கையாளு கின்ருர். இது '' ஓர்த்துள்ளம் உள்ள துணரின் '' என்னும் திருக்குறளின் வழிநின்று ஆண்டதே என்று கூறலாம். இத் திருக்குறளில், '' உள்ளம் '' என்றதற்கு, 'ஒருவன் உள்ளம்'

எனப் பரிமேலழகர் 'ஒருவன்' என்னும் சொல்லை வருவித்துக் கூட்டுகின்றார். ஆயினும், "உள்ளம் உள்ளது உணரின்" என்பதற்கு, 'ஆன்மா மெய்ப்பொருளை உணருமாயின்' என உரைப்பின் நேரிய உரையாய் இருக்கும்.

பரம்பொருளை உணரும் உணர்வை, "மெய்ப்பொருள் காண்பது" என்றும், அதனை உணர்ந்தவரை, "மெய்ப்பொருள் கண்டார்" என்றும் திருவள்ளுவர் கூறுகின்றார்: மெய்கண்டாரும் அங்ஙனமே அத்தகையோனை, "மெய்கண்டான்" எனக் குறிப்பிடுதல் காணலாம். இங்ஙனம் திருக்குறளின் முறைகள் பல சிவஞானபோதத்தில் ஆங்காங்கு உள்ளன. திருவள்ளுவர் திருக்குறளில் அறத்துப்பாலில் கூறிய பல அதிகாரங்களின் பொருளை அருணந்தி சிவாசாரியார் தமது சிவஞானசித்தி நூலில் ஒரு செய்யுளில்,

"ஒழுக்கம், அன்பு, அருள், ஆசாரம்
உபசாரம், உறவு, சிலம்,
வழுக்கிலாத் தவம், தானங்கள்,
வந்தித்தல் வணங்கல் வாய்மை,
அழுக்கிலாத் துறவு அடக்கம்
அறிவொடு அர்சித்த லாதி
இழுக்கிலா அறங்க ளானல்
இரங்குவான் பணி அறங்கள்"

(சூ. 2. 23.)

எனக் குறிப்பிடுதல் காணலாம். இல்லறம், துறவறம் என்பவற்றைத் திருவள்ளுவர் ஓரிடத்தில், 'தானம், தவம்' எனக் குறிப்பிடுதல் அறியத் தக்கது.

மக்கட்கு வறுமை முதலிய தீமைகளும், செல்வம் முதலிய நன்மைகளும் இப்பொழுது புதியனவாய் உளவாவன அல்ல; முன்பே கருவினுள் அமைந்து கிடந்தனவேயாம் என்பதைத் திருவள்ளுவர், "கேடும் பெருக்கமும் இல்லல்ல; நெஞ்சத்துக் கோடாமை சான்றோர்க் கணி" எனக் கூறினர். அதனை அருணந்தி சிவாசாரியர்,

"பேறிழ வின்ப மோடு பிணிமூப்புச் சாக்கா டென்னும்
ஆறும்முன் கருவுட் பட்டது" (சூ. ௬. 9.)

என்கின்றார்.

'பிறப்பிற்குக் காரணம், யான், எனது என்னும் அகப் பற்று, புறப்பற்றுக்களேயாம்' என்பதையும், 'அப்பற்று நீங்கினேர், தேவர்க்கும் மேலான வீட்டுநிலையை அடைவர்' என்பதையும் திருவள்ளுவர், "யான்என தென்னும் செருக் கறுப்பான் வானேர்க் குயர்ந்த உலகம் புகும்" என்னும் குறளால் தெரிவிக்கின்றார். அதனைச் சிவஞானசித்தி ஆசிரியர்,

" யான்செய்தேன் பிறர்செய்தார் என்னதியான் என்னும்
இக்கோணை ஞானஎரி யால்வெதுப்பி நிமிர்த்துத்
தான்செவ்வே நின்றிடஅத் தத்துவன்றான் நேரே
தனையளித்து முன்னிற்கும்; வினையொளித் திட்டோடும்"

(சூ. 10. 2.)

என விளக்குகின்றார். இதனை மெய்கண்டாரும், "அவனிடத்து ஏகனாகி நிற்க என்றது; அவ்வாறு நிற்கவே, யான் எனது என்னும் செருக்கற்று, அவனது சீபாதத்தை அணையுமாகலான்" என விளக்கியிருத்தல் காணத்தக்கது.

அருணந்தி சிவாசாரியர் அருளிய மற்றொரு சாத்திரம், இருபா இருபஃது. அது, அவர் தம் ஆசிரியராகிய மெய்கண்ட தேவரைத் துதிக்கும் முறையில் அருளிச்செய்தது. அதில் அவர்தம் ஆசாரியரை நோக்கிச் சில ஐயங்களை விண்ணப்பித்து, இவ்வினாக்களுக்கு விடையாக,

" சொல்லிற் சொல்லெதிர் சொல்லாச்
சொல்லே சொல்லுக சொல்லிறந் தோயே "

( பா. 12. )

எனக் கூறியுள்ளார். அக்கூற்று, "சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை - வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து" என்ற திருக்குறளின் வடிவாய் அமைந்துள்ளது.

மெய்கண்டதேவர் மாணக்கருள் மற்றொருவர் திருவதிகை மனவாசகங்கடந்தார். இவர் 'உண்மை விளக்கம்' என்ற ஒருநூலைச் செய்துள்ளார். அது சைவசித்தாந்தத்தின் தத்துவங் களையும், மற்றும் முப்பொருள் இயல்பு முதலியவற்றையும் கூறுவது. அந்நூலிலும்,

" அக்கரங்கட் கெல்லாம் அகரஉயிர் நின்றாற்போல்
மிக்க உயிர்க்குயிராய் மேவினேம் "

( பா. 30. )

என்று சொல்லப்பட்டுளது. இஃது, "அகர முதல எழுத்தெல்லாம்; ஆதி - பகவன் முதற்றே உலகு' என்ற முதற் குறளின் சொல்லேயும் பொருளேயும் கொண்டு நிற்கின்றது.

சித்தாந்த சாத்திரங்கள் பதினுன்கனுள் எட்டு நூல்களேச் செய்தவர் உமாபதி சிவாசாரியார். அவைகளில் முதலாவது, சிவப்பிரகாசம். இது 'சிவஞானபோதம்' என்னும் முதனூலே யும், 'சிவஞான சித்தி' என்னும் வழிநூலேயும் சார்ந்தெழுந்த சார்புநூல். அதிலும், சிவஞான சித்தியிலும் ஞானம், கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடுதல் என நான்கும் என்று சொல்லப்படுகின்றது. இவை நான்கையும் திருவள்ளுவர் மெய்யுணர்தல் அதிகாரத்துள், "கற்றீண்டு மெய்ப்பொருள்" என்பது முதலிய நான்கு குறள்களில் முறையே கூறியிருத்தல் காணலாம். இன்னும் சிவப்பிரகாசத்துள்,

"மண்முதற் கரண மெல்லாம்
மருவசத் தாக்கி ஞானக்
கண்ணினில் ஊன்றி அந்தக்
கருத்திஞல் எவையும் நோக்கி"

(பா. 97.)

என வருவது, "எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப் பொருள் - மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்னும் திருக் குறளின் பொருளே விரிப்பதாகும்.

சிவப்பிரகாசத்தை அடுத்து நிற்கும் 'திருவருட்பயன்' என்னும் நூலே உமாபதி சிவாசாரியர் திருக்குறளேப்போலவே அமைத்துள்ளார். நூல் முழுவதும் குறள் வெண்பாக்களால் ஆக்கப்பட்டிருப்பதும, பொருள்களே அதிகாரங்களாகப் பிரித்து அதிகாரம் ஒன்றுக்குப் பத்துக் குறள்களே செய்திருப்பதும் திருக்குறளோடு முழுதும் ஒத்துத் தோன்றுவனவாம், மேலும் இந்நூலின் முதற் குறளும், திருக்குறளின் முதற் பாட்டு "அகரம்" எனத் தொடங்கியிருப்பதுபோலவே,

"அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில்இறை நிற்கும் நிறைந்து"

எனத் தொடங்கியிருத்தல், பெரிதும் அறிந்து மகிழ்தற்குரியது.

"பிறந்தநாள் மேலும் பிறக்குநாள் போலும்
துறந்தோர் துறப்போர் தொகை"

என்பது, "துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத் - திறந்தாரை எண்ணிக்கொண் டற்று" என்னும் குறளின் போக்கில் அமைந்துள்ளது.

"புலன்அடக்கித் தம்முதற்கட் புக்குறுவர்; போதார்,
தலன் நடக்கும் ஆமை தக"

என்பது, "ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்க லாற்றின்" என்னும் திருக்குறளோடு ஒத்துநிற்கின்றது. அடுத்துள்ள வினவெண்பாவில், "புல்லறிவு நல்லுணர்வதாகா" என்பதில், "புல்லறிவாண்மை" என்ற திருக்குறட் சொல்லாட்சி காணப் படுகின்றது.

பின்னுள்ள போற்றிப் பஃறொடை நூலில் உடம்பை, "புன் புலால் போர்த்த புழுக்குரம்பை மாமனே" எனக் கூறியிருப்பது, "அன்பின் வழிய துயிர்நிலே; அஃதிலார்க் - கென்பு தோல் போர்த்த உடம்பு" என்ற திருக்குறளை நினைப்பிக்கின்றது.

கொடிக்கவியில், "பொருளாம் பொருள்ஏது" என மெய்ப்பொருளேயே பொருள் எனக் கூறியமுறை, "பொரு ளல்லவற்றைப் பொருளென் றுணரும் - மருளானும் மாணுப் பிறப்பு" என்ற திருக்குறளிற் காணப்படுவதே.

நெஞ்சுவிடு தூதில் ஆசிரியர் உமாபதிதேவ நாயனர்,

"தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றையவ ரென்று — நிலைத்தமிழின்
தெய்வப் புலமைத் திருவள் ளுவர்மொழிந்த
மெய்வைத்த சொல்லை"

என வெளிப்படையாகவே எடுத்தோதிப் போற்றியிருத்தல் யாவரும் அறிந்தது

'உண்மைநெறி விளக்க நூலைச் செய்தவர் சீகாழித் தத்துவநாதர்' என்ற ஒரு கருத்தும் உண்டு. அந்நூலிலும், "பாயிருள் நீங்கி ஞானந் தனைக் காண்டல் ஆன்ம ரூபம்" என வருகின்றது. அதனை, "இருள் நீங்கி இன்பம் பயக்கும் மருள் நீங்கி - மாசறு காட்சி யவர்க்கு" என்னும் திருக்குறளோடு வைத்து நோக்கலாம்.

சித்தாந்த சாத்திரங்களுள் இறுதியானது சங்கற்ப நிரா கரணம். இதன்கண்ணும் உமாபதி சிவாசாரியார் ஓரிடத்தில்,

"சொல்லுதல் எளிதரி தத்தொழில் புரிவெனப்
புல்லிய பழமொழி புதுக்கினை யன்றே"

(பா. 4 - 168. 69.)

என்று, "சொல்லுதல் யார்க்கும் எளிய ; அரியவாம் - சொல்லிய வண்ணம் செயல்" என்ற திருவள்ளுவரது திருக்குறளை வெளிப் படையாக எடுத்தோதியிருக்கின்றார்.

இங்ஙனம் பொது நூலாகிய திருக்குறளின் கருத்துக்கள், சிறப்பு நூல்களாகிய சித்தாந்த சாத்திரங்கள் பலவற்றிலும் வெளிப்படையாகவும், குறிப்பாகவும் விளங்கி நிற்றல் காணலாம். சித்தாந்த சாத்திர ஆசிரியர்களுள் மெய்கண்டார், அருணந்தி சிவாசாரியார், உமாபதிதேவ நாயனார் மூவரும் சந்தானாசாரியர் களாவர். சமயாசாரியர்களது தோத்திரங்களிலும், சந்தானா சாரியர்களது சாத்திரங்களிலும் திருக்குறள் சிறப்பிடம் பெற்றுத் திகழ்வதால், திருக்குறளாகிய பொது நூலை ஓதுவோர், சிறப்பு நூல்களாகிய இத் தோத்திர சாத்திரங்களை ஓதி மெய்ப்பயன் பெறுவார்களாக.

---

## சந்தானகுரவர் தோத்திரம்

ஈராண்டிற் சிவஞானம் பெற்றுயர்ந்த மெய்கண்டார்
இணைத்தாள் போற்றி
நாராண்ட பல்லடியார்க் கருள்புரிந்த அருணந்தி
நற்றாள் போற்றி
நீராண்ட கடந்தைநகர் மறைஞான சம்பந்தர்
நிழற்றாள் போற்றி
சீராண்ட தில்லைநகர் உமாபதியார் செம்பதுமத்
திருத்தாள் போற்றி.

# தோத்திரமும் சாத்திரமும்

## 1. தன்னை அடைந்தார் வினைதீர்க்கும் தலைவன்*

உலகம் போற்றுவது உயர்ந்தோரையே. உயர்ந்தோரை, 'தலையாயவர்' என்பர் 'தலையாயவர்' என்பதே வடமொழியில் 'உத்தமர்' எனப்படுகின்றது தலையாயவர்க்குச் சில செயல்கள் கடமையாக அமைந்துவிடுகின்றன. அவை, தம்மிடம் வந்து இரந்தவர்க்கு 'இல்லை' என்னாது ஈயும ஈகை, தம்மை இகழ்ந்தவரைப் பொறுத்துக்கொள்ளும் பொறை, அடைக்கலம் என்று அடைந்தவரைக் காக்கும் அருள் முதலியன.

இவைகளுள் ஒவ்வொருவரிடம் ஒவ்வொரு பண்பு சிறந்து விளங்குவது இயல்பு. கன்னன், குமணன் போன்றவர்கள்பால் இரந்தவர்க்கு இல்லையென்னாது உயிரையும் ஈயும் ஈகை சிறந்து விளங்கியது தருமபுத்திரன், சோழன் நலங்கிள்ளியின் இளவல் மாவளத்தான் போன்றவர்கள் பால் பொறுமை மிக்கு விளங்கிற்று அடைக்கலம் என்று வந்த புறாவுக்காகத் தன் உடம்பையே அரிந்து கொடுத்துப் பின் தானே துலைத்தட்டிலும் ஏறிய சிபிச்சக்கரவர்த்தி போன்றவரிடம் அடுத்தவரைக் காக்கும் அருள் பெரிதும் நிறைந்து நின்றது. என்றாலும் எல்லா உயர் பண்பும எல்லாரிடமும் மிக்கிருக்கும் என்று சொல்வதற்கில்லை. அனைத்தையும் அளவின்றிக் கொண்டிருப்பவன் இறைவனே.

இறைவனது அளவில்லாத பெருமைகளுள், 'பிழை பொறுத்தல், அடுத்தவரைக் காத்தல்' என்பவற்றை நம் சமயாசாரியர் ஆகிய அப்பர் பெருமானை அவன் ஆண்டருளிய வரலாற்றில் காண்கின்றோம். அவற்றை அவரே தமது முதல் திருப்பதிகத்துள் வலியுறுத்தி அருளிச்செய்கின்றார்.

நாவுக்கரசர் அவதரித்தருளியது சிவநெறிபோற்றும் சீரிய குடியிலே. பின்பு அவர் வளர்ந்து கற்ற கலைகளும் சிவநெறியைப் போற்றும் சிறப்பினவே. கற்ற வழியிலே அவர் இளமைக் காலத்தில் தவறின்றி ஒழுகியும் வந்தார். ஆயினும், காலச் சூழ்நிலை அவரைப் பிழையின்கண் வீழ்த்தியது. 'காலச்சூழ்நிலை' என்று நாம் சொல்கின்றோம்; உண்மைக் காரணம், இறைவனது திருவருள் அவ்வகையில் இருந்ததுதான்' என்கின்றார் சேக்கிழார்.

---

* 10—7—70 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

நாவுக்கரசர் அவதரித்து வாழ்ந்த காலத்தில் தமிழ் நாடெங்கும் சமண்சமயப் பிரசாரமே மிக்கோங்கி இருந்தது. அரசனே சமணனாய் இருந்தான். ஆட்சிச் சமயம் சமண் சமயமாகவே இருந்தது. அம் மதத்தின் குருமார்கள் உயிர் இரக்கம் ( சீவ காருணியம் - கொல்லாமை ) என்ற ஒன்றிலே பிற குறைபாடுகளையெல்லாம் மறையுப்படி செய்து மக்களைத் தங்கள் மதத்தை மேற்கொள்ளச்செய்தனர்.

குடிப்பிறப்பு, கல்வி, அறிவு, ஒழுக்கம் முதலியவற்றில் சிறந்து விளங்கிய நாவுக்கரசரும் ( அப்பொழுது அவருக்கு மருணீக்கியார் என்பதே பெயர் ) அவர்களது சொல்லில் மயங்கினார். அறிவிலும், ஒழுக்கத்திலும் சிறந்த - தம் பொருட்டாகவே தம் கணவருடன் விண்ணுலகம் செல்லாது உயிர் தரித்திருக்கின்ற தமக்கையார் திலகவதியாரது வார்த்தையையும் கேளாதவராய்ச் சைவ சமயத்தை விடுத்துச் சமண் சமயத்திற் சேர்ந்து பாடலி புத்திரப் பள்ளியில் தங்கி, அச்சமய சாத்திரங்களை நன்கு ஓதிச் சமணக் குருமார்களாலும், சமண அரசனாலும் சிறந்த பாராட்டுக் களுடன், ' தருமசேனர் ' என்ற பட்டத்தையும் பெற்றார்.

தமக்கையார் திலகவதியார், செய்வது அறியாதவராய்த் தாம் அவதரித்த திருவாமூருக்கு அருகில் உள்ள தலமாகிய திருவதிகையை அடைந்து அங்குக் கோயில் கொண்டிருக்கும் வீரட்டானத்து இறைவருக்குப் பணிபுரிந்து, தம் தம்பியாரை எவ்வண்ணமேனும் நல்வழிப் படுத்தியருளவேண்டும்' என்று பலகாலும் வேண்டி வந்தார்.

பன்னாள் இரந்து பணிந்த அம்மையாரது வேண்டு கோளுக்கு இறைவர் திருவுளம் இரங்கி ஒருநாள், அவர்தம் கனவில் தோன்றி, ' உன்னுடைய மனக்கவலை ஒழி நீ ; உன் உடன் பிறந்தானைச் சூலைநோய் கொடுத்து ஆட்கொள்கின் றோம் ' என்று சொல்லி மறைந்தார்.

இறைவர் அருள் வழியே பாடலிபுத்திரத்தில் இருந்த தருமசேனர்க்குக் கொடிய சூலைநோய் உண்டாகி, ஒருவராலும் தீர்க்கப்படாதுபோகத் தாம் தமக்கையாரிடம் அனுப்பிய ஓர் ஏவலாளன் வழி, ' இது வீரட்டானேசுரர் செயல் ; அவரை அடைந்தாலன்றித் தீராது ' என்பதை உணர்ந்து இரவில் சமண சமயத்தையும், திகம்பர சமணக் கோலத்தையும், சமணப் பள்ளியையும் துறந்து, சமையற்காரனைத் துணைக்கொண்டு நடந்து, விடியலிலே திருவதிகையை அடைந்து, தமக்கையார் திருவடிகளிலே தம்மை மன்னிக்க வேண்டும் குறிப்புடன் விழ்ந்து அழுதார்.

தமக்கையார் தம்பியாரது நிலைக்கு இரங்கி, 'நுண்ணிய நூல் பல கற்றிருந்தும் ஊழ்வலியால் அறிவிழந்து பரசமயப் படுகுழியில் விழுந்தீர்; இனி வருந்தலிர்; 'வீரட்டானேசுரரை வணங்கி நலம்பெற்று வாழ்வீர்' என்று வாழ்த்தித் திருவீரட்டானரை நினைந்து திருநீற்றை எடுத்துத் திருவைந்தெழுத்தை ஓதிக் கொடுத்தார். தம்பியார், 'தம் துன்பம் தொலைந்தது' என்று மகிழ்ந்து வாங்கி உடல் நிறையப் பூசிக்கொண்டு, தமக்கையார் பின்னே திருப்பள்ளிஎழுச்சிக் காலத்தில் கோயிலுக்குள் சென்று வீரட்டானேசுரரைக் கண்டுவணங்கித் தாம் செய்த பிழையையும், தமக்கு உண்டாகிய சூலைநோயையும் நினைந்து வருந்தியபொழுது, அவ்விறைவரது திருவருளால் செந்தமிழ்ப் பாடல் தம் திருவாயினின்றும் தோன்ற, 'வீரட்டானத்துறை அம்மானே; அறியாமையால் பிழை செய்தேன்; ஆயினும், அதனை அறிந்து வந்து உன்னை அடைக்கலமாக அடைந்தேன் ஆதலின், அப்பிழை பொறுத்து ஆளுதல் வேண்டும்; அடுத்தவரைக் காப்பதன்றோ உயர்ந்தோர் செயல்! சூலைநோயை இனியும் பொறுக்கலாற்றேன்; அருள்புரிதல் வேண்டும்' என்னும் கருத்தமைய அரிய இசைப் பாடல்களைப் பாடியருளினர். அவையே "கூற்றாயினவாறு" என்னும் திருப்பதிகம் என்பது நன்கறிந்தது.

அதனுள் நாவுக்கரசர், 'பிழைகள் பலவற்றை நான் செய்யவில்லை. மூத்தோர் சொல்லிய வார்த்தையைக் கேளாது எனக்கு நல்லது எனத் தோன்றிய ஒரு நெறியில் சென்ற ஒரு பிழையைத்தான் செய்தேன்; அதனைப் பொறுத்தருள வேண்டும். அதுவும் அறியாமற் செய்தபிழை. அதனை, 'பிழை' என்று இப்பொழுது உணர்ந்து உமையடைந்தேன்; காப்பாளரது காவலை இகழ்ந்து கடுவெள்ளத்தில் பாய நினைத்த ஒருவனை அவன் கருத்துக்குத் துணையாகக் கரையில் இருந்த சிலர் அவனை அவ்வெள்ளத்தில் தள்ளிவிட, அங்ஙனம் தள்ளப்பட்டவன் அடைகின்ற நிலையை நான் இதுபொழுது அடைந்து, வருந்துகின்றேன்; என்னைக் காவா தொழிந்தாய். 'நீ அடைந்தவர்க்கு அருள் புரிபவன்' என்பதை என்போன்றவர்கள் ஒருபோதும் நம்பமாட்டார்கள். அந்நம்பிக்கையை உண்டாக்கி உலகை உய்வித்தற்பொருட்டாயினும் எனது சூலைநோயை நீக்கி என்னை ஆட்கொண்டருள வேண்டும். நீ உனது நிலையமாகிய கயிலாயத்தையே பெயர்த்த இராவணனது பெரும் பிழையையும் பொறுத்துப் பின்பு அவனுக்கு அருள் செய்தாய் அல்லையோ' என்ற கருத்துக்களெல்லாம் தோன்றப் பாடினர்.

"முன்னம் அடியேன் அறியா மையினால்
முனிந்தென்னை நலிந்து முடக்கியிடப்
பின்னை அடியேன் உமக்காளும் பட்டேன்;
சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்"
தன்னை அடைந்தார் வினை தீர்ப்பதன்றோ
தலையாயவர் தங்கட னாவதுதான்"
"காத்தாள்பவர் காவல் இகழ்ந்தமையால்
கரை நின்றவர் கண்டுகொள் என்றுசொலி
நீத்தாய கயம்புக நூக்கிட
நிலைக்கொள்ளும் வழித்துறை ஒன்றறியேன்"
"என்போலிகள் உம்மை இனித்தெளியார்
அடியார் படுவது இதுவேயாகில்"

என்ற பகுதிகள் காணத்தக்கன. அவற்றைக் கேட்டவுடன் இறைவர் அவரது சூலைநோயைத் தீர்த்து, 'நாவுக்கரசர்' என்ற சிறப்புப் பெயரையும் வழங்கியருளினர். பின்னும் சமணர்கள் இழைத்த தீங்குகள் ஒன்றும் அவரை நலியாதவாறு காத்தமை வெளிப்படை. அதனால் நாவுக்கரசர் "கற்றுணைப் பூட்டி ஓர் கடலிற் பாய்ச்சினும் – நற்றுணையாவது நமச்சி வாயவே" "அஞ்சுவது யாதொன்றும் இல்லை; அஞ்ச வருவதும் இல்லை" என்றெல்லாம் பாடியருளினர். ஆயினும், இத் தகைய நலங்கள் யாவும் அடைந்தவர்க்கல்லாது பெற இயலாது. வள்ளல்களாயினும், வந்து கேட்டவர்க்கே வழங்குவர். அருளாளராயினும் அடைத்தவரையே பாதுகாப்பர். அதுபோல இறைவரது அருளையும் அடைந்தவரே பெற இயலும். இதனையும் நாவுக்கரசர்,

"சலமிலன் சங்கரன்; சார்ந்தவர்க் கலால்
நலமிலன்; (சார்ந்தவர்க்கு) நாள்தொறும் நல்குவான் நலன்"
(நமச்சிவாயத் திருப்பதிகம் – 6.)

என்று அருளிச்செய்கின்றார். இன்னதொரு தன்மை 'இறைவனுக்கு நடுவுநிலைமை ஆகுமோ' என்ற ஐயத்தை நீக்கவே, "சலமிலன்" என்று அருளினர். சலம் - கோட்டம்.

'தன்னை அடைந்தார் வினையைத் தீர்க்கும் தலைவனே இறைவன்' என்னும் இத்தோத்திரப் பொருளைச் சிவஞான போதம், சிவஞான சித்தி என்னும் சாத்திரங்களில் பத்தாம் சூத்திரம் முதலியவற்றை நன்குணர்ந்தவழியே ஐயமறத் தெளிதல்கூடும். "சார்ந்தாரைக் காத்தலே தலைவர் கடன்" என்பது அங்கு ஐயமற விளக்கப்படுகின்றது. ஆதலின் தோத்திரங்களைச் சாத்திர உணர்ச்சிகொண்டு உணர்ந்து மக்கள் தெளிவு பெறுவார்களாக.

# தோத்திரமும் சாத்திரமும்

## 2. ஆள் அல்லேன் எனலாமே ?*

சிறப்புடைப் பொருள்கள் பலவற்றிலும் அறிவே சிறந்தது. " அறிவுடையார் எல்லாம் உடையர்; — அறிவிலார் என்னுடைய ரேனும் இலர் " என்கின்றார் திருவள்ளுவர். எனினும், ' அறிவு என்பது எது ' என்பதற்கு விடை காண்பது அரிதாகின்றது. திருவள்ளுவர் இவ்வினாவிற்குப் பல வகையாக விடை கூறியுள்ளார்.

" சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு "

" எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு "

" எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு "

இங்ஙனம் பலவகையாக அவர் கூறியிருத்தலைக் காண்கின்றோம். எனினும் இவை எல்லாவற்றிற்கும் திறவாக அவர் ஒன்று கூறுகின்றார்.

" அறிவுடையார் ஆவ தறிவார்; அறிவிலார்
அஃதறி கல்லா தவர் "

என்பதே அது. அஃதாவது, ' பின்னர் விளையக் கூடியதை முன்னரே உள்ளவாறு அறிவதே அறிவு ' என்பதாம். இது, பொருள்களின் தன்மையை உள்ளவாறு உணர்தலாலே உண்டாவதாகும். ஏனெனில், தீமை தருவதை நன்மை தருவ தாக நினைந்து விடுப்பினும் நன்மை தருவதைத் தீமை தருவதாகக் கொள்ளினும் பின் நிகழ்ச்சி முன் கருதியதற்கு மாறாகுமாதலால் அஃது அறிவு எனப்படாது.

அறிவுக்கு எதிரானது அறியாமை. இதுவே ' பேதைமை எனப்படும். ' புல்லறிவு ' எனப்படும் சிற்றறிவும் அறியாமையே.

" பேதைமை என்பதொன்று யாதெனின் ஏதங்கொண்டு
ஊதியம் போக விடல் "

---

* 10—8—70 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

" நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை "

என்பனபோலத் திருவள்ளுவர் அறியாமைபற்றிக் கூறுவன யாவும், பொருள்களின் தன்மையை உள்ளவாறு உணராது, மாறுபட உணர்தலாகவே இருத்தல் அறியத்தக்கது. இதனை, "பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும் மருள்" என ஓரிடத்தில் அவர் வெளிப்படையாகவே கூறியுள்ளார். எனவே, பொருள்களின் தன்மையை உள்ளவாறு உணர்வதே அறிவைப் பெறுதலாகும்.

பொருள்களின் தன்மையை உள்ளவாறு உணர வேண்டின், ஆன்ளோரது அனுபவ மொழிகளை அடிப்படையாகக் கொண்டு, நமது அறிவிற்கும், அனுபவத்திற்கும் பொருந்த ஆராய்ந்து உணர்தல் வேண்டும். இவ்வாறு ஆராயுமிடத்து முதலில் ஒவ்வொருவரும் தம்மைப் பற்றி ஆராய்ந்துகொண்டு பின்பே பிறவற்றை ஆராய்தல் வேண்டும். தம்மைப்பற்றி ஆராய் தலே 'ஆன்ம விசாரணை' அல்லது 'ஆன்ம சோதனை' என்று சொல்லப்படும். 'விசாரணை, சோதனை' 'ஆராய்ச்சி' என்பன எல்லாம் ஒன்றே. 'ஆன்மா' என்பது, 'தான்' என்னும் பொருளைத் தரும்.

" தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்ற மாகும் இறைக்கு "

" ஏதிலார் குற்றம்போல் தங்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னு முயிர்க்கு "

என்றாற்போல்வன, ஒவ்வொருவரும் முன்னே தம்மை ஆராய் தல் வேண்டும் என்பதையே குறிக்கும்.

தம்மையே அறியாதவர்கள் பிற பொருளை எவ்வாறு அறிதல் கூடும்? அதனால் முதலில் தம்முடைய தன்மையை நன்கு அறிந்து கொண்டால், அதனாலே பிற பொருள்களின் தன்மையும் உணரத்தக்கனவாகும் என்பதை மெய்கண்டார்,

" தம்மை உணர்ந்து தமைஉடைய தன்னுணர்வார்
எம்மை உடைமை எமை இகழார் — தம்மை
உணரார் உணரார்; உடங்கியைந்து தம்மில்
புணராமை கேளாம் புறன் "

என்று விளக்கினர். ஸ்ரீ குருஞானசம்பந்தரும் தமது சிவபோக சாரத்தில்,

" தன்னை அறியார்; தலைவன் தனை அறியார்;
முன்னை வினையின் முடிவறியார் — பின்னைக்
குருக்களென்று பேரிட்டுக் கொள்ளுவர்கள் ஐயோ!
தெருக்கள் தனிலே சிலர் "

என்று அருளிச்செய்தார். ஆகவே, ஒவ்வொருவரும் முன்னே தம்முடைய தன்மையை ஆராய்ந்து அறிதல் இன்றியமையாதது.

அறிவுடையோர் பலரும் தம்முடைய தன்மையை உண்மையாக ஆராய்ந்து பார்ப்பார்களாயின் தமக்கு உள்ள குறைபாடுகள் நன்கு விளங்குவனவாகும். ஒவ்வொருவருக்கும், ' நாம் எல்லாம் அறிவோம், எல்லாம் செய்ய வல்லோம் ' என்ற எண்ணம் இயல்பாக அமைகின்றது. ஆனால். 'அடுத்த கணத்தில்-அல்ல, இப்பொழுதே இவ்விடத்தில் இல்லாமல் வேறு இடத்தில் என்ன நிகழ்கின்றது ? வேறு இடம் - அல்ல; இவ்விடத்தே நம்முடன் இருப்பவர் தம் உள்ளத்தில் என்ன நினைக்கின்றார் ? நம்முடன் இருப்பவர் - அல்ல, நாமே நினைக்கின்ற நினைப்புத்தானும் சரியான நினைப்புத்தானா ?' என்பவை போன்றவைகளே ஒருவராலும் அறிய முடிவதில்லை. இனிப் பிறருக்கல்ல, நம்மைச் சேர்ந்தவர்களுக்கோ அல்லது நமக்கோ வருகின்ற துன்பங்களை நம்மால் நீக்கமுடிவதில்லை. உண்மை இவ்வாறு இருக்கும்பொழுது, " நாம் எல்லாம் அறிவோம், எல்லாம் செய்யவல்லோம் " என்று எண்ணுதல் எத்துணைத் தவறான எண்ணமாகின்றது ! ஆகவே, ஒன்றை அறிவதும், செய்வதும் உலகில் ஒருவருடைய இச்சையிலும் இல்லை. அனைத்திற்கும் மேற்பட்ட ஒரு பெரும் பொருளின் இச்சை வழியேதான் யாவும் நடைபெறுகின்றன என்பதைத் தாயுமானவர் மிக அழகாகப் பின்வருமாறு விளக்குவார்.

ஆராயும் வேளையிற் பிரமாதி யானாலும்
  ஐயஒரு செயலுமில்லை;
அமைதியொடு பேசாத பெருமைபெறு குணசந்த்ர
  ராமென இருந்தபேரும்
நேராக ஒருகோபம் ஒருவேளை வர அந்த
  நிறைவொன்றும் இல்லாமலே
நெட்டுயிர்த் துத்தட் டழிந்துளறுவார்; வசன
  நிர்வாகர் என்றபேரும்

பூராய மாஒன்று பேசுமிடம் ஒன்றைப்
புலம்புவார்; சிவராத்திரிப்
போது துயிலோம் என்ற விரதியரும் அறிதுயில்
போல இருந்து துயில்வார்;
பாராதி தனில்உள்ள செயலெலாம் முடிவிலே
பார்க்கில்நின் செயலல்லவோ !
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே.

ஒருவரை, 'இவர் அடக்கம் மிக்கவர், சாந்தமூர்த்தி, பொறுமையே வடிவானர்' என்றெல்லாம் பலரும் போற்று கின்றனர்; உண்மையில் அவர் அப்போற்றுதலுக்கு உரியவரே. ஆயினும், அவருக்கும் ஒருசமயம் பெரியதொரு சினம் மூள்கின்றது; தம்மையே மறந்துவிடுகின்ருர்; கடுகடுத்த முகத் துடன் கண் சிவந்து பெருமூச்செறிந்து என்ன சொல்கின்ரேம் என்று அறியாமல் எவ்வெவ் வார்த்தைகளையோ சொல்லுகின்ருர். இனி, 'சிறந்த பேச்சாளர்' என்று பெயர்பெற்ற ஒருவர் எக் காரணத்தாலோ ஒரு சிறந்த முதன்மையான கூட்டத்தில் ஒன்று கிடக்க ஒன்றை உளறுகின்ருர். 'கேட்பவர்கள், இவர் என்ன பேசுகின்ருர்' என்று நினைக்கின்ருர்கள். இனி மற்ருென்று, சிவராத்திரியில் சிறிதும் உறக்கமே கொள்ளலாகாது' என்று சிவ வழிபாட்டிலும் பாராயணத்திலும் கருத்தூன்றியிருக்கின்ருர் ஒருவர். அவரும் ஒருசமயம் தம்மை அறியாமல் தாம் விழித் திருப்பதாகவே நினைத்துக்கொண்டு சிறிது உறக்கத்தில் ஆழ்ந்து விடுகின்ருர். இவையெல்லாம் உலகத்தில் கண்கூடாக நிகழ்கின்ற நிகழ்ச்சிகள்தாமே? அவ்வாறு இருக்கும்பொழுது எந்த ஒருசெயலை, 'நான் செவ்வையாகச் செய்து முடிப்பேன்' என்று ஒருவன் சொல்ல இயலும்? இயலாது. ஆகவே, "என் செயலாவது யாதொன்றும் இல்லை; இனித் தெய்வமே - உன் செயலே என்று உணரப்பெற்றேன்" என்று இருப்பதுதான் அறிவுடைமையாகின்றது. இவ்வாறு இருப்பதுதான் தம்மை உணர்ந்து தலைவனையும் உணர்தலாகும்.

அறிவிலும், செயலிலும் தன் இச்சைவழி நடக்க இயலாத பசுவாகிய ஆன்மா எல்லாவற்றையும் தானே அறியவும், தன் இச்சைவழி நடத்தவும் வல்லவனுகிய இறைவனுக்கு அனுதியே அடிமையாயுள்ளதுதான். பின்னும் என்றும் அடிமைப்படுவதுதான். அவ்வாறு இருக்க அத்தன்மையை யாரேனும் ஒருவர் அறிவிப்பாராயின் 'நான் அத்தன்மையன் அல்லேன்' என்று சொல்லுதல் கூடுமோ? கூடாது. ஆயினும்

உயிர்கள், 'நாம் இறைவனுக்கு அடிமையல்லோம்; நம் இச்சை வழியேதான் இருக்கின்றோம்' என்று எண்ணுகின்றன. இது தவறு என்பதையே சுந்தரரது வரலாற்றினாலும், அவரது வாக்கினாலும் இறைவன் உலகிற்கு உணர்த்தியருளினன்.

திருநாவலூரில் அவதரித்து, 'நம்பியாரூரர்' எனப்பெயர் தாங்கி வளர்ந்த சுந்தரர் பண்டு திருக்கயிலையில், 'என்னை உலகர்வழிச் செல்லாது தடுத்து ஆட்கொள்ளவேண்டும்' என்று வேண்டிக்கொண்ட வண்ணம் அவர் திருமணம் கொள்ளும்பொழுது இறைவன் மணப்பந்தலில் கிழவேதியனாக வந்து மணவினை தொடங்குதற்குமுன்னே, 'எனக்கும் உனக்கும் உள்ள ஒரு வழக்கினை முடித்தபின்பே நீ உன் மணவினையை முடித்தல் வேண்டும்' என்று சொல்ல, நம்பியாரூரர், 'இந்த வேளையில் வழக்குப் பேசவந்த உமது வழக்கு யாது' என்று கேட்க, அவையில் உள்ள அனைவரையும் நோக்கி' 'இந்நாவலூரன் எனக்கு அடிமை; இதனை இவன் உடன்படுதல் வேண்டும்; இல்லையேல் நீங்கள் உடன்படச் செய்தல் வேண்டும்' என்றான். நம்பியாரூரர் சினங்கொண்டு, 'அந்தணர் அடிமை செய்தல் என்பதை இவர் தாம் சொல்லக் கேட்கின்றோம்; இவருக்குப் பித்துப் பிடித்திருக்குமோ' என்று சொல்லிச் சிரித்தார். கிழவராக வந்த இறைவன், '' ஏடா சிரிக்க வேண்டா; உன் பாட்டன் எழுதிக்கொடுத்த அடிமை ஓலை இதோ இருக்கின்றது' என்று சொல்ல, நாவலூரர், 'அடிமையோலையா, காட்டும் பார்க்கலாம்' என்று நெருங்கக் கிழவர் ஓடத்தொடங்கினர்; இருவரும் ஓட, ஆரூரர் ஓரிடத்தில் அவ்வோலையைப் பற்றிக் கிழித்தெறிந்தார். கிழவனர், 'முறையோ! முறையோ!' என்று முறையிட்டுத் திருவெண்ணெய்நல்லூர் மன்றத்தில் சென்று வழக்காடி வென்றார். தோற்ற நம்பியாரூரர் தம் அடிமை நிலையை உணர்ந்து தம்மைப் பணிகொள்ள வந்த தலைவனை அறிய முயலும்பொழுது இறைவன் அவருக்குத் தனது உண்மைக் காட்சியை வழங்கியருள, நாவலூரர் அன்பு கரை கடந்துபெருகத்தாய்ப்பசுவைப்பிரிந்த கன்றுபோல் அழுது, 'இனி யான் செய்யும் பணியாது' என, 'நமக்குப் பாட்டே அர்ச்சனை; அதனால் நம்மைப் பாடுக' என, 'எப்படிப் பாடுவேன்' என்றபொழுது. 'நீ நம்மைப் பித்தன் என்று கூறிய அதனையே கொண்டு பாடுக' என நாவலூரர், பித்தா பிறைசூடி எனத் தொடங்கி, 'என்னை வலிய ஆட்கொள்ளவந்த வள்ளலே, உனக்கு நான் முன்பே ஆளாய் இருக்க, அதனை நீ நினைவூட்டியபொழுதும் ஆளல்லேன் - அடிமையல்லேன் என்று மறுத்து வாதிட்டது தகுமோ" என்று பலபடியாகப் பாடித்

துதித்தார். இறைவன், மேலும் பாடும் பணியையே அவருக்கு அளித்து மறைந்தருளினன்.

இவற்ருல் உயிர்கள் இறைவனுக்கு ‘அன்றும் இன்றும் என்றும் அடிமையே; அவன் ஆண்டவனே’ என்பது விளங்கும். இவ்வுண்மையை மெய்கண்டார் தமது சிவஞான போதத்துள்,

“இனிச் சங்காரமே முதல் என்றது, சுட்டுணர்வுடைய பிரபஞ்சம், சுட்டுணர்வில்லாத சங்காரத்தின் வழியல்லது சுதந்திர மின்றி நிற்றலான்” என்றும்,

“ஒன்றலா ஒன்ருல் உளதாகி நின்றவா
றென்றலா ஒன்றில்அவை ஈருதல் — ஒன்றலா
ஈறே முதல்; அதனின் ஈறலா ஒன்றுபல
வாறே தொழும்பாடும் அங்கு”

(சூ. 1. அதி. 3.)

என்றும் விளக்கினர்.

இத்தொழும்பாகும் நிலையையே திருவள்ளுவர், “சிறப்பென்னும் செம்பொருள் காண்பது” எனவும், “சார்புணர்ந்து சார்பு கெடஒழுகல்” எனவும் கூறினர். இத்தகைய சாத்திர விளக்கங்களால் தோத்திரத் திருப்பாடல்களின் உண்மைப் பொருளை உணந்துகொள்ளுதல் பெரும்பயன் தருவதாகும்.

---

## மெய்கண்டதேவ நாயனர் துதி

பண்டைமறை வண்டாற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டவர்இ தயகமல முகைக ளெல்லாங்
கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழ் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.

— சிவஞான சித்தியார்

# தோத்திரமும் சாத்திரமும்

## 3. அடிகள் வேடங்கள்*

'இறைவன் உருவம் அற்றவன், யாதொரு பெயரும் இல்லாதவன், அவன் ஒரு தொழிலையும் மேற்கொள்ள வேண்டுவதில்லை' என்பதெல்லாம் உண்மைதான். ஆயினும் இவையெல்லாம் அவனுக்குத் தன்னளவில் உள்ள இயல்புகளே.

தன்னளவில் மேற்கூறிய பெருநிலையில் நிற்கின்ற இறைவனுக்கு 'அருள் அல்லது கருணை' என்பதொன்று இயல்பாக உள்ளது. அவ்வியல்பு அவனை மேற்குறித்த நிலையிலே இருந்துவிடச்செய்யாமல் சிறிது கீழிறங்கிவரச் செய்கின்றது. அஃதாவது, இறைவன் தான்மட்டும் தனியாய் இருந்துவிடவில்லை. 'ஆன்மாக்கள் அல்லது உயிர்கள்' என்று சொல்லப்படுகின்ற பொருள்கள் கோடானு கோடியாக அளவின்றி அவனது வியாபகத்திற்குள்ளே அடங்கிக் கிடக்கின்றன. அவ்வான்மாக்கட்குப் பகையாய் அவற்றிற்குப் பலவகைத் துன்பங்களைக் கொடுக்கின்ற 'பாசம்' எனப்படும் தீய சத்திகளும் உடன் உள்ளன. உயிர்கள் கல், மண் முதலியனபோல சடப் பொருள்கள் அல்ல; இறைவனைப்போல அறிவுடைய பொருள்களே. அதனால், அவைகட்கு இன்பத் துன்ப அனுபவங்கள் உண்டு.

இனி, ஆன்மாக்கள் அறிவுடையனவாயினும், இறைவனைப் போல ஒருகாலத்தே எல்லாவற்றையும் ஒருங்கு அறியும் தன்மையும், அறிபவற்றை விடாது அறிந்தாங்கு அறிந்தே நிற்குந் தன்மையும், யாதொன்றனையும் தானே அறியுந் தன்மையும் உடையன அல்ல. ஒருகாலத்தில் ஒரு பொருளையே அறிந்து, பின் அதனைவிட்டு மற்றொன்றையும், பின்பு அதனைவிட்டு வேறொன்றையும் இவ்வாறு ஒவ்வொன்றாகவே அறியும் தன்மையும், இவ்வாறு அறிவதனையும் இடைவிடாது அறிதல் என்பது இல்லாமல், விட்டுவிட்டே அறியுந்தன்மையும், அவ்வாறும் தானே அறியாது இன்னொருபொருள் அறிவிக்கவே அறியுந்தன்மையும் உடையன. இவ்வாற்றால், இறைவன், 'பேரறிவுடையவன், இயற்கை அறிவுடையவன், சூக்கும சித்து' என்றெல்லாம் சொல்லப்படுகின்றான். உயிர்கள் அவ்வாறின்றி "சிற்றறிவுடையன, அறிவிக்க அறிவன, தூலசித்து" என்று சொல்லப்படுகின்றன. இதனால் இறைவன் இயல்பிலே, பகைப்

---

* 10—9—70 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

பொருளாகிய பாசங்களால் பற்றப்படாது தூயவனாய் விளங்குகின்றான். உயிர்கள் இயல்பிலே அப்பாசங்களால் பற்றப்பட்டுத் தூய்மையற்றுக் கிடக்கின்றன. பாசத்தால் கட்டுண்டு கிடப்பதற்கு 'பசு' என்பது பெயர். ஆகவே ஆன்மாக்கள் அல்லது உயிர்கள் 'பசுக்கள்' என்னும் பெயரைப் பெற்றன.

ஆன்மாக்கள் இவ்வாறு பாசத்தில் கட்டுண்டு பசுத் தன்மையை எய்தித் தன்முன் துன்புறுகின்ற நிலையைக் காண்கின்ற இறைவனுக்கு, இயல்பில் உள்ள அருள் காரணமாக அவற்றை அப்பாசங்களினின்றும் விடுவித்துத் தன்னைப்போலச் செய்தல் வேண்டும் என்னும் இரக்கமான நல்லெண்ணம் உண்டாகாதிருக்குமோ! அந்த நல்லெண்ணத்தினால்தான் அவன் தனது மேல் நிலையினின்றும் சிறிது கீழிறங்கி வருகின்றான். இவ்வாறு வருதற்குரிய குணமும், செயலும் அவனுக்கு இல்லாதிருப்பின், அவன் எல்லாரினும் மேலானவனாயும், மிகப் பெரியவனாயும் இருப்பதால் யாருக்கு, என்ன பயன் உண்டாகும்! அதனால் இறைவன் தன்பொருட்டு யாதோர் உருவும், பெயரும், தொழிலும் கொள்ளவேண்டிய தேவை இல்லாவிடினும். உயிர்களின் பொருட்டுப் பல உருவும், பெயரும், தொழிலும் கொண்டு நிற்கின்றான். உருவம் அற்ற அவனது தன் நிலை, 'சொரூபம்' என்றும், உருவம் கொள்ளும் பொதுநிலை 'தடத்தம்' என்றும் சொல்லப்படுகின்றன. எனவே, இறைவன் தனது சொரூப நிலையில் உருவு, பெயர், தொழில் ஒன்றும் இல்லாதவனாயினும், தடத்த நிலையில் எண்ணற்ற உருவும், பெயரும், தொழிலும் உடையவனாகின்றான் என்பதும், அவற்றுள் ஒன்றேனும் அவன் பொருட்டாகாமல் அனைத்தும் ஆன்மாக்கள் பொருட்டாகவே அமைகின்றன என்பதும் விளங்கும். இதைத் திருஞானசம்பந்தர்

"நானாவித உருவாய் நமை ஆள்வான்"

(திருமுறை - 1. 9. 5.)

என்று விளக்குகின்றார்.

இவ்வாறு இறைவனது சொரூபம், தடத்தம் என்னும் இயல்புகளை உணர்பவர்கட்கு,

"ஒருநாமம் ஓர்உருவம் ஒன்றும் இல்லாற்கு ஆயிரம்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ"

என்றாற்போலும் திருவாக்குக்களின் உண்மைப் பொருள் விளங்குவதாகும். சொரூப தடத்தத் தன்மைகளை உணர மாட்டாதவர்கட்கு, இதுபோலும் திருவாக்குக்கள் முன்னொடு

பின் முரணுவனவாகத் தோன்றும். அதனுல் அவர்கள் அவ்விரண்டனுள் ஏதாவது ஒன்றையே, 'உண்மை' எனப் பற்றிக்கொண்டு, மற்றதை விலக்கிவிட எண்ணுவர். அது நிற்க,

" நானுவித உருவாய் நமை ஆள்வான் "

என்றதனுல், ஆன்மாக்கள் எண்ணற்றவையாய் இருத்தலால் அவற்றின் தன்மைகளும் எண்ணற்று இருத்தல்பற்றி அவை அனைத்தையும் ஒன்று அல்லது ஒருசில உருவு பெயர் தொழில் களைக்கொண்டு உய்வித்தல் கூடாமைபற்றி, இறைவன் எண்ணற்ற உருவு பெயர் தொழில்களைக் கொள்கின்ருன் என்பது விளங்குகின்றது. 'ஒருவனே இங்ஙனம் பல்வேறு வகையான உருவங்களைக் கொள்கின்ருன்; ஆயினும், அவற்றுள் ஒன்றேனும் அவனது தன்நிலையன்று; பொதுநிலையே' என்பதை

" ஒருவனே இராவணுதி பாவகம் உற்ருற்போல "

( சூ. 1. 67. )

என விளக்குகின்றது சிவஞான சித்தி நூல். பாவகம் - வேடம். வேடம், தமிழில், 'கோலம்' எனப்படும். எனவே, இறைவன் ஆன்மாக்கள் பொருட்டுக் கொள்கின்ற உருவம் அனைத்தும் வேடங்களேயன்றி அவனது தன்நிலை யன்று என்பதாகின்றது.

இவ்வேடங்கள் 'நிலையுடையன' எனவும், 'நிலையில்லன' எனவும் இருவகைப்படும். இறைவன் சதாசிவமூர்த்தமும், மாகேசுவர மூர்த்தங்களுமாக என்றும் நின்று அருள் புரியும் வடிவங்கள் நிலையுடைய வேடங்கள். இவை, நாடகங்களில், 'இவன் இவன் இன்ன இன்ன வேடம் தாங்கி நடிப்பன்' என்றல் போல்வன. இவ்வாறின்றிப் பெரிய புராணம், திருவிளையாடற் புராணம் முதலியவற்றிற் சொல்லப்பட்ட வரலாறுகளில் இறைவன் அவ்வப்பொழுது கொண்டன போல்பவை நிலையிலா வேடங்களாம். இவற்றை "அரன் தரும் சீர்நிலை" (சூ. 127.) என்கின்றது சிவஞானசித்தி. நிலையுடைய வேடங்களையே 'இயற்கை வடிவம் அல்லது உண்மை வடிவம்' எனக் குறிப்பர்.

இறைவன் கொள்ளும் இயற்கை வடிவங்களாகிய நிலையான வேடங்கள் வெறும் வேடமாத்திரையாய் நில்லாது, எண்ணற்ற பல உண்மைகளை நமக்கு விளக்குவனவாம். அது பற்றியே திருமுறைகள் முழுதும் பெரும்பான்மையும் அவ்வேடத்தின் இயல்புகளையும், அவற்றிற் காணப்படும் செயல்களையுமே சிறப்

பித்துப் பாடுகின்றன. பொதுவாக, 'இறைவனது வேடத்தின் சிறப்பே அளவிடற்கரியது' என்பதனையே ஒரு திருப்பதிகத்தில் திருஞானசம்பந்தர் எடுத்தோதியருளுகின்றார். அத்திருப்பதிகம், திருநீற்றின் பெருமையை முழுதும் விளக்குகின்ற திருநீற்றுத் திருப்பதிகம்போல, இறைவனது திருவேடத்தின் பெருமையை முழுவதும் விளக்குகின்ற திருவேடத் திருப்பதிகமாகும். அது,

" மருந்துவேண் டில்இவை; மந்திரங் கள்இவை;
புரிந்துகேட் கப்படும் புண்ணியங் கள்இவை "

( திருமுறை - 3. 25 )

என்று தொடங்குகின்ற, திருந்துதேவன்குடித் திருப்பதிகம். திருநீற்றுத் திருப்பதிகம், " மந்திரமாவது " என்று தொடங்கு கிறது. இது " மருந்து " என்று தொடங்கி, மந்திரத்தை இரண்டாவதாகக் கூறுகின்றது.

இத் திருப்பதிகத்துள் திருஞானசம்பந்தர் இறைவனது திருக்கோலத்தின் பெருமையைப் பலவாறு அருளிச் செய்வன வற்றில் மிகவும் அரியனவான சிலவற்றைக் குறிக்கின்றார். அவை,

" ........................வினையை வீட்டு(வ்)வன,
ஓதி ஓர்க்கப்படாப் பொருளைஓர் விப்பன,
........................அடிகள் வேடங்களே."

" ........................மாசுநீக் கு(வ்)வன,
வானை உள்கச்செலும் வழிகள்காட்டு(வ்)வன்,
........................அடிகள் வேடங்களே "

" விண்ணுலா வும்நெறி, வீடுகாட் டும்நெறி,
மண்ணுலா வும்நெறி, மயக்கம்தீர்க் கும்நெறி,
........................அடிகள் வேடங்களே "

என்றாற்போல்வன. இவற்றால் இறைவனது திருக்கோலமே நமக்கு எல்லா ஞானத்தையும் தரும் என்பது விளங்கும். அதனால், அத்திருக்கோலங்களையே பெரிதும் எடுத்துப் பேசு கின்ற திருமுறைகள் ஞானக் கருவூலங்களாம் என்பது தானே பெறப்படுகின்றது.

இங்ஙனம் இறைவனது திருவுருவ நிலைகளையே திரு முறைகள் எங்கும் எடுத்துப் பேசினும் திருநாவுக்கரசர் அதற் கென்றே 'அடையாளத்திருத்தாண்டகம்1' என்ற ஒரு தனித் திருப்பதிகத்தை அருளிச் செய்துள்ளார். மற்றும் திருவாய்மூர்த் திருத்தாண்டகம்2 திருவினாத் திருத்தாண்டகங்களிலும்3 அவ் வடையாளங்களையே விரித்தோதினர். ஞானசம்பந்தரும் பாண்டியனுக்கு உபதேசமாகச் செய்த திருப்பாசுரத் திருப்பதி கத்துள், "அரிய காட்சியராய்" என்ற திருப்பாடலில், பிற அடையாளங்களையும் கொள்ளுதற்கு எடுத்து மொழிதலாக, "தமது அங்கைசேர் எரியர்; ஏறுகந்து ஏறுவர், கண்டமும் கரியர், காடுறை வாழ்க்கையர்" என்று சிலவற்றைக் கூறி னர். உண்மைப் பொருள்கள் பலவற்றை இவ்வாறு எளிய சில அடையாளங்களால் அறிவுறுத்துவதே பண்டைமுறை – பழஞ் சமயம். இதனை அறியாமையால், இத்திருவேடங்களைச் சிலர் மறுக்க முற்படுகின்றனர் என்பதையும் ஞானசம்பந்தர் மேற்காட்டிய திருந்துதேவன்குடித் திருப்பதிகத்துள்,

"செருமரு தண்துவர்த் தேரமண் ஆதர்கள்
உருமரு வப்படாத் தொழும்பர்தம் உரைகொளேல்;
..................................................
அருமருந் தாவன அடிகள் வேடங்களே"

என்று குறித்தருளினர். இத்தகைய இறைவனது திருக்கோலங் களை ஏற்றுக்கொள்ளாதவர்கள் இக்காலத்திலும் பலர் உளர் என்பது சொல்லத் தேவையில்லை. உற்று நோக்குவார்க்கு இறைவனது திருவேடங்களே சாத்திரமாகும். அதனால் அத்திரு வேடங்களை விரித்தோதுகின்ற திருமுறைகளாகிய தோத்திரங் களின் உண்மையை உணர்தற்குச் சாத்திரங்களே துணை செய்வன. ஆகவே சாத்திரங்களின் வழித் தோத்திரங்களின் உட்பொருளை உணர்ந்து பயன்பெறல் செய்யத்தக்கதாம்.

---

1 திருமுறை - 6. 4. 2 திருமுறை - 77. 3 3 திருமுறை - 97. 7.

# தோத்திரமும் சாத்திரமும்

## 4. தோடும் குழையும் *

இயற்கையில் உருவம் இல்லாதவனாகிய இறைவன் உருவம் இல்லாமலே தான் செய்யக் கருதும் செயல்களை நினைவு மாத்திரத்தால் செய்தல் கூடும். ஆயினும், உருவம் கொள்ளா விடில் ஆன்மாக்கள் தன்னை நினைப்பதும், வாழ்த்துவதும், வணங்குவதும் இயலா என்பதனாலும், சில உண்மைகளை உருவங்கொண்டு கட்புலனாகி உணர்த்திலையொழிய உயிர்கள் நன்கு உணரமாட்டா; அதனால், அவ்வாறு உணர்த்தல் வேண்டும் என்பதனாலும் அவன் பலவகை வடிவம் கொள்கின்றான். இதனை,

> " ஆரணம் ஆகமங்கள் அருளினால் உருவு கொண்டு
> காரணன் அருளான் ஆகில் கதிப்பவர் இல்லையாகும்;
> நாரணன் முதலாய் உள்ள சுரர்நரர் நாகர்க்கெல்லாம்
> சீரணி குருசந் தானச் செய்தியும் சென்றிடாவே "

எனச் சிவஞான சித்தி விளக்குகின்றது. எனவே, இறைவன் தன்பொருட்டன்றி உயிர்களின் பொருட்டே பலவகை உருவங்களைக் கொள்கின்றான் என்பது தெளிவு.

உயிர்களின்பொருட்டு இறைவன் கொள்ளும் உருவங்கள் உயிர்கட்குத் தரப்படுகின்ற உடம்புகள்போல மாயா வடிவங்கள் அல்ல. 'விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர்' என உயிர்கள் மூன்று வகைப்படுகின்றன. அவை அனைத்தின் உடம்புகளும் மாயையின் காரியங்களே. அஃதாவது, விஞ்ஞானகலரது உடம்பு சுத்தமாயையிலும், பிரளயாகலரது உடம்பு அசுத்த மாயையிலும், சகலரது உடம்பு பிரகிருதி மாயையிலும் தோன்றுவன. இறைவன் கொள்ளும் வடிவங்கள் இவற்றில் ஒன்றல்ல. அனைத்தும் அவன் தனது சக்தியால் கொள்ளும் அருள் திருமேனிகளே. திருமேனிகள் மட்டுமல்ல; அவற்றில் காணப்படும் ஆடை, ஆபரணம், படைக்கலம் முதலியனவும் அருளுருவங்களே. அவைமட்டுமல்ல; அவன் இருக்கின்ற அல்லது இயங்குகின்ற இடமும் அருள் மயமே. இவற்றையும் சிவஞான சித்தி,

---

* 10—10—70 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

" உருஅருள்; குணங்க ளோடும்
உணர்வரு ளுருவில் தோன்றும்
கருமமும் அருள்; அரன்றன்
கரசர ணாதி சாங்கம்
தரும்அருள்; உபாங்க மெல்லாந்
தான்அருள்; தனக்கொன் றின்றி
அருள்உரு உயிருக் கென்றே
ஆக்கினன்; அசிந்தனன்றே " †

என விளக்குகின்றது.

இவ்வாறு அவன்கொள்ளும் உருவங்கள் பலவும், 'போக வடிவம், வேக வடிவம், யோக வடிவம்' என மூன்று வகையில் உள்ளன. அவற்றுள் போக வடிவங்கள், உயிர்களுக்கு உலக இன்பத்தைத் தருதற்பொருட்டுக் கொள்ளப்படுவன. அவை, உமாமகேசுரர், கல்யாணசுந்தரர். சோமாஸ்கந்தர், கசமுகா னுக்கிரகர், சக்கரப்பிரதானர் முதலாகப் பல. இவைகளை இறைவன் உயிர்களின் பொருட்டே கொள்கின்றான் என்பதை அறியாமல் சிலர் இறைவனும் நம்மைப்போலவே மணம் புரிந்து வாழ்க்கை நடத்தி மக்களைப் பெறுபவனாதல் கூடுமோ என்பர்.

வேக வடிவங்கள் குற்றம் புரிபவரை ஒறுத்தற்குக்கொள்ளப் படுவன. அவை திரிபுரசம்மாரர், காலசம்மாரர், கசசம்மாரர் முதலியன. இவை குற்றம் புரிபவரை ஒறுக்கும் முகத்தால் அவர்களது பாவங்களை ஒழிப்பனவேயன்றி வேறில்லை. இதனை அறியாதவர் இறைவனுக்கும் நம்மைப்போலக் கோபமும் பகையும் இருத்தல் கூடுமோ என்பர்.

யோக வடிவங்கள் உயிர்களுக்கு அஞ்ஞானத்தைப்போக்கி மெய்ஞ்ஞானத்தைத் தருதற்பொருட்டுக் கொள்ளப்படுவன. அவை, தென்முகக் கடவுள், நடராசர், பிட்சாடனர் முதலியவை. பிட்சாடன வடிவமும் " இரப்பவர்க்கு ஈய வைத்தார், ஈபவர்க்கு அருளும் வைத்தார் " என்ற உண்மையையும், " ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு " என்ற உண்மையை விளக்குதற்குக் கொண்ட வடிவமே.

சிவபெருமான் இவ்வாறு கொள்ளும் போக வடிவம், வேக வடிவம், யோக வடிவம் அனைத்திலும் அம்மையோடு உடனாகியே

---

† சு. 1. 47.

இருப்பன். தென்முகக்கடவுள், பிட்சாடனர் முதலிய வடிவங்களில் புராணக்கொள்கையை ஓட்டி அம்மையை வெளிப்படையாக வைத்து வழிபடாவிடினும், அவ்விடங்களிலும் அம்மை உடன் இருக்கின்ருள் என்பதே கருத்து. அம்மையை விட்டு அப்பனே, அப்பனைவிட்டு அம்மையோ எங்கும் இருப்பதேயில்லை. அம்மைகோயில் தனியாக உள்ள இடத்திலும் அப்பன் உடன் இருக்கின்ருன் என்பதுதான் கொள்கை.

" மதிநுதல் மங்கையோடு வடபா லிருந்து
மறையோதும் எங்கள் பரமன் " †

" நானும்என் சிந்தையும் நாயகனுக் கெவ்விடத்தோம்
தானும்தன் தையலும் தாழ்சடையோன் ஆண்டிலனேல் " *

என்பனபோன்ற அருட்டிருமொழிகள் யோக வடிவத்திலும் அம்மை உடன் இருத்தலை விளக்கும். போக வடிவத்தில் அம்மை போக சத்தியாய் இருந்து போகத்தையும், யோக வடிவத்தில் அம்மை ஞான சத்தியாய் இருந்து ஞானத்தையும் உயிர்கட்கு வழங்குவாள். அதனுல் அவள் இன்றி அவன் எங்கும் இல்லை. அவன் இன்றியும் அவள் எங்கும் இல்லை. எவ்விடத்தும் அவ்விருவரும் பிரியாமலே இருப்பர் என்ற உண்மையை விளக்குவது மாதொரு கூறனுய அர்த்தநாரிசுர வடிவம். அதனுல், அது, 'முன்னர்க் கூறிய அனைத்து வடிவங்கட்கும் முதலாய வடிவம்' எனப்படுகின்றது. அவ்வடிவத்தைத் திருமுறைகள் தனிச்சிறப்புடையதாக எடுத்துக் கூறும்.

" தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும்உடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ "

என்னும் திருவாசகம் மாதிருக்கும் பாதியனுய வடிவத்தைப் பலபட எடுத்து விளக்கி, அதனை, 'தொன்மைக் கோலம் - ஏனைய எல்லா வடிவங்கட்கும் முற்பட்ட வடிவம்' எனப் போற்றுகின்றது. "உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்" என்னும் இருஞானங்களையும் தமக்கு ஒருங்கே வழங்கியருளிய வடிவமும் இத்தன்மைத்தாய் இருந்ததைத் திருஞானசம்பந்தர் தாம் திருப்பதிகம்பாடத் தொடங்கிய முதல்

---

† திருமுறை - 2. 85. 4.

* திருவாசகம் - திருக்கோத்தும்பி. 15.

தொடரிலேயே குறிப்பிடுகின்றார். அஃதாவது, "தோடுடைய செவியன்" என்று தொடங்கிப் பாடியருளுகின்றார்.

தோடு, பெண்கள் அணியும் காதணி. ஆடவர் அணியும் காதணி குழை. இவ்விரண்டில் மாணிக்கவாசகர் தமக்குக் குருவாகி வந்து ஞானத்தைக் கொடுத்த அப்பனுக்குரிய குழையை முதலிற் காண்கின்றார். ஞானசம்பந்தர் தமக்கு ஞானப்பாலைக் கொடுத்த அம்மைக்குரிய தோட்டினை முதலிற் காண்கின்றார். எனினும் ஞானசம்பந்தர், 'தோடுடைய செவியள்' எனப் பெண்பாலாகக் கூறாமல், "தோடுடைய செவியன்" என்று ஆண்பாலாகக் கூறியதிலிருந்து அம்மையும், அப்பனும் வேறு வேறாய் இல்லாமல், ஒருவராகவே இருத்தலைக் காண்கின்றார்;என்பது விளங்குகின்றது.

இனித் திருநாவுக்கரசர், "நாம் ஆர்க்கும் குடி அல்லோம்; நமனை அஞ்சோம்" என்னும் திருத்தாண்டகத்தில் சிவபெருமானை, 'தாம் ஆர்க்கும் குடியல்லாத் தன்மையான சங்கரன், நற்சங்க வெண்குழை ஓர்காதிற் கோமான்" என்று ஒரு காதில்மட்டுமே குழையை அணிந்தவனாகக் குறிப்பிடுகின்றார். 'ஒருகாதில் குழை உளது' எனவே, மற்றொரு காதில் தோடு உளது என்பது அப்பர் வாக்கில் பெறப்படுகின்றது. ஞானசம்பந்தரது வாக்கில் "தோடுடைய செவியன்" என ஆண்பாலாகக் கூறினமையால், ஒருகாதில் தோடும், மற்றொரு காதில் குழையும் இருத்தல் பெறப்படுகின்றது. மேற்குறித்த திருவாசகத்தில் தோடும், குழையும் வெளிப்படையாகவே எடுத்துச் சொல்லப்பட்டன. வலப்பால் அப்பனும், இடப்பால் அம்மையுமாய் இருத்தலால் வலக்காதில் குழையும், இடக்காதில் தோடும் இருத்தல் அறியப்படும்.

அம்மையும் அப்பனும் ஒருவரேயாய் இருத்தலைத் திருநாவுக்கரசர், "உருவிரண்டும் ஒன்றோடொன் றொவ்வா அடி" என்று அவர்தம் திருவடிகளின் இயல்பைக் குறிக்குமுகத்தால் விளக்குகின்றார். திருவாசகத்தில் ஓரளவு வகுத்துக் கூறப்பட்ட மாதிருக்கும் பாதியனாய வடிவத்தின் இயல்பைப் பட்டினத்தடிகள் தமது திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் முதல் திருவகவலிலே விரித்துரைக்கும் பான்மை மிக அழகிது.

இங்ஙனம் கூறப்படும் இத்திருவடிவமே இறைவனது இயல்பை இனிது விளக்கும் சிறப்பு வடிவமாதல் நோக்கி,

" அம்மையப்ப ரேஉலகுக்கு அம்மையப்பர் என்றறிக" என்றது திருக்களிற்றுப்படியார்.

" முதல் உருப் பாதிமாதர் ஆவதும் உணரார் " ‡

எனச் சிவஞான சித்தியும் இம் மாதொரு கூறனுய வடிவத்தை 'முதல் உரு' எனக் குறிப்பிடுகின்றது.

இத்திருவுருவம், 'முதற்பொருள் ஒன்றேயாய், 'சிவம், சத்தி' என இருதிறப்பட்டுப் பிரிவின்றி நிற்கும்' என்னும் உண்மையை உணர்த்தும் என்பதையே " அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர் " என்று திருக்களிற்றுப்படியார் குறிப்பிடுகின்றது. முதற்பொருள் இவ்வாறு இருதிறப்பட்டுப் பிரிவின்றிநிற்றலே அந்நூல், பின்னும்,

" தாரத்தோ டொன்ருவர், தாரத்தோர் கூருவர் ;
தாரத்தோ டெங்குந் தலைநிற்பர் "

என்பதனுல் விளக்கிற்று. சிவஞான சித்தி, " இத்திருவுருவமே முதல் உருவம் என்பது, உலகம் முழுதும் 'ஆண், பெண்' என்னும் இருகூருய் அமைந்தவாற்ருல் அறியப்படும்" என்பதைக் குறிப்பிக்கின்றது. அக்கருத்தே திருக்களிற்றுப்படியாரிலும், " எவ்வுலகில் எத்திறமும் – மாதேயும் பாகன் இலச்சினையே" எனக் காணப்படுகின்றது. இலச்சினை – முத்திரை; அடையாளம். இவ்வாறு முதற்பொருளின் இயல்பை உள்ளவாறுணர்த்துதற்குக் கூறும் மாதொரு கூருய வடிவத்தின் இயல்பு அனைத்தையும் குறிக்கும் குறிப்பாக அமைவனவே, சிவபெருமானது திருச்செவிகளில் உள்ள தோடும், குழையும்' எனவே, அவற்றை எடுத்து ஓதும் திருமுறைகளாகிய தோத்திரப் பாடல்களின் ஆழ்ந்த நுட்பத்தை மேற்காட்டிய சாத்திரங்களைக் கொண்டே உணர்தல் வேண்டும். மக்கள் அவ்வுணர்வைப் பெற்று உய்ய அம்மையப்பர் அருளுவாராக.

---

‡ சூ. 1. 49.

# தோத்திரமும் சாத்திரமும்

## 5. நீறணி அண்ணல்*

திருமுறைகள் சிறப்பாக எடுத்தோதும் சிவபெருமானது திருக்கோலங்களுள் முதன்மை வாய்ந்தது நீறணி கோலம். தவத்தோர் கண்ணிற்கன்றி நம்மனோர் கண்ணிற்குக் காணப் படாத சிவபெருமான், நம்மனோர் கண்ணிற்குக் காணப்படும் திருவடிவமே அவனது அடியவரது வேடங்கள். அதனால், சிவபெருமான் எந்த எந்தக் கோலங்களை உடையனாய் இருக் கின்றானோ அந்த அந்தக் கோலங்களையே அவன் அடியார் களும் உடையவர்களாய் இருக்கின்றார்கள். அவ்வடியவர்கள் அனைவரும் முதன்மையாக இன்றியமையாது மேற்கொள்வது திருநீற்றுப் பூச்சு. 'திருநீறு மிக வெண்மையாய் இருத்தல் வேண்டும்' என்பதும், 'செந்நிற நீறு, நீலநிற நீறு – இவற்றை அணிதல் கூடாது என்பதும் சிவநெறிக் கட்டளைகள். 'அடியார்கள் அணிந்துள்ள வெள்ளிய திருநீறு, அவர்களது உள்ளம் மாசற்று விளங்கும் தூய்மையையும் காட்டுவதாகும்' என்பதைச் சேக்கிழார்,

"பூசும் நீறுபோல் உள்ளும் புனிதர்கள்" 1

என்பதனால் விளக்குகின்றார். எனவே, சிவபிரான் அணிந் துள்ள திருநீறும் மிக வெள்ளிதாய் இருத்தல் நன்கறியப்படும்.

'சிவபிரான் அணிந்துள்ள திருநீறு வெள்ளிய திருநீறு' என்பதை விளக்கவே அதனைத் திருஞானசம்பந்தர் பல இடங் களில் 'வெந்த நீறு' எனக் குறிப்பிடுகின்றார்.

"வெந்த சாம்பல் விரைஎனப் பூசியே" 2

"வெந்த நீறணி மார்பில் தோல்புனை அந்த மில்லவன்" 3

"வெந்த நீற்றினர் வேதினர் நூலினர்" 4

என்பனபோல்பவை அறியத்தக்கன.

---

* 10—11—70 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.
1 பெ. பு திருக்கூட்டச்சிறப்பு - 6.
2 திருமுறை – 3. 54. 3.
3 திருமுறை – 2. 112. 8.
4 திருமுறை – 1. 56. 10.

நன்கு வெந்த சாம்பலே வெண்மை நிறம் உடையதாகும். அரைகுறையாக வெந்த சாம்பல் கருமை, செம்மை முதலிய பிற நிறங்களை உடையதாய் இருக்கும். ஆகவே, 'வெந்த சாம்பல்' என்பது 'நன்கு வெந்து வெள்ளிதாய்த் தோன்று கின்ற நீறு, என்பதாகின்றது இந்த வெந்த நீற்றினை ஞானசம்பந்தர் தமது முதல் திருப்பதிகத்திலே "சுடலைப் பொடி" என்று குறித்தருளினார். பின்னும் அவ்வாறு கூறியுள்ள இடங்கள் பல. அவற்றுள் ஓரிடத்தில் அவர் வெண்ணீற்றுடன் வேறு சிலவற்றையும் இயைபுபடச் சேர்த்து அருளிச்செய்துள் ளார்.

"சுடுநீறணி அண்ணல்சுடர் சூலம்அனல் ஏந்தி
நடுநள்ளிருள் நடமாடிய நம்பன்" ‡

என்பதே அது.

இங்கும் சிவபெருமானை "நீறணி அண்ணல்" எனக் குறிப்பிடுகின்ற அவர், நீற்றை, "சுடுநீறு" என் எடுத்தோது கின்றார். இதனோடு சிவபெருமான், சுடர்விடுகின்ற சூலத் தினையும், நெருப்பையும் ஏந்தியுள்ளவற்றையும் குறிப்பிட்டு, நள்ளிருளில் – எல்லா உயிர்களும் உறங்கிக்கிடக்கின்ற பாதி இரவில் நடனம் ஆடுதலையும் கூறியருளினர். "சிவபெருமான் நள்ளிருளில் நடனமாடுதல் சுடுகாட்டிலே" என்பது நன்கறி யப்பட்டது. ஆகவே, சுடுநீற்றையணிந்து, சுடர் சூலத்தையும், நெருப்பையும் ஏந்தி, நள்ளிருளில் சுடலையில் ஆடுவதைக் கூறிய கருத்து யாது என நோக்குதல் வேண்டும். இவை அனைத்துமே உலகு அனைத்தையும் ஒடுக்கிநிற்கும் நிலையைக் குறிப்பனவாய் இருத்தல் அறியத்தக்கது.

சுடு நீறு - வெந்த நீறு. எல்லாப் பொருள்களும் தமது காரிய நிலையின் நீங்கிக் காரண நிலையில் ஒடுங்கி நிற்கும் நிலை யைக் குறிப்பதாகும். பல்வேறு வடிவில் காட்சியளிக்கின்ற உலகு அனைத்திற்கும் முதற்காரணமாய் நிற்பது மாயை. அஃது இறைவனையே நிலைக்களமாகக்கொண்டு நிற்பது. மாயை உலகிற்கு வித்து என்றால், இறைவன் அவ்வித்து நிற்றற்கு நிலைக்களமாய் உள்ள நிலமாகின்றான் என்பதையே, வெந்த சாம்பலைச் சிவபிரான் தனது மேனியில் பூசிநிற்கும் கோலம் விளக்குவதாம். சிவபெருமான் மாயைக்கு நிலைக்களனாய் நிற்றலை மெய்கண்டார்,

‡ திருமுறை – 1, 15, 4.

"வித்துண்டா மூலம் முளைத்தவா தாரகமாம்
அத்தன்தாள் நிற்றல் அவர்வினையால் — வித்தகமாம்" *

என்று விளக்கினர். ஆகவே, சிவபெருமான் நீறணி நிமலனாய் நிற்றல் உலகம் எல்லாம் ஒடுங்கியபொழுதும் தான் ஒடுங்காது நின்று, ஒடுங்கிய அனைத்திற்கும் பற்றுக்கோடாதலையே விளக்குவதாம்.

இந்த நீற்றுக்கோலத்துடன் சுடர்விடு சூலமும், நெருப்பும் அப்பெருமான் அனைத்து உலகத்தையும் ஒடுக்கவல்ல ஆற்றல் உடையனாதலையே குறிக்கும். சூலம் முதலிய படைக்கலங்கள் யாவும், அழிக்கும் ஆற்றலைக் குறிக்கும் அடையாளங்களே. சூலம் ஒளிவிசி நிற்பது, அனைத்தையும் எளிதில் ஒடுக்கவல்ல வன்மையைக் குறித்தலோடு, அப்பெருமானது ஆற்றல் அறிவே வடிவமாய் நின்று, அறியாமையாகிய இருளைப் போக்கும் நிறத்தையும் தெரிவிக்கும். இச் சூலாயுதம் மூன்று இலைவடிவாய் நிற்பது, இறைவனது ஆற்றல் 'இச்சை, ஞானம், கிரியை' என மூன்று வகையாய் நின்று செயலாற்றுதலைக் குறிக்கும்.

"சத்திதன் வடிவே தென்னில் தடையிலா ஞான மாகும்"

"ஒன்றதாய் இச்சா ஞானக் கிரியைஎன் றொருமூன் றாகி
நின்றிடும் சத்தி" †

என்னும் சிவஞான சித்தியால், சத்தி அறிவே வடிவாதலும், அஃது இச்சை, ஞானம், கிரியை என மூன்றாய் நிற்றலும் அறியப்படும். "சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்" என்ற உண்மை விளக்கத்தால், சிவபிரானது கையில் உள்ள நெருப்பு, அவனது அழிக்கும் ஆற்றலை இனிது விளக்குதல் உணரப்படுகின்றது.

இனி, அவன் நள்ளிருளில் சுடலையில் நடனம் ஆடுதல் என்பது, உலகம் எல்லாம் ஒடுங்கிய முற்றழிப்புக் காலத்தில் ஒடுங்கிய உலகத்தை மீளத் தோற்றுவித்தற்கு ஆவனவற்றைப் புரிதலையே குறிக்கும். நள்ளிருளில் ஒருவன் நடனம் ஆடினால், அதைப் பார்ப்பவர் யார்? ஒருவரும் இல்லை. ஆனால், அவனோடு ஒத்த அவன் தேவி இருக்கின்றாள். அவள் ஒருத்தியே அவனது

---

* சிவஞானபோதம் - சூ. 1. அதி. 2.
† சிவஞானசித்தியார் - சூ 1. 62, 63.

நள்ளிருள் நடனத்தைக் காண்பவள். இதனை அப்பர்பெருமான், " இவர் ஆடுமாறும், இவள் காணுமாறும் இதுதான் இவர்க்கொர் இயல்பே " என்று அருளிச்செய்தார். எனவே, மேற்காட்டிய வாறு,

" சுடுநீறணி அண்ணல்சுடர் சூலம்அனல் ஏந்தி
நடுநள்ளிருள் நடமாடிய நம்பன் "

என ஞானசம்பந்தர் விரித்தோதியருளியது, சிவபெருமானது எல்லாம்வல்ல தன்மையை விளக்கி நிற்பதாகின்றது.

ஒரு பொருளை ஆக்குதல், காத்தல் என்பவற்றிலும் அழித் தற்கே அப்பொருளின் மிக்க ஆற்றல் வேண்டப்படுவதாகும். அதனல், எல்லாவற்றையும் ஒடுக்குதல் ஒன்றே அவன் எல்லாப் பொருளினும் மேலான ஆற்றல் உடையவன் என்பதை இனிது விளக்குவதாம். எல்லாம் ஒடுங்கியபின் மீள அவற்றைத் தோற்றுவித்தற்குப் பிறர் ஒருவரும் இல்லாமையால், அவற்றை மீளத் தோற்றுவிப்பவனும் அவனேயாகின்றுன். ஆக்கலும் அழித்தலும் வல்லவன் என்பது அறியப்படவே, காப்பவனும் அவனேயாதல் தானே விளங்குவதாம். ஆகவே, " ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய் " என்று மாணிக்கவாசகர் அருளிச்செய்தவாறு, சிவபிரான் ஒருவனே எல்லாம்வல்ல முழு முதற் கடவுளாதல் இனிது பெறப்படுகின்றது.

" ஈசன் பலகினன் என்றக்கால் ஆலயத்தில்
மோசம் வந்ததென்று மொழியலாம் — ஈசனே
ஆக்குவதும் ஆக்கி அழிப்பதுவும் தானுனல்
நோக்குவதென் ! யாம்பிறரை நொந்து, "

(சிவபோகசாரம்)

என்று ஆதி பரமாசாரியரும் அருளிச்செய்தார். இத்துணை உண்மைகளையும் விளக்குவனவே, " காடுடைய சுடலைப் பொடிபூசி " என்றும் பிறவாறும் சிவபெருமானது நீறணிந்த திருக்கோலத்தைப் புகழ்ந்து கூறும் திருமுறைப் பாடல்கள்.

வெண்ணீறு இறைவனது இத்தகைய பேராற்றலை விளக்கி நிற்பது ஆதலாலும், அப்பேராற்றலே இறைவனது திருவருள் ஆதலாலும் திருவெண்ணீறு இறைவனது திருவருள் வடிவமே யாம். அதுபற்றியே, ' திருநீறே எல்லாம் செய்ய வல்லது ' என்பதைத் திருஞானசம்பந்தர் தமது திருநீற்றுப் பதிகத்துள், " மந்திரமாவது நீறு, தந்திரமாவது நீறு, வெந்துயர்

தீர்ப்பது நீறு, முத்தி தருவது நீறு, சித்தி தருவது நீறு, பத்திதருவது நீறு, வருத்தம் தணிப்பது நீறு, வானம் அளிப்பது நீறு, அருத்தமதாவது நீறு, அவலம் அறுப்பது நீறு, ஏல உடம்பிடர் தீர்க்கும் இன்பந் தருவது நீறு" என் றெல்லாம் பலவகையாக விரித்து, "பராவண மாவது நீறு" என்று ஒருவார்த்தையாகத் தொகுத்தும் அருளிச்செய்தார். பரா - பரை; பராசத்தி; இறைவன் திருவருள். பராவண்ணம் ஆவது நீறு - பரமசிவனது ஆற்றலாகிய பராசத்தி வடிவமாய் விளங்குவது திருநீறு. என்ருல், அஃது எதைத்தான் செய்ய மாட்டாது! இவ்வுண்மையை ஞானசம்பந்தர் சொல்லளவில் சொல்லிப்போகாமல் அத்திருநீற்றைக் கொண்டே பாண்டி யனது வெப்பு நோயை நீக்குதல் முதலிய அதி அற்புதச் செயல்கள் பலவற்ருல் கண்கூடாக விளங்கச் செய்தும் காட்டினர். ஆகவே, " நீறணி அண்ணல், சூலம் அனல் ஏந்தி நள்ளிருள் நடமாடும் நம்பன்" என்ருற்போல வரும் திருமுறைத் தோத்திரங்களின் உண்மைப் பொருள்கள் மேற்கூறியவாறு சாத்திரங்களைக்கொண்டே உணர்தற்கு உரியனவாம். அவ் வாறு உணரும்பொழுதே சிவசின்னங்களாகிய திருநீறு முதலியவற்றில் அன்பும், ஆர்வமும் பெருகி, அவற்றின்வழிப் பயன் அடையச்செய்யும். அத்தகைய ஆர்வத்தைச் சாத்திர உணர்வின்வழி மக்கள் பெற்றுப் பயன் அடைவார்களாக.

---

# தோத்திரமும் சாத்திரமும்

## 6. விடையேறும் விமலன் *

உலகில் செல்வச் சிறப்பிற்கு ஊர்தி அல்லது வாகனம் ஒரு சிறந்த அறிகுறியாக உள்ளது. குடிமக்களில் செல்வராய் உள்ளோர்க்குச் சிவிகை ஏற்றம் சிறப்புத்தந்தது. 'சிவிகையில் செல்லும் நிலைமை முற்பிறப்பில் அறம் செய்தவர்கட்கே கிடைக்கும்' என்பதைத் திருவள்ளுவரும்,

"அறத்தா றிதுவென வேண்டா, சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை"

என்ற திருக்குறளில் குறிக்கின்றார். பண்டைநாளில் புலவர்களைப் புரவலர்கள் சிவிகையில் ஏற்றிச் சிறப்பித்தனர். அரத்துறைப் பெருமான் திருஞானசம்பந்தருக்கு முத்துச் சிவிகை அளித்தமையும் இங்குக் கருதற்பாலது.

இனி, 'யானை, குதிரை, தேர்' என்பன அரசர்க்குரிய ஊர்திகளாகக் கொள்ளப்பட்டன. தேர்களில் பூட்டப்படும் குதிரைகளின் எண்ணிக்கை அவரவர் தகுதிக்கேற்ப வேறுபடும். அண்மைக் காலம் வரையில் குடிமக்கள் தங்கள் வண்டிகளில் ஒன்றுக்கு மேற்பட்ட குதிரைகளைப் பூட்டலாகாது என்ற கட்டுப்பாடு இருந்தது. ஆளுநர்கள் இரண்டு குதிரைகள் பூட்டிய வண்டியில் செல்லலாம். நான்கு குதிரைகள் பூட்டிய வண்டியில் இராசப்பிரதிநிதிகள்தாம் செல்ல வேண்டும் என்ற மரபுகள் இருந்தன. புராணங்களில் வரும் தேவர்கள், அசுரர்கள் தேர்களில் ஆயிரக்கணக்கான குதிரைகளும், சிங்கங்களும் பூட்டப்பட்டிருந்தனவாக அறிகின்றோம். இவற்றாலெல்லாம் அறிவது என்ன? செல்வத்திற்கும், அதிகாரத்திற்கும் ஊர்திகள் சிறந்த அடையாளங்களாய் விளங்கின என்பதே.

குதிரைகளைத் தேர்களில் பூட்டி அத்தேர்களின்மேல் ஏறிச் செல்வதைவிடக் குதிரைகளின்மேலே ஏறிச்செல்வது சிறப்பாகக் கருதப்பட்டது. குதிரைகளின்மேல் ஏறிச்செல்வதினும் யானையின்மேல் ஏறிச்செல்வது பெருமையைத் தந்தது.

"யானைமேல் கொண்டு சென்றார் இவுளிமேல் கொண்டு வந்தார்" (முன்பு குதிரைமேல் வந்தவர், இப்பொழுது யானை

---

* 10—12—70 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

மேல் போகின்றார்) என்று புகழ்ச்சோழரை ஓரிடத்தில் சேக்கிழார் சிறப்பிக்கின்றார். இதனால், குதிரைமேல் செல்வோர் படைஞரும், அமைச்சருமேயாக, அரசராய் இருப்போர்-சிறப்பாக அரசர்க்கரசராய் இருப்போர் - யானைமீதே ஏறிச்சென்றனர்.

" மத்த யானை ஏறி மன்னர் சூழ வருவீர்காள் " ‡

என்று சுந்தரரும் பாடுகின்றார்.

யானைமேல் அம்பாரியிட்டுக் குடைபிடித்துச் செல்லுதல் அரசர்க்குரிய தனிச்சிறப்பு.

" மலைமிசைத் தோன்றும் மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையர் — நிலமிசைத்
துஞ்சினார் என்றெடுத்துத் தூற்றப்பட் டாரல்லால்
எஞ்சினார் இவ்வுலகத் தில் "

" யானை எருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்
சேனைத் தலைவராய்ச் சென்றோரும் — ஏனை
வினைஉலப்ப வேறாகி வீழ்வர்தாம் கொண்ட
மனையாளை மாற்றார் கொள "

என்கின்றது நாலடி நூல்.

" குடைநிழ லிருந்து குஞ்சரம் ஊர்ந்தோர்
நடைமெலிந் தோரூர் நண்ணினும் நண்ணுவர் "

என்கின்றார் அதிவீரராம பாண்டியர். எனவே, அக்காலத்தில் யானைமேற் செல்லுதல், இக்காலத்தில் தனி உந்தூர்தியிற் செல்வதுபோலக் கருதப்பட்டமை தெளிவாகின்றது.

மக்களைப்போலவே தேவர்களும் வாகனச் சிறப்பை விரும்புகின்றவர்களாகக் காணப்படுகின்றனர். ஆட்டுக்கிடாய், எருமைக்கடா, மான் முதலிய வாகனங்கள் எளிய தேவர்கட்கு உரியனவாக, செல்வத்திற் சிறந்த குபேரனுக்குப் புட்பக விமானமும், அதிகாரத்திற் சிறந்த இந்திரனுக்கு நான்கு தந்தங்களை உடைய 'ஐராவதம்' என்னும் வெள்ளை யானையும் வாகனமாய் உள்ளன. இன்னும் உலகத்தைப் படைத்தும்,

---

‡ திருப்பதிகம் 7-1.

காத்தும் நிற்பவராய், இவர்களின் மேம்பட்ட பிரம விட்டுணுக்களுக்குப் பறக்கும் பறவைகள் வாகனம் ஆகின்றன. பிரமனுக்குப் பறவைகளுட் சிறந்த அன்னமும், திருமாலுக்குப் புள்ளரசாகிய கருடனும் வாகனங்கள் என்பது நன்கறியப் பட்டது.

'இந்நிலையில் சிவபெருமானுக்கு வாகனமாவது எது' என்று நோக்கினுல், நகைப்புத்தான் தோன்றுகின்றது. அஃதாவது ஒற்றைக் காளையே அப்பெருமானுக்கு வாகனம். பல வகைப்பட்ட வாகனங்களில் காளை ஒரு வாகனமாகவே கருதப்படுவது இல்லை. அது, வண்டிகளில் வேண்டுமானுல் பூட்டப்படுமன்றி நேரே வாகனமாக அமைவதில்லை. காளை பூட்டிய வண்டிகளைப் பார வண்டிகளாகவே பண்டைய நூல்கள் கூறுகின்றன. ஒற்றைமாட்டு வண்டி முற்காலத்தில் எங்கும் சொல்லப்படவே இல்லை. 'பொதிமாட்டுக்காரர்' எனப்படுகின்ற சில வணிகக் கூட்டத்தினர் பொதிகளைக் காளைகளின்மேல் ஏற்றிச்செல்வது உண்டு. மாடு மேய்க்கும் சிறுர்கள் சில வேளைகளில் விளையாட்டிற்காக மாட்டின்மேல் ஏறிச்செல்வர். எனவே, எவரேனும், எக்காரணம் பற்றியாவது காளைமேல் ஏறிச் செல்வார்களாயின் அவர்களது செயல் நகைப்புக்கு உரியதாவதன்றிப் பெருமையாவது இல்லை. ஆயினும், சிவபெருமான் காளையையே வாகனமாகக் கொண்டது, 'பித்தன்' என்னும் காரணத்தாற் போலும்!

இப்பெருமானிடத்திலும் ஒருத்தி காதல் கொண்டாள். அவள் தன் காதலன் இப்படிக் காளைமாட்டையே வாகனமாகக் கொள்கின்ருனே என்று வருந்தித் தன் தோழியிடம் நொந்து கொள்கின்ருள் என்பதை மணிவாசகர் பாடும் பகுதி இது:-

கடகரியும் பரிமாவும் தேரும்உகந் தேருதே
இடபம்உகந் தேறியவா றெனக்கரிய இயம்பேடீ. ‡

காதலன் எளிய நிலைமையை உடையவனுயின் அதனுல் காதலிக்கு வருத்தம் மிகுவது இயல்பேயன்ருே! இன்னும் அவள் பின்வருமாறு சொல்லி வருந்துகின்ருளாம்.

காஞர் புலித்தோல் உடைதலையூண் காடுபதி
யாஞல் அவனுக்கிங் காட்படுவார் ஆரேடீ *

காளையை வாகனமாகக்கொண்ட சிவபெருமான், பிரமசாரியல்லன்; மலைமகள் மணுளன். எங்குச் செல்லினும் அப்

---

‡ திருச்சாழல் - 15. * திருச்சாழல் - 12.

பெருமாட்டியை அவன் உடன்கொண்டே செல்வது வழக்கம். ஆகவே, காளையாயினும் தனக்கு ஒன்றும், தன் தேவிக்கு ஒன்றுமாக இரண்டு காளையையேனும் கொண்டிருக்கலாம். அவ்வாறு இன்றி ஒரு காளையின் மேல் தன்னோடு தன் தேவியையும் ஏற்றிக்கொண்டு இடர்ப்படுதல் என்னையோ என்று சில இடங்களில் அவன் அடியார்கள் வருந்துகின்றார்கள்.

“ தமக்கென்று மின்பணி செய்திருப் பேமுக்குத்
  தாமொருநாள்
எமக்கென்று சொன்னால் இரங்குங்கொ லாம்; இணை
  யாதும்இன்றிச்
சுமக்கின்ற பிள்ளைவெள் ளேறொப்ப தொன்று
  தொண்டைக்கனிவாய்
உமைக்கென்று தேடிப் பெறுதுட னேகொண்ட
  உத்தமரே ” *

என்பது அவ்வருத்தத்தால் காரைக்கால் அம்மையாரது திருவாயினின்றும் எழுந்த திருப்பாட்டு. இன்னும் அவர், “ஏறலால் ஏறமற் றில்லையே எம்பெருமான்” என்று கூறி இரங்குகின்றார்.

சிவபெருமான் இவ்வாறு பலரும் பல சொல்லுமாறு ஒற்றை விடையை ஊர்தியாகக்கொண்ட காரணம் யாது? இவ்வினாவிற்கு மாணிக்கவாசகர் தரும் விடை பின்வருவது:

தடமதில்கள் அவைமூன்றும் தழல்செய்த நாளின்கண்
இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ. ‡

சிவபெருமான் திரிபுரம் எரிக்கச் சென்ற காலத்தில் பூமி முதலியவற்றால் அமைந்த தேர் அச்சு முரிந்துபோக, அப்பொழுது விட்டுணுமூர்த்தி இடப உருவம் கொண்டு வந்தமையால் அதனைச் சிவபெருமான் ஊர்தியாகக்கொண்டு திரிபுரத்தை வென்றார் என்பது இதில் குறிக்கப்பட்ட வரலாறு.

இனி, ‘திரிபுர சங்கார காலத்தில் திருமால் சிவபெருமானுக்கு இடப ஊர்தியாய் உருக்கொண்டு தாங்கியதற்கும் காரணம், சிவபெருமான் முன்பே இடப வாகனனாய் இருந்ததே’ எனக் கந்தபுராணம் கூறுகின்றது. ஆகவே, சிவபெருமான் முதலில் இடபத்தை வாகனமாகக் கொண்ட வரலாறு

---

* அம்மை இரட்டை மணிமாலை - 19. ‡ திருச்சாழல் - 15.

'ஒரு பிரளய காலத்தில் அறக்கடவுள் (தருமதேவதை) தனது அழிவிற்கு அஞ்சி இடப உருவம் கொண்டு சிவபெருமானிடம் சரணடைய, அதனை அப்பெருமான் தனக்கு வாகனமாக ஏற்றுக்கொண்டான் என்பதே' என அப்புராணம் அவ் வரலாற்றை விரித்துரைக்கின்றது.

இவ்விருவகை வரலாறும் பற்றிச் சிவபெருமானது விடை ஊர்தி இரண்டு வகையாகச் சொல்லப்படுகின்றது. போர்க் காலத்தில் திருமால் உருமாறி வந்த இடபம், 'மால் விடை' என்றும் 'போர் விடை' என்றும் சொல்லப்படும். அறக்கடவுள் உருமாறி வந்த இடபம், 'அருள் விடை' என்றும் சொல்லப்படும். இருவிடைகளும் இரண்டு உண்மைகளைத் தெரிவிக்கும்.

திருமாலுக்கு, "புருடோத்தமன்" என்ற பெயர் உண்டு. தத்துவக்கொள்கையில் உயிர், 'புருடன்' என்னும் பெயரால் குறிக்கப்படும். எனவே, 'புருடோத்தமன்' என்பது, 'உயிர்களுள் சிறந்தவன்' எனப் பொருள் தருவதாகும். "நாராயணன்" என்னும் பெயர்க்கும், உயிர்த்தொகுதியை ஒத்து நிற்பவன் என்பதே பொருள் என்பது சிவஞான பாடியத்துள் இனிது விளக்கப்பட்டுள்ளது. ஆகவே, சிவபெருமான் மால் விடை ஊர்தல், "உயிர்களைத் தன்வழி நடத்தும் தலைவன்" என்னும் உண்மையையே உணர்த்துவதாகும். காளையின் சாதிப் பெயர் 'பசு' என்பது. இப்பெயரும் உயிர்களை உணர்த்தும் ஆதலால், 'பெற்றம் ஊரும் பெரியோன்' என்பதும் மேற்கூறிய உண்மையையே தெரிவிப்பதாம்.

இனி, சிவபெருமான் அறவிடை ஊர்தல், அறத்திற்குத் தலைவனாய், உலக நலத்தின் பொருட்டு அதனை நன்கு நடத்தும் முதல்வனாதலைக் குறிக்கும். இன்னும் விடையை அறம்' என்னாது, 'அறக் கடவுள்' என்பதனால், 'அதுவும் ஓர் உயிரே' என்பது அறியப்படும். 'மாயோன், அறக்கடவுள்' என்னும் இருவருள், மாயோன் பெத்தான்மாக்களைக் குறிக்கும் முறையிலும் அமைந்து நிற்றல் அறியலாம். இதனால், 'சிவபெருமான் பெத்தரும் முத்தரும் ஆகிய இருவகை ஆன்மாக்களுக்கும் அவரவர் நிலையில் நின்று அவரவர்களை ஏற்ற பெற்றியால் நடத்துபவன்' என்பது உணரப்படுகின்றது. பெத்தர் - பாசத்தில் கட்டுப்பட்டவர். முத்தர் – அதனின்றும் விடுபட்டவர்.

சிவபெருமானது இடப ஊர்தி இருவகையாய் அமைந்திருத்தல் உற்று நோக்கினால் விளங்கும். சிவபெருமானைத் திரும்பி நோக்காது தன் கண் சென்றவாறு நேரே நோக்கி நிற்பது ஒருவகை. இதனையே 'போர்விடை' என்றும், 'பாயும் மால் விடை' என்றும் கூறுவர். இது சிவனை உள் நோக்கி உணராத பெத்தான்மாக்களைக் குறிக்கும்.

கண்சென்றவாறு நோக்காது திரும்பிச் சிவபெருமானை நோக்கி நிற்பது மற்ருெரு வகை. இதனையே 'அறவிடை' என்பர். இது புறத்தே உலகத்தை நோக்காது அகத்தே இறைவனை நோக்கும் முத்தான்மாக்களைக் குறிக்கும். திருக்கோயில்களில் சிவபெருமான் திருமுன்பு அப்பெருமானையே நோக்கி நிற்கின்ற இடபம் இந்த அறவிடையே. "முத்தி பெற்ருேர் சிவமேயாவர்" என்னும் கருத்தினுல், சிவபெருமானுக்கு உரிய 'நந்தி' என்னும் பெயர் இந்த அறவிடைக்கும் வழங்குகின்றது. சிவபெருமான் விடை ஏறும் விமலனுய் நிற்பது இத்துணை உண்மைகளை விளக்கி நிற்பதால், அதனை அருளாளர் பலவிடத்தும் எடுத்தோதிப்போற்றுகின்றனர். திருஞானசம்பந்தர் சிவபெருமானது திருச்செவியைச் சிறப்பித்து அருளிச்செய்த முதல் தொடராகிய "தோடுடைய செவியன்" என்றதை அடுத்து, "விடை ஏறி" என இதனையே அருளிச்செய்தார். ஆகவே, உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் அவனது திருக்கோலங்களில் இத்திருக்கோலமே இரண்டாவதாக அவரது உள்ளத்தைக் கவர்ந்தமை தெளிவு. திருநாவுக்கரசரும் தமது முதல் திருப்பதிகத்தில் சிவபெருமானை விளித்த முதல் தொடர் "ஏற்ருய்" - இடப வாகனத்தை உடையாய் - என்பதே.

" உற்றவர்க்கு உதவும் பெருமானை
ஊர்வ தொன்றுடை யான்உம்பர் கோனை
... ... ... ... ... ...
காணக் கண் அடியேன் பெற்ற வாறே " * (1)

என்று பாடுவார் சுந்தரர். இறைவன் இவ்வுலகை உய்விக்க உமையாளோடு உருவுகொண்டு எழுந்தருளி வந்தமையைக் குறிக்குமிடத்தில்,

" ஏறுடை ஈசன்இப் புவனியை உய்யக்
கூறுடை மங்கையும் தானும்வந் தருளி " (2)

என ஏறுடை ஈசனையே மணிவாசகர் குறிக்கின்ருர். இன்னும் "பாயும் விடை அரன் தில்லை" (3) என்பது அவர் தில்லைத் திருக்கூத்தனைச் சிறப்பித்த தொடர்.

இடபம் சிவபெருமானுக்கு ஊர்தியாதலோடு, கொடியாய் விளங்குதலையும் அருள் நூல்கள் ஆங்காங்கு எடுத்தியம்பும். இத்தகைய தோத்திரங்கட்கெல்லாம் சாத்திரங்கள் திறவுகோலாய் அமைந்திருத்தலை மக்கள் உணர்ந்து பயன் கொள்வார்களாக.

---

* (1) திருப்பதிகம் - 61. 2. (2) கீர்த்தித்திருவகவல் - 25. 26.
(3) திருக்கோவையார் - 3.

# தோத்திரமும் சாத்திரமும்

## 7. மதியணி வள்ளல் *

உயிர்களின்பொருட்டு உலகத்தைப்படைத்த இறைவன் உயிர்கட்கு அவ்வுலகம் பயன்படுதற்பொருட்டு ஒளிப்பொருள்கள் பலவற்றைப் படைத்தான். ஒளி இல்லையேல், உலகம் உளதாயினும் உயிர்கள் அதனால் பயன்கொள்ளுதல் இயலாது.

ஒளிப்பொருள் ஐம்பூதங்களில், 'தேயு' என்னும் நெருப்பின் கூறுகும். வடமொழியில் 'தேஜஸ்' என்று சொல்லப்படுவதே, தமிழில் 'தேயு' என்று சொல்லப்படுகிறது. 'தேஜஸ்' என்பதற்கு 'ஒளி' என்பதே பொருள். நெருப்பின் குணத்தையும், நெருப்பின் மூலகாரணத்தையும் வடநூல்கள் 'ரூபம்' என்றே கூறினாலும், தமிழ்நூல்கள் அவற்றை, 'ஒளி' என்றே கூறுகின்றன. இவற்றால், 'ஒளிகள் யாவும் நெருப்பின் கூறு' என்பது விளங்கும்.

புறத்தில் ஒளியும் இருளும்போல், அகத்தில் உள்ளவை ஞானமும், அஞ்ஞானமும். அதனால் ஞானமே உருவாய் உள்ள இறைவன் ஒளிவடிவினனாகின்றான். ஆகவே, ஐம்பூதங்களில் நெருப்பே அவனுக்குச் சிறந்த வடிவமாகின்றது.

> " பொங்கழல் உருவன் பூதநாயகன் " 1
> " எரியலால் உருவ மில்லை " 2
> " தழல்போலுந் திருமேனி " 3
> " ஆரழல்போற் செய்யா " 4
> " தீக்கனல் மேனியானே " 5

என்றாற்போலும் திருமொழிகளால், நெருப்பே இறைவனுக்குச் சிறந்த வடிவமாதல் விளங்கும்.

நெருப்பின் கூறாய் வானத்திற் காணப்படும் ஒளிப்பொருள்களை, 'மீன்' எனவும், 'கோள்' எனவும் இருவகையாகக்கூறுவர். மீன்கள் தாமே ஒளியுடையன; கோள்கள் மீன்களிடமிருந்து

---

* 10—1—71 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

(1) திருமுறை - 3. 12. 1. (2) திருமுறை - 4. 40. 5. (3) திருமுறை - 7. 1. 6. (4) திருவெம்பாவை - 11. (5) பொ. பு. ஞான - 378.

ஒளியைப்பெற்றுத் திகழ்வன. மின்னுவது மீன். கொள்ளுவது கோள். ஞாயிறு மீனேயாயினும் அதன் ஒளியே நமக்குப் பயன் தருதலால் அதனை வேறு பிரித்து, மற்றைய கோள்களின் இயக்கத்தைக் கணக்கிடுதற்கு உதவியாக அதனையும் ஒரு கோளாக வைத்து எண்ணினர் நம்முன்னோர். கோளல்லாத இராகு கேதுக்களைக் கோளாக வைத்து எண்ணியதும் சில கணக்கு முறைக்கு உதவவேண்டியேயாம்.

இங்ஙனம் இயற்கையாகவும், செயற்கையாகவும் நிகழும்ஒளிப் பொருள்களில் சிறப்புடையது ஞாயிறே (சூரியனே) என்பது யாவரும் அறிந்தது. அதற்கு அடுத்த நிலையில் விளங்குவது திங்கள் (சந்திரன்) ஞயிற்றின் ஒளி, வெப்பத்தோடு கூடியது. அதனால் ஞாயிற்றிற்கு 'வெங்கதிர்' என்ற ஒரு பெயரும் உண்டு. ஞாயிற்றின் ஒளியும் வெப்பமுமே உலகம் நிலைபெற்றிருத்தற்குப் பெரிதும் காரணமாகும். அதனை அறிந்தே எல்லா மக்களும் ஞாயிற்றை வணக்கத்திற்கு உரிய பொருளாக வைத்துப் போற்றுகின்றனர்.

"உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு" *

என்று நக்கீரர் ஞாயிற்றை, "பலர்புகழ் ஞாயிறு" எனச் சிறப்பிக்கின்றார். சிவபெருமானது மூன்று கண்களில் ஞாயிறு வலக்கண்ணாகச் சொல்லப்படுகின்றது.

ஞாயிறு இத்துணைச் சிறப்புடையதாயினும் மக்கள் அதனை இன்பப் பொருளாகக் கருதுவதில்லை. திங்களையே இன்பப் பொருளாகக் கருதுகின்றனர். அதற்குக் காரணம் அதனது ஒளி, வெம்மையின்றித் தண்மையாய் இருத்தலே. தண்மையான ஒளியுடையதாய் இருத்தல்பற்றித் திங்களை, 'தண்கதிர்' என வழங்குவர். இத்தட்பம் பற்றி அதன் ஒளி, 'அமுத கிரணம்' எனவும், 'அதனைத் தேவர்கள் நாள்தோறும் சிறிது சிறிதாகப் புசித்துவிடுவதனாலேயே அது சிறிது சிறிதாகத் தேய்ந்துகொண்டேபோய் இறுதியில் இல்லாமல் போய்விடுகின்றது' எனவும், அதன்பின் தேவர்களும் அறியாதவாறு துண்ணிதாய் நின்ற ஒரு கூற்றிலிருந்து மீண்டும் அது சிறிது சிறிதாய் வளர்கின்றது' எனவும் கூறுவர். இவற்றிற்கெல்லாம் காரணம், சந்திரனது ஒளியில் மக்கட்கு உள்ள விருப்பமே.

---

* திருமுருகாற்றுப்படை.

இவ்வகையில் யோக நிலையில் வாயுப் பயிற்சியால் நெற்றி நடுவிலிருந்து ஊறி நாடிகளில் பாய்ந்து உடலைக் கெடாது நெடுங்காலம் நிலைபெறச் செய்யும் ஒருவகைச் சாற்றுப் பொருளை 'அமுத தாரை' எனவும், 'அதனைத் தருவது நெற்றி நடுவில் உள்ள சந்திர மண்டலம்' எனவும் கூறுவர். இத்தகைய மரபுகளை உடைய சந்திரன் சிவபெருமானது மூன்று கண்களில் இடக்கண்ணாயிருப்பதுடன், அவரது திருமுடியிலும் இடம் பெற்று விளங்குகின்றான்.

சிவபெருமானது திருமுடியில் விளங்கும் சந்திரன், வளர்ந்து நிறைவு பெற்றவனாயில்லாமல், முதற்கண் தோன்றும் மூன்றாம் பிறையாகவே இருக்கின்றான். இம் மூன்றாம் பிறை சிவபெருமானது சிவந்த சடைமுடியில் விளங்குவது இயற்கையில் மூன்றாம் பிறை அந்திச் செவ்வானத்தில் விளங்குவது போலவே காட்சியளிப்பதாகும்.

"நின், வெம்மையும் விளக்கமும் ஞாயிற்றுள
நின், தண்மையும் சாயலும் திங்கள்உள" *

என்று பரிபாடல் கூறுவதுபோல, 'சிவபெருமானது சடையும், பிறையும் அந்திவானத்து உள' என்று கூறலாம் போலும்! இரவில் முழுநிலா ஒளி வீசி நிற்பது பலர்க்கும் மிக்க இன்பந்தருவதேயாயினும், அந்திக் காலத்தில் செவ்வானத்திடையே சிறிதாய், வெள்ளிதாய், கீற்றுப்போலத் தோன்றுகின்ற மூன்றாம் பிறையினது காட்சி தனித்ததோர் இன்பத்தைத் தருவதே. முழு நிலாவினும், மூன்றாம் பிறைக்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு. அஃதாவது, முழு நிலா மறுவுடையதாக, மூன்றாம் பிறை மறுவின்றித் தூயதாய் விளங்குவது. ஞாயிறு போலத் திங்களும் வணங்கப்படுதல், அது மூன்றாம் பிறையாய்த் தோன்றும் பொழுதேயாம் "தொழுதுகாண்பிறை" என்ற குறுந்தொகைத் தொடர் (178) பிறை, தொழுதற்குரியதாதலை விளக்கும். 'பிறைதொழுகென்றல்' என்ற ஒரு துறையே அகப்பொருளில் உண்டு. 'மறுவின்றி விளங்குதல் பற்றியே மூன்றாம் பிறை தொழப்படுகின்றது' என்பர்.

"குடமுதல் தோன்றிய தொன்றுதொழு பிறையின்
வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற்றம்;
குணமுதல் தோன்றிய ஆரிருள் மதியின்
தேய்வன கெடுகநின் தெவ்வர் ஆக்கம்" ‡

---

* பாட்டு - 4.

‡ மதுரைக் காஞ்சி - 143 - 47.

என வளர்ச்சிக்குப் பிறையையும், தேய்விற்கு நிறைமதியையும் உவமை கூறிய மாங்குடி மருதனுர், அவற்றை முறையே, 'தோன்று தொடூபிறை' எனவும், 'ஆரிருள் மதி' எனவும் குறித்த நுட்பம் கருதற்பாலது. இதனுல், 'மறுவின்மை வளர்ச்சியையும், மறுவுஉடமை தேய்வையும் தரும்' என்பது விளங்கும்.

வானத்தில் தோன்றுகின்ற மூன்றும் பிறை ஒருநாள், ஒருபொழுது மக்களால் வணங்கப்படுகின்றது. ஆனுல், சிவபெருமானது திருமுடியில் விளங்கும் பிறை எந்நாளும், எப்பொழுதும், யாவராலும் வணங்கப்படுகின்றது. அதற்குக் காரணம் அஃது அப்பெருமானிடத்தில் விளங்கி, என்றும் ஒரு பெற்றியாய் இருத்தலேயாம்.

"பிறை நுதல்வண்ணம் ஆகின்று ; அப்பிறை
பதினெண் கணனும் ஏத்தவும் படுமே"

என்றது புறநானூற்றுக் கடவுள் வாழ்த்து. இதனுல் 'சிவபெருமானே அடைத்தோர் என்றும் ஒருபெற்றியராய்ப் பலரும் வணங்க வாழ்வார்' என்பது அறியப்படும்.

இவ்வாற்ருல் சிவபெருமானது சிவந்த சடையில் மறுவின்றி விளங்கும் வெள்ளிதாகிய பிறை அன்பர் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளுந் தகையதாகும். அதனையே சீகாழியில் சிவபெருமானுல் உள்ளம் கவரப்பட்ட ஒரு தலைவி கூற்ருக ஞானசம்பந்தர் தமது நிலையை விளக்கிய திருப்பாடலில்,

"தோடுடைய செவியன், விடையேறி, ஓர்
தூவெண் மதிசூடி"

என்று அருளிச்செய்தார்.

சிவபெருமான் சந்திரனைச் சடையில் தரித்தது, 'அவன் தக்கனது சாபத்தால் தேய்ந்து அழிந்தொழியும் நிலையில் வந்து சரண் அடைந்தபொழுது அவனுக்குக்கு அபயந் தந்து அவன் அழியாதவாறு காத்தற்பொருட்டு நிகழ்ந்தது' எனக் கந்த புராணம் கூறும். அதனுல் பிறையணிந்தமை அப்பெருமானது, அஞ்சினவர்க்கு அருள்புரி செயலாகிய வள்ளல் தன்மையைக் காட்டுவதாகும். ஆகவே, அவனை மதிமுடி வள்ளலாகத் திருமுறைகள் பல இடங்களில் எடுத்தோதிப் புகழ்தல் காணலாம்.

மதியினது கூறுகள், 'கலை' எனப்படும். அதனால், சிவ பெருமான் அணிந்த வெள்ளிய சந்திரகலை ஞானக்கலை வடிவாக வும் திகழ்கின்றது. யோகநிலையில் மேற்கூறியவாறு சந்திர மண்டலத்தில் உள்ள அமுத தாரையைப் பெறும் முறைமை சிறந்தெடுத்துப் பேசப்படுதலால், சிவபெருமானது நெற்றியில் விளங்கும் பிறை, அப்பெருமான் யோகியர்க்கு அவர்தம் தியானப் பொருளாக விளங்குவதையும், அவனே ஒரு சிறந்த யோகியாய் நிற்றலையும் தெரிவிப்பதாகும். சிவபெருமானை அடைந்து நிற்கும் சந்திரனது கலைகள், 'பதினாறு' எனப்படுவதால், அவை சோடச கலாப் பிராசாத நெறியில் சிவமாந் தன்மைப் பெருவாழ்வு பெறுதலையும் விளக்குவதாம்.

இன்னும் 'இயல்பாகச் சந்திரனுக்குப் பாம்பு பகை' என்பர். ஆயினும், சிவபெருமானது திருமுடியில் அவை இரண்டும் நட்புக் கொண்டு வாழ்கின்றன. இதனைத் திருமுறைகள் பல இடங் களில் வியந்து பேசும். இது சிவனருள் வாய்க்கப் பெற்றார்க்குப் பகையுள்ளம் நீங்குதலைக் காட்டும். திருமூலர், 'சிவபெருமானது திருமுடியில் உள்ள பாம்பு குண்டலி சத்தி' எனவும் சந்திரன் யோகத்தில் காணும் சந்திரமண்டலம்' எனவும் கொள்ளத்தக்க குறிப்பை உணர்த்துகின்றார்.

பாம்பு மதியைத் தினலுறும் பாம்பினைத்
தீங்கு கதிரையும் சோதித்து அனலுறும்
பாப்பும் மதியும் பகைதீர்த் துடன்கொள்ளின்,
நீங்கல் கொடானே நெடுந்தகை யானே.

இவ்வாறு தோத்திரங்களின் உட்பொருளை உணர்தற்குச் சாத்திர உணர்வு வேண்டத்தக்கதாதலை மக்கள் உணர்ந்து பயன்பெறுவார்களாக.

---

# தோத்திரமும் சாத்திரமும்

## 8. ஒரு திரு அடி*

மக்களது தன்மை அவர்களது செயலில் மட்டுமன்றிச் சொல்லிலும் நன்கு புலப்படுவதாகும். 'ஓதும் உரையால் அறிவின் அளவு உணரப்படும்' என்கின்றது சிவஞானசித்தி. "அரும்பயன் ஆயும் அறிவினர் கூறுர் பெரும்பயன் இல்லாத சொல்" என்பதனுல், அறிவுடையோர்கள் பயனில்லாத சொற்களைச் சொல்லாமையேயன்றிச் சிறுபயனுடைய சொற்களையும் சொல்லமாட்டார்' என்கிருர் திருவள்ளுவர். இன்னும் அவர், "பல சொல்லக் காமுறுவர் மன்ற மாசற்ற - சில சொல்லல் தேற்ருதவர்" என்று, 'அழுத்தந் திருத்தமான சில சொற்களைச் சொல்லமாட்டாதவரே, வலிமையில்லாத பல சொற்களைக் கொட்டிக் குவிப்பார்கள்' எனக் கூறுகின்ருர்.

இம்முறையில் அருளாளர்கள் வாக்கினின்று வரும் ஒன்றிரண்டு சொற்களே உலகிற்குப் பெரும்பயன் தருவதாதல் வெளிப்படை. திருஞானசம்பந்தரது திருவாக்கில் "வேந்தனும் ஓங்குக" என்று எழுந்த ஒருதொடர், பாண்டியமன்னனைப் பின்பு நெல்வேலிப் போரை வென்று வாகைசூடி வேந்தர் வேந்தனுய்ச் சிறந்து வாழச்செய்ததோடன்றி அவனதுஉடம்பில் பிறவியிலே அமைந்திருந்த கூனையும் அப்பொழுதே நீக்கி நெடுமாறனுகச் செய்தது.

முன்னைத் தவப்பயனுக ஒரு சிலர்க்குக் கிடைக்கப்பெறுகின்ற ஞானசிரியர் தம் மாணுக்கரை ஒரு சொல்லாலே ஞானிகளாகச் செய்வர் என்கின்றனர். மாணிக்கவாசகரும் இறைவன் தம்மைக் குருவாக வந்து ஆட்கொண்டபொழுது ஒரு வார்த்தையினுலே தம்மை அவன் வசப்படுத்திக்கொண்டதாகக் கூறுகின்ருர். ("மன்ன என்னை ஓர் வார்த்தையுட் படுத்துப் பற்றினுய்" திருவாசகம் - செத்திலாப்பத்து - 3) நமது ஆதீன 8 ஆவது மகாசந்நிதானம் அவர்கள்மீது சொர்க்கபுரம் ஸ்ரீலஸ்ரீ அழகியதிருச்சிற்றம்பல தேசிக சுவாமிகள் அருளிச்செய்த கிளிவிடுதூதிலும் தம் ஆசாரியரை, "என்உயிருக்குச்சொன்னுன் ஒருசொல்" என்று அருளியுள்ளார்கள். இவ்வாறு அருளாளர்கள் வாக்கில் எழுகின்ற ஒரு சொல்லே உலகத்தை உய்விக்கக் கூடியதாய் இருக்கின்றது என்ருல், அவர்கள் திருவாய் மலர்ந்தருளும் பல சொற்களும் எத்துணைப்பயன் விளைப்பனவாகும்.

---

* 10—2—71 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

நம் சமயாசாரியர் நால்வரும் உலகை உய்விக்கவந்த பெரு மக்கள். அதனால் அவர்கள் தாங்கள் இருந்த இடத்திலே இருந்து விடாமல் நாடு முழுவதும் யாத்திரை செய்து நன்னெறியினை ஆங்காங்கு உள்ள மக்களும் பின்பற்றுமாறு தங்கள் அருட்டிருப் பாடல்களை அருளிச்செய்தனர். அவர்கள் இதன்பொருட்டு மேற் கொண்டது தலயாத்திரை. பெருவழியில் பெரிய நகரங்களில் காணப்படும் பெரிய கோயில்களுக்குமட்டுமன்று; தமிழ் நாட்டில் எந்த மூலைமுடுக்கில் எந்தச்சிறுகோயில் இருப்பினும் அங்குச் சென்று வணங்க அவர்கள் தவறியதில்லை. அதனால் சிறப்பாக மூவர் முதலிகள் வாயிலாக ஆயிரம் ஆயிரமாகத் தேவாரத் திருப் பதிகங்கள் செந்தமிழ்மொழியில் தோன்றின. அவைகளில் இன்று நமக்குக் கிடைப்பன சிலவே. அத்திருப்பதிகம் பெற்ற தலங்கள் இன்று, 'பாடல்பெற்ற தலங்கள்' என்னும் சிறப்பைப்பெற்றுத் திகழ்கின்றன. திருப்பதிகம் கிடைக்கப்பெறுவிடினும், வேறு திருப்பதிகங்களில் எடுத்தோதியருளப்பெற்ற தலங்கள் 'வைப்புத் தலங்கள்' என்னும் பெயரொடு விளங்குகின்றன.

இத்தகைய திருப்பதிகங்கள் ஆங்காங்கு வாழும்மக்களுக் குச்சிறந்த திருநெறித் திருப்பாடல்களாய் விளங்கி உய்விக் கின்றன. எனவே, அவைகளில் அமைந்த ஒவ்வொரு சொல்லும் திருவருள் திருமொழிகளாய் இலங்குதல் தெளிவு. திருவாதவூரடிகளது திருப்பாடல்களில் அமைந்த ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு மாணிக்கம்போல் இருத்தல் பற்றியே அவருக்கு 'மாணிக்கவாசகர்' என்ற திருப்பெயர் இறைவ னாலே சூட்டப்பட்டது எனத் திருவிளையாடற் புராணம் கூறு கின்றது. சமயாசாரியர்களது வாக்கில் எழுகின்ற ஒவ்வொரு சொல்லும் 'திருமொழி' எனப்படுதலால், அவற்றாலாகிய பாடல்கள், 'திருப்பாடல்கள்' என்றும், அப்பாடல்களின் தொகுதி, 'திருப்பதிகம்' என்றும் சொல்லப்படுகின்றன. ஆகவே, அப்பாடல்களில் அமைந்த ஒவ்வோர் அடியும் திரு அடியே ஆகின்றதன்றோ. அத்திருஅடிகளில் ஒருதிருஅடி இங்குச் சிந்தனைக்கு உரியதாகின்றது. அது, ஞானசம்பந்தர் ஞானப்பால் உண்டு, அப்பொழுதே இறைவனை அடையாளங் களுடன் காட்டியருளிய முதல் திருப்பதிகத்தில் இரண்டாவது திருப்பாடலில் முதலில் அமைந்துள்ள திருஅடியே. அது,

"முற்றல் ஆமைஇள நாகமொ டேன
முளைக்கொம் பவைபூண்டு"

என்பது.

'சிவபெருமான் தன்மேல் அணிந்துள்ள அணிகலங்கள் ஆமை ஒடு, பாம்பு, பன்றிக் கொம்பு' என்பதே இதன்பொருள். 'இவற்றைச் சிவபெருமான் அணிந்தது ஏன்' என்னும் வினுவிற்குப் புராணங்கள் பின்வருமாறு விடை கூறுகின்றன.

'தேவர்கள் திருப்பாற்கடலை மந்தர மலையை மத்தாக இட்டு வாசுகியைக் கயிருகச் சுற்றிக் கடைய முயன்றபொழுது மந்தர மலை மிதக்காமல் அமிழ, அதனைத் திருமால் ஆமை (கூர்ம) வடிவங்கொண்டு முதுகில் தாங்கினர். அதனுல் மிதந்த மந்தரத்தைச் சுழற்றிக் கடைந்து அமுதம் பெற்றனர். ஆகவே, 'தேவர்கள் அமுதம் கிடைக்கப்பெற்றது தன்னுலேயன்ரு' என்று செருக்குக்கொண்ட ஆமை மற்றைக் கடலைக் கலக்கியும், உலகைச் சிதைத்தும் துன்பம் செய்யச் சிவபெருமான் தேவர்களது வேண்டுகோளுக்கு இரங்கி, அவ் ஆமையை அழித்து, அதன் ஒட்டினைத் தம்மார்பில் மதாணியாக அணிந்து கொண்டார்'

'காசிப முனிவர்தம் மனைவியர் பதின்மூவருள் 'கத்துருவை' என்பவள் பல பாம்புகளைப் பெற்ருள். மற்ருெரு மனைவி 'வினதை' என்பவள் ஒருபணையத்தில் தோற்றமை காரணமாக மேற்கூறிய கத்துருவைக்கு அடிமையாளுள். அதன்பின்பு வினதை கருடனைப் பெற்ருள். கருடன் தன் தாயோடு கத்துருவைக்கும் அவள் பெற்ற பாம்புகளுக்கும் அடிமைத் தொழில் செய்து வருந்திஞள். அக்காலத்தில் பாம்புகளால் கருடன் அடைந்த துன்பங்கள் பல. பின்பு கருடன் இந்திரனிடத்தில் இருந்த அமுதக் குடத்தைத் தனது வலிமையால் கொணர்த்து கொடுத்துத் தானும், தன் தாயும் அடிமையிலிருந்து நீங்கும் நிலைமையைப்பெற்ருன். அதன் பிறகு கருடன் பாம்புகளிடத்தில் தீராப்பகைகொண்டு அவைகளைத் துன்புறுத்தத் தொடங்கிஞன். அதனுல் அஞ்சிய பாம்புகள் சிவபெருமானை வழிபட, அவைகளின்மேல் இரக்கங்கொண்டு அவைகளை எடுத்துத் தன்மேல் அணிகலங்களாக அணிந்துகொண்டான்'

'ஒரு பிரளய வெள்ளத்தில் அமிழ்ந்துபோன பூமியைத் திருமால் வராக அவதாரம் கொண்டு தனது இரு கொம்புகளின் மேல்(தந்தத்தின்மேல்) அந்தப் பூமியை எடுத்துத் தாங்கிக் காத்து. அதனுல் செருக்குற்று நிற்கச் சிவபெருமான் அவ்வராகத்தை அழித்து அதன் கொம்புகளை மார்பில் அணிந்து கொண்டார்.

ஞானசம்பந்தர், செருக்குக்கொண்ட ஆமையை, "முற்றல் ஆமை" என்றும், அஞ்சிய பாம்புகளை "இள நாகம்" என்றும் அருளிச்செய்த நயம் அறிந்து இன்புறத்தக்கது. தாருகாவன முனிவர் தம் வேள்வியில் உண்டாக்கி விடுத்த பாம்புகளையும் சிவபெருமான் அணிகலமாக அணிந்த வரலாறு உண்டு. ஆமை ஓட்டினை அணிந்த வரலாறும், ஏனக்கொம்பினை அணிந்த வரலாறும் 'செருக்கினை நீக்குபவன் சிவமெருமான்' என்பதையும், பாம்பினை அணிந்த வரலாறு, 'எளியவர்க்கு இரங்குபவன் சிவபெருமான்' என்பதையும் விளக்குவனவாம்.

உயிர்கள் அடையும் துன்பத்திற்கெல்லாம் முதற்காரணம், 'யான்' என்னும் செருக்கேயாகும்.

"செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து"

என்று, நீக்கப்படவேண்டிய குற்றங்களில் முதற்குற்றமாகத் திருவள்ளுவர் செருக்கினையே எடுத்துக் கூறியுள்ளார்.

செருக்கு எவ்வகையில் தீங்கு புரிகின்றது என்று நோக்கினுல் அஃது அடிப்படைக் குற்றமாதல் விளங்கும். 'யான்' என்று எழுகின்ற செருக்கு, தன்னையே பெரியவனுக மதித்துப் பெரியோர் கூறும் அறிவுரைகளைத் துச்சமாகக் கருதச் செய்கின்றது. எனவே, இஃது அறிவை அழிக்கின்ற ஒன்ருதல் விளங்கும். அறிவு அழிந்தால், அதன்பின்பு வேறு என்ன நன்மை உண்டாகும்! இவ் அழிவுச்செயல், அச்செருக்கை உடையவர்கட்கே தெரியமாட்டாது. எனவே, செருக்கு நன்மை செய்வதுபோலவே காட்டித் தீமை விளைக்கின்ற ஒன்ருகும்.

இச்செருக்கு மும்மலங்களுள் முதலாவதாகிய ஆணவ மலத்தின் காரியமே. ஆணவ மலத்தைச் சைவ சமயம் தவிர ஏனைய சமயங்கள் அறிந்தில. அதனுல், அவை, 'செருக்கிற்குக் காரணம் இது' எனக் கூறமாட்டாமல் தடுமாறுகின்றன.

"ஒருபொருளும் காட்டாது இருள்உருவம் காட்டும்;
இருபொருளும் காட்டாது இது"

என்ற திருவருட் பயனின்படி ஆணவம் தன்னுல் பற்றப்பட்டவர்களாலேயே அறியப்படாமல் நின்று தீங்கு விளைக்கின்றது. அதனுல் இதை "பொல்லாத ஆணவம்' என்ருர் அருணந்தி சிவாசாரியார்.

உயிர்களின் அறிவை மறைக்கின்ற ஆணவம் கண்ணை மறைக்கின்ற இருள்போன்றது. இருள் முற்ற நீங்குவது சிவபெருமானது திருவருளாலேயே. ஆணவத்தினுல் முதலில் 'யான்' என்பதும், பின்பு அதுவழியாக 'எனது' என்பதும் தோன்றும். இவ்விரண்டையுமே திருவள்ளுவர் 'செருக்கு', எனக் கூறி, 'அவை நீங்கினுலே உயர்கதி உண்டாகும்' என்கின்ருர்.

"யான்என தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த உலகம் புகும்"

என்பது அக்குறள். சிவபெருமான் ஆணவத்தை நீக்கி அருள்புரியும் நிலையே, 'சத்திநிபாதம்' எனப்படுகின்றது, அதன் பொருட்டுச் சிவபெருமான் செய்கின்ற ஒறுப்பும். 'கருணை - மறக்கருணை' என்றே சொல்லப்படும். 'சிவ பெருமான் திரிபுரத்து அசுரர்போன்ற சிலரை அழித்ததாகக் கூறப்படும் வரலாறுகள் அருட் செயலை விளக்குவதாகுமோ' என்று ஐயுறுவார்க்கு அவ் ஐயத்தை நீக்க எழுந்ததே,

"கொன்றது வினையைக் கொன்று
நின்றஅக் குணம்என்று ஓரார்" *

என்றது சிவஞானசித்தி. எனவே, ஆமை ஓடு, ஏன எயிறு இவற்றைச் சிவபெருமான் அணிந்தமை, ஆணவத்தை அறுத்துச் சத்திநிபாதம் வருவித்தலையே குறிப்பதாதல் அறியப்படும். அதனுல் யானையை உரித்து அதன் தோலையும், சரப வடிவாய்த் தோன்றி நரசிங்கத்தை அழித்து அதன் தோலைப் போர்த்தமை முதலிய வரலாறுகளையும் தோத்திரங்களாகிய திருமுறைகள் ஆங்காங்கு எடுத்தோதிப் புகழ்தலும் இது பற்றியேயாதல் விளங்கும். இவ்வாறு தோத்திரங்களின் பொருளைச் சாத்திரக் கண்கொண்டு நோக்கி, 'யான், எனது' என்னும் செருக்கு நீங்கிச் சிவனருள்பெற்று வாழ்தல் சிறப்புடை மக்கட்குத் தகுவதாம்.

---

* சு. 1. 51.

# தோத்திரமும் சாத்திரமும்

## 9. தலையாயவர்தங் கடன் *

ஒவ்வொருவருக்கும் 'கடமை' என்பது இயற்கையாக அமைந்துவிடுகின்றது.

" ஈன்றுபுறந் தருதல் என்தலைக் கடனே ;
சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே ;
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே ;
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே ;
ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே "

என்னும் புறநானூற்றுச் செய்யுளால், ஒவ்வொருவர்க்கும் ஒவ்வொரு கடமையேனும் இயற்கையில் இருத்தல் தெளிவாகின்றது.

'கடமை' என்பதும், 'கடன்' என்பதும் ஒன்றே, அதனால், 'கடமை' என்பது யாதொரு பயனையும் எதிர் நோக்காமல் இன்றியமையாது செயற்பாலது' என்னும் பொருளையே தரும்.

" கைம்மாறு வேண்டா கடப்பாடு ; மாரிமாட்டு
என்னாற்றுங் கொல்லோ உலகு "

என்கின்றார் திருவள்ளுவர். "நீரின் றமையா துலகு" என்றவாறு, 'உலகம் நிலைபெறுதற்கு முதலாவதாகிய நீரைத் தருகின்ற மேகம், எந்தப் பயனை எதிர்பார்த்துத் தருகின்றது? ஒன்றையும் எதிர்பாராமலேதான் தருகின்றது; அதுபோலத் தான், 'கடமை' என்பன யாவும், ' கைம்மாற்றை எதிர்நோக்குவதில்லை' என்பது மேற்கூறிய திருக்குறளின் பொருள். எனவே, பயன் கருதாது செய்வதே கடமை. அவ்வாறின்றிப் பயன் கருதிச் செய்வது கூலிவேலையாம்.

மேற்காட்டிய "ஈன்று புறந்தருதல்" என்ற புறப் பாட்டினுள் கூறியவாறு, தாய்மகனைப்பெற்று, நன்கு வளர வளர்த்தலை அவள் அவனிடமிருந்து யாதொரு பயனையும் கருதிச்செய்வதில்லை. அதற்கு மாறாக அவனால் சில துன்

---

* 10—3—71 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

பங்கள் விளைவதாகத் தோன்றினும், அவள் தன் கடமையினின்றும் தவறுவதில்லை. தாய் தான் செய்யவேண்டிய கடமையைக் காலத்தே செய்து விடுவாளாயின், பின்பு முதுமைக் காலத்தே அவளை நன்கு பாதுகாத்தலும், பின் மறுமையில் அவள் நற்கதியை அடைதற்கு வேண்டுவனவற்றைச் செய்தலும், பிறவும் அம் மகனுக்குக் கடமையாகி விடுகின்றன. ஆயினும், அக்கடமைகளை அவன் செய்வான் என்பதை எதிர்பார்த்துத் தாய் தனது கடமையைச் செய்வதில்லை. அதுபோலவேதான் தந்தை தன்மகனைச் சான்றோனாக்குதல் முதலிய கடமைகளும் பின்பு அதனால் விளையும் பயனை எதிர்பார்ப்பதில்லை.

பயனை எதிர்பார்ப்பின் கடமைகள் நன்கு நடைபெற மாட்டா. கடமைகள் நிகழவில்லையென்றால், உலகில் எதுவுமே இல்லையாய்விடும். இதனை விளக்குவது பின்வரும் நாலடிச் செய்யுள்.

“ பெயற்பால் மழைபெய்யாக் கண்ணும், உலகம்
செயற்பால செய்யா விடினும் — கயற்புலால்
புன்னை கடியும் பொருகடல் தண்சேர்ப்ப
என்னை உலகுய்யு மாறு.”

முதலில் காட்டிய திருக்குறள், இங்குக்காட்டிய இந் நாலடி, மற்றும் இவைபோல்வன மழை முதலிய இயற்கை நியதிகளை மக்கள் ஆற்ற வேண்டிய கடமைக்கு எடுத்துக் காட்டாகக் கூறுகின்றன. அதனால், சூரியன் உதித்தல் மறைதல், பகல் இரவு, பனி வெயில் முதலிய நிகழ்ச்சிகளும் கடமைக்கு எடுத்துக்காட்டாகத் தக்கனவேயாம். இவ்வாறு இவைகளை எடுத்துக்காட்டுவது, மக்கள் தமது கடமைகளை இவைபோலப் பிறழாது நிற்கச்செய்தல் வேண்டும் என்பதற்காகவேயாம்.

இவ்வகையில் நோக்கும்பொழுது, மேலே காட்டிய புறப் பாட்டின்படி தாய், ‘மகன்’ என்பவர்க்கிடையே சில கடமைகள் உள. ‘தந்தை, மகன்’ என்பவர்க்கிடையே சில கடமைகள் உள்ளன. ‘ஆசிரியன் மாணவன்’ என்போரிடையும் அவ்வாறே. ‘அரசன், குடிகள்’ என்பவர்க்கிடையே உள்ள கடமைகள் பல. ‘தலைவர், தொண்டர்’ என்பவர்க்கிடையேயும் கடமைகள் உண்டு. இவற்றுள்,

" தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்"

" மகன்தந்தைக் காற்று முதவி இவன்தந்தை
என்னோற்ருன் கொல்லென்னுஞ் சொல்"

என்னும் குறள்களில் தந்தை, மகன் கடமைகளைத் திருவள்ளுவர் கூறினர்.

இவ்விடத்தில் ஒரு சுவையான செய்தி உண்டு. அஃதாவது 'கடமை' என்பது ஒருவர்க்கொருவர் ஆற்றவேண்டிய நிலையில் இரண்டு பக்கத்திலும் அமைவதாகவே இருத்தலை எங்கும் காண்கின்ரும். மேகத்திற்குக்கூட உலகம் ஒன்றும் செய்வதற்கில்லையாயினும், அதனை வாயார வாழ்த்தி, நன்றி பாராட்ட வேண்டிய கடமை உண்டு. ஆயினும், இதற்கு விலக்காக, 'அறிவுடையோர் அறிவிலார்' என்னும் இவரிடையே அறிவுடைய சான்ரேர்க்கு மட்டுமே அறிவிலாதார் செய்யும் குற்றத்தைப் பொறுக்கும் கடமை உளதாதல் வியக்கத்தக்கதே. பொதுமக்கள்பாலும் அறிவுடையோராகிய மேன்மக்கட்கு இவ்வாருன கடமைகள் உள.

இனி, 'கடவுள் உயிர்கள்' என்பவர்கட்கிடையே உள்ள கடமைகளோ அளவில்லன. ஏனெனில் மேற்கூறிய 'தாய், மகன் - தந்தை, மகன் - ஆசிரியன், மாணவன் - அரசன், குடிகள்-தலைவர், தொண்டர்' - ஆகிய அனைத்துத் தொடர்புகளும் 'கடவுள், உயிர்' என்பவர்கட்கிடையே அமைந்துள்ளன. அதனுல் அவர்கட்கிடையே அவ் அனைத்துக் கடமைகளும் உண்டாகிவிடுகின்றன. எனினும், அக்கடமை உயிர்கள் கடவுளை அணுகும் முறையைப் பொறுத்தே அமையும். சிலர் இறைவனை ஆண்டானுகவும், தம்மை அடிமைகளாகவும் கொண்டு அவனை அணுகலாம். சிலர் அவனைத் தந்தையாகவுர், தம்மை மக்களாகவும் கொண்டு அணுகலாம். மற்றும் சிலர் அவனை ஆசிரியனுகவும், தம்மை மாணவராகவும் கருதி அடையலாம். இவையெல்லாம் இறைவனை அணுகும் முறைகளாகும். ஆனுல், கடவுள் உண்மையை உணர்ந்தோ உணராமலோ அவனை அணுக நினையாதவர்க்கு அவன் அரசனும், அவர் குடிகளும் ஆகின்ற நிலைமையே உளதாகும். இது மாற்ற முடியாத ஒன்று. அஃது எவ்வாறெனில், செங்கோல் அரசன் உள்ள நாட்டில் குடிமக்கள் அவன் இருத்தலை அறியினும், அறியாதொழியினும் அவனது ஆணை அவரவர்

செய்திக்குந் தக்க பரிசிலேயும் தண்டனையையும் தந்தே தீர்வது போல்வதாம்.

அரசன் இருத்தலே அறிவதே அவனே அணுகுவதாகாது. அதனுல், ஒருநாட்டின் அரசனுக்கும் அதன்கண் உள்ள மக்கட்கும் இடையேயுள்ள தொடர்பு, 'தலைவன், தொண்டர்' என்னும் வகையில் எல்லாரிடையும் அமைவதில்லை. அரசனை அணுகி, அவனது அன்பைப்பெற்று அவன்கீழ்ப் பணிசெய்கின்ற ஒரு சிலரிடை மட்டுமே அத்தொடர்பு அமைவதாகும். மற்றெல்லாரிடத்தும் 'அரசன், குடிகள்' என்னும் அத் தொடர்பு ஒன்றுமே உண்டு. அதனுல் அமைச்சர் முதலிய அரசத் தொண்டர்கள் அரசனுல் அடையும் சில சிறப்புப் பயன்களை ஏனைக் குடிமக்கள் எதிர்பார்க்க இயலாது. குடிகள் அடையத்தக்க பொதுப் பயனை மட்டுமே அவர்கள் எதிர்பார்க்க முடியும். அதுபோலத்தான் 'இறைவன் உண்டு' என்ற அளவில் அறிந்தவர்கள்கூட, இறைவனுல் அவன் அடியார்கள் அடையும் சிறப்புப் பயன்களை அடைதல் இயலாது; அனைத்துயிர் களும் அடையும் பொதுப் பயன்களையே அடைதல் கூடும்.

அரசனிடம் பணிபுரியும் அமைச்சர் முதலியவர்களில் தங்களுக்கு அளிக்கப்பட்ட பணியைப் பயன் கருதாது கடமை யாகச் செய்பவரே உண்மைப் பணியாளர். அதனுல், அவர்கள் அரசனுல் பெரும்பயனைப்பெறுவர். ஆயினும் அப்பயனை நோக்கி அவர்கள் தங்கள் பணியைச் செய்தல் இல்லை.

இனி அரசனிடம் பேரன்பையும், பெருமதிப்பையும் பெற விரும்பி அதன்பொருட்டுத் தங்கள் பணியைச் செய்யும் அமைச்சர் முதலியோர் அத்துணைச் சிறந்த பணியாளராகார். அதுபோலவே இறைவனுக்கு உவப்பான செயல்களைத் தமது கடமையாகச் செய்பவரே மெய்யடியாராவர். அவ்வாறின்றி எவையேனும் சில பயனை விரும்பிச் செய்வோர், 'மெய்யடியார்' எனப்படுதல் இல்லை. பணி புரிவோர் தங்கள் கடமையில் தவருது நிற்பின், அவர்கள் தங்களுக்கு வேண்டும் நன்மை யைக் கேட்டுப்பெற வேண்டியதில்லை. அதுபோலத்தான், மெய்யடியார் தங்கட்கு வேண்டும் நன்மை எதனையும் இறைவனை வேண்டிப் பெறுதல் இல்லை. அவர்கட்கு இறைவன் தானே அவற்றைத் தந்தருள்கின்ருன். இதனையே நாவுக்கரசர்,

"தன்கடன் அடியேனையும் தாங்குதல்;
என்கடன் பணிசெய்து கிடப்பதே"

என்று அருளிச்செய்தார். எனினும், அவர் சூலைநோய் தாங்கமுடியாத அளவில் இருந்தபொழுது இந்நிலையை அவர் இறைவனுக்குச் சிறிது நினைவூட்டும் முறையில் பாடியருளிய திருப்பாடல் நினைவுகூரத் தக்கது.

முன்னம் அடியேன் அறியா மையினுல்
  முனிந்தென்னை நலிந்து முடக்கியிடப்
பின்னை அடியேன் உமக்காளும் பட்டேன் ;
  சுடுகின்றது சூலை ; தவிர்த்தருளீர்
தன்னை அடைந்தார் வினை தீர்ப்பதன்ருே,
  தலையாயவர்தங் கடன் ஆவதுதான் !
அன்ன நடையார் அதிகைக் கெடில
  வீரட் டானத்துறை அம்மானே.

'முதலில் அறியாமை காரணமாக உம்மை மறந்தமை பற்றி நீர் சினந்து கொடிய சூலைநோயை ஏவி என்னை முடக்கி ஈர்த்தது ஒக்கும். ஆயினும், அதனுல் என் அறியாமை நீங்க, யான் உமக்கு அடியவன் ஆயினபின்பும் அச்சூலைநோயை நீக்காதிருத்தல் என்ன முறை? 'அடியவனுக்கு உளதாகிய துன்பத்தை விரைந்து நீக்குதல் ஆண்டானுக்குக் கடமை' என்பது ஒருபுறம் இருக்க, தம்மைத் தஞ்சம் என்று அடைந்தவரது துன்பத்தை விரைந்து நீக்குதல், அருளாலும், ஆற்றலாலும், அறிவாலும் மேம்பட்ட மேலோரது கடமையன்ருே? என் சூலைநோய் சிறிதன்று; சுடரைச் சுட்டெரிப்பது போல மிகவும் கொடிதாய் இராநின்றது. அதனுல், இனி ஒரு நொடியும் தாழாது தீர்த்தருளல் வேண்டும்' என்ற இக்கருத்தமைந்த திருப்பாடல் அது. இதில் தலைவன் தன் அடிமைக்குச் செய்யத்தக்க கடமையை நாவரசர் குறிப்பாகவும், மேன்மக்களாயினரது கடமையை வெளிப்படையாகவும் அருளிச்செய்தமை அறிந்து இன்புறத்தக்கது.

இதனுள் "அன்ன நடையார் அதிகைக் கெடில விரட்டானம்" என்றது ஒரு நயமான பகுதி. அஃதாவது, 'அன்னப் பறவைகள் அழகாக நடைபோடுகின்ற, கெடில நதியால் வளம் பெற்ற வயல்கள் சூழ்ந்த திருவதிகை' என்பது அதன் பொருளாயினும், 'தன்னை அடைந்தாரது வினையைத் தீர்க்கின்ற அன்ன (அந்த) ஒழுக்கத்தினர் வாழ்கின்ற திருவதிகை' என்ற பொருளையும் தந்து, 'உனது தலத்திலுள்ள மக்களே இத்தகையினராக, நீ அவ்வாறில்லாதது என்னை' என்ற நயத்தையும் தோற்றுவித்தது அத்தொடர். இங்கு "வினை" என்றது துன்பத்தை. 'எனது குற்றம் நோக்கிச் சூலை நோயை நீக்கத் தாழ்க்கலாகாது;

ஏனெனில், சிறியோர்செய்த குற்றத்தைப் பொறுத்தல் பெரியோர் கடமையன்றே' என்பதையும் இதனுள் திருநாவுக்கரசர் குறிக்கின்றார்.

" தேவா சிறியோம் பிழையைப் பொறுப்பாய் பெரியோனே
ஆவா என்றங் கடியார் தங்கட் கருள்செய்வாய் " ‡

என்று ஞானசம்பந்தரும்,

" பிழைத்தவை பொறுக்கை யெல்லாம்
பெரியவர் கடமை போற்றி " *

என்று மாணிக்கவாசகரும் அருளுகின்றார்கள்.

இனி, ' தலைவன் கடமையை நினைவூட்டிய அவர், தொண்டன் கடமையை நினைந்தனரா ' என்னும் கேள்வி எழாதவாறு அவர் அதனைப் பலவிடத்தும் அருளிச்செய்தார்.

" ஏற்றாய் அடிக்கே இரவும் பகலும்
பிரியாது வணங்குவன் எப்பொழுதும் "

" நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன் "

என்றாற்போல்வன எதிர்காலமும், நிகழ்காலமும் பற்றி அருளிச் செய்தன. இனி,

" சலம்பூவொடு தூபம் மறந்தறியேன் ;
தமிழோடிசை பாடல் மறந்தறியேன் ;
நலந்தீங்கிலும் உன்னை மறந்தறியேன் ;
உன்நாமம் என் நாவில் மறந்தறியேன் "

என்றாற்போல்வன இறந்த காலம் பற்றி அருளிச் செய்தன. 'எனது அறியாமை நீங்கவேண்டி என்னைச் சமண சமயம் புகுவித்தாயாயினும், யான் அதற்கு முன்பு செய்துவந்த வழிபாடுகளை இப்பொழுது திருவுளத்துக் கொண்டருள வேண்டும்' என்று விண்ணப்பித்த அருமை நோக்கற்பாலது.

இவற்றால், ' ஆற்றல் முதலியவற்றால் தலைவராயினார்க்கும், தம்மை அடைந்தவர்க்கு நலஞ்செய்தலே கடமையாகின்றதன்றி, அடையாதவர்க்கு நலஞ்செய்தல் வேண்டும் என்னும் கடமை

‡ திருமுறை - 2. 64. 1. * திருவாசகம் - திருச்சதகம் - 66.

இல்லை' என்பது தெளிவாகின்றது. அதனால், இறைவனும் தன்னை அடைந்த மெய்யடியார்க்கே தனது திருவருளைச் செய்கின்றான்; அடையாதவர்க்குச் செய்கின்றிலன். அதனை அறியாது அவனுக்குத் தொண்டு செய்யாதவரும், எமக்கு அவன் அருள் செய்யாதது அவனுக்குக் கோட்டமன்றோ' எனப் பிணங்குவராயின், அவர்க்கு யாது சொல்ல இயலும்!

" சலமிலன் சங்கரன்; சார்ந்தவர்க்கலால்
நலமிலன்; நாடொறும் நல்குவான் நலன்" (1)

என்று நாவுக்கரசரே ஓரிடத்தில் வெளிப்படையாகவே அருளுகின்றார்.

இவ்வாறு தோத்திரங்களில் அமைந்துள்ள உண்மையையே சாத்திரங்கள்,

" சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல்
சார்ந்தாரைக் காத்தும் சலமிலனாய்ச் — சார்ந்தடியார்
தாந்தானாச் செய்துபிறர் தங்கள்வினை தான்கொடுத்தல்
ஆய்ந்தார்முற் செய்வினையும் ஆங்கு" (2)

" நலமிலன் நண்ணார்க்கு; நண்ணினர்க்கு நல்லன்;
சலமிலன்; பேர்சங் கரன்" (3)

என்றெல்லாம் சாத்திரங்கள் கூறுகின்றன.

" உழப்பின் வாரா உறுதிகள் உளவோ!
கழப்பின் வாராக் கையற வுளவோ!" (4)

என்ற பட்டினத்தடிகள் வாக்கினையும் நினையாமல், உழையாமலே பயன் பெறக் கருதுதல் உணர்வுடையோர் செயலாகாது. இங்ஙனம் தோத்திரங்களின் உண்மையை முற்ற உணர்தற்குச் சாத்திரங்கள் துணையாதலை அறிந்து மக்கள் பயன் பெறுவார்களாக.

---

(1) திருமுறை - 4. 11. 6.
(2) சிவஞானபோதம் - சூ. 10.
(3) திருவருட்பயன் - 9.
(4) திருவிடைமருதூர் மும்மணிக்கோவை - 10.

# தோத்திரமும் சாத்திரமும்

## 10. ஆளல்லேன் எனலாமே ? *

பயன் தரத்தக்க செயல் யாதாயினும் அதற்குச் சில நெறி முறைகள் இருத்தல் இயற்கை. ஒவ்வோர் உயிர்க்கும் அன்றாட நிகழ்ச்சியாகிய உண்ணல் உறங்கல் முதலிய நிகழ்ச்சிகளிலும் ஒழுங்கு முறைகள் இருக்கவே செய்கின்றன. இவ்வொழுங்கு முறைகள், நடைமுறையால் ஒருவாறு அறியப்படுமாயினும், முற்றிலும் அறியப்படா. அதனால் அவற்றை ஆன்றோர் நூல்களில் எழுதிவைக்கின்றார்கள். எனினும் எல்லாவற்றையும் எழுதி வைத்தல் இயலாது. காலத்திற்கும் இடத்திற்கும் ஏற்ப மேற்கொள்ள வேண்டியவற்றை மக்கள் அவ்வப்பொழுது தங்கள் அறிவு கொண்டுதான் அறிதல் வேண்டும். அவ்வாறு அறிந்து நடப்பது சிலவேளைகளில் நூல்களில் உள்ளதற்கு மாறானதுபோலக் கூடத்தோன்றலாம். சொல்லளவில் மாறானது போலத் தோன்றினும், நூற்கருத்தை நோக்கும் பொழுது அஃது அதற்கு ஒத்ததாகவே அமையும்; ஆகவே ஒழுங்கு முறைகள் என்பன எல்லாவற்றையும் 'இவை இவை இப்படிப் பட்டவைதாம்' என்று எழுதிவைத்தல் இயலாத ஒன்று என்பது விளங்கும். இதனை முன்னோர் பல வகையில் நமக்கு விளக்கி யுள்ளார்கள்.

'இறையனார் அகப்பொருள்' என்ற நூலின் உரையில், அவ்வுரையாசிரியர் ஒரு கருத்தை விளக்கியுள்ளார். அஃதாவது, அந்நூலில் 'களவு' என்ற ஒன்று சிறப்பித்துப் பேசப்படுகின்றது. களவை இவ்வாறு சிறப்பித்துப் பேசுதல் கூடுமோ என்ற வினாவை எடுத்துக்கொண்டு, 'களவு குற்றம்' என்பது பெரும்பான்மையாக உண்மையே யாயினும், சிறுபான்மை களவு நல்லதாதலும் உண்டு என்கின்றார் அவர். அஃது எவ்வாறெனின், ஒரு குடும்பத்தில் மற்றவர்களால் துன்புறுகின்ற ஒரு பெண் தான் உயிர்விடக்கருதி நஞ்சுவாங்கி வைத்துக்கொண்டு அதை உண்பதற்கு யாருமில்லாத நேரத்தை எதிர்பார்த்திருந்தாள். அதை எப்படியோ தெரிந்துகொண்ட ஒருவன் அவளுக்குத் தெரியாமல் அந் நஞ்சினைக் கவர்ந்து கொண்டுபோய் எங்கோ எறிந்து விட்டான். அப்பெண் தான் கருதிய நேரத்தில் போய்ப் பார்த்தபொழுது தான் வாங்கிவைத்த நஞ்சினைக் காணாதவளாயினாள். அதன் பிறகு அவளுக்கு

---

* 10—4—71 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

உயிரைப் போக்கிக்கொள்ளும் எண்ணமும் மாறிவிட்டது. இவ்விடத்தில் நஞ்சினைக் களவாடியவனுக்குக் களவினுல் ஆகும் பாவம் வருமா? அல்லது நல்லசெய்கையால் ஆகும் புண்ணியம் வருமா? என்று கேட்டால், புண்ணியம் வரும் என்றுதானே சொல்லவேண்டும்? ஆகையால் 'களவு என்ற சொல்லைக் கேட்டு உடனே அதைக் குற்றம் என்று கூறிவிடலாகாது' என்கின்ருர் அந்த உரையாசிரியர்.

திருவள்ளுவரும் இதே கருத்தில்தான், "பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்கு மெனின்" என்கின்ருர் 'நிகழாத தொன்றை நிகழ்ந்தது' என்ருே 'நிகழ்ந்ததை நிகழவில்லை' என்ருே மாற்றிச் சொல்வதனுல் எவ்விடத்திலாயினும் குற்றமற்ற ஒரு நன்மை விளைவதாயிருப்பின் அவ்வாறு மாற்றிக் கூறுதல். உள்ளதை உள்ளவாறே சொல்லிய வாய்மையேயாகும் என்கின்ருர் திருவள்ளுவர். எனவே நூல்களில் உள்ள சொற்கள் எப்படி இருப்பினும், அவற்றின் பொதுக் கருத்து 'நம்மால் பிறருக்கு எவ்வகையினும் தீமை விளையாமல், கூடுமானுல் நன்மை விளையும்படி நடத்தல் வேண்டும்' என்பதேயாம எனவே, நூல்களில் உள்ள சொற்களைப் பயன்படுத்திக் கொள்ளுதல் அவரவர் தன்மையைப் பொறுத்ததேயாகும் என்பது விளங்கும். இது பற்றியே திருவள்ளுவர்,

"மனத்துக்கண் மாசில னுதல்; அனைத்தறன்
ஆகுல நீர பிற"

என்று மன நிலையையே அடிப்படையாகக் கூறினர். எனவே, யாதொரு செயலுக்கும் பயன் அதைச் செய்வோரது மனப்பான்மை பற்றி யல்லது அச் செயல் பற்றி யன்று என்பது தெளிவு இதனுல்தான் நம் நாயன்மார்களில் சிலரதுசெயல்கள் நமக்கு முரண்பட்டனபோலத் தோன்றினும், இறைவன் அவைகளை நற்செயலாகவேகொண்டு பயனளித்தருளினன். இத்தகைய செயல்களுட் சிலவற்றைச் சுந்தரர் குறிப்பிட்டருளிய திருப்பாடல் பலரும் அறிந்தது. அது,

"நற்றமிழ் வல்ல ஞானசம் பந்தன்
நாவினுக் கரையன் நாளைப்போ வானும்
கற்ற சூதன் நற் சாக்கியன் சிலந்தி
கண்ணப் பன்கணம் புல்லனென் றிவர்கள்
குற்றஞ் செய்யினுங் குணமெனக் கருதுங்
கொள்கை கண்டுநின் குரைகழ லடைந்தேன்
பொற்றி ரள்மணிக் கமலங்கள் மலரும்
பொய்கை சூழ்திருப் புன்கூ ருளானே"

என்பது. பாண்டியன் நெடுமாறன் சமணரைக் கழுவேற்ற உத்தரவிட்டபொழுது அதனை ஞானசம்பந்தர் விலக்காதிருந்தனர் என்று இன்றும் சிலர் குறை கூறுவர். நாவுக்கரசர் மருணிக்கியாராய் இருந்தபொழுது தம் தமக்கையார் சொல்லையும் கேளாமல் சமண சமயம் புகுந்ததைச் சைவரும், பின்பு அவர் அச்சமயத்தைத்துறந்து சைவம் சார்ந்ததைச் சமணரும் அக்காலத்தில் பெருங்குற்றமாகப் பேசியிருப்பர். திருநாளைப் போவார் தில்லைக் கூத்தப்பெருமானைத் தரிசிக்க விரும்பியதை வருணாச்சிரம ஒழுக்கத்தில் நின்ற அக்கால மக்கள் பலரும் எள்ளி நகையாடியிருப்பர். முற்பிறப்பில் சிலந்தியாயிருந்த கோச்செங்கட்சோழர் அப்பிறப்பில் சிவபெருமானுக்கு வாய் நூலாற் பந்தல் இட்டதை அப்பெருமானிடம் அன்பு கொண்டயானை வெறுத்து அச்சிலந்தியைக் கொல்ல முயன்றதும் நாம் நன்கறிந்ததே. சாக்கியரும், கண்ணப்பரும் செய்த செயல்கள் வெளிப்படை. உள்ளத்தில் அன்பின்றிப் பொக்கம் மிக்குப் பூவும் நீருங்கொண்டு பூசை செய்யும் சைவராய் இருக்க விரும்பாமல், தமக்கு நன்றெனத்தோன்றிய சமண சமயம் புக்கதும், பின்னர் அச்சமயம் பயனற்றதெனத் தோன்றிய பின்னரும் அரசன் முதலியோருக்கு அஞ்சி அச்சமயத்தில் இராமல் வெளிப்போந்ததும் ஆகிய நாவரசரது செயல்கள் உண்மையின் வழிப்பட்டன அல்லவோ! இவற்றையெல்லாம் நோக்கியே இறைவன் அப்பெருமக்கட்கெல்லாம் நல்லருள் புரிந்தான்.

உலகியல் முறைகளையே இவ்வாறு, 'இஃது இப்படித்தான்' என்று ஒரேவகையாக வரையறுக்க இயலாதென்றால், இறைவன் தன் அடியார்க்கு அருள்செய்யும் முறைமைகளை வரையறுத்தல் இயலுமோ! இயலாது. அதனை நோக்கியே ஞானசம்பந்தர்,

"ஆட்பாலவர்க் கருளும் வண்ணமும் ஆதிமாண்பும்
கேட்பான்புகில் அளவில்லை; கிளக்க வேண்டா;
கோட்பா லனவும் வினையுங் குறுகாமை எந்தை
தாட்பால் வணங்கித் தலைநின் றிவை கேட்க தக்கார்"

என்று திருப்பாசுரப்பதிகத்தில் அருளிச் செய்தார்.

இவ்வகையில் இறைவன் ஞானசம்பந்தரைப் பால் கொடுத்து ஆட்கொண்டான். நாவுக்கரசரைச் சூலைநோயால் வருத்தி ஆட்கொண்டான். சுந்தரரை வல்வழக்கிட்டு ஆட்கொண்டான். வாதவூரரை ஆசான் மூர்த்தியாய் வந்து அருளுபதேசம் செய்து ஆட்கொண்டான் மற்றும் பலரைப் பல

வகையில் ஆட்கொண்டான். அந்நிலையில் சுந்தரரை முதலி லேயே தன் உண்மை வடிவில் வந்து முன்னை வரலாற்றைத் தெரிவித்து ஆட்கொண்டருளாமல், அவர்முன் வல்வழக்காள ஞய்த் தோன்றி வல்வழக்கிட்டு அதற்கு எதிராக அவரும் வன்மையான எதிர்வழக்குப் பேசித் தோற்கச்செய்து பின்னர் உண்மை உணர்த்தி ஆண்டருளினுன். அதன் பின்பு அவர் தாம் இறைவனிடம் வன்மை பேசியதை எண்ணி இரக்கமுற்றுப் பாடிய அருட்பாடல்களில் சிறப்பாகக் குறித்தருளியது, "அத்தா உனக்கு ஆளாய் இனி அல்லேன் எனலாமே" என்பது. அஃதாவது, 'என்றுநீ இருக்கின்ருயோ அன்றே உயிர்களும் இருக்கின்றன. ஆயினும், நீ என்றும் உயிர்களுக்கு ஆண்டான். உயிர்கள் என்றும் உனக்கு அடிமைகள். அம் முறையில் நானும் உனக்கு என்றும் மீளா அடிமையே. அது நிற்க, உனக்கு அணுக்கத் தொண்டு செய்யும் தொண்டனும் நிலையை முற்பிறப்பிலே நான் பெற்றிருந்தேன். அதனல், சிறப்பு வகையிலும் முன்பே உனக்கு நான் அடிமை. அவ்வா றிருந்தும் அதனை நான் மறந்த பொழுது நீ வந்து 'என்னை உனக்கு அடிமை' என்று அறிவித்த பொழுதும், 'நான் உனக்கு அடிமையல்லேன்; என்னை அடிமை எனக் கூறுகின்ற நீ என்ன, பித்தனே' என்றெல்லாம் வன்மை பேசி இகழ்ந்தது எத்துணை அறியாமையின்பாற் பட்டசெயல்! இக்குற்றம் தீர்வது எவ்வாறு' என்று பாடினர். அவர், "பித்தா பிறை சூடீ" எனத் தொடங்கிய திருப்பதிகம் முழுவதி லும் இக்கருத்துத் தோன்ற அருளிச்செய்தார். இதன் உண்மை சாத்திரங்களைக் கொண்டு நோக்கியவழியே இனிது விளங்குவ தாகும்.

"விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்தளந் தறியா ஆங்கவை போலத்
தாம்தம் உணர்வின் தமியருள்" 1

"காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போற்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்" 2

"அக்கரங்கட் கெல்லாம் அகர உயிர் நின்ருற்போல்
மிக்க உயிர்க்குயிராய் மேவினேம் — எக்கண்ணும்
நில்லா விடத்துயிர்க்கு நில்லா தறிவென்று
நல்லா கமம்ஓதும் நாடு." 3

---

1. சிவஞானபோதம் சூ 5. 2. 7. சூ 11. 3. உண்மை விளக்கம் 30.

என்பன முதலிய சாத்திரப் பகுதிகள், கண்முதலிய பொறிகட்கு ஆன்மா இல்லாதபொழுது காணும் ஆற்றல் முதலியன இல்லை யாவதுபோல, யாதோர் உயிர்க்கும் இறைவன் இல்லாமல் யாதொன்றையும் அறியும் ஆற்றல் இல்லையாம். அதனுல், கண்முதலிய பொறிகள் ஆன்மாவிற்கு என்றும் அடிமையாதல் போல, எல்லா உயிர்களும் என்றும் இறைவனுக்கு அடிமையே. இந்த ஆண்டான் அடிமைத் திறத்தை மறப்பதே அஞ்ஞானம். இதைமறவாது உணர்தலே மெய்ஞ்ஞானம். அந்த அஞ்ஞானமே துன்பத்திற்கெல்லாம் காரணம். அந்த அஞ்ஞானம் நீங்கி மேற் குறித்த மெய்ஞ்ஞானம் உண்டாகுமாயின், உயிர்க்கு எல்லா இன்பமும் வாய்க்கும். ஆகவே, என்றும் இறைவனுக்கு ஆளாய் நிற்கும் உயிர்கள் அதனைமறந்து, 'ஆள் அல்லேன்' எனக் கூறிச் செருக்கித் திரிதல் கூடுமோ! கூடாது என்பதனையே மேற்கூறிய தோத்திரமாகிய சுந்தரர் திருமொழி நமக்கு நன்கு அறிவுறுத்து கின்றது. அவ்வுண்மையும் சாத்திரத்தின் வழியே விளங்கத் தக்கதாகின்றது.

இவ்வாறு தோத்திர உண்மைகளைச் சாத்திரத்தின் வழி உணர்ந்து, ஆண்டவன் திருவடிக்கு ஆட்பட்டொழுகும் பேற் றினை மக்கள் பெறுவார்களாக.

---

## பொன்மொழிகள்

தமிழ் மொழியே உடல்; சைவமே உயிர்; தமிழ் மொழியே மலர்; சைவமே மணம்; தமிழ் மொழியே வீணை. சைவமே இசை; உயிரும், மணமும், நாதமுமாகத் தமிழ் மொழியோடு ஒன்றுபட்டு வளர்ந்துவந்திருக்கிறது நம் சைவ சமயம்; சைவம் இன்றேல் தமிழ் இல்லை. சிவமணமே செந்தமிழை வாழ்விக் கிறது.

• • • *

ஞானசாரியனே பெருமான் திருவருளை வாரி வழங்கி ஆட் கொள்கிறுன். ஆகவே குருவருளும் உயிர்க்கு உற்ற துணையா கிறது. திருவருளும் குருவருளும் உயிரைச் சிவாநந்தக் கடலில் திளைக்கச்செய்கின்றன.

— ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி.

# தோத்திரமும் சாத்திரமும்

## 11. நினைப்பும் மறப்பும் *

உலகில் காணப்படும் பொருள்கள் 'அறிவுடையனவும் அறிவில்லனவும்' என இருவகையினவாய் இருத்தல் கண்கூடு. மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன என்னும் உயிர் வகைகள் அறிவுடையன என்பதில் யாருக்கும் ஐயமில்லை. அதற்குக்காரணம், அவை ஓர் இடம் விட்டு மற்றோர் இடத்திற்குத் தம் விருப்பம்போல் பெயர்ந்து செல்லும் இயக்கம் உடையனவாயும், தமது விருப்பு வெறுப்பு இன்பத் துன்பம் முதலிய உணர்ச்சிகளைத் தெளிவாகப் புலப்படுத்துவனவாயும் இருப்பதே.

புல், பூண்டு, செடி, மரம் என்னும் தாவர வகைகள் இத்தன்மை யுடையனவாய் இல்லாவிடினும், அவையும் அறிவுடையனவே என்பதை நுணுகி ஆராய்ந்தால் அறியலாகும். தாவரங்கட்கு இடம்விட்டுப் பெயர்ந்து செல்லும் வெளி இயக்கம் இல்லாவிடினும், நீரை உறிஞ்சுதல் காற்றை உட்கொள்ளுதல் முதலிய உள் இயக்கம் இருக்கவே செய்கின்றது. இன்பத் துன்ப உணர்ச்சிகளையும் அவை புலப்படுத்தி நிற்றலை நுண்ணுணர்வுடையோர் அறிகின்றனர். அதனால், மற்றைய உயிரினங்கள் போலத் தாவரங்களும் அறிவுடையனவேயாம். சிறிதாய்ப் பிறந்து பெரிதாய் வளரும் தன்மையையே உயிரினங்கள் அனைத்திற்கும் பொதுவியல்பாக வைத்து, அவ்வியல்பு தாவரங்களிடத்திலும் காணப்படுதலால், 'அவைகளும் உயிரினங்களே' என்பதை எளிதில் உணர்ந்தனர் நம்முன்னோர்.

சிறுகுன்றுகள், பெருமலைகள் என்பவைகளிடத்தும் வளர்ச்சியுள்ளதாக அன்றும் இன்றும் சிலர் கூறியபோதிலும் அவை அங்கொன்றும், இங்கொன்றுமாக ஒரோரிடத்தில் சொல்லப்படுதலன்றி எவ்விடத்தும் உள்ள பொதுவியல்பாக இல்லாமையால், கற்கள் உயிரினமாதல் இல்லை. பொன் முதலிய உலோகப் பொருள்கட்குப் பிறப்பும் வளர்ச்சியும் இல்லாமையாலும், அவைகளிடத்துச் சில காரணம் பற்றி உண்டாகும் மாற்றங்கள் பிற பொருட் கூட்டத்துச் செயற்கையால் ஆவன அல்லது, தனித்து நிற்குமிடத்துத் தம்மியல்பால் ஆவன அல்ல ஆதலாலும் அவையும் (பொன் முதலிய உலோகப் பொருள்களும்) உயிரினத்துட் சேரா. பிறவும் இவ்வாறேயாம். ஆகவே, மக்கள் முதலிய

* 10—5—71 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

உயிரினங்களே அறிவுடைப் பொருள்களாம். அறிவுடையன வாகிய உயிர்கள் 'அறிவுடையுலகம்' என்றும் அறிவில்லன வாகிய பிறபொருள்கள் 'அறிவி லுலகம்' என்றும் சொல்லப்படும்.

அறிவுடைப் பொருளாகிய உயிர்களிடத்திலும் அறியாமை இருத்தல் நன்கறியப்படுகிறது; எனவே உயிர்கள் அறிவோடு அறியாமையும் உடையன என்பது தெளிவு. அறிவே இல்லாமல் அறியாமை ஒன்றையே உடைய பொருள்களும் அறிவோடு அறியாமை உடைய பொருள்களும் இருத்தலால், அறியாமையே இல்லாது, அறிவு ஒன்றையே உடைய ஒரு பொருளும் இருத்தல் வேண்டும் என்பது நன்குணரப்படும். அந்தப் பொருளே இறைவன் அல்லது கடவுள். ஆகவே 'அறிவோடு அறியாமையும் உடையதாதல் உயிர்த் தன்மை" என்றும், அறியாமை இன்றி அறிவு ஒன்றையே உடையதாதல் இறைத் தன்மை' என்றும் கொள்ளலாம்.

அறிவு, அறியாமைகளே, நினைப்பு மறப்புக்களாகவும் அமைகின்றன. அதனால் உயிர்கள் நினைப்பு ஒன்றையே உடையனவாய் இல்லாமல், மறப்பையும் உடையனவாகின்றன. இறைவனுக்கு மறப்பு என்பது இல்லை. மறப்பு என்னும் குற்றத்தால் உயிர்கள் மறக்கக்கூடாத பொருளையும் மறந்து விடுகின்றன. அதனால், அவைகள் அடையும் துன்பங்கள் பல.

மறப்பு அல்லது மறதி என்னும் குற்றத்தை விலக்குதற்கு, திருவள்ளுவர் ஓர் அதிகாரமே அமைத்திருக்கின்றார். அவ் வதிகாரம், பொச்சாவாமை என்பது.

பொதுவாக, மக்கள் மறதியைப் பெருங்குற்றமாகக் கருதுவதில்லை. ஒருவர் 'ஒன்றைச் சொல்ல அல்லது செய்ய மறந்துவிட்டேன்' என்று சொன்னால் அதை நாம் பெருங் குற்றமாக நினைப்பதில்லை. ஆயினும், திருவள்ளுவர் மறதியைப் பொறுக்கக்கூடாத பெருங்குற்றமாகக் கருதுகின்றார். ஒன்றை மறத்தற்குக் காரணம், அதில் பற்றில்லாமை யாகையால், சொல் லத்தக்க அல்லது செய்யத்தக்க ஒன்றைச் சொல்லவோ அல்லது செய்யவோ மறந்துவிடுவது அதில் பற்றில்லாமையே என்பது பற்றியே அவர் மறதியை அவ்வாறு கருதுகின்றார். இன்னும் ஒன்றை மறப்பது வேறொன்றை அதைவிடச் சிறந்ததாக நினைப்ப தாலேயாம். ஆகவே சிறப்புடைய பொருளை மறப்பது பெருங் குற்றமாகின்றது.

" தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க; காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம் "

ஒருவன் தனக்குத் தானே அழிவை உண்டாக்கிக்கொள்வது அளவுகடந்த கோபத்தினுல்தான், என்பது முதலாகக் கோபத்தின் கொடுமையை எடுத்துக்காட்டுகின்ற திருவள்ளுவர், 'கோபத்தைவிட ஒருவனுக்கு அழிவை உண்டாக்குவது மறதி தான்' என்கிருர்.

" சிறந்த வெகுளியின் தீதே; சிறந்த
உவகை மகிழ்ச்சியின் சோர்வு "

(சிறந்த உவகை மகிழ்ச்சி - அற்பப் பொருளில் மகிழ்ந்து களிக்கின்ற மயக்கம். சோர்வு - மறதி)

" பொச்சாப்பு (மறதி) புகழைக் கொல்லும் "

" பொச்சாப்பு (மறதி) உடையவர்க்குப் புகழ்கிடையாது என்பது அறிவுடையோர் அனைவர்க்கும் ஒருபடித்தாக உடன்பாடு "

" மறதியால் பெருமை இழந்து கெட்டோர் பலர் "

" மறதி இல்லையாயின் நினைத்ததை நினைத்தவாறே பெறலாம் "

என்ருற்போல்வன அவர் மறதியைப் பற்றிக் கூறும் சில கருத்துக்கள்.

இந்த மறதியோடு உடன்பிறப்பாக மற்றும் ஒரு மூன்றை அவர் வேருரிடத்தில் குறிக்கின்ருர். அவை காலநீடிப்பு, சோம்பல், தூக்கம் என்பவை. இந் நான்கில் ஒன்றே ஒருவனுடைய கேட்டிற்குப் போதும். இந்த நான்குமே ஒருவனிடத்தில் இருந்துவிடுமாயின், அவனது நிலை என்னவாகும்!

" நெடுநீர், மறவி, மடி, துயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன் "

என்பது அக் குறள்.

இன்றியமையாது என்றும் நினைக்கத்தக்க பொருள் இறைவன். எனவே, அவனை மறப்பது குற்றத்தினும் குற்ற

மன்றே! இந்நிலையையும் திருவள்ளுவர் தாம் எடுத்துக் கொண்ட நூலுக்கேற்ப அறத்தின்மேல் வைத்துக் கூறுகின்றார்.

" அறத்தினூஉங் காக்கமும் இல்லை; அதனை
மறத்தலி னூஉங்கில்லை கேடு."

'மற்றையவற்றை மறப்பதினும் அறத்தினை மறத்தல் பெருங் கேட்டைத் தருவதாகும்' என்பது அக் குறளின் பொருள். இதை அப்படியே இறைவனை மறத்தலில் வைத்து நாம் உணர்தல் வேண்டும்.

" மறதியை உண்டாக்குவது அறியாமையே "

என்பது முதலிலே குறிப்பிடப்பட்டது. அறியாமையையே 'ஆணவ மலம்' என்று சாத்திரங்கள் கூறும். ஆணவமலத்தின் செய்தியே, தாழ்ந்ததில் விருப்பத்தை உண்டாக்கி உயர்ந்ததை மறக்கச் செய்வது. இதன் செயலுக்கு அஞ்சியே பெரியோர்கள் இறைவனிடம் பலவாறு முறையிடுகின்றனர்.

" நாயேன் பலநாளும் நினைப்பின்றி மனத்துன்னைப்
பேயாய்த்திரிந் தெய்த்தேன் "

என்று சுந்தரர், தாம் இறைவனை மறந்த காரணத்தால் அல்லல் உற்று அலமந்ததாகக் குறிப்பிடுகின்றார். அதன்பின் அவர் திருவருள் பெற்ற காரணத்தால்,

" மன்னே மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை "
" எற்றான் மறக்கேன் எழுமைக்கும் எம்பெருமான் " 2
" அன்னே உன்னையல்லால் இனி யாரை நினைக்கேனே "
" ஆரூரானை மறக்கலும் ஆமே " 3
" நற்றவா உனை நான்மறக்கினும் சொல்லும் நா
நமச்சி வாயவே " 4

என்றெல்லாம் தமது மறவா நிலையைப் பல இடங்களில் குறித்தருளுகின்றார். நாவுக்கரசரும்,

" நெஞ்சம் உனக்கே இடமாக வைத்தேன் ;
நினையா தொருபோதும் இருந்தறியேன் "

என்று குறிப்பிட்டு, பின்பு,

---

1. திருமுறை - 7. 1. 2. 3. 2. ௸ - 92. 1.

" புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி
என்மனத்தே
வழுவா திருக்க வரந்தரல் வேண்டும்"

என்று மறவா வரம் வேண்டினர். காரைக்கால் அம்மையார், இறவாத இன்ப அன்பை வேண்டியபின்,

" பிறவாமை வேண்டும் ; மீண்டும் பிறப்புண்டேல்
உன்னை என்றும்
மறவாமை வேண்டும் "

என்று வேண்டிக்கொண்டமையைப் பலரும் அறிவர்.

மறவாமையே, 'அயராமை' எனப்படுகின்றது. அயராமையால் விளைவது அன்பு ; அந்த அன்பினல் விளைவது இன்பம். எனவே, சிவனை மறவாச் சிந்தையர், அவன்பால் பெருகி எழுகின்ற அன்பே சிவமாய் அமர்ந்திருப்பவராவர். இதனையே மெய்கண்டார்,

" அயரா அன்பின் அரன்கழல் செலுமே "

என்று அருளிச்செய்தார்.

அயர்ப்பை - மறப்பை - உண்டாக்குவது அறியாமையைச் செய்கின்ற ஆணவ மலம். அதனை நீக்க வேண்டியே சிவானந்தப் பெருவாழ்வை விரும்பும் பெரியோர் பலரும் இறைவனை இவ்வாறு மறவாதிருக்க வேண்டினர்.

" எந்நிலையில் நின்ருலும் எக்கோலம் கொண்டாலும்
மன்னியசீர்ச் சங்கரன்தாள் மறவாமை பொருள் "

என்ருர் சேக்கிழார். இத்தகைய வேண்டுதல்கள், திருமுறைகளில் வருதலை ஆங்காங்கு நிரம்பக் காணலாம். அவ்வேண்டுதல்களின் பொருள் சாத்திரத்திலேயே இனிது விளங்கப் பெறுதல் அறிந்து சிவனை மறவாச் சிந்தையராய்ப் பயன் அடைதல் மக்கள் கடனுகும்.

---

# தோத்திரமும் சாத்திரமும்

## 12. அகப் பூசை *

வழிபாடு செய்தலால் நம்முடைய மலமாசுகள் கழிகின்றன. இறைவனுடைய பேரருளைப் பெறுதற்கு உரியவர்கள் ஆகின்றோம். இந்த வழிபாட்டினை எப்போதும் செய்தல் வேண்டும். இப்போது செய்யலாம், இப்போது செய்யலாகாது என்பதில்லை: 'இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான்' என்று மணிவாசகப் பெருமான் அருளியபடி, நம்முடன் நீங்காது உறையும் பெருமானை அகத்தில் பூசைசெய்தல் வேண்டும். இதனையே அகப்பூசை என்று கூறுகின்றோம். திருநாவுக்கரசு சுவாமிகள் இந்த அகப்பூசை முறையினைத் தம்முடைய திருப்பதிகங்களிற் பல இடங்களில் கூறியுள்ளார்கள். அவற்றுட் சில இடங்கள் நம் சிந்தை விட்டகலாச் சிறப்புடையவை.

" காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறையநீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே. "

என்ற திருப்பாட்டைக் காண்கின்றோம். அகப்பூசைசெய்து வருங்கால் உள்ளே புகுந்து அநுபவத்தில் சுவை காட்டுகின்றான் இறைவன். எண்ணற்ற திருமுறைப்பாட்டுக்கள் இந்நிலையை எடுத்துக் காட்டுவனவாம்.

" ஞானக் கரும்பின் தெளிவைப் பாகை
நாடற் கரிய நலத்தை நந்தாத்
தேனைப் பழச்சுவை யாயினானைச்
சித்தம் புகுந்து தித்திக்கவல்ல
கோனைப் பிறப்பறுத் தாண்டு கொண்ட
கூத்தனை நாத்தழும்பேற வாழ்த்திப்
பானற் றடங்கண் மடந்தை நல்லீர்
பாடிப் பொற்சுண்ணம் இடித்தும் நாமே "

என்று மணிவாசகப் பெருமான் பாடிய பாடல் இங்குக் கருதத் தக்கது.

---

* 10—6—71 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

" மாலே பிரமனே மற்றெழிந்த தேவர்களே
நூலே நுழைவரியான் நுண்ணியனாய் வந்தடியேன்
பாலே புகுந்து பரிந்துருக்கும் பாவகத்தால்
சேலேர்கண் ணீர்மல்கத் தெள்ளேணங் கொட்டாமோ "

என்றும் பாடும் இடம் கருதத்தக்கது. இந்த அகப்பூசனைக்குப் பூசலார் நாயனார் வரலாறும் தக்க எடுத்துக்காட்டாகும். இறைவனுக்குரிய திருக்கோயிலைத் தம்முடைய உள்ளத்தில் கட்டியவர் இவ்வருளாளர்.

" பதுமநற் போதன்ன பாதத் தரற் கொரு கோயிலையான்
கதுமெனச் செய்குவ தென்றுகொ லாமென்று கண் துயிலாது
அதுமனத்தே எல்லிதோறு நினைந்தருள் பெற்றதென்பர்
புதுமணத் தென்றல் உலாநின்ற ஊர்தனிற் பூசலையே "

என்று திருத்தொண்டர் திருவந்தாதியில் நம்பியாண்டார் நம்பிகள் பாராட்டுவர்.

" அன்பரும் அமைத்த சிந்தை ஆலயத் தரனார் தம்மை
நன்பெரும் பொழுது சாரத் தாபித்து நலத்தி னோடும்
பின்பு பூசனைகள் எல்லாம் பெருமையிற் பலநாட் பேணிப்
பொன்புனை மன்று ளாடும் பொற்கழ னீழல் புக்கார் "

என்பர் சேக்கிழார். தோத்திர நூல்களிற் காணப்பெறும் அகப் பூசை முறையினைச் சாத்திர நூல்களிற் பரக்கக் காணலாம்.

சிவஞான சித்தியாரில் இந்த அகப்பூசை அந்தர்யாக பூசை என்று கூறப்பெறுகின்றது.

" அந்தரியாகந் தன்னை முத்தி சாதனமா
அறைந்திடுவர் அதுதானும் ஆன்மசுத்தி யாகும்
கந்தமலர் புகையொளி மஞ்சனமமுது முதலாக்
கண்டனவெலா மனத்தாற் கருதிக்கொண்டு
சிந்தைதனில் அர்ச்சிக்கச் சிவனை ஞானத்தாற்
சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க
வந்திடுமவ் வொளிபோல மருவியரனுளத்தே
வரவரவந்திடுவன்; பின் மலமானதறுமே "

திருக்களிற்றுப்படியார் பாடும் பின்வரும் திருப்பாட்டு அகப் பூசை மேம்பாட்டினை எடுத்துரைக்கின்றது.

" தம்மிற் சிவலிங்கம் கண்டதனைத் தாம் வணங்கித்
தம்மன்பாம் மஞ்சன நீர் தாமாட்டித்—தம்மையொரு
பூவாக்கிப் பூவழியா மற்கொடுத்துப் பூசித்தால்
ஓவாமை யன்றே உளன் "

" சிந்தையிலும் என்றன் சிரத்தினிலும் சேரும்வகை
வந்தவனை மண்ணிடைநான் வாராமல் - தந்தவனை
மாதினுடன் எத்திறமும் வாழ்ந்திருக்க என்பதலால்
ஏதுசொலி வாழ்த்துவேன் இன்று "

என்றும் இறுதிப்பாடலில் எடுத்துரைக்கின்றார் உய்யவந்தார். தோத்திர சாத்திரங்கள் கூறும் அகப்பூசையினைச் செய்து இருமைப் பயனும் எய்துவோமாக.

---

## பொன்மொழிகள்

மலர்ந்து மனத்தைக் கவர்ந்து மறைகின்ற மலர்கள் – கனிந்து கருத்தைக் கவர்ந்து இனிக்கின்ற பழங்கள் எல்லாம் வளர்ச்சியும் தேய்வும் உடையன என்பதை யாரால் மறுக்க முடியும். ஆதலால் இவை செயற்கையே. செயற்கைகள் எல்லாம் கருத்தாவை உடையனவே. அந்தக் கருத்தா வளர்ச்சியும் தேய்வும் இல்லாமல் – அதாவது தான் செயற்கையாகி விடாமல் இருக்கவேண்டும். ஆதலால் அவனுக்கு முதல் இல்லை; முதல் இல்லையாகவே அவனுக்கு முடிவும் இல்லை என்பது தெளிவு. அவனுடைய அருள் விளையாட்டின் ஆக்கமே இந்தக் காடும், மலையும், கடலும், வளமும், வயலுமாகிய எல்லாம்.

* * * *

தமிழுக்கும் கடவுளுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. தமிழ் மொழியே உடல்; கடவுட்கொள்கை அதன் உயிர். உயிர் இல்லாத உடம்பு சடம். அறிவற்றது. அசைவற்றது. அழகற்றது. ஆற்றலற்றது. இதனை உணர்ந்தே மொழிக்கு எல்லாம் முதலாகிய அகரமாக இறைவனைக் கண்டார்கள்.

— ஸ்ரீலஸ்ரீ கபிலைக் குருமணி.

# குருவருள்

## 1. நீத்தார் நிலையம் *

"பிறப்பென்னும் பேதைமை" என்னும் திருக்குறளால் 'பிறவியாகிய பெருந்துன்பத்திற்குக் காரணம் பேதைமையாகிய அஞ்ஞானம்' என்பது விளங்கும். உயிர்கட்கு அஞ்ஞானத்தை விளைப்பது ஆணவ மலம். இது தனித்து நிற்கும்பொழுது உயிர்களைக் கண்ணில்லாத குருடன்போல யாதொன்றையும் அறியாதபடி இருளாய்நின்று மறைக்கும். மாயை கன்மங்களு டன் சேர்ந்தபொழுது, உயர்ந்ததை இழிந்ததாகவும், இழிந்ததை உயர்ந்ததாகவும் தோன்றச் செய்து மருளாய் நின்று மயக்கும். அதனாலேயே உயிர்கள் இறைவனை மெய்ப்பொருளாக அறிந்து பற்றாமல், உலகத்தையே மெய்ப்பொருளாக நினைந்து அதனை இறுகப்பற்றி நிற்கின்றன. 'இப்பற்றினாலே அவைகளுக்கு உண்டாவது பிறவியாகிய பெருந்துன்பமே' என்பதைத் திரு வள்ளுவர்,

> "பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
> மருளானாம் மாணாப் பிறப்பு"

என்றார். இதில் ஆணவத்தினது மருள்நிலையே குறிக்கப்பட்டது.

> "இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
> மாசறு காட்சி யவர்க்கு"

என்பதில் அதன் மருள்நிலையோடு, இருள்நிலையும் குறிக்கப் பட்டது.

> "நில்லா தவற்றை நிலையின என்றுணரும்
> புல்லறி வாண்மை கடை"

என்றதில் மருள்நிலையே 'புல்லறிவாண்மை' எனப்பட்டது. அம் மருள் நிலையால் நிலையற்ற பொருள்கள் பலவும் நிலையுள்ளன போலத்தோன்ற, அவற்றைப்பற்றி நிற்கும் நிலை உண்டாகின் றது. அப்பற்றினால் பலவகைத் துன்பங்களும் பல வழியில் வந்து சூழ்ந்து வருத்துகின்றன. ஆகவே உலகப்பற்றினை எந்த அள விற்கு விடுகின்றோமோ அந்த அளவிற்குத் துன்பம் தொலைவ தாகும். இதனையே,

---

* 10—7—71 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது,

“ யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன் ”

என்ருர் திருவள்ளுவர். உலகப் பற்றை நீக்கினவரே ‘அறவர், துறவர், நீத்தார்’ என்றெல்லாம் சொல்லப்படுவர்.

‘உலகம் நிலையுடையது, இன்பமயமானது’ என்று நினைக்கும் மருட்சி நீங்கி, ‘உலகம் நிலையாதது, துன்பமயமானது’ என்னுந் தெருட்சி உண்டாவது ஆணவ மலம் பரிபாகம் எய்தும் பொழுதேயாம். ஆகவே, முற்றத் துறந்த முனிவராகும் நிலை ஆணவமலம் நீங்கும் பொழுதே உளதாகும். முற்றத் துறந்த முனிவரையே திருவள்ளுவர் ‘நீத்தார்’ என வைத்து, அவரது பெருமையைத் தமது நூலில் பாயிரத்திலே கூறியுள்ளார்.

உலகப்பற்றை முற்றிலும் விடுத்து முற்றத்துறந்த முனிவாராதற்கு இயல்பாகவே பற்றற்றவனுகிய இறைவனைப் பற்ற வேண்டும் என்பதையும் திருவள்ளுவர் குறிக்கின்ருர்.

“ பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு ”

என்பது அத்திருக்குறள். பற்றற்ருன் பற்றினுல் உலகப் பற்றை அறவே விடுத்த அருளாளர்களையே ‘சிவஞானிகள், சிவன் முத்தர்’ என்றெல்லாம் சிறப்பித்துக் கூறுகின்றது சைவ சித்தாந்தம்.

சிவஞானிகள் அல்லது சீவன்முத்தர்கள் புறத்தில் நம்மைப் போலவே உண்டு உடுத்து வாழினும், அகத்தில் அவர்கள் பசுகரணம் நீங்கிச் சிவகரணம் அடையப்பெற்றமையால் சிவமேயாய் நிற்பர். அதனுல் அவர்களை, ‘பராவு சிவர்’ - உலாவுகின்ற இறைவர் என்று சிவஞான சித்தியும், அவர்களது திருமேனியை “நடமாடுங் கோயில்” என்று திருமந்திரமும் கூறுகின்றன. இறைவன் இவர்கள் வழியாகவே நம்மனேரை ஆட்கொள்வதால் இவர்கள் ‘ஆளுடையார்” என்று சொல்லப்படுவர். எனவே இத்தகைய சிவஞானிகள் சிவனேயாதலும், இவர்கள் திருமேனிகள் சிவாலயங்களேயாதலும் விளங்கும்.

இந்நிலை, இவர்கள் இவ்வுலகத்தில் உடலொடு விளங்கும் பொழுதுமட்டுமன்று, இவ்வுடலை விடுத்து இறையடி கூடிய பின்பும் கொள்ளப்படுவது என்பதனைத் திருமூலர் தமது திருமந்திர நூலுள் ‘சமாதிக் கிரியை’ என்னும் அதிகாரத்தில் அருளிச் செய்துள்ளார்.

சிவஞானிகளது திருமேனியில் தீப்படும்படி செய்தால் அது சிவாலயத்தில் தீயிட்டதற்கு ஒப்பாகும்; அதனல் உலகிற்கு உண்டாகும் தீங்குகள் பலஎன்று அறிவுறுத்துகின்ருர் திருமூலர்.

எண்ணரு ஞானி உடல் எரிதாவிடில்
அண்ணல்தன் கோயில் அழலிட்ட தாங்கொக்கும்;
மண்ணில் மழைவிழா; வையகம் பஞ்சமாம்;
எண்ணரு மன்னர் இழப்பார் அரசுமே.

இனி, அவர்களது திருமேனியைப் போற்றிப் புனைந்து குகையிடத்து நல்லடக்கம் செய்து வழிபட்டால், உலகிற்குப் பல நலங்களும் பெருகும் என்பதையும் அவர் எடுத்தோதி யருளினர்.

அந்தமில் ஞானி அருளை அடைந்தக்கால்
அந்த உடல்தான் குகைசெய் திருத்திடில்
சுந்தர மன்னருந் தொல்புவி யுள்ளோரும்
அந்தமில் இன்ப அருள்பெறு வாரே.

சிவஞானியரது நல்ல குகை அடக்கத்தினை நல்ல இடங்களில் அமைத்தல் வேண்டும் என்கின்ருர் திருமூலர். நல்ல இடங்களாவன அவர்களே தங்கியிருந்த இடம், தீர்த்தக் கரை, ஆற்றிடைத் திடல், நந்தவனம், நகரத்திற்குள் சிறப்பானதோர் இடம், காடு, மலைச்சாரல் போன்றவைகளாம்.

தன்மனை சாலை குளங்கரை யாற்றிடை
நன்மலர்ச் சோலை நகரில் நற் பூமி
உன்னருங் கானம் உயர்ந்த மலைச்சாரல்
இந்நிலந் தான் குகைக் கெய்தும் இடங்களே.

அடக்கக் குகையை அமைக்கும் முறைகளையும் திருமூலர் விளக்கமாகவே கூறுகின்ருர். ஐந்துக்கு ஐந்து சாண் நாற்கோணமாக ஒன்பதுசாண் ஆழம் அகழ்ந்து, அதன் உள்ளுக்குள்ளே மூன்றுக்கு மூன்றுசாண் முக்கோணமாகக் குகை அமைத்து அதனுள் திருமேனியைப் பத்மாசனமாக இருத்துதல் வேண்டும்.

திருமேனியை இருத்தும் ஆசனத்தின் கீழ்ப் பஞ்சலோகம், நவரத்தினம் முதலியவைகளை இட்டு ஆசனத்தின் மேல் தருப்பையைப் பரப்பி, அதன்மேல் திருமேனியை இருத்தித் திருநீற்றை நிறையக் கொட்டி மூடி, வாசனைப் பொடியையும் நிரப்ப இடுதல் வேண்டும்.

திருமேனியை இருத்துதற்கு முன்னே அதற்கு அபிடேகம் செய்து நறுமணப்பொருள்கள் கலக்கப்பட்ட சந்தனத்தைப்பூசித் திருநீற்றை உத்தூளனமாகப் பூசிப் பின் குழைத்து இட்டு வாசனைப் பொடியையும் தூவித் தூப தீபங்காட்டி ஆராதித்து அதன்பின் இருத்துதல் வேண்டும்.

இருத்திமுன்னர்க் கூறியவாறு, மூடியபின்பு குகையைத் திரு மேனி அளவில் ஒருநிலையும், அதற்குமேல் நிலமட்டம் வரையில் ஒரு நிலையும், நிலத்திற்குமேல் மேடையாக ஒரு நிலையும், மேடைக்குமேல் ஒரு நிலையும் ஆக நான்கு நிலைகளை அடுக்காக அமைத்தல் வேண்டும்.

மேடையின்மேல் அரச மரம், வில்வ மரம் என்பனவற்றுள் ஒன்றை வைத்தல் ஒருமுறை. சிவலிங்கத்தை வைத்தல் மற்றொருமுறை. குகை கிழக்குநோக்கியேனும், வடக்கு நோக்கி யேனும் இருக்குமாறு அமைத்தல் வேண்டும். (எனவே திருமேனி யையும் அவ்வாறு இருத்துதல் வேண்டும் என்பது விளங்கும்.)

குகையின் நான்காம் அடுக்கின்மேல் அதனை மூடுவதாகிய மேற்கட்டி நான்கு பக்கங்களுடன் வானில் உயர்ந்து செல்வ தாகிய ஒன்றும்கூட ஐந்து கூறுய்ப் புதுமையாய்த் தோன்ற, அதனை நிலையாக நிற்கின்ற நான்காம் அடுக்கின்மேல் நேராகக் கவிழ்ந்திருக்கும்படி அமைத்தல் வேண்டும்.

இவையெல்லாம் செய்து முடித்தபின் திருக்குடமுழுக்கு முத லிய வழிபாடுகளை முறையாகச் செய்தல் வேண்டும். (எனவே நித்திய நைமித்திகங்களை நடத்துதலும் சொல்லப்பட்டதாம்.)

திருமூலர் இங்ஙனம் பலவும் தோன்ற விரித்துரைத்த இவற் ருல் சிவஞானிகளது திருமேனி யடக்கக் குகை சிவாலயம் போலவே விளங்குதல் அறிந்துகொள்ளப்படும்.

“ துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை எண்ணிக்கொண் டற்று ”

எனத் திருவள்ளுவர், அளவிறந்த பெருமை யுடையவராகக் குறித்த நீத்தாரது திருமேனியை உட்கொண்டு விளங்கும் நிலை யங்கள் நீத்தார் நிலையங்களாய் மட்டும் இல்லாமல், குருமூர்த்த ஆலயங்களாகவும் விளங்கி ஞான ஒளியைத் தந்துகொண்டிருக் கின்றன. சில இடங்களில் சிவலிங்க மூர்த்தமும் இவற்றில் காணப்படுவதால், நீத்தார் நிலைய வழிபாடு, குரு லிங்க சங்கமம் என்னும் மூன்றன் வழிபாடாகவும் அமைதலை உணர்ந்து மக்கள் பயன் கொள்வார்களாக.

# குருவருள்

## 2. கன்னிக்குப் பிள்ளைகள் ஐவர் *

பலவகைப் பிறப்புக்களையும் ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் ஈருகப் பிரித்து ஆறுவகையில் அடக்கினர் ஆன்ருேர் எல்லா வற்றிலும் மிகக் கீழ்ப்பட்ட 'ஓரறிவுயிர்' எனப்படுவன தாவரங் கள். எல்லாவற்றிலும் மேற்பட்ட 'ஆறறிவுயிர்' எனப்படுபவர் மக்கள். ஏனைய உயிர்கட்கில்லாத ஆருவது அறிவு எனப்படுவது எது? யாதொன்றையும் ஆராய்ந்து நல்லது தீயதை உணரும் பகுத்தறிவேயாகும்.

இந்தப் பகுத்தறிவு 'சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்' என்னும் புறப்பொருள்களாகிய ஐம்புலன்களில் 'எது நல்லது, எது தீயது' என்று பகுத்தறிவதாகாது. ஏனெனில், மனிதன் மட்டுந்தான் இதை உணர்கிருன் என்பதில்லை; எல்லா உயிர் களுந்தாம் இதை உணர்கின்றன. அஃதாவது, ஓரறிவுயிராகிய தாவரங்கள்கூட, 'நிழல் நம்முடைய வளர்ச்சிக்கு ஆகாதது' என்று தெரிந்து வெய்யிலைநோக்கியே வளர்வதைப் பார்க்கலாம். எல்லா உயிர்களுமே தங்களுக்குச் சுவையான உணவைத்தான் தேடி உண்கின்றன. சுவையில்லாத உணவு எதிரிலே கிடந்தா லும் அதை எடுப்பதில்லை. இன்னும் தனக்கு உணவாகக் கூடியது, அல்லது தனக்குப் பகையானதாகிய உயிரை எப்படி மறைந்திருந்து தாக்கி அழிக்கலாம் என்பதை நன்ருக அறிந்து அழிப்பதை ஒவ்வோர் உயிரிடத்தும் காண்கின்ருேம்.

"மடைத்தலையில் – ஓடுமீன் ஓட உறுமீன் வரும்அளவும்
வாடி யிருக்குமாம் கொக்கு"

என்றபடி தண்ணீருக்குள் இருக்கும் மீனைக் கரையிலிருந்து கொண்டே பிடிப்பதற்குக் கொக்கு எவ்வளவு தந்திரம் உடையதாய் இருக்கின்றது! இவைகளையெல்லாம் நம் முன் ஞேர்கள் அறியாமலா இருந்தார்கள்? நன்ருக அறிந் திருந்தும் அவைகளை, 'ஆறறிவு உடைய உயிர்கள்' என்று அவர்கள் கூருமையால், 'ஆருவது அறிவு' எனப்படுவது, நல்ல உணவைத் தெரிந்து உண்பது முதலாக ஐம்புலன்களை நல்ல வகையில் அறிந்து அனுபவிப்பது அன்று என்பது தெரிகின்றது.

---

* 10—8—71 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

இவைகள் ஆறுவது அறிவு அல்லவாயின், மற்று எது ஆறுவது அறிவு? தான் நினைக்கின்ற அல்லது செய்கின்ற செயல்கள் உண்மையிலே நல்லனவா, தீயனவா என்று அறிந்து அவைகளில் தீயனவற்றை விலக்கி நல்லனவற்றை மேற்கொள்ளு தலே ஆறுவது அறிவாகும். இந்த அறிவுதான், மனிதன் தவிர மற்ற உயிர்களிடம் இல்லை. எனவே, மனிதர்களிடத்திலும் இந்த அறிவு இல்லை என்றால், அவர்களை மனிதர் என்று அறிவுடையோர் கருதுவதில்லை.

இந்த ஆறுவது அறிவு வெளிப்பொருள்களை உணர்வது ஆகாமல், அவற்றின் தன்மைகளை உள்ளத்துள்ளே வைத்து ஆராய்ந்து உணர்கின்ற உணர்வாதல் அறியத்தக்கது.

வெளிப்பொருள்களாகிய ஐம்புலன்களை அறிவதற்கு அமைந்த கருவிகளே, 'மெய், வாய், கண், மூக்கு, செவி' என்னும் ஐம்பொறிகள். அவற்றின் வழியே ஒடி ஊறு, சுவை ஒளி, நாற்றம், ஓசை என்னும் புலன்களை அறியும் அறிவு, புலன் அறிவாகிய புறப்பொருள் அறிவேயாகும். அந்த அறிவை 'முகக் கண்' என்றும் அவற்றை அறிவதோடு, நில்லாமல், அவற்றின் தன்மையையும் உள்ளத்துள் வைத்து ஆராய்வதை 'அகக் கண்' என்றும் சொல்வார்கள். அஃதாவது, பொருள்களை அறிவது மட்டுமல்லாமல், அவற்றின் தன்மைகளையும் நன்கறி வதே 'அகக் கண்' ஆகின்றது. ஆகவே, இந்த அகக்கண் உடையவரே 'அறிவுடையோர்' எனப்படுவர். இந்த அகக்கண் இல்லாமல், முகக்கண் மட்டுமே உடையவர்கள் அறிவிருந்தும் இல்லாதவரேயாவர். இவர்களை,

"முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்"

என்று சிறிது கடுமையாகவே கூறுகின்றார் திருமூலர். 'ஆனந்தம்' - இன்பம். இதற்கு எதிரானது துக்கம் அல்லது துன்பம் இன்பத்தைத்தான் எல்லா உயிர்களும் விரும்புகின்றன. ஆனால், அந்த ஆனந்தம் அகக்கண் இல்லாதவர்களுக்குக் கிடைப்பதில்லை. ஆகவே அகக்கண் இல்லாதவர்கள் தங்கள் முகக் கண்ணினாலேயே ஆனந்தத்தைப் பெற முயல்கிறார்கள். முடிவில் அது அவர்கள் விருப்பத்திற்கு மாறாகத் துக்க சகாரத்தில் - துயர்க் கடலில் கொண்டுபோய் விழ்த்துவதா கின்றது. இது பற்றியே திருமூலர் அவர்களை 'மூடர்காள்' என்று சிறிது வன்மையாகவே கூறினார். இந்தக் கருத்தையே

தான் திருவள்ளுவரும் கூறியுள்ளார். ஆனால், அவர் மிகவும் மென்மையாகக் கூறுகின்றார்.

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு"

என்பது அக்குறள். "மெய்ப்பொருள் காண்பது அறிவு" எனவே, 'அதனைக் காணாதது அறிவன்று' என்பது, தானே விளங்கிற்று. அஃதாவது கண்டபொருளை அதன் பெற்றியறியாமல் கண்டவாறே காண்பது அறிவன்று என்பதாம். எனவே மெய்ப்பொருளை அறியும் ஆற்றல் இல்லாதவரை, 'அறிவில்லாதவர்' என்றுதான் அவரும் கூறினார். ஆனால், அதை மிகவும் மறைமுகமாகக் கூறியுள்ளார். இதனால், 'மக்கட் பிறப்பின் பயன், யாதொரு பொருளையும் கண்டவாறே உணராது, அதனது உட்கூறுகளை - உண்மையை ஆராய்ந்து உணரப்பெறுவதே' என்பது நன்கு விளங்குகின்றது. இதற்குத் துணைசெய்வன மெய்ந்நூல்கள் - தத்துவ சாத்திரங்கள்.

தத்துவங்களில் எளியனவாக முன்னிற்பவை பஞ்சபூதங்கள். அதனால் எல்லா நூல்களும் அவற்றைப் பரவலாக எடுத்துக் கூறும். அக்கூற்றுக்கள் தத்துவக் குறிப்பேயாகும்.

தொல்காப்பியர்,

"நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
கலந்த மயக்கம் உலகம் ஆதலின்"

என்று மரபியலுட் கூறினார்.

திருவள்ளுவர்,

"சுவையொளி ஊறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு"

என்று நீத்தார் பெருமையுட் கூறினார். திருமுறைகளில் பஞ்சபூதங்களின் குறிப்புப் பெரும்பான்மையாகச் சொல்லப்படுதல் தெளிவு. இவையெல்லாம் மக்கட்குத் தத்துவ உணர்வு இன்றியமையாதது என்னும் கருத்துடையனவேயாம்.

இந்தப் பஞ்சபூத ஆராய்ச்சியைத் திருமூலர் தமது திருமந்திரத்தில் ஓரிடத்தில் மிகவும் நகைச் சுவைபடக் கூறுகின்றார். நகைச் சுவையாகக் கூறினும் அதில் பஞ்சபூதங்களைப் பற்றிய

சைவசித்தாந்தத் தனிச் சிறப்பு உண்மை பொதிந்திருக்கக் கூறுகின்றார்.

'கன்னிகை (மணம் ஆகாத பெண்) ஒருத்தி; அவளுக்கு ஐந்து பிள்ளைகள் உள்ளனர்; ஐந்து பேரும் ஐந்து தலைவர்க்குப் பிறந்தவர்; அந்தத் தலைவர்களும் அதிசயமான தலைவர்கள். அவ்வாறு அவள் ஐந்து பிள்ளைகளைப் பெற்றும் கன்னிகையாகத் தான் இருக்கின்றாள்' என்கிறார்.

"முன்னிக்கு ஒருமகன்; மூர்த்திக்கு இருவர்;
வன்னிக்கு மூவர்; வதுவைக்கு நால்வர்;
கன்னிக்குப் பிள்ளைகள் ஐவர்; முன்னாளில்லை
கன்னியைக் கன்னியே காதலித் தானே.

கன்னி - மாயை. முன்னி - தொழில் செய்ய நினைப்பவன் அல்லது முதலில் இருப்பவன். சதாசிவன்; 'முனி' (முனிவன்) என்பது நகைச்சுவை தோன்றக் கூறிய நயம். ஒருமகன் - ஆகாயம். பஞ்ச பூதங்களில் ஆகாயத்திற்கு அதிதெய்வம் சதாசிவன். மூர்த்தி - உருவத் திருமேனி உடையவன்; மகேசுவரன். 'நல்ல அழகன்' என்பது நயம். முன்னியால் ஒரு பிள்ளை உடையவளாகிய கன்னி மூர்த்தியால் இரண்டு பிள்ளைகளை உடையவளாயினாள். இரண்டாவது பிள்ளை வாயு; இதற்கு அதிதெய்வம் மகேசுரன். பின்பு மூன்றாமவன் வன்னி - நெருப்புப்போன்றவன்; உருத்திரன். 'கடுமையானவன்' என்பது நயம். இவனால் மூன்றாவது பிள்ளையை அவள் உடையவளாயினாள். அஃது தேயு. (அக்கினி.) இதற்கு அதிதெய்வம் உருத்திரன். நான்காமவன் வதுவை-திருமணம் செய்துகொண்டு நல்லவகையில் இல்லறம் நடத்து பவன்; 'இலக்குமியோடு இருப்பவன்' என்பது உண்மைப் பொருள். அவனால் மேற்சொன்ன கன்னிகை நான்காவது மகனைப்பெற்று நான்கு பிள்ளைகளை உடையவளாயினாள். அம்மகனாவான், அப்பு. (நீர்.) இதற்கு அதிதெய்வம் திருமால். முன் ஆள் இல்லை - அதற்குப் பின் அவள் எதிரில் ஒருவரும் வரவில்லை. ஆகவே, அவளை ஒரு பிரமசாரியே காதலித்தான். கன்னித்தன்மையுடைமையால் பிரமசாரியையும் இங்கு 'கன்னி' என்றார். 'பிரமன்' என்ற பெயர் பற்றியும், எப்பொழுதும் வேதம் ஓதுதல் பற்றியும் பிரம தேவனை 'பிரமசாரி' என்றார். 'அவன் காதலித்தான்' எனவே, 'அவனால் அந்தக் கன்னிகை ஐந்தாவது மகனைப்பெற்றாள்' என்பது விளங்குகின்றது. ஆகவே, "கன்னிக்குப் பிள்ளைகள் (மொத்தம்) ஐவர்" என்றார்.

ஐந்தாவதாகச் சொல்லப்பட்ட மகன், பிருதிவி - மண்; இதற்கு அதிதெய்வம் பிரமதேவன்.

பஞ்ச பூதங்கட்கு அதிதேவர்களை இவ்வாறு கூறுவது சைவ சித்தாந்தமே, இப்படி அதிதேவர்களைச் சொல்வதற்குக்காரணம், மாயை சடம்; அது, தானே உலகத்தைத் தோற்றுவியாது; இறைவன் தோற்றுவிக்கவே தோற்றும் என்பதற்குத்தான். இதுவும் சைவசித்தாந்தத்திற் சொல்லப்படுவதே. இன்னும் உலகத்தைச் செயற்படுத்தற் பொருட்டு இறைவன், சதாசிவன், மகேசுரன், உருத்திரன், மால், அயன் எனப் பஞ்ச கர்த்தாக்களாய் நிற்பன் என்பதும் சைவ சித்தாந்தமே. மேலும் நிவிர்த்தியாதி பஞ்ச கலைகளின் நுட்பமும் இதில் அடங்கியுள்ளன.

இத்துணை அரிய நுட்பங்களை யெல்லாம் நகைச்சுவையாகத் தோற்றுவித்து. பொருள்களை முகத்திற் கண்கொண்டுமட்டும் கண்டு நிறுத்திவிடாமல், அகத்திற் கண்கொண்டும் கண்டு ஆனந்தம் அடையத் தூண்டுகிறார் திருமூலர். அவர் அருளாணையின்வழி நின்று உலகம் அகத்திற்கண் கொண்டு கண்டு ஆனந்தம் அடைவதாக.

---

## பொன்மொழிகள்

பற்று நீங்கவேண்டுமானால் பற்றற்றான் பற்றினைத்தான் பற்ற வேண்டும். அவன்பணிசெய்ய வேண்டும்; அவனை எந்நாளும் நினைக்கவேண்டும்; மனக்கவலை நீக்கும் அவன் மலரடி; பாசமான களையும் அவன் பாததாமரை : தனக்குவமை யில்லாத அத்தண்ணருளாளனின் பேரருள் வரம் எய்தலாம்.

* * * *

'உப்பிட்டவரை உள்ளளவும் நினை' என்கிறது பாட்டி பழமொழி. அப்படியிருக்க நம்முடைய காலத்துக்கு - கருத்துக்கு ஏற்றாற்போல் கண் முதலிய இந்திரியங்களுக்கு இன்பத்தை அளந்து இறுதி வரையில் கொடுத்துக் கொண்டே யிருக்கின்ற உபகாரத்தை - உபகாரியை மறக்கலாமோ? உலக இன்பங்களை அனுபவிக்கக் கண்ணுக்குப் பார்வையையும், காதுக்குக் கேட்கும் சக்தியையும், உடம்புக்குத் தன்னளவில் வியாபகமாகிய ஸ்பரிச சக்தியையும் தந்து காக்கின்ற உபகாரியை மறக்கலாமோ?

— ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி.

# குருவருள்

## 3. அருள் மரபு *

உயிர்களின் பொருட்டாகவே உலகத்தைப் படைத்த இறைவன், உயிர்களை அவ்வுலகத்தில் மரபு வழியாகவே வளர்க்கின்றான். அம்முறையே வித்தும் விளைவுமாகத் தொடர்ந்து வருகின்றது. அஃதாவது நெல் விதைத்தால் நெல்லாகவும் எள் விதைத்தால் எள்ளாகவும், பயறு விதைத்தால் பயறாகவும் விளைவுகள் உண்டாகின்றனவே யன்றி, ஒன்று விதைத்தால் மற்றொன்றாக விளைவு உண்டாவதில்லை. ஓரறிவுயிராகிய தாவரங்களில் மட்டுமன்று; வேறு எவ்வகையான உயிர்களிடத்தும் இம்முறையே காணப்படுகின்றது. அஃதாவது ஓர் இன உயிரால் அவ்வினத்து உயிரே பெருகி வருகின்றனவன்றி, வேறோர் இன உயிர் பெருகுவதில்லை. இவ்வாறு ஒவ்வோர் இனமும் நிலைபெற்று இருப்பதால் உயிர்கள் தம் வினைக்கீடாகப் புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப் பல் விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகி இவ்வாறு மாறி மாறிப் பிறந்து, பக்குவம் பெற்று வருகின்றன. இம்முறையைத் திருவள்ளுவர், “வானின் றுலகம் வழங்கி வருதலால்” என்னும் குறளில், “வழங்கிவருதல்” எனக்குறித்தார்.

இனி, ‘புல், பூடு, மரம் முதலியவைகளே வேறு இனமாக உருமாற மாறப் புதுப்புது இனங்கள் தோன்றுகின்றன’ என்பர் இக்காலத்தார். அத்தகைய இனமாற்றங்கள் எளிதில், அடுத்தடுத்து யாவரும் அறிய நிகழ்வன அல்ல. ஆகவே, அவைகளை, ‘உயிர்களின் தேவை கருதி இறைவன் படைக்கும் புதுப் படைப்புக்கள்’ என்றே கூறுதல் வேண்டும். எவ்வாறாயினும், இறைவன் உயிர்களை வளர்ப்பது மரபு வழியே என்பது புலனாகின்றது.

உயிர்கள் இவ்வாறு புல்லாகிப் பூடாய்ப் பல்வேறு வகையில் பிறந்து வருகின்ற வளர்ச்சிகளை ‘உடல் வளர்ச்சி’ என்று கூறலாமேயன்றி, ‘உயிர்வளர்ச்சி’ அல்லது ‘ஆன்மிகவளர்ச்சி’ எனக் கூறுதற்கில்லை. ஏனெனில், பல்வேறு வகையான பிறப்புக்களாலும் வளர்வது புலன் உணர்வாகிய புற உணர்வேயன்றி, அக உணர்வு அன்று. அஃது ‘ஓரறிவுயிர், ஈரறிவுயிர்’ என்பனபோலப் புலன்களின்மேல் வைத்துக் கூறுகின்ற அந்த ஒன்றினாலேயே நன்கறியப்படும்.

---

* 10—9—71 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

'ஐம்புல உணர்வுக்கு மேலாக, ஆறுவது உணர்வு ஒன்று உள்ளது' என்றும், 'அதுவே, மன உணர்வு, அல்லது பகுத்துணர்வு' என்றும், 'அது மக்கட் பிறப்பு ஒன்றிற்குமட்டுமே உள்ளது' என்றும் முன்னோர் கூறினர். அவைகளில் 'பகுத்துணர்வு' என்ற பெயர் இக்காலத்தில் மிகுதியாக எடுத்துச் சொல்லப்படுகின்றது. 'பகுத்துணர்வு என்பது யாது' என்ற வினாவிற்கு, 'நல்லது இது, தீயது இது எனப் பகுத்து அறிவது' என்று விடை கூறுவார்கள். 'இந்த நன்மையும், தீமையும் எவற்றில் உள்ளன' என்று பார்க்குமிடத்து, 'முன்னே கூறிய ஐம்புலன்களில் உள்ளன' என்று கருதிவிடுதல் கூடாது; ஏனெனில், ஐம்புலன்களில் உள்ள நன்மை தீமைகளை அறிந்து, தீயவற்றை ஒழித்து, நல்லவற்றை நுகரும் நன்மை மக்களிடத்தில் மட்டும் இல்லை; எல்லா உயிரினத்திற்கும் உள்ளது.

"சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்ப தறிவு"

என்னும் திருக்குறளில் திருவள்ளுவர் 'தீது, நன்று' எனக் குறித்தவை, 'ஐம்புலன்களில் சுவையில்லாதது, சுவை உள்ளது' என்பவற்றையே என்று எவரும் கூறத் துணியார். ஆகவே, 'நன்று, தீது' என்பன அறத்தைத் தருவதும், பாவத்தைத் தருவதும் ஆகிய அவற்றையே குறித்தல் வெளிப்படை. ஆகவே, 'பகுத்துணர்வு' என்பது 'அறம் இது, மறம் இது' எனப் பகுத்துணரும் அற உணர்வே என்பது தெளிவு. இதனை வட மொழியில் 'விவேகம்' என்பர். இந்தப் பகுத்துணர்வுதான் மக்களிடத்தில் தவிர, ஏனைய உயிர்களிடத்தில் இல்லை. 'மனிதன்' என்பதற்கு 'மனம் உடையவன்' எனப்பொருள் கூறப்படுவதால், 'மன உணர்வு' என்பதும், இந்த அறவுணர்வேயாகும். இதனை இக்காலத்தில் 'மனச்சாட்சி' என்கின்றனர். திருவள்ளுவரும்,

"தன்நெஞ் சறிவது பொய்யற்க; பொய்த்தபின்
தன்நெஞ்சே தன்னைச் சுடும்"

எனக் கூறினர்.

'நல்வழியில் நடப்பது, நடவாதது' என்பன ஒரு பக்கம் இருப்பினும், முதலில், 'நல்லது இது, தீயது இது' என்று அறிந்துகொள்ளுதல் வேண்டும். அந்த அறிவுதான் மக்கட்கே உரியதாகச் சொல்லப்படுகின்ற ஆறுவது அறிவு. 'அஃது ஒருவனுக்கு இருந்தால், அவன் செயலில் தவறுடையன் ஆன பொழுது அதுவே அவனை வருத்தும்' என்பதைத்தான்

திருவள்ளுவர் "தன் நெஞ்சே தன்னைச் சுடும்" என்று கூறினர். எனவே, இந்த அறவுணர்வின் வளர்ச்சியே உயிர் வளர்ச்சி அல்லது ஆன்மிக வளர்ச்சியாகும்.

அற உணர்வு, பொதுமையில் பிறப்பிலே அமைவதாயினும், அது சிறப்பாக உருப்பெற்றுப் பயன்தருவது கல்வி கேள்வி களாலேயே ஆம். அஃதாவது, 'நல்லது இது, தீயது இது' என்று உணரும் ஆற்றல் மக்களுக்குப் பிறப்பிலே உள்ளது. ஆயினும், எது நல்லது? எது தீயது? என்று ஆராய்ந்து, 'இதுவே நல்லது, ஏனையது தீயது' என்று முடிவு செய்வது கல்வி கேள்விகளினலேயன்றி இயலாது. இது பற்றியே திருவள்ளுவர், 'அறிவுடைமை' என்ற அதிகாரத்திற்குமுன், 'கல்வி, கேள்வி' என்னும் அதிகாரங்களை வைத்தார். மேலும், 'கல்லாமை' என்ற அதிகாரத்தில்,

"விலங்கொடு மக்கள் அனையர்; இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர்"

என்றும்,

"கல்லாதான் ஒட்பம் கழியநன் றாயினும்
கொள்ளார் அறிவுடை யார்"

என்றும் கூறினர். அஃதாவது, 'கல்வி கேள்விகள் இல்லாமல் ஒருவன் அறவுணர்வு பெற இயலாது; அறவுணர்வு இல்லையா யின், அவனுக்கும், விலங்கிற்கும் வேற்றுமை இல்லை' என்றார்.

அறஉணர்வைத் தருகின்ற நூல்களை அவர், "இலங்குநூல்" எனச் சிறப்பித்திருத்தல் கூர்ந்து நோக்கத்தக்கது. அஃதாவது, 'இருளை நீக்கி ஒளியைத் தருகின்ற விளக்குப்போல அமைந்த நூல்' என்கின்றார். 'இருள், ஒளி' என்பன அறியாமையும், அறிவுமேயாகையால், 'இலங்கு நூல்' என்பதற்கு, 'அறியாமை யாகிய குற்றம் இல்லாத நூல்' என்பது பொருளாகின்றது. இத்தகைய நூலை, அறியாமையின்றி அறிவு வடிவான இறை வனே, தான் நேராகவோ, தன் அருள்வழி நிற்கும் அருளாளர் வாயிலாகவோ உலகிற்குத் தருகின்றான். அந்நூல்கள் 'முதல் நூல்' எனப்படும். அவற்றின்பின் வருகின்ற நூல்கள் பலவும், வழி நூல் சார்பு நூல்களாய் மரபு மாறாது வருவன.

"மரபுநிலை திரியின் பிறிது பிறிதாகும்"

என்பதும்,

" மரபுநிலை திரியா மாட்சிய வாகி
உரைபடு நூல்தாம் இருவகை இயல "

என்பதும் தொல்காப்பிய நூற்பாக்கள். இவற்றால், முன்னே கூறிய உடல் வளர்ச்சிக்கு இனமுறை மரபு இருத்தல்போல, உயிர் வளர்ச்சியாகிய ஆன்மிகத்துறை வளர்ச்சிக்கு நூன்முறை மரபு இருத்தல் விளங்கும்.

நூல்கள் பலவும், 'உலகியல்நூல், அருளியல் நூல்' என்று இருவகையினவாம். உலகியல் நூல்கள் அற உணர்வை மட்டுமே வளர்ப்பன. இவற்றின் பயன் இம்மை, மறுமைகளில் ஒக்கல் மக்களொடு ஒருங்கு இயைந்து இனிதுவாழும் வாழ்வைப் பெறுதல்.

அருளியல் நூல்கள் அறவுணர்வோடு இறையுணர்வையும் வளர்க்கும். இவற்றின் பயன் மெய்யுணர்ந்து, ஆரா இயற்கை அவா நீங்கி, அவ் வவாவால்வரும் உறவு-பகை, விருப்பு-வெறுப்பு முதலிய அல்லல்கள் யாவும் அற்று, ஆண்டவனது அருள் இன்பத்தில் மூழ்கியிருத்தல். இந்த அருளியல் வளர்ச்சியே உண்மை ஆன்மிக வளர்ச்சியாகும். அற உணர்விற்கே முதல் நூலின் வழி வரும் மரபு வேண்டும் எனின், அதனினும் சிறந்த அருளியலுக்கு அத்தகைய மரபு இன்றியமையாதது என்பது சொல்லத் தேவையில்லையன்றோ!

உலகியற்பயன் பொருட்டு நூன் மரபைத் தருகின்ற இறைவன், அருளியலின் பொருட்டு நூன்மரபேயன்றி உபதேச மரபினையும் வைத்தருளுகின்றான். அந்த உபதேசமரபே 'அருள் மரபு' எனப்படும். தமிழ்நாட்டில் நந்திமரபு, ஸ்கந்த மரபு முதலிய அருள் மரபுகள் சில இருந்து, உண்மை உபதேசத்தோடு, உண்மை நூல்களையும் அவ்வப்பொழுது தந்து வந்துள்ளன.

திருக்கயிலையில் சிகண்ட பரமசிவன்பால் அருளுபதேசம் பெற்றவர்களுள் நந்தீதேவர் ஒருவர். அவர்பால் உபதேசம் பெற்றவர்கள் எண்மர். அவர்களில் நாம் இன்று சிறப்பாக அறிவது இருவரை. அவர்கள் சனற்குமார முனிவரும், திருமூல தேவரும் ஆவர். இவர்களில் திருமூல தேவரது இயற்பெயர் தெரிந்திலது. இவர் 'திருமூலர்' எனப் பெயர்பெற்றது, தமது உடம்பை விடுத்து இறந்துபட்ட 'மூலன்' என்னும் ஆயன் உடம்பில், பசுக்களின் துன்பம் நீங்கவேண்டிப் புகுந்து எழுந்த தனாலேயாம். இவர் தமிழ்மொழியில் அருளிச்செய்த சிறந்த

அருளியல் நூல் திருமந்திரம். இதனுடன் இவர் ஏழு மாணவர்கட்கு அருள் உபதேசமும் செய்தருளினர். அவர்கள் வழியாக நந்திமரபில் திருமூலரது கிளைமரபு தமிழ்நாட்டில் நிலவியது. இவைகளையெல்லாம் திருமூலரே தமது திருமந்திரத்தில் கூறியுள்ளார்.

" நந்தி அருள்பெற்ற நாதரை நாடிடின்
நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்ரமர்
என்றிவர் என்னேடு எண்மரு மாமே "

" மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்கன்,
இந்திரன், சோமன், பிரமன், உருத்திரன்,
கந்துருக் காலாங்கி கஞ்ச மலையனேடு
இந்த எழுவரும் என்வழி யாமே. "

இத் திருமந்திரங்களைக் காண்க.

திருமூலர் அருளிய எண்மருள் " நந்திகள் நால்வர் " என்றது, 'சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர்' என்பவர்களை. அவர்களுள் சனற்குமாரர் வழியேவந்து விளங்குவது மெய்கண்ட சந்தானம். இதனை,

" போதமிகுத் தோர் தொகுத்த பேதமைக்கே
பொருந்தினேர் இவர்க்கன்றிக் கதிப்பாற்செல்ல
ஏதுநெறி எனும்அவர்கட் கறிய முன்னாள்
இறைவன் அருள் நந்திதனக் கியம்ப, நந்தி
கோதில்அருட் சனற்குமா ரர்க்குக் கூறக்
குவலயத்தின் அவ்வழிஎம் குருநாதன் கொண்டு."

என்ற சிவஞான சித்தியினாலும்,

" தேவர்பிரான் வளர்கயிலை காவல்பூண்ட
திருநந்தி, அவர்கணத்து ஓர் செல்வர், பாரில்
பாவியசத் தியஞான தரிசனிகள், அடிசேர்
பரஞ்சோதி மாமுனிகள், பதியா வெண்ணெ
மேவியசீர் மெய்கண்ட திறலார், மாரு
விரவுபுகழ் அருள்நந்தி விறலார், செல்வத்
தாவில் அருள் மறைஞான சம்பந்தர் இவர் இச்
சந்தானத்து எமை ஆளும் தன்மை யோரே "

என்னும் சிவப்பிரகாசத்தாலும் நன்கு அறியப்படும்.

சிவப்பிரகாசத்தை அருளிச் செய்த உமாபதி தேவர், மேற்குறித்த மறைஞான சம்பந்தரே தம் ஞானகுரு என்பதையும் அந்நூலிலே தெளிவாகக் கூறியுள்ளார். அவருக்குப்பின் மெய்கண்ட சந்தானம் திருவாவடுதுறை ஆதீனமாகவும், தருமபுர ஆதீனமாகவும் இன்றுகாறும் நின்று நிலவி வருகின்றது. சிலாத முனிவர்தம் புதல்வராயினமை பற்றி, நந்திதேவருக்கு 'சயிலாதி' என்ற பெயர் உளதாயிற்று. அதனுல் நந்தி மரபாகிய மெய்கண்ட சந்தானம் 'சயிலாதி மரபு' எனப்பெறுகின்றது. ஸ்கந்த பரம்பரையாக விளங்கியது சூரியனார் கோயில் ஆதீனம். மெய்கண்ட தேவர் அருளிச் செய்த சிவஞான போதம், அருள்நந்தி தேவர் அருளிச் செய்த சிவஞான சித்தி, உமாபதி தேவர் அருளிச்செய்த சிவப்பிரகாசம் முதலிய எட்டு நூல்கள் ஆகிய சித்தாந்த சாத்திரங்களும், பின்னர் ஆதீனங்களில் தோன்றிய பண்டார சாத்திரங்களும் சயிலாதி மரபின் அருளியல் நூல்களாகும். இவை போன்ற நூல்களின் வாயிலாகவும், உபதேச வாயிலாகவும், அருள் மரபுகள் ஆன்மிக வளர்ச்சியைத் தந்து வருகின்றன. ஆகவே, ஆன்மிக வளர்ச்சியை விரும்புவோர் இத்தகைய அருள் மரபின் வழிநின்று அருளியலை உணர்ந்து பயன் பெறுவார்களாக.



---

## பொன்மொழிகள்

திருவருள் ஆற்றல் உலகத்தை வாழ்விக்கிறது. உலகம் இயங்குவது திருவருளால். அருளின்றேல் யாதொரு பொருளும் அசைவதில்லை. அருளிருந்தால் அணுவளவான பொருளும் அண்ட சராசரங்களாய்விடும்.

* * * *

அநாதியே ஆற்றுப் பிரவாகம் போல இடையருது வந்து கொண்டிருக்கும் பிறப்பு இறப்புத் துன்பத்தைப் போக்கி நிரதிசயானந்த இன்பத்தை அளிப்பது வீடு. ஆதலால் ஞானிகள் அதனையே விரும்புகிருர்கள். சிற்றின்பம் மது மயக்கம் போல்வது பேரின்பம் கடவுளுணர்ச்சியால் எய்துவது; அதற்கு ஒப்பே இல்லை.

— ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி.

# குருவருள்

## 4. இறைநிலை *

உயிர்கள் உலகக்தில் தோன்றி வளர்ந்து பயன் அடைதற் பொருட்டு 'அண்டசம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசம்' என்னும் நால்வகைத் தோற்றத்தில், வானவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம்' என்னும் எழுவகைப் பிறப்பு வகைகளையும், அவற்றுள்ளும் பல்வேறு வகைப்பட்ட எண்பத்துநான்குநூறுயிர யோனி பேதங்களையும் அமைத்துள்ள இறைவன், பக்குவம் பெற்ற உயிர்கள் மெய்யுணர்வு பெற்றுத் தன்னை அடைந்து இன்புறுதற்பொருட்டுப் பலஉபதேச பரம்பரைகளையும் உலகில் நிலவச் செய்கின்றான். அவைகளில் 'சயிலாதி மரபு' என்னும் நந்தி பரம்பரை ஒன்று. அஃது எட்டுக் கிளைகளாய்ப் பிரிந்து நிலவுலகத்தில் ஞானத்தை வளர்த்தன என்பதைத் திருமூலரது திருமந்திரத்தால் அறிகின்றோம். அவ் எட்டுக் கிளைகளுள் சனற்குமார பரம்பரையே இன்று மெய்கண்ட சந்தானங்களாய் விளங்குகின்றது என்பதைச் சிவஞான சித்தி, சிவப்பிரகாசம் முதலிய சித்தாந்த நூல்கள் வெளியிடுகின்றன. நந்திபரம்பரையில் உலகம் உய்யத்தோன்றிய அருள் வெளிப்பாடாய நூல்களுள் காலத்தால் மிக முற்பட்டது திருமூலர் அருளிச்செய்த திருமந்திரமே. அதில் திருமூலர் தம்மை இறைவன் படைத்தது தனது பெருமைகள் பலவற்றையும் தமிழ் மொழியால் இனிது விளங்கப் பாடுதற்கு என்றே அருளிச்செய்கின்றார்.

பின்னை நின்றென்னே பிறவி பெறுவது,
முன்னை நன்றாக முயல்தவம் செய்திலர் !
என்னைநன்றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன்றாகத் தமிழ்ச்செய்யு மாறே.

இறைவன் திருவருள் தமக்கு அளித்த அளவிலாப் பேரின்பத்தைப் பலரும் பெற்று மகிழ்தற் பொருட்டே திருமூலர் தமது தமிழ் ஆகமத்தைச் செய்தமையை,

" நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம் "

என்பதனால் விளக்கினார். அவர் பெற்ற இன்பத்தை நாமும் பெறுதற்கு இறைவனது பெருமையை முதற்கண் கேள்வியளவி

* 10—10—71 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

லாவது கேட்டுணர்தல் வேண்டும் என்னும் கருத்தால் முதலிலே இறை நிலையை அவர் பலவாறு வலியுறுத்தி விளக்கினர்.

உலகத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களுள் ஒவ்வொன்றையே செய்து 'மும்மூர்த்திகள்' எனப் பெயர் பெற்ற மூவர்க்கும் மேலாய் நிற்பவன் இறைவன். மும்மூர்த்திகளில் தொழில் பற்றித் தகுதி வேறுபாடுகள் இருப்பினும் 'அதிகார மூர்த்திகள்' என்னும் வகையில் அம் மூவரும் ஒரு நிகரானவரே. அதனால், முத்தொழிற்கும் முதல்வனாய் அவற்றுள் ஒவ்வொன்றை ஒவ்வொருவரைக் கொண்டு செய்விக்கின்ற இறைவன் தன்னிகரில்லாத் தலைவனாவான்.

"முன்னை ஒப்பாயுள்ள மூவர்க்கும் மூத்தவன்;
தன்னைஒப் பாய்ஒன்றும் இல்லாத் தலைமகன்"

இவ்வாருதலின், இறைவன் எல்லாராலும் தான் வணங்கப் படுதலன்றித் தன்னால் வணங்கப்படுவார் ஒருவரையும் இலன்.

"என்னால் தொழப்படும் எம்இறை மற்றவன்
தன்னால் தொழப்படு வாரில்லை தானே."

'இறைவன் ஒருவனேயாயினும், அவன் அனைத்துப் பொருளுமாய் நிறைந்து நிற்கின்றான்' என்பதை,

"தானே இருநிலம் தாங்கிவிண் ணாய்நிற்கும்;
தானே சுடும்அங்கி ஞாயிறும் திங்களும்"

என்பது முதலியவற்றால் வெளியிட்டார். தாயினும் நல்லனாய்ப் புனலினும் (நீரிலும்) தண்ணியனாய் நிற்கின்ற இறைவன் அதே சமயத்தில், தவறிழைப்பார்க்குத் தீயினும் வெய்யனாய் (கடுமையானவனாய்) இருக்கின்றான் என்கின்றார்.

இறைவன் பிறப்பு இறப்பு இல்லாதவன்; அதுவேயன்றித் தன்னை அடைந்தவர்க்கும் பிறப்பும் இறப்பும் ஆகிய அப் பெருந் துன்பத்தைப் போக்கிப் பேரின்ப வீட்டில் இருத்தும் பேருளாளன்; தன்னைச் சார்ந்தவரை என்றும் கைவிடாதவன்; அதனால் அவனை வணங்கியே தேவர் பலரும் தம் தம் பதவியைப் பெற்றனர். குபேரன் பெருநிதிக்கிழவனானதும் அவனை வணங்கியே. அசுரர்களும் அவனை வணங்கி அழிவிலா வரமும், உலகை ஆளும் ஆட்சியும் பெற்றனர். மக்களுள்ளும் பலர் அவனை வணங்கிப் பல நன்மைகளை அடைந்துள்ளனர். அவனது

அருளைப் பெறுதற்கு அன்பு ஒன்றே வேண்டுவது. அவ்வன்பினால் மனம் உருகி அவனை வாழ்த்துகின்றவர்கட்கு அவன் அவர்கள் விரும்பும் வடிவில் எதிர்ப்பட்டுநின்று அருளுவான். இவ்வாறு அருமையில் எளிய ஆற்றலுடைய அருளாளனும் ஒருவன் உண்டோ என்று ஒருவரும் ஐயுறவேண்டுவதில்லை. ஆழாழி கரையின்றி நிற்றல் முதலிய உலகத்தின் நிலைகளை உற்று நோக்கின், அவனது வியத்தகு நிலையை உணரலாகும். ஆகவே, உலகம் எல்லாவற்றிற்கும் அப்பனாய், உண்ண உண்ணத் தெவிட்டாத அமுதமாய், வேண்டுவார்வேண்டுவதை ஈயும் ஒப்பற்ற வள்ளலாய், ஊழிகள் பல மாறிமாறிச் செல்லவும் தான் மாற்றம் இன்றி என்றும் ஒரு பெற்றியனாய் உள்ள இறைவனை உங்களால் இயன்ற அளவு எவ்வகையிலேனும் துதியுங்கள். துதித்தால், அவனது அருளைப்பெறுதல் திண்ணம் என்று திருமூலர் அறிவுறுத்தியருள்கின்ற அவ் அரிய உபதேசத்தினை உணர்ந்து அவனது அருளைப்பெறுதற்கு மக்கள் இவ் ஒரு திருமந்திரத்தையேனும் மனங்கொண்டு போற்றுவார்களாக.

அப்பனை, நந்தியை, ஆரா அமுதினை,
ஒப்பிலி வள்ளலை, ஊழி முதல்வனை,
எப்பரி சாயினும் ஏத்துமின்!; ஏத்தினால்,
அப்பரி சீசன் அருள்பெற லாமே.

---

## பொன்மொழிகள்

இறைவன் திருவருள் இல்லையானால் உலகம் இயங்காது. ஆண்டவனைப்பற்றிய எண்ணம் நம் ஒவ்வொருவர் உள்ளத்திலும் எழவேண்டும். நமக்குப் பெருங்கருணைத் தடங்கடலாகிய கடவுளிடத்திலே அன்புவேண்டும். அப்படி அன்போடு எழுந்த அருள் மொழிகளே இன்று தோத்திரமாக உள்ளன; பன்னிரு திருமுறையாக உள்ளன.

* * * *

கடவுள் துணைக்கொண்டு செய்யும் எந்தக் காரியமும் வெற்றிகரமாக - மங்களகரமாக முடியுமென்று நம்புகிறோம். இந்த நினைப்பு ஒன்றே நம்மை உலகத்திலே தன்னம்பிக்கையோடு வாழச்செய்கிறது.

— ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி.

# குருவருள்

## 5. அருள் நிலை

"அவனன்றி ஓரணுவும் அசையாது" என்பதை, 'பெரிய ஆப்தர் மொழி' என்கின்றார் தாயுமானவர். அவ்வாறு இறைவன் அணுவுக்கு அணுவாயும், மகத்துக்கு மகத்தாயும் இருந்து அஃதாவது மிகச் சிறிய பொருட்கும் மிகச்சிறிய பொருளாயும், மிகப்பெரிய பொருட்கும் மிகப்பெரிய பொருளாயும் இருந்து எல்லாவற்றையும் இயக்கி வருவது அவனது அளவில்லாத ஆற்றலாலே யாம். அவ்வாற்றலைத்தான் 'சத்தி' என்கின்றோம்.

சத்தியை அவனிடமிருந்து யாரும் பிரிக்கமுடியாது; அதுவும் எக்காரணத்தாலும் (அவனிடத்திலிருந்து) பிரிந்துபோக இயலாது. இதனால் சிவமும், சத்தியும் ஒன்றை ஒன்று பிரிந்திருத்தல் என்பது எக்காலத்திலும் இல்லை. பிரிந்திருக்கும் என்று எப்பொழுதாவது எக்காரணத்தாலாவது நாம் கருதுவோமானால், அது நம்மையே நாம் ஏமாற்றிக் கொள்வதாகத் தான் முடியும். ஏனெனில், 'சத்தி' என்பது பொருளினுடைய தன்மை! 'சிவம்' என்பது பொருள். பொருளினுடைய தன்மை பொருளைவிட்டுப் பிரிந்திருத்தல் எப்பொழுதேனும் உண்டோ? அஃதாவது 'சூடு' என்பது நெருப்பின் தன்மை, அது நெருப்பினின்றும் எப்பொழுதாவது பிரிந்திருத்தல் கூடுமோ? மணம் என்பது மலரினது தன்மை; அஃது எப்பொழுதாவது மலரினின்றும் பிரிந்திருக்குமோ? மற்றும் இன்னோரன்னவைபோலத்தான் சத்தி சிவத்தை விட்டுப் பிரிந்திருத்தல் ஒருகாலத்திலும் இல்லை.

சிவம், சத்தி இரண்டிற்கும் பிரிவு என்பதே இல்லாத பொழுது, (சத்தியை விட்டால் சிவம் என்ன செய்யும்? சிவத்தை விட்டால் சத்தி என்ன செய்யும்? என்ற கேள்வியே எழுவதற்கு இடம் இல்லை. ஆனால்) சத்தி சிவனை விட்டுத் தனியே சென்று அவதரித்ததாகவும், தவம் செய்ததாகவும். பின்பு சிவனை மணம் செய்து கொண்டதாகவும் புராணங்களில் பல இடங்களில் சொல்லப்படுகின்றனவே என்றால், அவையெல்லாம் ஒருவனோ அல்லது ஒருத்தியோ தானே சில வேளைகளில் ஆண்வேடம் பூண்டு ஆண்மகனாயும் சில வேளைகளில் பெண்வேடம் பூண்டு பெண்மகளாயும் நடிப்பதுபோன்ற அருள் நாடகங்களேயன்றி வேறில்லை. இதனை,

---

* 10—11—71 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

" ஒருவனே இராவணுதி பாவகம் உற்ருற் போல "

என்கின்றது சிவஞான சித்தி நூல். இது பற்றியே இவைகளை யெல்லாம், 'கூத்து' என்றும் 'திருவிளையாடல்' என்றும் பெரியோர்கள் கூறுகின்ருர்கள்.

பொருளும், அதன் தன்மையும் ஒன்றைவிட்டு ஒன்று இருப்ப தில்லை என்ருலும், பொருளின் தன்மை பொருளுக்கு உட் பட்டதே. அஃதாவது, 'சூடு' என்னும் தன்மை நெருப்பி னுள்ளேதான் அடங்கி நிற்கின்றது. 'மணம்' என்னும் தன்மை மலரினுள்ளேதான் அடங்கிநிற்கின்றது. இவைபோலத்தான் மக்களுடைய தன்மை அல்லது அவர்களுடைய ஆற்றலெல்லாம் மக்களிடத்திலேதான் அடங்கிக் கிடக்கின்றன. அந்த ஆற்றலை மக்கள் தாங்கள் விரும்பும்பொழுது விரும்பிய வகையில் பயன் படுத்திக் கொள்கின்ருர்கள். ஆகவே, யாவரிடத்தும், சத்தி ஆளப்படுவதாயும், சத்தியை உடையவர் ஆள்பவராயும் உள்ள நிலைமையே காணப்படுகின்றன. சிவம் சத்திகளிடத்தும் அதே நிலைமைதான் உள்ளது. அதனுல் ஆளப்படுவதாகிய சத்தி யைப் பெண்ணுகவும், ஆளுகின்ற சிவத்தை ஆணுகவும் உருவகம் செய்து, அவர்களுக்குள் நாயக நாயகி பாவம் - தலைவன் தலைவி யரது தன்மை - கூறுகின்றனர். நாயக நாயகி பாவம் சொல்லப் படுவதால் அனைத்துலகுக்கும் அவர்களே அப்பனும், அம்மையு மாய் அமைகின்றனர்.

நாயக நாயகி பாவமும், அப்பனும், அம்மையுமாம் தன்மை யும் சொல்லப்படுதலால், உலகத்தார் சிவம் சத்திகளை உலகில் காணப்படும் கணவன் மனைவியர்போல இருவராக நினைத்து அவர்களுக்குள் கோபம் அல்லது ஆசை முதலியவை தோன்றி அவற்ருல் விளையும் விளைவுகள் பலவும் உண்டாவதாகக் கருதுகின்றனர். உண்மையில் அவர்களுக்குள் அவை ஒரு சிறிதும் இல்லாமையால், அவையெல்லாம் மேற்சொல்லிய அருள் விளையாடல்களேயாகும்.

இவற்ருல் எல்லாம் நாம் இன்றியமையாது அறிந்துகொள்ள வேண்டுவது ஒன்று. ஆண் வடிவில் தோன்றுவது வேறு; பெண் வடிவில் தோன்றுவது வேறு; அஃதாவது, ஆண் வடி வில் தோன்றுவது சிவமேதான்; அதில் 'சத்தி' என்பதே இல்லை என்றே. பெண் வடிவில் தோன்றுவது சத்திதான்; அதில் 'சிவம்' என்பதே இல்லை என்றே கருதுதல் கூடாது. ஆண் வடிவிலும் சத்தி இருக்கவே செய்கிறது; இல்லை என்ருல்,

அதில் செயல் ஒன்றும் நிகழாது; பெண் வடிவில் தோன்றுவதி லும் சிவம் இருக்கவே செய்கிறது; இல்லை என்ருல் அதிலும் செயல் ஒன்றும் நிகழாது என்று இவ்வாறு உணர்தல் வேண்டும்.

உலகத்திலும், ஆடவர் அல்லது ஆண் பிறப்பான உயிர் களில் எல்லாம் சிவந்தான் உள்ளது; சத்தி இல்லை என்றும், பெண்டிர் அல்லது பெண் பிறப்பான உயிர்களிலெல்லாம் சத்தி தான் உள்ளது; சிவம் இல்லை என்றும் கருதுதல் தவருகும். எல்லா உயிர்களிலும், எல்லாப் பொருள்களிலும் சிவமும் சத்தியும் சேர்ந்தே நிற்கின்றன அன்றி, எதுவும் எங்கும் தனித்து நிற்ப தில்லை. ஆகவே, கடவுள் வடிவங்களிலும் ஆண் வடிவு, பெண் வடிவு இரண்டும் சிவம், சத்தி இரண்டிற்கும் பொதுவான வடி வங்களேயன்றி, ஆண் வடிவு சிவத்திற்கே உரியது; சத்திக்கு உரியதன்று என்பதும், பெண் வடிவு சத்திக்கே உரியது சிவத் திற்கு உரியதன்று என்பதும் இல்லை. ஆயினும், ‘ஆண் வடிவு சிவம்’ என்றும், ‘பெண் வடிவு சத்தி’ என்றும் சொல்வது ஒரு பொதுவான கருத்தேயன்றி, அதையே பெரிதும் வலியுறுத்தி எண்ணுதல் கூடாது. இதனைச் சிவஞான சித்தி நூல் பின் வருமாறு இனிது விளக்குகின்றது.

சத்திதான் நாதமாதி தானுகும்; சிவமும் அந்தச்
சத்திதா னுதி யாகும்; தரும்வடி வானவெல்லாம்
சத்தியும் சிவமு மாகும்; சத்திதான் சத்தனுக்கோர்
சத்தியாம்; சத்தன் வேண்டிற் றெல்லாமாம் சத்தி தானே.

இவ்வுண்மை சைவ சமயத்தில் நடைமுறையிலும் நன்கு விளக்கப்படுகின்றது. அஃதாவது, இறைவனை அம்மையும் அப்பனுமாக இரண்டு வடிவங்களில் பொதுவாக வைத்து வழி படினும், மாதொரு கூறன் - அர்த்தநாரீசன் என்னும் முறையில் ஒருபாதி அப்பனும், மற்ரெருபாதி அம்மையுமாக இருவரும் ஒரு வடிவில் தோன்றுவதையே சிறந்த வடிவமாகக் கொண்டு வழிபடுதல் சைவ சமயத்திலே உள்ளது. இது சிவமும், சத்தி யும் எங்கும், எக்காலத்திலும் வேறு வேருய்ப் பிரிந்து நிற்ப தில்லை என்ற உண்மையையே தெளிவுபடுத்துகின்றது.

இறைவனுக்கு முதன்மையாகச் சொல்லப்படும் சிறப்பு மூன்று. அவை, எல்லாவற்றையும் அறியும் பேரறிவும், எல்லா வற்றையும் செய்யவல்ல பேராற்றலும், எல்லா உயிர்களுக்கும் இரங்குகின்ற பேரருளுமாம். இந்த அறிவு, ஆற்றல் அருள் அனைத்தும் அவனது சத்தியே. அவனுக்குத் தனக்கென வேண்டுவது ஒன்றும் இல்லாமையால் அவன் அறிவதும்,

செய்வதுமாகிய எல்லாம் உயிர்கள்மேல் வைத்த கருணையாலே யாம். ஆகவே, அருளே, அவனது சத்தியாகின்றது; அருளே சத்தி என்பதை,

" அருள்உண்டாம் ஈசற் கதுசத்தி யன்றே;
அருளும் அவனன்றி யில்லை;—அருளின்
றரனன்றே யில்லை; அருட்கண்ணூர் கண்ணுக்
கிரவிபோல் நிற்கும் அரன் ஏய்ந்து "

என்று சிவஞான போதமும்,

" அருளது சத்தி யாகும் அரன்றனக் கருணை யின்றித்
தெருள்சிவன் இல்லை; அந்தச் சிவமின்றிச் சத்தி யில்லை;
மருளினை அருளால் வாட்டி மன்னுயிர்க் களிப்பன், கண்கட்
கிருளினை ஒளியா லோட்டும் இரவியைப் போல ஈசன் "

என்று சிவஞான சித்தியும் விளக்குகின்றன.

அருளாலே எல்லாவற்றையும்செய்தலால் இறைவன்செய்யும் செயல்கள் யாவும் சத்தியின் செயலாகவே சொல்லப்படுகின்றன.

" தானே இருநிலம் தாங்கிவிண் ணாய்நிற்கும்;
தானே சுடும்அங்கி ஞாயிறும் திங்களும்!
தானே மழைபொழி தையலுமாய் நிற்கும்!
தானே தடவரைத் தண்கடற் கண்ணே "

என்கின்றார் திருமூலர்.

" அவளால் வந்த ஆக்கம் இவ் வாழ்க்கை யெல்லாம் "

என்பது சிவஞானசித்தி.

உயிர்களுக்கு இன்பத்தைத் தருவதுமட்டும் அருளன்று. துன்பத்தைத் தருவதும் அருள்தான். துன்பம் தருவது தவறு செய்த உயிர்க்கு ஆகையால், அஃது அதனைத் திருந்தச் செய்தற் பொருட்டாம். ஆகவே, இன்பத்தைத்தருவது நேரே கருணையாகின்றது. இவை முறையே 'அறக்கருணை, மறக்கருணை' எனப்படும். "ஒன்றவன் றானே" என்ற திருமூலர் "இரண்டவன் இன்னருள்" என்றார். இரண்டு அறக்கருணை, மறக்கருணை.

இன்னும் இறைவன் உயிர்கட்குச் செய்வனவற்றைப் பெரும் பான்மையாக, 'மறைத்தல், அருளல்' என இரண்டாகக் கூறுவர்.

மறைப்பது 'திரோதானசத்தி' அது மறக் கருணை. அருள்வது 'அருட் சத்தி' அஃது அறக் கருணை.

இவ்வாறு, 'இறைவன் உயிர்கட்கு எல்லாவற்றையும் தனது அருளாலே செய்கின்றான்' என்று உணர்ந்து அந்த அருள் வழியாகவே அவனை அடைதல் வேண்டும். திருக்குறளில் முதல் அதிகாரமாகிய கடவுள் வாழ்த்தில் இறைவனது பெருமையைக் கூறிய திருவள்ளுவர், இரண்டாவது அதிகாரமாகிய வான் சிறப்பில் இறைவனது அருளின் சிறப்பையே கூறினார். அதனால் அருளது நிலையை உணர்ந்து அதுவழியாக மக்கள் இறைவனை அடைந்து இன்புறுவார்களாக.



## பொன்மொழிகள்

உடல் பெற்ற பயன் எது? பெருமானை வணங்குதல்; கண்ணால் தரிசித்தல்; வாயால் அவன் புகழைப் பாடுதல்; கால்களால் வலம் வருதல்; இக்காரியங்கள் இலேசான காரியங்களல்லவா? இதற்குச் சிரமம் வேண்டுமா? இவைகளைச்செய்வதால் வரும் பெரும் பயன்தான் திருவருள்.

* * * *

உலகமே ஒரு சர்வகலாசாலை போன்றது. கலாசாலைகளில் ஒருசமயத்தில் ஒருவிஷயந்தான் கற்றுக்கொள்ளவாய்ப்பிருக்கும். யாத்திரையின் மூலமோ பலவிஷயங்களை ஏககாலத்தில் அறிந்து கொள்ள வாய்ப்பு உண்டு. சர்வ கலாசாலையில், படித்த பெரிய அறிவாளிகள் பண்டிதர்கள் - இருந்து போதிப்பார்கள். ஆனால் யாத்திரையிலோ படிப்பறிவே இல்லாத பாமரரிலிருந்து பெரிய படித்தமேதாவிகள்வரை பலரும் நமக்கு அறிவுகொளுத்திகளாக அமைந்து விளங்குகிறார்கள்.

* * * *

ஒருவர் சிறிது உபகாரம் செய்தாலும் ஏற்றவர் அதை எப்பொழுதும் மறக்கக்கூடாது. அப்படியானால் உலகத்தையும் தந்து அதனை அனுபவிக்க உயிர்களாகிய நமக்கு உடலையும் தந்த கடவுளை- அவர் செய்துவரும் நன்றியை நாம் மறக்கலாமா? நன்றிமறப்பது நன்றாகுமா?

— ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி.

# அறநெறியும் அருள்நெறியும்

## நெறி வகைகள் :

தவம் செய்யும் முகத்தால் தம் கருமம் செய்வாராய் மெய்ப் பொருளைத் தலைப்பட்டு நிற்கும் பெரியோர், 'தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்னும் பெருங்கனியால் உல கிற்கு வகுத்துக் காட்டும் நெறி இரண்டு. அவற்றுள் ஒன்று இம்மை மறுமை நலங்களை இனிது எய்துவிப்பதும், மற்றொன்று வீடு பெறுவிப்பதும் ஆகும். இவ்விரண்டில் முன்னையது அறத்தை அடிப்படையாகக் கொண்டது. மற்றொன்று இறைவன் திருவருளை அடிப்படையாகக்கொண்டது. அதனால், அவ்விரண் டையும் முறையே, 'அறநெறி' என்றும், 'அருள்நெறி' என்றும் கூறலாம்.

இனி மூன்றாவதாக, 'நீதிநெறி' என ஒன்று சொல்லப் படுதல் உண்டு எனினும், அதனையும் அறநெறியின் பகுதியாகக் கொள்ளுதல் மரபு. நீதிநெறியே இக்காலத்தில், 'சமூக இயல்' எனப்படுகின்றது. இது, மக்கள் இம்மையில் இடையூறின்றி வாழ்வதற்கு வகுக்கப்படும் நெறியே. அதனால், இது பெரும் பான்மையும் அரச நீதியாகவே அமையும்.

ஒரு பயன் பற்றி ஒரு முயற்சி செய்தால், அம் முயற்சி அப் பயனை மட்டும் தருவதாகாது, மற்றொரு சிறந்த பயனுக்கும் வழியாகும்படி செய்வதே அறிவுடையோர் செயலாகும். இதனை, "அழிவதூஉம், ஆவதூஉம், ஆகி வழிபயக்கும் - ஊதியமும் சூழ்ந்து செயல்" என்னும் குறளால் விளக்குவார் திருவள்ளுவர். இக்குறளில், 'அழிவது' என்பது அப்பொழுது செலவிடப்படும் பொருள். 'ஆவது' என்பது, அச்செலவினால் உடனே கிடைக் கும் பயன். 'வழி பயக்கும் ஊதியம்' என்பது முன்செய்த அச் செயலினாலே பின்னும் பின்னும் தொடர்ந்து விளையக்கூடியபயன். இவற்றுள், உடனே ஒருபயனைத் தந்து, எதிர்காலத்தில் ஒன்றும் இல்லாமற் போகின்ற காரியங்கள் சிறந்தன அல்ல என்பதும், பின்னும் பின்னும் எதிர்காலத்தில் தொடர்ந்து பயனைத் தரக் கூடிய காரியங்களே சிறந்தவை என்பதும் திருவள்ளுவர்கருத்து.

---

* 10—3—68 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

பொருள் நிலைக்கு அவர் சொல்லிய இக் கருத்து. அற நிலைக்கும் பொருந்தும். அதனால், இம்மைநலம் கருதி வகுக்கப் படுகின்ற நீதிநெறி - சமூக இயல், இம்மை நலத்தைமட்டும் தந்தொழியாது, மறுமை நலத்திற்கும் வழிசெய்வதாக அமைதல் வேண்டும். அது மறுமை நலத்திற்கு வழி செய்யாதொழியினும், அதற்கு இடையூறு செய்யாத வகையிலேனும் இருத்தல் வேண்டும். இம்முறை அறநெறிக்கும் பொருந்துவதே. அஃதாவது, அறநெறி என்பது மறுமை நலத்தையே பயனாகக்கொண்டது. அது வீடு பேற்றிற்குரிய அருள் நெறிக்கு மாறாக அமைதல் கூடாது என்பதாம். இது பற்றியே நீதிநெறி அற நெறியையும், அறநெறி அருள்நெறியையும் சார்ந்து நிற்கும் என்று அறிவுடையோர்கூறுவர். ஆகவே, நீதிநெறியைக் கூறும் நீதிநூல்கள் அறத்தைக் குறிப்பாகவும், அறநெறியைக் கூறும் அறநூல்கள் இறைவன் திருவருளைக் குறிப்பாகவும் கூறுதல் இயல்பு. வள்ளுவர் வகுத்த வான்புகழ் நூலாகிய திருக்குறளின் அறத்துப்பால் அறத்தையும், பொருட்பால் நீதியையும் கூறுவன. காமத்துப்பால் அறம், நீதி என்பனவற்றின் பயன் என்று கூறலாம்.

அறத்தையும், நீதியையும் கூறுவன, 'உலகியல் நூல்கள்' எனப்படும். அருள் நெறியைக் கூறுவன சமய நூல்கள். 'திருவள்ளுவர் சமயநூல் செய்ய முற்படாது உலகியல் நூலே செய்தார்' என்பதையும், 'அங்ஙனம் செய்யினும், உண்மைச் சமய முடிபுகளைத் தம் நூலில் இலை மறை காய்போற்பொதிந்து வைத்துள்ளார்' என்பதையும், "சமயக் கணக்கர் மதிவழி கூறாது – உலகியல் கூறிப் பொருள் இது என்ற வள்ளுவன்" என்னும் கல்லாட அடிகளால் அறியலாம். நீதி, அறத்துள் அடங்குதற்கு உரியது ஆதலால், "அறம் பாடிற்றே ஆயிழை கணவ", "அறம் உரைத்தானும் புலவன்" என்றாற்போலத் திருவள்ளுவர் நூல் முழுவதையும் "அறநூல்" என்றல் பொருந்துவதே. எனினும், உலகம் போற்றும் ஒரு பெரு நூலாய் விளங்கும் திருவள்ளுவரது திருக்குறள், வெற்றற நூலாய் இல்லாமல், அருள்நெறியை அடிப்படையாகக் கொண்டிருத்தல், ஊன்றி உணரற்பாலது. எடுத்துக்காட்டாகச் சிலவற்றைக் காணலாம்.

இறையருள் :

'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' – அஃதாவது, 'எப்பொருட்கும் முதல்வனாகிய இறைவனது அருள் இன்றி ஒரு சிறு செயலும் நடைபெறாது' என்பதும், 'அதனால்,

அவனடிக்கண் செய்யும் அன்போடு கூடிநின்று செய்யும் செயல் யாதாயினும் அஃது அறமும், அவனை இகழ்ந்து செய்யும் செயல் யாதாயினும் அது பாவமும் ஆம்' என்பதும் அருள்நெறியின் உண்மை. ஆகவே, இவ்வுண்மையின் அடிப்படையில் வகுக்கப் படும் அறமே உண்மை அறமாகும். திருவள்ளுவர், அறத்தை இவ்வுண்மையின் அடிப்படையிலே வகுத்துள்ளார் என்பது மிகத் தெளிவாக விளங்கிக்கிடப்பது. அஃதாவது, திருவள்ளு வர் தாம் கூற எடுத்துக்கொண்ட, 'அறம், பொருள், இன்பம்' என்னும் மூன்றற்கும் முதலாவதாகக் கடவுளைப் பற்றிக் கூறும் அதிகாரத்தையே வைத்துத் தொடங்கியிருத்தல் தெளிவு. எனவே, 'அருள்நெறிக்கு மாறுகாது - ஏன்? அருள்நெறியைச் சார்ந்து நிற்பதே அறம்' என்பதே திருவள்ளுவரது திருவுள்ளம் என்பது மலையிலக்காக இனிது விளங்கி நிற்கின்றது. அம்முறை யில் அவர் கூறும் அருள்நெறிப் பொருள்கள் சிலவற்றை நோக்குவோம்.

கடவுள் வாழ்த்து:

'திருவள்ளுவர் சமய நூல்செய்யப் புகுந்திலர்' என்பதை முன்பே கூறினேம். எனினும், முதல் அதிகாரம், 'கடவுள் வாழ்த்து' என வைத்திருப்பதால், அவர் எந்த ஒரு கடவுளையே னும் வழிபடு கடவுளாகக் கொண்டிருப்பார் என்பது உறுதி. தாம் செய்யும் நூல் சமயநூல் அன்றாயினும், முதற்கண் கூறும் கடவுள் வாழ்த்தில் அவர் தம் கடவுளை வாழ்த்தியிருப்பின், அதனை ஒருவரும் குறைகூற இயலாது. ஏனெனில், தாம் செய்ய எடுத்துக்கொண்ட நூல் இடையூறின்றி இனிது முற்றுப் பெறல் வேண்டும் என்று தம் வழிபடு கடவுளை வேண்டிக் கொள்வது அவரது தனிப்பட்ட ஒரு செயல். ஆனால், அவர் தம் கடவுள் வாழ்த்தை அவ்வாறு தம்மளவில் செய்யவில்லை. மற்றும் பலர்க்கும் பொதுவாகவே செய்துள்ளார், ஏன்? ஒரு செயலால் ஒரு பயனைமட்டுமே பெறாமல், வேறு சிறந்த பயனை யும் பெறுமாறு செய்யவேண்டும்' எனப் பிறர்க்குக் கூறுகின்ற அவர்* தாம் ஒரு பயன்மட்டுமே தருவதாகச் செய்ய முற்படு வாரோ! அதனால்தான், தமது கடவுள் வாழ்த்தைத் தம் நூல் இனிது முடியும் அந்த ஒருபயன் பற்றியே செய்யாது, பலர்க்கும் பெரும்பயன் தரும் வகையில் செய்துள்ளார். அப் பெரும்பயனா வது, 'அறம் எனப்படுவது கடவுட் கொள்கையை முதலாக

---

* வினையான் வினை ஆக்கிக் கோடல் நனைகவுள் - யானையான் யானையாத் தற்று (குறள் - 678.)

உடையது' எனவும், 'கடவுளின் இயல்புகளாவன இவை எனவும் அனைவரும் உணர்ந்து கொள்ளுதலேயாம். ஆகவே, திருவள்ளுவரது கடவுள் வாழ்த்து ஏனைய நூலாசிரியர் தம் நூலின் முதற்கண்ணே செய்யும் கடவுள் வாழ்த்துப் போன்ற தாகாது, 'கடவுள்' என்னும் பொருளைப் பற்றிக் கூறும் ஒரு பகுதியாகவே அமைந்ததாகும். அங்ஙனம் அமைந்த அக்கடவுள் வாழ்த்தில் அவர் கூறும் இறை இயல்பைக் காண்போம்.

இறை இயல்பு:

திருவள்ளுவரது அறநெறி நூலுள் அருள்நெறிப் பொருளைக் காணும்பொழுது, எந்த ஒரு சமயத்தையும் பற்றி நில்லாது, அவரது நூலையே பற்றி நின்று காணுதல் வேண்டும். திருவள்ளுவர் எந்த ஒரு சமயத்தையும் தமது நூலில் குறிப்பிட்டுச் சொல்லாமையால், திருக்குறட் கடவுள் வாழ்த்து அதிகாரத்துள் கடவுளைக் குறித்து வந்துள்ள பெயர்களுள் எந்த ஒரு பெயரையும் ஒரு சமயக் கடவுளைச் சிறப்பாகக் குறிக்கும் பெயர் எனக் கூறுதல் பொருந்தாது. ஆகவே, அவை அனைத்துப் பெயர்களும் கடவுளின் இயல்பைக் குறிக்கும் காரணப் பெயர்களேயாம் அவற்றுள் சில அவர் தாமே ஆக்கிமொழிந்தன. அதனால், "அகர முதல எழுத்தெல்லாம் ஆதி-பகவன் முதற்றேயுலகு" என்னும் முதற் குறளில் உள்ள 'ஆதி பகவன்' என்பதும் அவர் ஆக்கிக் கூறிய காரணப்பெயரே.

'ஆதி பகவன்' என்பதில், 'ஆதி' என்பது 'முதல்வன் எனப் பொருள் தரும். 'பகவன்' என்பதற்கு 'ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம் என்னும் ஆறு குணங்களையுடையவன்' என்றும், 'வணங்கப்படுபவன்' என்றும் பொருள் கூறுவர். எனவே, 'ஆதி பகவன்' என்னும் பெயரால் திருவள்ளுவர், 'எப்பொருட்கும் முதல்வனாய் ஐசுவரியம் முதலிய குணங்களுடன் இருத்தல் இறைவன் இயல்பு' எனத் தெரிவிக்கின்றார். 'உலகு ஆதி பகவனை முதலாக உடையது' எனக்கூறிய அதனால், உலகத் தோற்றத்திற்கும், நிலைபேற்றிற்கும், அழிவிற்கும் காரணனாய் நிற்பவன் இறைவன் என்பதும் அவர் கருத்தாயிற்று. இல்லை எனின், உலகத்தில் நிகழும் தோற்றமும், வளர்ச்சியும், அழிவும் அவனுடைய ஆணையுட்படாது தாமே நிகழும் என்னும் நாத்திகவாதமாய் முடியும்; அது திருவள்ளுவர்க்கு உடன்பாடன்று என்பது தெளிவு.

இனி, வாலறிவன், மலர்மிசை ஏகினன், வேண்டுதல் வேண்டாமை இலான், இறைவன், பொறிவாயில் ஐந்தவித்தான், தனக்குவமை இல்லாதான், அறவாழி அந்தணன், எண்குணத் தான்' என்னும் பெயர்களால் இறைவனது இயல்புகள் பல வற்றையும் தெரித்துரைக்கின்ருர்.

வாலறிவன் - மெய்யறிவையுடையவன். அறிவுக்கு மெய்ம் மையாவது, அறியாமையோடு கூடாமை, பிறர் அறிவிக்க வேண்டாது தானே அறியும் தன்மை, ஒரு காலத்து ஒருங்கே எல்லாவற்றையும் அறிதல், அறியுமிடத்து அப்பொருளில் அழுந்தித் தான் அதன்வண்ணமாய்த் திரியாது தன் இயல்பில் நின்றே அறிதல் முதலிய தன்மைகளாம். 'மலர்மிசை ஏகினன்' என்பதில் மலர் என்பது அன்பரது உள்ளத்தாமரையையே குறிக்கும். 'வேண்டுதல், வேண்டாமை' என்பன விருப்பு வெறுப்புக்களாம். இவை, எவையேனும் சில குறையுடையவர் களிடத்திலே தோன்றுவனவாம். எனவே, இவை இரண்டும் இல்லாமை, யாதொரு குறையுமற்ற நிறைவையே குறிக்கும். இறை - எல்லாப் பொருளிலும் தங்கி இருப்பவன். பொறி வாயில் ஐந்து - பஞ்சேந்திரியங்கள். அவற்றை அவித்தலாவது, அடக்குதல்; அஃதாவது அவற்ருல் தாக்குண்ணுமை. எனவே, 'எல்லாவற்றையும் கண்டும், கேட்டும், உண்டும், உயிர்த்தும், உற்றும் இருந்தே அச் செயல்களில் சிறிதும் தோய்வின்றி இருப் பவன் இறைவன்' என்றதாயிற்று. ஆகவே, இறைவன் காண்டல் கேட்டல் முதலியன உயிர்களின் பொருட்டு என்பது தானே பெறப்படும். தனக்கு உவமை இல்லாமை - தன்னேடு ஒப்பாகவேனும், உயர்வாகவேனும் பிறிதொரு பொருள் இல் லாமை. இதனுல் ஒரு கடவுளன்றிப் பல கடவுள் இல்லாமை பெறப்பட்டது. அற ஆழி - அறக் கடல். இதனுல், பலவகை அறங்களையே தனக்கு வடிவாகக்கொண்டு நிற்பவன் இறைவன் என்பது விளங்கிற்று. 'அந்தணன்' – என்பது 'அழகிய கருணையை உடையவன்' எனப் பொருள் தரும். கருணைக்கு அழகாவது, என்றும் எல்லா உயிர்கள்மேலும் உள்ளதாய், அவ்வவ்வுயிர்க்கு வேண்டுவனவற்றைச் செய்தல். "எண்குணத் தான்" என்று திருவள்ளுவர் குறித்த குணங்கள், மேலே அவர் குறித்தனவற்ருேடு இயைந்தனவாகவே இருத்தற்கு உரியன. அதற்கு, சைவாகமத்துட் கூறப்பட்ட தன்வயத்தனுதல் முதலி யனவே ஏற்புடையவாகின்றன.

இங்ஙனம் பல பெயர்களால் இறைவனது இயல்புகளை வகுத்துக் கூறிய திருவள்ளுவர், உயிர்கள் அவனை நினைத்தும்,

அவன் பொருள்சேர் புகழ்களைச் சொல்லி வாழ்த்தியும், வணங்கியும், அவன் வகுத்த நெறியில் நின்று பெறும் பயன்களையும் ஆங்காங்குக் கூறியுள்ளார். உயிர்கள் தன்னை நினைத்தல் முதலியவற்றைச் செய்தற்பொருட்டு. அவை, நிலமிசை நீடு வாழ்தல், வினை நீங்கப் பெறுதல், கவலை இன்மை, பொருள் இன்பங்களால் மயங்காது தெளிவுற்றிருத்தல், பிறவிக் கடலைத் கடந்து வீடு பெறுதல் என்பனவாம். இறைவன் பல அருட் டிருமேனிகளைக்கொண்டு விளங்குகின்றான் என்பதையும், அவன் திருவடிகளைப் பல இடங்களில் எடுத்துக் கூறும் முகத்தால் உணர்த்துகின்றார். இவை அனைத்தும் இறைவனது திருவருளை யடையும் வழியைக் கூறும் அருள் நெறிப்பொருள்களே யன்றோ? இவ்வருள் நெறிப்பொருளை, யார், எச்சமயம் என்று கூறினும், இவை அனைவரும் இன்றியமையாது கைகொள்ளற்பாலன என்பது உண்மை. அவ்வுண்மையின்வழி அனைவரும் அறநெறியோடு அருள் நெறியையும் பெற்று அனைத்துப் பயனையும் அடைவார்களாக.

---

# பொன்மொழிகள்

சித்திரத்தைக் கண்டவுடன் சிற்பியின் ஞாபகம் வருவது போல அதியற்புதமான இந்தசிருஷ்டியாகிய அற்புதக்கலையைக் கண்டவுடன் செய்தவன் ஞாபகம் வரத்தானே வேண்டும்.

* * * *

அன்புருவாகிய கடவுளை அன்பாலேயே தொழவேண்டும். அன்புவிலையில்லாத மாணிக்கம். உலகியலிலும் கூட அன்பாலேயே அமைதியைக் காணமுடிகிறது. அன்புள்ள இடத்தில் இன்பம் தானே விளையும்.

* * * *

யோகம் என்பது மன ஒருமைப்பாடு. கடவுளோடு இணைந்து இருக்கும் தன்மையே யோகம். பேரொளியாகிய நித்தியப் பொருள் ஒன்றோடு, உயிரொளியாகிய நித்தியப்பொருள் இணைந்து இருப்பதே யோகம்.

— ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி,

# அறநெறியும் அருள்நெறியும்

## 2. "ஆதி பகவன்" *

மக்கட்கு, 'செய்வன இவை, தவிர்வன இவை' என அறுதியிட்டுக் கூறவந்த திருவள்ளுவர், முதற்கண் கடவுளைப் பற்றிய உண்மைகளை எடுத்துக் கூறப்புகுந்து, கடவுளை முதலாவதாகக் குறிப்பிட்டபெயர் 'ஆதி பகவன்' என்பது. அதனுள், 'பகவன்' என்பதன் சொற்பொருள் எதுவாயினும், அது பொதுவாக, 'கடவுள்' என்னும் பொருளில் வழங்குவதாகும். முனிவர் முதலியோரை, 'பகவர்' என வழங்குவதும் கடவுள் தன்மை கருதியேயாம். கடவுளின் இயல்புகளைப் பெரும்பான்மையும் காரணப் பெயர்களின் வழியே குறிக்கக் கருதிய திருவள்ளுவர் பொதுப்பட, 'கடவுள்' என்னும் பொருளில் வழங்கும் 'பகவன்' என்னும் சொல்லைத் தனியாகக் கூருமல், ஒரு சிறப்புப் பொருள் தோன்றுமாறு, 'ஆதி' என்றஓர் அடைமொழி கொடுத்து, 'ஆதி பகவன்' எனக் கூறினர். அவ்வாறு கூறியதன் பயன் யாது?

'ஆதி' என்பதற்கு. 'முதல்' என்பது பொருள். 'முதல்' என்பது, எப்பொருளுக்கும் முன்னர் உள்ள பொருளைக்குறிக்கும். எனவே, 'ஆதி பகவன்' என்றது, 'யாவருக்கும் முன்னே உள்ள கடவுள்' என்றதாயிற்று. 'முப்பத்து முக்கோடி' முதலிய எண்களாற் சொல்லப்படுகின்ற பலராகிய தேவர் கட்கும், 'கடவுளர்' என்ற பெயர் உண்டு. ஆயினும், அவரெல் லாம் இயற்கையில் கடவுளராகாது, புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப் பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக் கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய் வல் அசுரராகி முனிவராய்ப் பிறந்து அப்பிறப்புக்கள் பலவற்றில் செய்த புண் ணியத்தின் பயனுகச் சிலகாலம் தேவராய்ப் பிறந்து வாழ்ந்து, பின்பு வேறு எப்பிறப்பிலேனும் செல்பவர். ஆகவே, அவர் அனைவரும் இயல்பாகவே கடவுள் தன்மையை உடைய ஒருவ னுக்குப் பின்னர்த் தோன்றிய கடவுளரேயன்றி, எல்லார்க்கும், எப்பொருட்கும் முன்னேயுள்ள கடவுளராகார். எனவே, நல்வினையின் பயனுகிய செயற்கையால் கடவுளராய் வாழும் அவர்களினின்றும் பிரித்து, இயல்பாய கடவுள் தன்மையால் எல்லார்க்கும் முன்னே உள்ள ஒருவனைக் குறிக்க வேண்டியே திருவள்ளுவர், 'பகவன்' என்று மட்டும் கூருது, 'ஆதி பகவன்'

* 10—4—68 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

என அடைகொடுத்துக் கூறினர் என்பது தெளிவாகின்றது. இதுபற்றியே பரிமேலழகரும் 'இப்பாட்டான் முதற் கடவுளது உண்மை கூறப்பட்டது' என்று முதல் திருக்குறளுக்குக் கருத்துரை கூறினர்.

அறநெறியுள் திருவள்ளுவர், 'ஆதி பகவன்' எனக் குறிப் பிட்ட பொருளைத்தான் அருள்நெறி நூல்களாகிய சமய நூல் கள், 'முதற் கடவுள்' என்றும், 'முழுமுதற் கடவுள்' என்றும், 'பரம்பொருள்' என்றும் குறிப்பிடுகின்றன. பிற கடவுளரை 'தேவர்' என்றும், 'அமரர்' என்றும், 'வானவர்' என்றும் 'தெய்வங்கள்' என்றும் பிறவாறும் குறிப்பிடுகின்றன. பல வகைப் பிறப்புக்களில் தெய்வப் பிறப்பையும் ஒன்ருக வைத்து, 'பிறப்பு வகை ஏழு' எனச் சமய நூல்கள் கூறுவது இங்கு நன்கு சிந்திக்கத்தக்கது.

'முதல்' எனவும், 'வழி' எனவும் கூறுவதும், 'முன்' என்றும், 'பின்' என்றும் கூறுவதும் காலத்தை ஒட்டியாதலின், கடவுளை, 'முகற்கண் உள்ளவன்' அல்லது 'முன்னே உள்ள வன்' என்று கூறினல், அவனும் காலத்திற்கு உட்பட்டவனுக, காலம் அவனுக்கு முன்னே உள்ளதாய்விடும் என்னும் கருத்தி ஞல், சைவ சித்தாந்தம் கடவுளை 'அநாதி - அஃதாவது ஆதி யில்லாத பொருள்' எனக் கூறும். ஆதியுடைய பொருளே அந்தத்தை - முடிவை உடையதாகும் ஆதலின், 'ஆதி இல்லாத வன்' எனவே, 'அந்தம் இல்லாதவன்' என்பதும் தானே அமைந்துவிடுகிறது. மாணிக்கவாசகர், 'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதி' எனக் கூறியிருத்தலை யாவரும் அறிவர். எனவே, 'அநாதி' என்பதற்குப் பொருள், 'காலத் திற்கு அப்பாற்பட்டது' என்பதாயிற்று.

கடவுளின் இயல்பு இனிது விளங்க வேண்டிச் சைவ சித்தாந்தம் கடவுளை இவ்வாறு, 'அநாதி' என்று குறிப்பிடுவதா யினும், கடவுளைப் பொதுவாக, 'ஆதி' என வழங்குதலும் சமய நூல் வழக்கேயாம். அங்ஙனம் வழங்கும்போது மற்றைய பொருள்களோடு காலத்தையும் ஒன்ருக்கி, 'அதற்கும் முன்னே உள்ளவன் இறைவன்' எனக் கூறுவதே கருத்தாகும்.

கடவுளை 'அநாதி' என்று குறிப்பிடுகின்ற சைவசிந்தாந்த மும், 'இறைவன் அநாதியாய் நிற்கும் நிலை உலகத்தோடு தொடர்புகொள்ளாது தனித்துத் தன்னளவில் நிற்கும் நிலையே, என்று வைத்து, 'அவன் உலகத்தோடு தொடர்புகொண்டு

நிற்கும் நிலையில் ஆதியாயே நிற்கின்ருன்' என்றே கூறுகின்றது' இதனை, அஃது உலகத்தை ஐந்தொழிற்படுத்தி நடத்தும் சத்தியை, 'ஆதி சத்தி' என்னும் பெயரால் குறிப்பிடுதல் கொண்டு உணரலாகும். எனவே, கடவுளைச் 'சிவன்' எனக் குறிப்பிடுகின்ற சைவசித்தாந்தம், உலகத்தோடு தொடர்பின்றி நிற்கும் சிவனை, 'அநாதி சிவன்' எனவும், உலகத்தோடு தொடர்புகொண்டு அதனைப் படைத்துக் காத்து அழித்து மறைத்து அருளுகின்ற சிவனை, 'ஆதி சிவன்' எனவும் கொள்ளுகின்றது என்பது புலனுகும். "அகர முதல" என்னும் முதற் குறளில் திருவள்ளுவர் இறைவனது தனிநிலையைக் கூருமல் உலகத்திற்கு முதல்வனுய் அதனேடு தொடர்புற்று நிற்கும் நிலையைக் கூறவந்தமையால், அவனை, 'அநாதி பகவன்' என்று கூருமல், 'ஆதி பகவன்' எனக் கூறினர் என்பது நன்கு விளங்குகின்றது.

இறைவன் தனித்துத் தன்னிலையில் நிற்கும்பொழுது, 'சிவம்' என்றும், உலகத்தோடு தொடர்கொள்ளும் நிலையில், 'சத்தி' என்றும், தொடர்புகொண்டு, படைத்தல் காத்தல் முதலிய ஐந்தொழில்களைச் செய்யுமிடத்து, 'பதி' என்றும் சொல்லப் படுவான் என்பது சைவசித்தாந்தம். அவற்றுள் 'சிவம்' என்னும் நிலையே அநாதி. 'சத்தி, பதி' என்னும் ஏனைய இரு நிலைகளும் ஆதி. அநாதிநிலை, 'சொரூபம்' என்றும், ஆதிநிலை, 'தடத்தம்' என்றும் சொல்லப்படும். அவற்றுள் திருவள்ளுவர் தமது முதற்குறளில் கூறப்புகுந்தது இறைவனது தடத்த நிலையேயாதலின், 'ஆதிபகவன்' என்றேகூறினர். 'ஆதிபகவன்' என்னும் தொடருக்கு, 'ஆதிசக்தியோடு கூடிய சிவன்' எனப் பொருள் கூறுதலும் சைவப் பெரு மக்களிடையே உண்டு. இதனை, "அகர முதல எழுத்தெல்லாம்" என்ற எடுத்துக்காட் டுவமையால் 'கடவுள் ஒருவன் உண்டு' என்பதை வலியுறுத்து கின்ற திருவள்ளுவர், அக்கடவுளைப் 'பகவன்' என்று மட்டும் குறித்துப் போகாமல், ஆதிபகவன் என அடைபுணர்த்துக் கூறியது, உலகத்திற்கு முதல்வனுய் நிற்கும் கடவுள் சிவ பெருமானே என்பதைச் சொல்லாமற் சொல்லுதற் பொருட்டே என்னும் கருத்துப்படச் சிவஞான முனிவர் வழங்கிய,

> "சீர்கொள் இறை ஒன்றுண்டத் தெய்வம்நீ என்ரெப்பால்
> சோர்வில் அடை யால்தெளிந்தோம் சோமேசா—ஒரில்
> அகர முதல எழுத்தெல்லாம்; ஆதி
> பகவன் முதற்றே உலகு"

என்னும் சோமேசர் முதுமொழி வெண்பாவால் அறியலாம்.

இதுநிற்க, 'உலகத்திற் கட்டுண்டு கிடக்கும் உயிர்கள் தம் முயற்சியினுல் தான்தாம் அக்கட்டினின்றும் விடுபடவேண்டும்' என்றும், அங்ஙனம் முதற்கண் 'விடுபட்ட ஒருவனே, ஆதிபகவன் எனப்படுகின்ருன்' என்றும், 'அவனைத்தான் திருவள்ளுவர் தமது முதற்குறளில் எடுத்தோதினர்' என்றும் கூறுவர் சமண மதத்தினர். அங்ஙனமாயின், 'உலகு ஒருவனை முதலாகக் கொண்டுள்ளதேயன்றித் தானே தனித்து நிற்கவில்லை' என்பதனை, 'ஆதி பகவன் முதற்றே' எனத் தேற்றேகாரம் கொடுத்து வலியுறுத்திக் கூறவந்த திருவள்ளுவர், 'முதற்கண் விடுபெற்ற ஒருவனைத்தான் உலகம் முதலாகக் கொண்டுள்ளது' எனக் கூறுவாராயின் 'அவன் விடுபெறுதற்கு முன் உலகம் எவ்வாறிருந்தது?' என்னும் வினு எழுமாகலின், அதற்கு 'அப்பொழுது உலகம் முதல்வர் இன்றியே இருந்தது' என்றே விடைகூற வேண்டிவரும். 'அப்பொழுது உலகம் அவ்வாறு இருந்ததாயின், பின்னரும் அவ்வாறு ஏன் இருத்தல் கூடாது' என்னும் தடை நிகழ்ந்து, 'உலகிற்கு முதல்வன் ஒருவன் இருத்தல் இன்றியமையாததன்று' என்பது பட்டு, "அகர முதல எழுத்தெல்லாம்" என்று எடுத்துக் காட்டிய உவமை பயனற்றதாகிவிடும். ஆகவே, மேற்காட்டிய அருள்நெறிக் கொள்கையே அறநெறி கூறவந்த திருவள்ளுவர்க்கும் கொள்கை என்பது தெள்ளத்தெளிந்த உண்மையாகும்.

"ஆதியன் ஆதிரையன் அனலாடிய ஆரழகன்"

(சம்பந்தர்)

"ஆதியானை அமரர் தொழப்படும் - நீதியானை"

(அப்பர்)

"ஆதியன் ஆதிரையன் அயன் மால்அறி தற்கரிய
சோதியன்"

(சுந்தரர்)

"பங்கயத் தயனுமால் அறியா
நீதியே செல்வத் திருப்பெருந்துறையுள்
நிறைமலர்க் குருந்தம் மேவியசீர் - ஆதியே"

(மாணிக்கவாசகர்)

என்ருற்போலத் திருமுறைகளிலும் பலவிடங்களில் இறைவனை 'ஆதி' என வழங்குதல் காணலாம். ஆகவே, அறநெறியை நோக்குவோர் அதனேடு அருள்நெறியையும் நோக்கிப் பயன் பெறுவார்களாக.

# அறநெறியும் அருள்நெறியும்

## 3. "வாலறிவன்" *

தனக்கு முன்னே ஒரு பொருள் இல்லாது, தானே எல்லாப் பொருள்கட்கும் முன்னே உள்ளவன் இறைவன் என்பதற்கு அவனை, "ஆதிபகவன்" எனத் தமது அறநூலில் குறித்த திருவள்ளுவர், பின்பு அவனை, "வாலறிவன்" எனக் குறிப்பிட்டார். வான்மை - தூய்மை; பிறிதொரு பொருளோடு கலப்பற்றது. எனவே, "வாலறிவன்" என்றது, 'பிறிது யாதொரு பொருளோடும் கலப்பற்ற தூய அறிவினையுடையவன் இறைவன்' என்றதாயிற்று.

வான்மைக்கு எதிர்ப்பதம், வாலாமை; அஃதாவது மாசு. உயிர்களுக்கும் அறிவு உண்டு என்றாலும், அஃது இறைவனுடைய அறிவுபோல மாசற்றுத் தூயதாய் இல்லாமல், மாசுடையதாய் இருக்கின்றது. இம்மாசுதான், 'மலம்' எனக் கூறப்படுகின்றது. 'மலம், மாசு, அழுக்கு' என்பன ஒருபொருட் சொற்கள். உயிர்களின் அறிவில் படிந்துள்ள மாசு, அதைச் செயற்பட ஒட்டாமல் கட்டி நிற்றலின், அம்மாசினை, 'பாசம்' என்னும் பெயராற் குறிப்பிடுகின்றனர். பாசம் - கயிறு அல்லது தளை. எனவே, "வாலறிவன்" என்பது மலத்தொடர்பில்லாத - நின்மலமான அறிவை யுடையவன் என்பதாம்.

இறைவனுடைய அறிவும் உயிரினுடைய அறிவும், 'அறிவு' என்ற வகையில் ஒன்றேயாயினும், அவ்விரண்டும் இவ்வகையில் வேறுபடுகின்றன. அஃதாவது, இறைவனுடைய அறிவு பாசத்தாற் கட்டுப்படாதது; உயிரினுடைய அறிவு பாசத்தாற் கட்டப்பட்டது. 'அறிவு' என்ற வகையில் இரண்டும் ஒன்றேயாக, அவற்றுள் ஒன்று என்றும் மாசுபடாது தூயதாகவே இருக்க, மற்றொன்று மாசுபட்டுக்கிடப்பது ஏன் என்று ஆராய்ந்தால், 'அவ்விரண்டிற்கும் இயற்கையில் அடிப்படையில் சில வேற்றுமைகள் இருத்தல் வேண்டும்' என்பது புலனாகும். அவ்வேற்றுமைகளுள் முதலாவது, உயிரினது அறிவு எந்தப்பொருளைப் பற்றுகிறதோ அந்தப் பொருளில் அழுந்தி அதன் வண்ணமாகித் தன் தன்மையை இழந்து நிற்பது. இறைவனுடைய அறிவு அவ்வாறின்றி எந்தப் பொருளிலும் அழுந்தாது ஒட்டற்று

---

* 10—5—68 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

நின்று தன்னியல்பிலே நிற்பது. இதனுல் உயிரினது அறிவு பாசத்தால் எளிதில் மறைக்கப்படுகின்றது; இறைவனது அறிவு ஒருகாலும் பாசத்தால் மறைக்கப்படுவது இல்லை. எனவே, "வாலறிவன்" என்ற இதனுலேயே, 'இறைவன் யாதொரு பொருளையும் அதன்கண் அழுந்தாது நின்றே அறிபவன்' என்பதும் பெறப்படுகின்றது. ஒரு பொருளில் அழுந்தி அதன் வண்மையாய் நிற்பதுதான் 'அநுபவம்' என்று சொல்லப்படுகின்றது. அதனுல், 'இறைவன் எல்லாப் பொருளையும் அறிபவனுயினும், ஒன்றையும் அநுபவிப்பவன் அல்லன்' என்பது விளங்கும்.

அறிவுக்கு இயற்கை ஒரு பொருளை அறிந்து நிற்றல். அவ்வறிவு பாசத்தால் தடுக்கப்பட்டுவிடுமாயின், பின்பு என்னுகும்? அறிவு, அறியாமையாய்விடும். அறிவு அறியாமையாய்விட்டால், பின்னர் அவ்வறியாமை நீங்கி, அறிவாவது எப்படி? வேருருவர் அறியாமையை நீக்கி அறிவை உண்டாக்கவேண்டும். உயிர்கள் அனைத்தும் ஓரினமேயாகையால், 'அவற்றுள் சிலவற்றின் அறிவைமட்டும் பாசம் மறைக்கும்; சிலவற்றின் அறிவைப் பாசம் மறைக்காது' என்பதற்குக் காரணம் இல்லை. காரணம் இல்லாமல், ஒரு பொருளை வலியுறுத்த இயலாது. ஆகையால், எல்லா உயிர்களின் அறிவும் பாசத்தால் மறைக்கப்பட்டனவேயாதலின், அவற்றுள் ஓர் உயிர், மற்ருேர் உயிருக்கு அறியாமையை நீக்கி, அறிவை உண்டாக்குதல் இயலாது. எனவே, 'என்றும் பாசத்தால் மறைக்கப்படாத அறிவினையுடைய இறைவனே, உயிர்கட்கு அறியாமையை நீக்கி அறிவை உண்டாக்குவான்' என்பது தெளிவு.

இறைவன் உயிர்கட்கு அறியாமையை நீக்கி, அறிவைத் தரும் முறைகள் பல. அவற்றுள், மக்கட் பிறப்பில் அவைகட்கு அவன் நூல்கள் வாயிலாக அறியாமையைப் போக்கி அறிவைத் தரும்முறை சிறந்த ஒன்று. நூல்களாவன, முன் அறிந்திராத பொருளை அறிவிப்பன. ஆகவே, அத்தகைய நூலை முதன்முதற் செய்து கொடுப்பவன் யார்? உயிர்கள், முற்கூறிய வாறு அறியாமையில் அழுந்திக் கிடப்பவையாதலால், அவைகள் எவ்வாறு ஒரு சிறந்த நூலை முதற்கண் செய்ய முடியும்? முடியாது. ஆதலின், முதன்முதல் நூலைச் செய்து தருபவன் முன்னர்க் குறிப்பிட்ட ஆதிபகவனுகிய இறைவனே. இதனை,

"வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்"

என இலக்கணக்காரர்களும் ஒப்புக்கொள்கிருர்கள். ஆகவே, 'நூல்கள் வாயிலாக உயிர்கட்கு அறிவைத் தருபவன் இறைவனே' என்பது இனிது விளங்குகின்றது. இறைவனுக்குப் பாசம் இல்லாமையால் அறியாமையும் இல்லை. அறியாமை இல்லையாகவே, 'உயிர்கட்கு இறைவன் அறிவைத் தருவது போல, இறைவனுக்கு யார் அறிவைத் தருகின்ருர்கள்' என்ற கேள்விக்கே இடம் இல்லை. அதனுல் 'இறைவன் இயற்கையாகத் தானேஅறியும் அறிவை யுடையவன்' என்பதும், 'உயிர்கள் அவ்வாறின்றி, ஒருவர் அறிவிக்க அறியும் அறிவையுடையன' என்பதும் தெளிவாகும். இவற்றை விளக்கவே திருவள்ளுவர், 'வாலறிவன்' எனக் கூறும் குறளில், "கற்றதனுல் ஆய பயனென்கொல்" எனக் கல்வியை எடுத்துக் கூறினுர். அதனுல் 'உயிர்களின் அறிவு, கல்வி முதலிய துணைகளினுலேயே விளக்கம் பெறுவது' என்பதும் 'இறைவன் அறிவு அவ்வாறின்றித் தானே விளங்குவது' என்பதும் அக்குறளில் உய்த்துணர்ந்துகொள்ளக் கிடக்கின்றன. தானே விளங்குவதைத்தான் சமய நூல்கள், 'சுவயம்பிரகாசம்' என்கின்றன.

இன்னும், அறிவுகள் தாமேவிளங்குவதும், அவ்வாறின்றிப் பிறிதொரு துணைபெற்று விளங்குவதும் ஆகிய தன்மைகள், அவற்றிற்குப் பாசம் இல்லாமையும், பாசம் உடைமையும் என்ற அவற்ருல் மட்டும் ஆவன அல்ல. இயற்கையிலே அத்தன்மை அவைகட்கு அமைந்துள்ளன என்றே உணர்தல் வேண்டும். ஏனெனில், பாசம் அறியாமையை உண்டாக்குவதேயன்றி வேறில்லை. ஆகவே, பாசம் இல்லையாயின், அறியாமை இல்லையாம். ஆனுல், பொருள்களை 'இஃது இத்தன்மைத்து; அஃது அத்தன்மைத்து' என அறிந்துகொள்ளுதல் அறியாமை இல்லாமை என்ற ஒன்றினுல் மட்டும் இயலாது. அவ்வாறு அறியும் தன்மையும் வேண்டும். அதனுல், 'அவ்வாறு தானே அறிந்தும், உயிர்கட்கு அறிவித்தும் நிற்பவன் இறைவன்; அவன் அறிவிக்க அறிவன உயிர்கள்' என்பதையும் 'கற்றதனுல் ஆய பயன்' என்று கல்வியின் இன்றியமையாமை கூறியதனுலே விளங்கிற்று. 'வாலறிவன்' என்றதில் இத்துணைக் கருத்துக்கள் பொதிந்துள்ளன. எனினும், அவற்றில் 'பிறர் அறிவிக்கவேண்டாது தானே இயல்பாக அறியும் இயற்கையுணர்வு உடையவன் இறைவன்' என்பதையே இங்குச் சிறப்பாகத் திருவள்ளுவர் கருதுகின்ருர் என்பது, 'உயிர்களின் அறிவு கல்வியினுலே விளக்கம் பெறுவதாகும்' என்பதை இதனுடன் சேர்த்துக் கூறியிருப்பதனுல் தெரியவரும்.

இங்ஙனம் இறைவன் தானே அறிபவன்; அழுந்தாது நின்று அறிபவன். அதனுல், பாசத்தில் கட்டுண்ணுதவன் என்பதும், உயிர்கள் தாமே அறியாது அறிவிக்கவே அறியும்: அறியப்படும் பொருளில் அதுவதுவாய் அழுந்திநின்று அறியும்; அதனுல் பாசத்திற் கட்டுண்டது என்பதும் விளங்குதலால், 'இத்தகைய உயிர்க்கு அத்தகைய இறைவனைத் தொழுதலன்றி, வேறு உறுதியில்லை' என்பதை விளக்கவே திருவள்ளுவர்,

"கற்றதனுல் ஆய பயன்என்கொல் வாலறிவன்
நற்றுள் தொழாஅ ரெனின்"

எனக் கூறியுள்ளார். இங்குங் கூறப்பட்ட கருத்துக்கள் பலவும் சைவ சித்தாந்தத்துட் கூறப்படுதல் காணலாம்.

"அறிவிக்க அன்றி அறியா உளங்கள்"

(சிவஞானபோதம் சூ. 8. அதி. 2.)

"பொறிபுலன் கரணம் எல்லாம்
புருடனுல் அறிந்தான் மாவை
அறிதரா அவையே போல
ஆன்மாக்கள் அனைத்தும் எங்கும்
செறிதரும் சிவன்ற ஞலே
அறிந்திடும்; சிவனைக் காணு;
அறிதரும் சிவனே எல்லாம்
அறிந்தறி வித்தும் நிற்பன்."

"அறிந்திடும் ஆன்மா ஒன்றை
ஒன்றினுல் அறித லானும்,
அறிந்தவை மறத்த லானும்,
அறிவிக்க அறித லானும்,
அறிந்திடும் தன்னை யும்தான்
அறியாமை யானும், தானே
அறிந்திடும் அறிவன் அன்றும்;
அறிவிக்க அறிவன் அன்றே"

(சிவஞான சித்தியார் - சூ - 5ல் 1, 2.)

என்பன முதலாக வரும் சாத்திரங்களைக் காண்க. இவ்வாறு அறநெறி, அருள்நெறியையே காட்டிநிற்றல் அறிந்து இருவகை நெறியையும் யாவரும் கடைப்பிடிப்பார்களாக.

---

# அறநெறியும் அருள்நெறியும்

## 4. "மலர்மிசை ஏகினன்" *

இறைவன் முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளாயும், பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனுயும் இருப்பவன் என்பதை விளக்க அவனை 'ஆதிபகவன்' என்றும், யாதொன்றனையும் பிறர் அறிவிக்க வேண்டாது எல்லாவற்றையும் தானே அறிந்தும், அறிவித்தும் நிற்பவனுதலை விளக்க 'வாலறிவன்' என்றும் குறித்த திருவள்ளுவர், பின்னும் அவனை "மலர்மிசை ஏகினன்" என்னும் பெயரால் குறிப்பிடுகின்றார். இதன் பொருள் யாது?

பௌத்தரும், சமணரும் தங்கள் சமயக் கடவுளது திருவடிகள் நிலத்தில் படுவதில்லை என்றும், அவை எப்பொழுதும் தெய்வத்தாமரை மலரின்மேல் நிற்பன என்றும், அத்தாமரை அவர் திருவடி பெயர்த்துவைக்கும் இடந்தோறும் தாம்பெயர்ந்து சென்று அவற்றைத் தாங்கிச் செல்லும் என்றும், அதனால், அவர்கட்குப் "பூமேல் நடந்தான்", "கமல ஊர்தி" என்னும் பெயர்கள் உளவாயின என்றும், 'பூமேல் நடந்தான்' என்னும் பெயரையே திருவள்ளுவர், 'மலர்மிசை ஏகினன்' எனக் கூறினர் என்றும் கூறுவர்.

இது, மேற்போக்காகப்பார்க்கும்பொழுது உண்மை என்றே எண்ணத் தோன்றும். ஆனல், ஆழ்ந்து நோக்கும்பொழுது உண்மையன்ருதல் நன்கறியப்படும். அஃது எவ்வாறு எனக் காண்போம்.

திருவள்ளுவர் தாம் எம்மதத்தவராயினும் தமது நூலைச் சொல்லால் தமது மதத்திற்கே உரிய சிறப்பு நூலாகச் செய்யாது தமது கொள்கையை மட்டும் வலியுறுத்திச் சொல்லால் பொது நூலாகவே செய்து போந்தார் என்பது அனைவரும் ஒருமுகமாக ஒப்புக்கொள்ளும் உண்மை. ஆகவே, பௌத்த சமண சமயக் கடவுளராகக் குறிக்கும் 'பூமேல் நடந்தான், கமல ஊர்தி' என்னும் சிறப்புப் பெயர்களையே, 'மலர்மிசை ஏகினன்' எனக் குறித்தார் என்றல் பொருத்தமற்றதாகின்றது. மேலும் திருவள்ளுவர் இறைவனை அவனுக்கு இயல்பாய் என்றும் உள்ள குணங்களைக் குறிக்கும் வகையில் சில பெயர்களைக் கூறுகின்ருரே

* 10—6—68 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

யல்லது, ஒவ்வொரு மதத்தில் சிறப்பாகக் கொள்ளப்படும் சில மரபுகளைக் குறிக்கும் வகையில் பெயர் கூறவில்லை. 'அகல் விசும்புளார் கோமான், அடியளந்தான், தாமரைக் கண்ணன், தாமரையினன்' என்பனவெல்லாம் முதற்கடவுளைக் குறிக்கும் வகையில் திருவள்ளுவரால் சொல்லப்படவில்லை. வேறு சில கருத்துக்களைக் குறிப்பிடவே அவரால் அவைகள் சொல்லப் பட்டன. எனவே, 'மலர்மிசை ஏகினன்' என்பதும், இறைவன் இறைமைக் குணங்களுள் ஒன்றைக் குறித்ததாக வேண்டுமல்லது, 'பூமேல் நடந்தான், கமல ஊர்தி' என்னும் ஒருசார் சமயக் கடவுளர் பெயரைக் குறித்ததாகாமை தெளிவு. இக் கருத்தையே பரிமேலழகர், "இதனைப் பூமேனடந்தான் என்பதோர் பெயர்பற்றிப் பிறிதோர் கடவுட்கு ஏற்றுவாரும் உளர்" என இனிமையாக உரைத்துச் சென்றார்.

'மலர்மிசை யேகினன்' என்னும் பெயரால் 'பூமேல் நடந்தான்' என்பதையே குறித்தாராயின், 'போதிக்கீழ் இருந்தான், பிண்டிக்கீழ் இருந்தான்' என்பன போன்ற பெயர் களையும் அவர் தடையின்றித் தமது கடவுள் வாழ்த்தில் வழங்கி யிருத்தல் கூடும்; அவ்வாறு வழங்கின், அவரைத் தடுப்பார் ஒருவரும் இல்லை. அங்ஙனம் வழங்காமையால், எந்த ஒரு சமயத்திற்குரிய கடவுள் சிறப்புப் பெயரையும் அவர் தமது கடவுள் வாழ்த்தில் கூறவில்லை என்பதே தேற்றம். 'ஆதி பகவன், அறவாழி யந்தணன்' என்பவற்றைச் சமண பௌத்த சமயக் கடவுட் பெயர் எனக் கூறுவார் கூற்றும் பொருந்தாது என்பதும் இங்குக் கூறிய இம் முறையினாலேயே நன்கு பெறப் படுகின்றது.

'மலர்மிசை ஏகினன்' என்பது 'பூமேல் நடந்தான்' என்னும் பெயராகாது, இறைவனது இயல்புகளுள் ஒன்றைக் குறித்தது எனின், அவ்வியல்பு யாது? என்னும் வினா எழுதல் இயல்பாதலின், அதற்கு விடை காண வேண்டுவது இன்றியமை யாததே.

'மலர்' என்னும் பெயரை அடைமொழியின்றிக் கூறினும், தலைமை பற்றி அது தாமரை மலரையே குறித்தல் வழக்கு. 'மலர் மிசை ஏகினன்' என்பதில், 'மலர்' என்றது புறத்தில் உள்ள தாமரை மலரைக் குறித்ததென்றல் பொருந்தாமையால், அகத்தில் உள்ள நெஞ்சத் தாமரையையே அஃது ஐயமின்றிக் குறிக்கும். எனவே, 'மலர்மிசை ஏகினன் என்பதற்கு, 'நெஞ்ச மாகிய தாமரை மலரின்மேல் சென்றவன்' என்பது பொருளாம். இறைவன் அன்பரல்லாரது நெஞ்சத்தில் செல்வதில்லையாத லால், நெஞ்சத்தாமரை என்பது அன்பரது நெஞ்சத்தாமரையே

யாம். இறைவன் அன்பரது நெஞ்சத் தாமரையின்கண் செல்வது அவர் நினைத்தபின்பே எனக்கொண்டமையால் பரிமேலழகர் 'ஏகினன்' என இறந்த காலத்தாற் கூறியது என்னையோ என ஐயுற்று அதற்கு அமைதி கூறினர். ஆயினும்,

"துஞ்சும் போதும் சுடர்விடு சோதியை
நெஞ்சுள் நின்று நினைப்பிக்கு நீதியை" (அப்பர்)

என்றபடி, வினைமாசு தீர்ந்து தூயராய அன்பரது நெஞ்சத் தாமரையில் இறைவன் அவர் தன்னை நினைதற்கு முன்பே நின்று அவரைத் தன்னை நினைக்குமாறும் செய்தல் பற்றி அங்ஙனம் கூறினர் எனல் பொருந்துமாகலின், அதுபற்றி ஐயமில்லை என்க. அன்றியும், 'பிறவிடத்துக் காணப்படாது அன்பரது நெஞ்சத் தாமரைக்கண்ணே சென்று நின்றவன்' எனினும் அமைவதேயாதல் அறிந்துகொள்க.

மலர் என்பது நெஞ்சைக் குறித்தல் ஆகுபெயர் அல்லது உருவகம் என்னும் இரண்டினுள் ஒன்றுஅல்லது நேரிதின் இல்லை. ஆகவே இறைவனை அன்பரது உள்ளத்து இருப்பவன்' எனக்கூறுதல் திருவள்ளுவர் கருத்தாயின், அதனை நேரே, 'மனமிசை ஏகினன்' என்றாற்போல வெளிப்படையாகவே கூறிப்போகாது, 'மலர்மிசை ஏகினன்' எனக் குறிப்பாற்கூற வேண்டுவது என்னைஎனின், 'மலர்மிசை ஏகினன்' எனின் வருவதொரு சிறந்த பயன் கருதியே திருவள்ளுவர் அங்ஙனங் கூறினர். அப்பயன் யாது எனின், அன்பரது நெஞ்சத்தை 'மலர்' என்றமையால், அந்நெஞ்சத்தின் மென்மையும் பொலிவும், உயர்வும் தோன்றுதலும் பின் அதுவழியாக அன்னதோரிடத்தன்றிப் புலனாகாத இறைவனது சிறப்புத் தோன்றுதலுமே அப்பயன் என்க. எனவே, 'மனமிசை-ஏகினன்' என்றாற்போலக் கூறின் அதனாற் சிறப்பின்மை அறிந்துகொள்க.

இனிக் கடவுளைப் புறத்துப் பூமேல் நடப்பவன் எனக் கொள்பவரும் அதற்கு உண்மைப்பொருள், அகத்தே அடியவரது நெஞ்சத்தாமரையின்கண் நிற்பவன் என்பதே எனக் கொள்ளுதல் இன்றியமையாததாம். இல்லாவிடில், அங்ஙனம் நடப்பவன் எனக் கொள்வதால் வருவதொரு பயன் இல்லையாம். அடியவரது நெஞ்சத்தைத் தாமரையாக்கி, இறைவனை அதன்கண் விளங்குபவனாகக் கூறுதல் இத்துணை உயர்வுடையதாய் இருத்தலின், கடவுட் கொள்கையுடைய சமயங்கள் யாவும் இம்முறையை ஒருங்கே மேற்கொண்டன.

சைவ சமயத்தில் அகத்தே, நெஞ்சத்தை நிலமுதல் (பிருதிவி முதல்) நாதம் ஈறான தத்துவங்களால் அமைந்த தாமரை

மலராகவும், இறைவனை அத்தாமரை மலரின்மேல் இருப்பவனாக வும் வைத்து வழிபடுவதும், புறத்திலும் அங்ஙனமே இறைவனைப் பத்மாசனத்தின்மேல் எழுந்தருளுவித்து வழிபடுவதும் எங்கும் ஒருபடித்தாகக் காணப்படுவனவாம்.

" எரியாய தாமரைமேல் இலங்கி னாரும்
இடைமருது மேவிய ஈச னாரே "

' புந்தியாய்ப் புண்டரிகத் துள்ளாய் போற்றி " (அப்பர்)

என்றாற்போல இறைவனைத் தாமரை மலரின்மேல் வீற்றிருப் பவனாகக் கூறும் திருமுறைத் திருமொழிகள் பல. இன்னும்

" நினைப்பவர்மனம் கோயிலாகக் கொண்டவன் "

" காலையும் மாலையும் கைதொழு வார்மனம்
ஆலயம் ஆரூர் அரனெறி யார்க்கே " (அப்பர்)

" இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் "

" அடியார் உள்ளத் தன்புமீ தூரக்
குடியாக் கொண்ட கொள்கையும் சிறப்பும் "
(திருவாசகம்)

என்றாற்போல, ' இறைவன் அடியவர் உள்ளத்தையே உறைவிட மாகக் கொண்டவன் ' எனக் கூறும் திருமொழிகளும் பல. இவற்றாலெல்லாம் இறைவன் அடியவர் உள்ளத்தில் அவர் நினைத்த வடிவொடு தோன்றுதலும் கூறப்படுவதாம். இறைவன் தனக்கென ஒருவடிவம் இல்லாதவன் ஆதலின், அன்பினால் நினைவார் நினைவின்வழி அவன் கொள்ளும் வடிவமெல்லாம் அருட்டிருமேனிகளேயாம். ஆகவே " மலர்மிசை ஏகினான் " என்ற தொடரில், திருவள்ளுவர் இறைவன் தனக்கென உருவம் இல்லாதவனாய், உயிர்களின் பொருட்டு அவ்வப்பொழுது கொள்ளும் அளவிறந்த அருட்டிருமேனிகளை உடையவனாவன்' எனக் கூறினாராதல் அறிக.

" நானாவித உருவாய் நமை ஆள்வான் " (சம்பந்தர்)

" ஆருருவ உள்ளுவார் உள்ளத் துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந் தோன்றும் " (அப்பர்)

என்றாற்போலும் திருமுறைத் திருமொழிகளைக் காண்க.

இங்ஙனம் அறநெறியிற் கூறப்பட்ட பொருளும் அருள் நெறியிற் கூறப்பட்ட பொருளும் ஒருபடித்தாய் விளங்குதலை யறிந்து மக்கள் இருநெறியையும் கடைப்பிடித்து ஒழுகுவார் களாக.

# அறநெறியும் அருள்நெறியும்

## 5. "வேண்டுதல் வேண்டாமை இலான்" *

தனக்கென ஒரு வடிவம் இல்லாதவனாகிய இறைவன், அன்பால் நினைவார் நினைந்த வடிவோடு அவரது உள்ளக் கமலத்தில் விளங்குவான் என்பதை, 'மலர்மிசை ஏகினான்' என்னும் பெயரால் குறித்த திருவள்ளுவர், பின் இறைவனை, 'வேண்டுதல் வேண்டாமை இலான்' என்னும் பெயரால் குறிக்கின்றார்.

'வேண்டுதல்' என்பது தன்னிடத்தில் இல்லாத பொருளைத் தனக்கு இன்றியமையாததாகக் கருதி அதனைப்பெற அவாவுதல். அன்றியும், தன்னிடத்து உள்ள பொருளைத் தனக்கு இன்றியமை யாததாகக் கருதி அதன்கண் பற்றுச்செய்தலும் வேண்டுதலே யாம். இவ்விரண்டும் 'விரும்புதல்' என்பதன்கண் அடங்கும். இனி, 'வேண்டாமை' என்பது இங்கு எதிர்மறையை உணர்த் தாமல் மறுதலையை உணர்த்துகின்றது. அஃதாவது, 'வேண் டாமை' என்பது, 'விரும்பாமை' என்று பொருள் தாராமல், விரும்புதலுக்கு எதிராய வெறுத்தலைக் குறிக்கிறது. வெறுத்த லாவது ஒரு பொருள் தன்னை அணுகுவதாயினும், அல்லது தன்னிடத்தில் உள்ளதாயினும் அதனால் தனக்குத் தீங்கு வருவ தாகக் கருதி அதனைத் தன்னிடத்து வாராதபடி தடுத்தல் அல்லது அதனை அப்புறப்படுத்துவது. 'இவ்விரண்டு தன்மை யும் இல்லாதவன் இறைவன்' என்பதை, 'வேண்டுதல் வேண் டாமை இலான்' என்னும்பெயரால் குறிக்கின்றார் திருவள்ளுவர்.

அஃதாவது, 'யாதொரு பொருளையும் இஃது எனக்கு இன்றியமையாதது என விரும்புதலோ அல்லது இஃது எனக்கு ஆகாதது என்று வெறுத்தலோ இறைவனுக்கு இல்லை" என் பதாம்.

ஆறறிவு படைத்த மக்கள் முதல் ஓரறிவு படைத்த தாவரங் கள் ஈறாக எல்லா உயிர்களிடத்தும் நாம் இந்த இரண்டையும் தவறாது காண்கின்றோம். ஒன்றல்ல; இரண்டல்ல; எத்து ணையோ பொருள்களை ஒவ்வோர் உயிரும் விரும்புகின்றது; வெறுக்கின்றது. விரும்பிய பொருளை அடைவதற்கும், வெறுக்

* 10—7—68 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

கின்ற பொருளை அகற்றுவதற்கும் எண்ணுகின்ற எண்ணங்களே, 'கவலை' எனப்படுகின்றது. உயிர்கள் விரும்புகின்ற பொருளும் வெறுக்கின்ற பொருளும் அளவுடையனவாயின், அவைபற்றி அவ்வுயிர்கட்கு உண்டாகின்ற கவலைக்கும் அளவிருக்கும். அப்பொருள்கட்கு அளவில்லாமையால் அவைபற்றி எழுகின்ற கவலைக்கும் அளவில்லாமல் இறுதிகாறும் உயிர்கள் கவலையிலேயே அழுந்தி ஒழியவேண்டுவதாகின்றது,

" ஒருபொழுதும் வாழ்வ தறியார் ; கருதுப
கோடியும் அல்ல பல "

என்று மற்ருேரிடத்தில் திருவள்ளுவரே கூறுகின்ருர். ஔவையாரும், 'மக்களாயினும் அவர்கள் உண்பதற்கு ஒரு நாளைக்கு வேண்டுவது நாழியரிசி; உடுப்பதற்கு வேண்டுவது நான்குமுழ ஆடை. இந்த அளவில் தங்கள் கவலையை நிறுத்திக்கொள்ளாமல் அளவில்லாத பொருளை விரும்பியும், வெறுத்தும் ஏன் கவலைப்பட்டுக் கழிகின்ருர்கள்' என்று இரங்கும் நிலையில்,

" உண்பது நாழி ; உடுப்பது நான்குமுழம்
எண்பது கோடிநினைந் தெண்ணுவன — கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்துணையும் சஞ்சலமே தான் "

என்ற வெண்பாவைக் கூறியுள்ளார். இதில் அவர் இவ்வாறு கவலையுறும் மக்களைக் 'கண்புதைந்த மாந்தர்' அஃதாவது, " அறிவுக் கண்ணை இழந்த மக்கள் " என்று குறிப்பிடுதலைக் காணலாம். எனவே, " அறிவாகியகண் திறக்கப்பட்டால் இந்தக் கவலைக்கே இடமில்லை " என்பது புலனுகின்றது.

கண்புதைந்த மாந்தர் குடிவாழ்க்கைக்கு அவர் கூறிய உவமை மண்ணின் கலம். மண் பாத்திரத்தை வாங்கிவிட்டால் அஃது உடையும் வரையில் கவலைதான். மண் பாத்திரத்தைக் கையாளும் பொழுது மிகவும் விழிப்பாகக் கவலையோடே கையாளவேண்டும். எவ்வளவு கவலையோடு, விழிப்போடு கையாண்டாலும் சிறிது தவறு நேர்ந்து அஃது உடைந்து போதல் இயற்கை. பொற்கலத்தை வாங்கிவிடுவோமாயின், சிறிதும் கவலையின்றி அதனைக் கையாளலாம். ஆகவே மக்கள் தங்கள் வாழ்க்கையை மட்கல வாழ்க்கையாகச் செய்யாமல் பொற்கல வாழ்க்கையாகச் செய்துகொள்வதே அறிவுடைமையாகும். அஃதாவது விருப்பு வெறுப்புக்களை அளவின்றிக் கொள்ளாமல் ஓரளவிலேனும் நிறுத்திக்கொள்ளுதல் வேண்டும். இதற்கு வேண்டுவது மெய்யறிவு.

எல்லா உயிர்களிடத்தும் விருப்புவெறுப்புக்கள் சிறிதாயினும் காணப்பட, இறைவனிடத்து அவை ஒரு சிறிதாயினும் இல்லாமைக்குக் காரணம் என்ன? அவன் பிறிதொரு பொருளால் நிரப்பப்படும் குறைவிலனாய் இருப்பதே காரணம். ஒருவர் ஒரு பொருளை விரும்புதற்குக் காரணம் அவர் அப்பொருளால் வரும் நிரப்பப்படும் குறையுடைமையேயாம். ஒரு பொருள்மேல் விருப்பம் உண்டாகுமாயின், அதன் மறுதலையாய பொருள்மேல் வெறுப்பு உண்டாதல் இயற்கை. இறைவன் யாதொருபொருளால் நிரப்பப்படும் யாதொரு குறையும் இலன், ஆதலின் யாதொரு பொருளை விரும்புதலும் அவனுக்கு இல்லை. விரும்பப்படும் பொருள் இல்லையாகவே, அதன் மறுதலைப் பொருளை வெறுத்தலும் அவனுக்கு இல்லை. விருப்பு வெறுப்புக்கள் இல்லையாகவே அவைபற்றி எழும் பல்வகை எண்ணங்களாகிய கவலையும் அவனுக்கு இல்லை.

ஒரு பொருளால் நிரப்பப்படும் குறையுடையவர்க்கு அதனால் வருவது துன்பமே. அக்குறை இல்லாதவர்க்கு உளதாவது இன்பமே. எனவே, குறைஒன்றும் இல்லாதவனாகிய இறைவன், நிறைந்த இன்பமே வடிவாய் இலங்குகின்றான். இன்பத்தை வரையறுக்கும் எல்லை துன்பமேயாதலின், துன்பமே இல்லாத இறைவனது இன்பம் வரம்பில் இன்பம் ஆகின்றது. எனவே, இந்த வரம்பில் இன்பமாகிய குணத்தையே திருவள்ளுவர் "வேண்டுதல் வேண்டாமை இலான்" என்னும் பெயரால் குறித்தார். 'வரம்பில் இன்பம்' என்பதும், 'பேரின்பம்' என்பதும் ஒன்றேயாதல் தெளிவு. 'இறைவன் பேரறிவும், பேராற்றலும், பேரருளும் உடையனாய் இருத்தல்போலப் பேரின்பமும் உடையவன்' என்பது இதனால் விளங்குகின்றது.

உயிர்கள் இங்ஙனமின்றி இன்னல் உறுதற்குக் காரணம், அவை சிற்றறிவும் சிறிதாற்றலும் உடையனவாய் இருத்தலும், அச்சிற்றறிவும் சிறிதாற்றலும் ஆணவ மலத்தால் மறைக்கப்பட்டு அவைகளை இழந்து நிற்றலுமேயாகும். எனவே, உயிர்கள் இத்துன்பம் நீங்கி நிறைந்த இன்பத்தைப் பெறவேண்டுமாயின், அவ்விறைவன் திருவடியையே அடைதல் வேண்டும் என்பது சொல்லாமலே விளங்கும். அதனையே திருவள்ளுவர்,

> "வேண்டுதல்வேண் டாமை இலானடி சேர்ந்தார்க்
> கியாண்டும் இடும்பை இல"

என்று அக்குறளிலே குறித்தார். 'இறைவன் வேண்டுதல் வேண்டாமை இலான்' என்பதனைத் திருநாவுக்கரசரும்,

" வேண்டாமை வேண்டுவது இல்லான் தன்னை "

(திருமுறை - 6-46-9.)

என்று அருளிச்செய்கின்றார்.

" குறைவிலா நிறைவேகுணக் குன்றே " (திருமுறை-7.)

என்று சுந்தரரும்,

" குறைவிலா நிறைவே கோதிலா அமுதே "

(திருவாசகம் 22-6.)

என்று மாணிக்கவாசகரும் இறைவனை, " குறைவிலா நிறைவு " என அருளியது, 'அவன் எத்தகைய குறையும் இல்லாத நிறைந்த நலம் உடையவன் " என்னும் கருத்தினாலேயாதலின், அவனது வரம்பில் இன்பமும் அதனுள்ளே அமைந்து கிடப்பதாம். " சிவன் " என்பதற்கு " நிறைந்த மங்கலமுடையவன் " என்பதே பொருள் என்பதை,

" குறைவிலா மங்கலக் குணத்த னாதலின்
... ... ... ... ...
அறைகுவர் சிவன்என அறிவின் மேலவர் "

எனக் காஞ்சிப் புராணம் கூறுகின்றது. எனவே, " சிவன் " என்பதும் சிறப்பாக, " நிறைந்த இன்பத்தையுடைவன்" என்பதையே குறிப்பதாகும். இதனால் அறநெறியிலும், அருள் நெறியிலும் இன்பப்பொருள் இறைவன் ஒருவனே எனக் கூறப்படுதலை யறிந்து அவனது அடியைச் சேர்ந்து யாவரும் இடும்பையின்றி வாழ்வார்களாக.

---

## பொன்மொழிகள்

நாம் பிறந்ததன் பயன், சாத்திரப் பயிற்சியால் கலைஞானம் வரப்பெற்றுத் தெளிந்து, உணர்வரிய மெய்ஞ்ஞானம் அடைதலேயாம்.

* * * *

நிட்காமிய கருமத்தையும் கடந்த சிவ கருமமே நிருமலனாகிய சிவபெருமானின் திருவருளுக்குநம்மை ஆளாக்கும்; திருவருளின் துணையே அதனைக் கூட்டிவிடும்.

— ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி.

# அறநெறியும் அருள்நெறியும்

## 6. "இறைவன்" *

தமிழ் மொழியிலுள்ள "கடவுள்" என்னும் சொல் எம் மதத்தினர்க்கும் பொதுவாகச் சொல்லப்படுவது. "இறை" என்னும் சொல்லும் அத்தகையது எனினும், "இறை" என்பதை இறைவன் என ஆண்பாலாகவும், "இறைவி" எனப் பெண்பாலாகவும் இறைவர் எனப் பலர்பாலாகவும் ஆக்கி வழங்குவர். "கடவுள்" என்னும் சொல்லை அவ்வாறு ஆண்பால் பெண்பால்களாக ஆக்கிக்கூறும் வழக்கம் பெரும்பாலும் இல்லை. அதனுல் அச்சொல் இருபாலுக்கும் பொதுவானதேயாம். என்ருலும், அதனை ஆண்பாற் சொல்லாகவே நினைக்கின்றனர். "கடவுளான், கடவுளார்" என்ற ஆட்சிகள் சிறுபான்மையாக உண்டு.

இறைவனைக் குறைவற்ற நிறைவுடையவன் எனக் கூறுதற்கு அவனை "வேண்டுதல் வேண்டாமை இலான்" - எனக் குறித்த திருவள்ளுவர் பின்பு அவனை இறைவன் என்றே குறித்துள்ளார். "இறை" என்னும் சொல் இறு+ஐ என்னும் சொற்களின் சேர்க்கையால் ஆகியது. இறுத்தல்—எவ்விடத்தும் தங்குதல் என்பது இதன் பொருள். சிலர் இற+ஐ இறை என வந்தது என்று கூறுவர். 'இறத்தல்' என்பதற்கும் 'கடத்தல்' என்பதே பொருளாகையால் இரு சொல்லுக்கும் ஒரு பொருளே உள்ளது எனக் கூறுதல் சிறப்பு உடையதன்று. எனவே இறை என்பதற்கு இருத்தல் என்பதே பொருளாகும். இப்பெயரால் கடவுள் எல்லாப் பொருளிலும் நிறைந்து நிற்பவன் என்னும் கருத்தைத் திருவள்ளுவர் கூறியவர் ஆகின்ருர்.

கடவுள் என்பதற்குக் கடத்தல் என்பது பொருள். எனவே, அப்பெயரால் இறைவன் எல்லாப் பொருளையும் தன்னுள் அடக்கி நிற்கின்ருன் என்பது விளங்கும். கட + உள் கடவுள் என்பதாம். இதனையும் சிலர் கடவு+உள் எனப் பிரித்து கடவுதல் — செலுத்துதல் எனப் பொருள் கூறுவர். இப்பொருளைக் குறிக்க இயவுள் என வேருெரு சொல் உள்ளது.

கடவுள், இறை, இறைவன் என்ற சொற்களில் கடவுள் என்பது தொல்காப்பியம் முதலிய பண்டைத் தமிழ் நூல்களில்

---

* 10—8—68 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

நன்கு ஆளப்பட்டுள்ளது. ஆயினும் திருவள்ளுவர் அதனை ஆளாது இறை இறைவன் என்னும் சொற்களை ஆண்டிருக் கின்றார். அதற்குக் காரணம் இறைவன் எல்லாப் பொருள் களையும் கடந்து நிற்கின்ற தன் நிலையிலே இருந்து விடுவான் ஆயின் இவ்வுலகத்தை இயக்குதல் இயலாது. உலகத்தில் உள்ளவர்களும் அவனை அடைய இயலாது. ஆகவே கடவு ளுக்கும், உலகத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதை மறவாதிருத்தற் பொருட்டே திருவள்ளுவர் இறை, இறைவன் என்னும் சொற்களால் கடவுளை எவ்விடத்திலும் கூறியுள்ளார்.

எல்லாப் பொருள்களையும் கடந்து நிற்கின்ற இறைவன் இவ்வுலகத்தை இயக்க வேண்டுமாயின் அணுவிற்கு அணுவாய் அவற்றில் நன்கு நிறைந்து நிற்றல் வேண்டும். இவ்வாறு நிறைந்து நிற்கும் நிலையே சக்தி எனக் கூறப்படுகின்றது. இறைவன் அறிவே வடிவினன் ஆகையால் அவன் எல்லாப் பொருளிலும் நிறைந்து நிற்பதும் அறிவு மயமாகத்தான். இதனை உமாபதிதேவ நாயனர்,

“அகர உயிர் போல் அறிவாகி எங்கும்
நிகரில்இறை நிற்கும் நிறைந்து”

எனக் கூறியுள்ளார். இறைவனுக்கு அகரமாகிய உயிரெழுத்து உவமையாகச் சொல்லப்படினும் அவ்வெழுத்து அறிவற்ற பொருள். இறைவன் அவ்வாறின்றி அறிவே வடிவானவன் என்பதைக் குறித்தற்பொருட்டே “அறிவாகி” என்ற தொடர் கூறப்பட்டது. இறைவன் இவ்வாறு எல்லாப் பொருளிலும் அறிவாய் நிறைந்திருப்பதால் எந்த நிகழ்ச்சியையும் எப்பொழு தும் அறியவல்லவனுகின்றான். அவ்வாறு அறிவதே ‘முற் றுணர்வு’ எனப்படுகின்றது. கடவுளின் மறுவடிவமாக இருந்து இவ்வுலகத்தை நடத்துபவன் அரசன் என்பது பற்றி அவனை இறை எனக் குறித்த திருவள்ளுவர் அவனும் இவ்வாறு எங்கே நிகழும் எந்த நிகழ்ச்சியையும் எப்பொழுதும் அறியவல்லவனாய் இருத்தல் வேண்டும் என்பதை,

“எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் தொழில்.”

என்னும் குறளால் கூறியுள்ளார். எனினும் அரசனுக்கு எல்லாரிடத்திலும் எஞ்ஞான்றும் நிகழ்வனவற்றை அறியும் ஆற்றல் இல்லாமையால் ஒற்றர்களைக் கொண்டு அறிந்து ஆவன செய்கின்றான். என்றாலும் ஒற்றர்களாலும் பிற காரணங்

களாலும் மக்களிடத்தில் ஆங்காங்கு நிகழ்வனவற்றை அறிதலில் தவறு நேர்வதும் நிகழ்ச்சியை அறிய இயலாமற் போவதும் இயற்கையாய் இருக்கின்றன. அதனால் நெடுஞ்செழியன் ஆட்சியைப்போல நேர்மையான அரசர்களிடத்திலும் சிற்சில சமயத்தில் தவறு நேர்ந்துவிடுகிறது. இது மக்களிடத்திலுள்ள குறைபாடாகும். இறைவனுக்கு இப்படிப்பட்ட குறைபாடு இல்லாமையால் நல்லது செய்தோர்க்கு நன்மையையும், தீயது செய்தோர்க்குத் தீமையையும் கொடுத்தலில் தவறு நேர்வது இல்லை எனவே அவரவர் செய்யும் வினைக்கு ஏற்ற பயனைக் கூட்டுவிப்பவன் இறைவனேயாகின்றான்.

வினைகள் மனத்தாலும், வாக்கினாலும், காயத்தினாலும் செய்யப்படுகின்றன. மக்கள் வாக்கினாலும் காயத்தினாலும், செய்வனவற்றைப் பிறர் ஒருவாறு அறிதல் கூடும். மனத்தால் செய்வனவற்றைப் பிறர் அறிதல் சிறிதும் இயலாது. ஆகவே நல்ல எண்ணங்களை எண்ணுபவர்க்கு நன்மையைத் தருவதற்கும் இறைவனே உரியவனாகின்றான். இஃது அவன் முற்கூறியவாறு அறிவே வடிவமாய் எல்லாப் பொருளிலும் நீக்கமற நிறைந்து நிற்கும் தன்மையினாலேயே இயல்கின்றது. எனவே உலகத்தை ஒழுங்குபட நடத்துதற்கு இறைவன் எல்லாப் பொருளிலும் நிறைந்திருக்க வேண்டுவது இன்றியமையாததாகின்றது. இதைக் குறிப்பிடவே திருவள்ளுவர் கடவுளை இறைவன் என்னும் சொல்லால் குறிக்கின்றார்.

இறைவன் எல்லாப் பொருளிலும் நிறைந்திருக்கும் தன்மையைத் திருமுறைகள் பலவாறாக விளக்குகின்றன.

"இருநிலனாய்த் தீயாகி நீருமாகி" என்று தொடங்கும் திருத்தாண்டகப்பதிகம் முழுவதும் இறைவன் எல்லாப் பொருளிலும் நிறைந்திருப்பதை இனிது விளக்குகின்றது. இது கருதியே மாணிக்கவாசகர்.

"வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே"

என்று பாடுகின்றார். இன்னும் அவர்,

"பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி"

என அருளிச் செய்திருப்பது பஞ்சபூதங்களிலும் இறைவன் அவற்றின் உள்ளீடாக நிறைந்திருத்தலை விளக்குகின்றது.

பஞ்சபூதங்களின் சேர்க்கையே உலகம். அவையனைத்திலும் இறைவன் இவ்வாறு நிறைந்திருக்கின்றான் என்றால் உலகத்தில் அவன் இல்லாத பொருளே இல்லையென்பது நன்கு வெளியாகின்றது. பாரிடை ஐந்து என்றது, சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்துமாம். எனவே உலகத்தில் நம்மால் அனுபவிக்கப்படுவன இவ்வைம்புலன்களேயாதலின் அவையனைத்திலும் இறைவன் இருக்கின்றான் என்பது தெரிகின்றது. இவைகளில் உண்டாகின்ற இச்சை காரணமாகவே உயிர்கள் வினையைச் செய்கின்றன. ஆகையால் இவற்றில் நிறைந்துள்ள இறைவன் அவ்வினைகளை எளிதில் அறிந்து பயன் கொடுக்கின்றான்.

நல்வினை தீவினை யென வினைகள் இரண்டு. அவற்றைச் செய்தோர் அவைகளின் பயனைத் தப்பாமல் அனுபவிப்பர் என்பது, இறைவன் அதனைக் கூட்டுவிப்பதனாலேயே. அவன் எல்லாவற்றையும் எப்பொழுதும் அறிபவன் ஆதலால் தீவினையைச் செய்தோர் அதனினின்றும் தப்புதல் இயலாது. வஞ்சனையால் பிறரை ஏமாற்றி மகிழ்கின்றவர்கள் தம்முடைய வஞ்சனையை இறைவன் காண்கின்றான் என்பதை நினைப்பதில்லை. இதுவே மக்கள் பிறரை வஞ்சித்தற்குக் காரணம். இது கூடாது என்பதைக் குமரகுருபர அடிகள்,

“ வஞ்சித் தொழுகும் மதியிலிகாள் யாவரையும்
வஞ்சித்தேம் என்று மகிழன்மின் — வஞ்சித்த
எங்கும் உளனொருவன் காணுங்கொல் என்றஞ்சி
அங்கங் குலைவ தறிவு.”

என்று கூறியுள்ளார். இவ்வுண்மையை அறிவார்களாயின் மக்கள் ஒருபோதும் தீவினை செய்யமாட்டார்கள். தீவினைப் பயனையே யன்றி நல்வினைப் பயனையும் பிறப்பு எடுத்தே அனுபவிக்கவேண்டுமாதலின், நல்வினையும் பிறவியைத் தருவதேயாம். ஆகவே பிறவிக்கடலைக் கடக்கவேண்டுவோர், நல்வினை, தீவினை யென்னும் இருவினைகளினின்றுமே நீங்குதல் வேண்டும். அவ்வாறு நீங்குதல் எங்ஙனம் இயலும்? என்று கேட்பவர்களுக்குத் திருவள்ளுவர் இறைவனது பொருள்சேர் புகழை எப்பொழுதும் விரும்பிச் சொல்பவர்களே இருவினையினின்றும் நீங்குதல் கூடும் என்கின்றார். வினையின் பயனைக் கூட்டுவிப்பவன் இறைவனாகையால் அதனினின்றும் நீங்குதற்கு அவனை நினைப்பதே வழியாகும்.

இதை விளக்குதற்கே இவ்விடத்தில் திருவள்ளுவர் கடவுளை இறைவன் என்னும் சொல்லால் குறித்திருக்கின்றார்.

" இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு "

என்பது அக்குறள். திருமுறைகளில் வினை நீங்குவதற்குச் சொல்லப்படும் வழியும் இதுவே. இறைவனை வாழ்த்துதல், வணங்குதல், நினைத்தல் என்பவற்றைச் செய்தால் தொல்வினை தீரும்; ஊழ்வினை நலியா; மேல்வினையடையா என்றெல்லாம் திருமுறைகளில் எண்ணிறந்த இடங்களில் வருதல் காணலாம். தொல்வினை அல்லது பழவினையென்பதை 'சஞ்சிதம்' என்றும், ஊழ்வினையை 'பிராரத்தம்' என்றும், மேல்வினையை 'ஆகாமியம்' என்றும் சாத்திரங்கள் கூறும். இவ்வினைகள் அனைத்தும் நீங்குதற்கு எங்கும் நிறைந்து எல்லாவற்றையும் அறிந்து எப்பயனையும் தருகின்ற இறைவனை அடைவதொன்றே வழியாகும் என்பது அறநெறியிலும், அருள்நெறியிலும் ஒரே வகையாகக் கூறப்படுவதை உணர்ந்து மக்கள் இறைவனை யடைந்து உய்வார்களாக.

---

## பொன்மொழிகள்

மாற்றம் காணா இடத்தில் மகிழ்ச்சி ஏது? உண்டதையே உண்டு, கண்டதையே கண்டு, உடுத்ததையே உடுப்பதில் உலகம் மகிழ்கிறதா? பரிணாமத்தில் அல்லவா களிப்பைக் காண்கிறது!

• • • *

மனிதன் என்றால் மனம் உடையவன்: நினைப்பவன் என்று பொருள். நினைப்பது இறைவன் திருவடியேயாகும். திருவருளிருந்தாலன்றி அவன் திருவடியை நினைக்கும்பேறும் மனிதனுக்குக் கிடைக்காது.

— ஸ்ரீலஸ்ரீ கபிலக் குருமணி.

## 7. "பொறிவாயில் ஐந்தவித்தான்"*

கடவுளது எங்கும் நிறைந்திருக்கின்ற தன்மையைப் புலப் படுத்தற் பொருட்டு 'இறைவன்' என யாவரும் வழங்கும் பெயரால் குறித்த திருவள்ளுவர், பின்பு அவனைக் குறித்தற்கு ஆக்கி வழங்கிய பெயர், "பொறிவாயில் ஐந்தவித்தான்" என்பது. இதனுள் "பொறி" என்றது, 'மெய் வாய், கண், மூக்கு, செவி' என்பவற்றை. இவ்வைந்தையும், 'ஐம்பொறிகள்' என வழங்கு தல் யாவரும் அறிந்தது. இனி, "ஐந்து" என்ற எண்ணுப் பெயர் ஆகுபெயராய் ஐந்து ஆசைகளைக் குறித்தது. ஆசை என்பது ஒன்றேயாயினும், அதனை "ஐந்து" என்றது, ஆசைக்குக் காரணமாய் உள்ள புலன்கள் ஐந்தா கலின், அப்புலன்கள் ஒவ்வொன்றின்மேலும் ஆசை செல்லுதல் பற்றியாம்.

மேற்குறித்த ஐம்பொறிகட்கும் புலனாகின்ற பொருள்கள் ஐந்து. அவை முறையே 'ஊறு' சுவை, ஒளி, நாற்றம், ஓசை, என்பன. இவை 'பரிசம், ரசம் ரூபம், கந்தம், சத்தம், என வடமொழியிற் சொல்லப்படும். இவையே ஐம்புலன்களாம். இவ்வைம்புலன்கள்மேல் ஆசை உண்டாதல், மனம் ஐம்பொறி களின் வழியே சென்று அவைகளைப் பற்றிய பின்பேயாம். ஆகவே, ஐம்புல ஆசைகட்கு வாயிலாக - வழியாக உள்ளவை மேற்கூறிய ஐம்பொறிகளே. அதனால், "பொறி வாயில் ஐந்து" எனக் குறித்தார் திருவள்ளுவர். 'பொறிகளை வழியாக உடைய ஐந்து ஆசை' என்பது அதன் பொருள். ஆசைகளை ஐந்து என்று குறித்த அதனாலே, பொறிகளும் ஐந்து என்பது சொல்லா மலே விளங்கிற்று.

'அவித்தல்' என்பது. 'அடக்குதல்' எனப் பொருள் தரும். இதனை, "செவிச்சொல்லும் சேர்ந்த நகையும் அவித் தொழுகல் ஆன்ற பெரியா ரகத்து" (குறள்-694) 'ஆன்றவிந் தடங்கிய கொள்கைச் சான்றோர்" (புறம்) என்பன போன்ற பகுதிகளால் உணரலாம். எனவே, "ஐந்து அவித்தான்" என்பது, 'ஐம்புல ஆசைகளை அடக்கினவன்' எனப் பொருள் தருவதாம்.

---

* 10—9—68 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

ஐம்புல ஆசை என்பது மக்களுக்கன்றோ உள்ளது! அதனால், மக்கள் அன்றோ ஐம்புல ஆசையை அடக்கவேண்டும்? இறைவனுக்கு ஐம்புல ஆசை ஏது? அஃது இல்லாதபொழுது அவனை, ஐம்புல ஆசையை அடக்கினவன்' என்பது எப்படிப்பொருந்தும் என்ற ஐயம் உண்டாகலாம்.

இறைவனைத் திருவள்ளுவர் 'ஐம்புல ஆசையை அடக்கினவன்' எனக் கூறியதல்லது, 'என்று அடக்கினன்' எனக் கூறினர் இல்லை. ஆகவே, அதற்கு இறைவன் ஐம்புல ஆசையை ஒருகாலத்தில் உடையவனாய் இருந்து பின்பு மற்றொரு காலத்தில் அதனை அடக்கினன்' எனப் பொருள்கொள்ளவேண்டிய கட்டாயம் இல்லை; 'இயல்பாக என்றுமே ஐம்புல ஆசையை அடக்கியிருப்பவன்' என்று பொருள் கொள்ளலாம். அங்ஙனம் கொண்டால் 'இறைவன் ஐம்புல ஆசையை இயல்பாகவே நீங்கியுள்ளவன்' என்பது பொருளாதல் வெளிப்படை. ஆகவே, அதுவே அதற்குப் பொருளாகின்றது.

திருவள்ளுவர் ஐம்புல ஆசையை இறைவன் என்று அடக்கினன் எனக் கூறுவிடினும், அவர் பொறிவாயில் ஐந்தவித்தான் என்றதற்கு ஒரு காலத்தில் அடக்கினன்' என்றும் பொருள் கொள்ளுதல் கூடுமாகலின், அவ்வாறு ஏன் கொள்ளலாகாது என்று வினவலாம். ஐம்புல ஆசை என்றுமே இல்லாதவன் இறைவனன்றி, அதனை ஒரு காலத்தில் உடையவனாய் இருந்து பின மற்றொரு காலத்தில் அதனினின்றும் நீங்கினவன் இறைவனாக மாட்டான். ஏனெனில் அவ்வாறு, நீங்குவோர் மக்களேயன்றிக் கடவுளல்லர் ஆதலின். எல்லோரும் ஒருகாலத்தில் ஐம்புல ஆசையை ஒருகாலத்து உடையவராய் இருந்து பின்னொரு காலத்தில் நீங்குதல் அல்லது இயல்பாகவே ஐம்புல ஆசை இல்லாதவர் ஒருவரும் இல்லை' எனக் கூறினால், 'அங்ஙனம் கூறுவது இறைவன் என்று ஒருவன் இல்லை' எனக் கூறுதலாகுமேயன்றி வேறில்லை. அங்ஙனம் கூறுவதே திருவள்ளுவர் கொள்கையாய் இருக்குமாயின் அவ்வாறு கூறுவதால் தவறு என்னை என்றுகூடச் சிலர் கேட்கலாம். அதுபற்றிக் கூறுவோம்.

'உண்மை உணர்வு, மூன்றினால் அடையப்படும்' என்பது ஆன்றோர் அனைவரும் ஒருங்கு உடன்பட்ட கொள்கை. அம்மூன்று, 'சுருதி, யுக்தி, அனுபவம்' என்பன. இம்மூன்றினுள் முதன்மை பெற்றது சுருதி; அஃதாவது தொன்று தொட்டு ஆன்றோரால் உடன்படப்பட்ட உண்மை நூல். இத்தகைய நூல்கள், நம்மால் இயற்கையில் உணர்ந்துகொள்ளக் கூடாத

அரிய பொருள்கள் பலவற்றைக் கூறுவனவாகும். இவற்றை நூல்கள் கூறக் கேட்ட பின்னர், அக்கூற்றுப் பொருத்தமாதல் எவ்வாறு என்று நமது அறிவு கொண்டு ஆராய்ந்து, பொருந்துவன கொள்வதே 'யுக்தி' எனப்படுவது. 'யுக்தி' என்பது, தமிழில், 'பொருந்துமாறு' என மொழிபெயர்த்து வழங்கப்படும். யுக்தம் - பொருத்தம்; அயுக்தம் - பொருத்த மில்லாதது.

யுக்தியால் 'பொருந்தும்' என உணர்ந்தவற்றைக் கைக் கொண்டு ஒழுகும்பொழுது, அதனுல் குறிப்பிட்ட பயன் விளையக் கண்டு, 'முன்னர்ச் சுருதியில் கூறப்பட்டது உண்மை என உணர்வதே அனுபவமாகும். சுருதி, பொருள்களை அறிவிக்கும். யுக்தி, அவற்றை உறுதிப்படுத்தி அந்நெறியில் ஒழுகுவதற்குரிய ஊக்கத்தைப் பிறப்பிக்கும். அனுபவம், அவ்வொழுக்கத்தின் பயனைய் விளையும். ஆகவே, உண்மை இம்மூன்றிற்கும் ஒத்ததாய் இருக்குமன்றி வேருகாது. எனவே, இம்மூன்றில் ஒன்றிற்கு ஒத்து, மற்ருென்றிற்கு ஒவ்வாதது உண்மையாகாது என்பது வெளிப்படை. இதனுல், எதனையும் யுக்தி, சுருதி, அனுபவம் என்னும் மூன்றற்கும் பொருந்தக் கூறுபவரே நல்லாசிரியர். சற்குரு' என்பர் ஆன்ருேர்.

இங்ஙனமாகவே, சுருதியில் சொல்லப்பட்ட கூற்று இரு வகையாக அல்லது பலவகையாகப் பொருள்படும் நிலை இருக்கு மாயின், அங்கு யுக்திக்கும் அனுபவத்திற்கும் ஒத்தபொருளே பொருளாகக் கொள்ளப்படும். இதனை, 'பல்பொருட் கேற்பின் நல்லது கோடல்'' என்பர் தொல்காப்பியர். திருவள்ளுவர் தெய்வப் புலமையுடைய சிறந்த நல்லாசிரியர், என்பதும், அவரது வாய்மொழி நல்லதொரு சுருதி என்பதும் உயர்ந்தோர் அனைவர்க்கும் உடன்பாடு. ஆகவே, அவரது சுருதியில் வரும் கூற்று, இருவகையாகப் பொருள்கொள்ளக் கிடக்கு மாயின், அவற்றுள் யுக்திக்கு ஒத்த பொருளே பொருளாகக் கொள்ளப்படும். அங்ஙனங் கொள்ளுங்கால், 'ஐம்புல ஆசையை இயல்பாக நீங்கினுர் ஒருவரும் இல்லை' என்பது யுக்திக்குப் பொருந்தாமையைக் காண்போம்.

ஐம்புல ஆசையே 'பற்று' எனப்படுகின்றது. 'யான்' என்றும், 'எனது' என்றும் பற்று இருவகைப்பட்டது. அவற்றுள். 'யான்' என்பது அகப்பற்று; 'எனது' என்பது புறப் பற்று இவற்றுள் முதலாவது, 'யான்' என்னும் அகப்பற்றே. அதன் வழியாகவே, 'எனது' என்னும் புறப்பற்று உண்டா

கின்றது. பற்றை நீக்குங்காலத்துப் புறப் பற்றை முன்னே நீக்கி, அகப்பற்றை அதன்பின்பு நீக்கலாம். ஆயினும், பற்றுத் தோன்றும் பொழுது முன்னே அகப்பற்றுத் தோன்றிப் பின் அதுவழியாகவே புறப்பற்றுத் தோன்றும். ஆகவே, அகப்பற்று நீங்காதவரை புறப்பற்று நீங்கியதாகக் கொள்ள இயலாது. இப்பற்று நீங்குவதற்குத் திருவள்ளுவர் கூறும் வழியாது? 'பற்றற்ருன் பற்றினைப் பற்றவேண்டும்' என்பதே. "பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு" என்று அவர் அருளிச்செய்த குறளினை யாவரும் அறிவர்.

"பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்; மற்று நிலையாமை காணப்படும்" என்ற குறளால், பற்று நீங்காமல் பிறப்பு நீங்காது; பற்று உள்ளவரையில் பிறப்பு இருந்தே தீரும்' என்று வலியுறுத்திக் கூறியுள்ளார். எனவே, 'பிறப்பு நீங்க வேண்டுமாயின், பற்று நீங்கவேண்டும்; பற்று நீங்கவேண்டு மாயின், பற்றற்ருன் பற்றினைப் பற்றவேண்டும்' என்பதும், 'பற்றற்ருன் பற்றினைப் பற்றுதல் தவிர, பற்று அறுதற்கும், அதுவழியாகப் பின் பிறவி நீங்குதற்கும் வேறு வழியில்லை' என்பதும் முடிவாகின்றன. இதனையே கடவுள் வாழ்த்திலும், "பிறவிப் பெருங்கடல் நீந்துவர்; நீந்தார் - இறைவனடி சேராதார்" என்று கூறினர்.

ஆகவே, பற்று அறுதற்குப் பற்றவேண்டிய பற்ருய் உள்ள, 'பற்றற்ருன்' எனப்பட்டவன், இயல்பாகவே பற்று அற்று இருப்பவனு? அல்லது ஒருகாலத்தில் பற்று உடையவனய் இருந்து, பின்பு பற்று அற்றவனு? என்று பார்க்கும்பொழுது, ஒருகாலத்தில் பற்று உடையவனய் இருந்து பின்பு பற்று அற்ருன் எனின், பற்றற்ருன் பற்றினைப் பற்றுதல் தவிரப் பற்று அறுதற்கு வேறு வழி இல்லாமையால் அவன் எந்தப் பற்றற்ருன் பற்றினைப் பற்றித் தனது பற்றை அறுத்துக்கொண் டான்' என்ற கேள்வி எழும். அதற்கு ஒருவனைக் குறிப்பின், அவன் இயற்கையில் பற்று அற்றவனு? முன்பு பற்று உடைய வனயிருந்து பின்பு, பற்று நீங்கியவனு என்ற வின, பின்னும் எழும். யாரேனும் ஒருவனை இயற்கையிலே பற்று அற்று இருப்பவன் என்று கூருதவரையில் இந்தக் கேள்வி எழவே செய்யும். இவ்வாறு முடிவின்றி வின எழச்செய்வதை, 'வரம் பின்றி ஓடல்' என்னும் குற்றம் என்று அளவை நூலார் கூறுவர். ஆகவே, முதலிலே, பற்றற்ருன்' என்று குறிப்பிடப் பட்டவனையே இயற்கையில் பற்றற்றவன் என்று கூறுவதுதான் முறை. அதனல் வருங் குற்றம் யாதும் இல்லை. இயற்கையில்

பற்று அற்றுனாக இருப்பவன் ஒருவனே; அவன்தான் இறைவன், அல்லது கடவுள். அவனது பற்றினைப் பற்றியே பலரும் பற்று அறவேண்டியவர்களாய் உள்ளனர். அங்ஙனம் பற்று அற்று வீடு பெற்றோர் எண்ணிறந்தோர். இனி வீடு பெற இருப் போரும் எண்ணிறந்தோர். எனவே, ‘‘ பற்றற்றான் ’’ என்ற சுருதி, ‘ இயற்கையில் பற்று அற்று இருப்பவன் ’ என்றும், ‘ ஒருகாலத்தில் பற்று உடையவனாய் இருந்து பின்பு பற்று அற்றவன் ’ என்றும் பொருள்கொள்ளும் வகையில் பொதுவாக நிற்பினும், மேற்கூறியவாறு யுக்திக்கு ஏற்குமாறு ஆராயு மிடத்து, இயற்கையில் பற்று அற்றவன் ’ என்ற பொருளே தரும் என்பது தெளிவாகின்றது. அதே நிலைதான், ‘‘ பொறி வாயில் ஐந்தவித்தான் ’’ என்பதற்கும் உள்ளது. ஆகவே, ‘‘ பொறிவாயில் ஐந்தவித்தான் ’’ என்பது, இயற்கையிலே, ‘‘ ஐம்புல ஆசைகளை அடக்கினவன் ’’ என்ற பொருளே தருவதா யிற்று.

‘‘ அங்ஙனமாயின் ஆகுக : திருவள்ளுவர் இவ்வாறு இடர்ப் பட்டுப் பொருள் காணுமாறு ‘‘ பொறிவாயில் ஐந்தவித்தான் ’’ ‘‘ பற்றற்றான் ’’ ( என்று ஏன் கூறவேண்டும் ? ‘ பொறிவாயில் ஐந்து இல்லாதவன் ’, ‘‘ பற்று இல்லாதவன் ) என்று ஒரே வகையாகத் தெளிவுபடப் பொருள்தருமாறு ஏன் கூறலாகாது ’’ என்று கேட்பின், ஓர் இன்றியமையாமை பற்றியே அங்ஙனம் கூறினார் என்க. அஃதாவது, ‘‘ பொறி வாயில் ஐந்து இல்லா தவன், பற்று இல்லாதவன் ’’ எனக் கூறின், ‘ இறைவன் ஐம் புலங்களோடு தொடர்பே இல்லாதவன் ’’ என்று ஆகிவிடும். அவ்வாறு ஆகிவிடின் ‘‘ இறைவன் உலகில் உள்ள பொருள் களைக் காண்பதில்லை; கேட்பதில்லை; உறுவதில்லை ’’ என்றாற் போல ஆகி ‘‘ உலகத்தையே அவன் அறியான் ’’ என்பதாக முடியும். அவ்வாறு முடிந்தால், அஃது எத்துணைப் பெரிய தவறான கருத்து என்பது சொல்லத் தேவையில்லை. ‘‘ இறைவன் எல்லாவற்றையும் அறிபவன்; எல்லாவற்றையும் காண்பவன்; எல்லாப் பொருளிலும் பொருந்திநிற்பவன்; அவனே எல்லா வற்றையும் படைக்கின்றான்; காக்கின்றான் ’’ என்பது உண்மை யாய் இருக்க, இறைவனுக்கு உலகமே தெரியாது ; அவனுக்கும் உலகத்திற்கும் தொடர்பே இல்லை ’’ என்று கூறுவது எவ்வளவு தவறான கருத்து! அந்தத் தவறான கருத்தைச் சிலர் சிறந்த தென்றுகூடக் கொள்ளலாம். ஆனால், திருவள்ளுவருக்கு அஃது உடன்பாடில்லாமையால், பொறிவாயில் ஐந்து இல்லாதவன் ’’ என்றோ, ‘‘ பற்று இல்லாதவன் ’’ என்றோ கூறாமல், ‘‘ பொறி வாயில் ஐந்து அவித்தான் ’’ என்றும் ‘‘ பற்று அற்றான் ’’

என்றும் கூறினர். அதனுல், பொறிகளால் புலன்களை அறிதல் அவனுக்கு உண்டு; ஆயினும் அவற்ருல் பந்தப்படுதல் அவனுக்கு இல்லை' என்பதே அத்தொடர்களின் கருத்தாம். இறைவனுக்குப் பொறியாவது, அவன் சத்தியே. இக்கருத்தையே, "நேர்மையைக் கலத்திருந்தே புலன்கள் ஐந்தும் வென்ருனை" என்று திருமுறையும் (6, 50, 3) "பற்றெடு பற்றதின்றி நின்றனன் பரனுமன்றே" என்று சாத்திரமும் (சிவஞான சித்தி. சூ 31) கூறுகின்றன. கௌதம முனிவர், 'அகலிகை' என்னும் மனைவியோடு கூடி வாழ்ந்தாராயினும் அவரைத் திருவள்ளுவர் "ஐந்தவித்தான்" எனக் குறித்திருத்தல் இங்கு நினைக்கற்பாலது. எனவே; ஐம்புலனை அவித்தல் என்பது ஐம்புலநுகர்ச்சியையே அழிப்பது என்று பொருள் படாமல், நுகர்ச்சி இருப்பினும் அதனுல் பந்தப்படாமல், தாமரை இலைமேல் தண்ணீர் போலவும், சேற்றில் மேயும் பிள்ளைப்பூச்சி போலவும் ஒட்டின்றி இருப்பது என்றே பொருள் படுதல் அறிந்துகொள்ளலாம். "வினையின் நீங்கி விளங்கிய அறிவின் - முனைவன் கண்டது முதனூ லாகும்" என்ற தொல்காப்பியச் சூத்திரத்துள், "வினையின் நீங்கி" என்பதற்கும் கருத்து இதுவே என்பதைப் பேராசிரியர் தமது உரையுள் விளக்கியிருத்தல் காணலாம்.

இவ்வாற்ருல் "பொறிவாயில் ஐந்தவித்தான்" என்னும் பெயரால் திருவள்ளுவர் இறைவன் இயல்பாகவே பாசங்களின் நீங்கினவன் என்பதைக் குறித்தவராயினர். இயல்பாகவே பாசங்களின் நீங்கினமை 'அநாதியே முத்தத் தன்மை' என்றும் "நிராமயம்" என்றும் அருள் நூல்களிற் சொல்லப்படும். 'துற வாதே கட்டறுத்த சோதியனை" என்ற திருமுறைத் திருமொழி (6. 11. 1) இறைவன் இயல்பாகவே பாசங்களின் நீங்கி நிற்போனுதலையே குறித்தது. ஆகவே, அறநெறியும், அருள் நெறியும் ஒருதன்மையவாய் இருக்கும் நிலையறிந்து அவற்றின் படி ஒழுகி மக்கள் பயனடையற்பாலராவர்.

---

# அறநெறியும் அருள்நெறியும்

## 8 " தனக்குவமை இல்லாதான் "

இறைவன் எல்லாப் பொருள்களையும் பற்றிநின்றே ஒன்றினும் தோய்வின்றிப் பற்றற்று நிற்கின்றான் என்பதை விளக்க அவனைப் "பொறிவாயில் ஐந்தவித்தான்" எனக் கூறிய திருவள்ளுவ நாயனார், பின்பு அவனை, "தனக்குவமை இல்லாதான்" எனக் குறித்தருளினார். இத்தொடரில், 'உவமை" என்றது, ஒருபுடை ஒப்புமைபற்றி அணி நூலில் கூறப்படும் உவமையோ அல்லது அளவை நூலில் கூறப்படும் உவமையோ அன்று. மற்று, முழுவதும் ஒத்திருத்தலாகிய, 'இனம்' என்னும் பொருளையுடையதாகும். ஏனெனில் ஒருபுடை ஒத்திருத்தலாகிய உவமை இறைவனுக்கு உண்டாதலின், "அகர முதல எழுத்தெல்லாம்" என்று திருவள்ளுவரே காட்டிய உவமையும், 'இது, தலைமை பற்றி வந்த எடுத்துக்காட்டுவமை' என்று பரிமேலழகர் உரைத்த உரையுமே, அணி நூலிலும், அளவை நூலிலும் சொல்லப்பட்ட உவமைபோலும் உவமைகள் இறைவனுக்கும் உளவாதலை நன்கு புலப்படுத்தும்.

அணிநூலில் சொல்லப்படும் உவமை பொருளினது உயர்வு சிறப்பு, அல்லது இழிவு சிறப்பைப்புனைந்துரை வகையால் மிகைப் படுத்திப் புகழ வருவது. 'முகம் சந்திரன்போல்வது; செந்தாமரை போல்வது; சந்திரனை வென்று மிகுவது; செந்தாமரையைவென்று மிகுவது' என்றாற்போல வருவன இதற்கு எடுத்துக் காட்டுக்களாம். 'முகம் சந்திரன் போன்ற ஒளியை உடையது அன்று' என்பது வெளிப்படை. எனவே, முகத்திற்குச் சந்திரனிலும் மிக்க ஒளி இல்லை என்பதைச் சொல்லத் தேவை இல்லை. ஆகவே அணி குறித்து வரும் உவமை முற்றிலும் புனைந்துரையேயாதல் நன்கறிந்துகொள்ளப்படும். அதனால், அவ்வாற்றால் புகழப்படும் அப்பொருள்களின் புகழ்களெல்லாம் முற்றிலும் பொருள்சேர் புகழ்கள் அல்லவாம். தொல்காப்பியர் தமது உவம இயலில் இப்புனைந்துரை உவமைக்கே இலக்கணம் கூறினார். ஏனெனில், அவர், அகமும் புறமுமாகிய பொருள்களைச் சுவைபடக் கூறும் பாடல்களாகிய இலக்கியங்கட்கு உரிய இலக்கணத்தையே கூறப் புகுந்தாராதலின், இப்பாடல்கள் புனைந்துரைகளையுடையன என்பதை, " நாடக வழக்கினும்

---

* 10—10—68 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

உலகியல் வழக்கினும் - பாடல் சான்ற புலனெறி வழக்கம்" என்பதனுல் அவர் குறித்தார். எனவே அவர் கூறியது அப் புலனெறி வழக்கத்தில் வரும் உவமைகளின் இலக்கணமே என்பது தெளிவாயிற்று.

இனி, அளவை நூலில் சொல்லப்படும் உவமை, நேரே காணப்படாத பொருளை அதனேடு ஒருவாறு ஒத்துக் காணப் படும் பொருள்பற்றிக் கருதி யுணர்தற் பொருட்டுச் சொல்லப் படுவது. இது, பொருளின் இயல்பை உள்ளவாறு உணர்த்த வருவதல்லது, அதன் இயல்பை மிகைப்படுத்திப் புனைந்து கூற வருவதன்று. காட்டில் உள்ள ஆமாவை அறியாதவனுக்கு அதனை அறிவிக்கப் புகுவான் ஒருவன், நாட்டில் அவன் காணும் ஆவை (பசுவை)க் காட்டி 'இவ் ஆப்போல்வதே அவ் ஆமாவும்' எனக் கூறுதல் அளவை நூலில் கூறப்படும் உவமைக்கு எடுத் துக் காட்டாகும். இதனுள் புனைந்துரை இல்லாமை தெளிவு. இறைவனது இயல்பினும் உயர்ந்த இயல்பு எப்பொருட்கும் இன்மையால் அவனைப் புகழ்தற்குக் கூறப்படும் உவமைகள் யாவும் அவனினும் குறைபாடுடையனவேயாம். ஆகவே, இறைவனை, 'தாய்போல்பவன்' என்றும், 'கனியும், கட்டியும், பாலும், தேனும், போல்பவன்' என்றும் புகழப்படும் புகழ்க ளெல்லாம் முற்றிலும் பொருள்சேர்ந்த புகழேயாதலோடு, அவ்வுவமைகளில் அடங்காது அவற்றினும் மிக்கிருக்கும் பெரும் புகழ்களாம். அதனுல், இவ்வுவமைகள் அணிநூலில் சொல்லப் படும் உவமைகளோடு ஒருவாறு ஒப்பனவன்றி, முழுவதும் ஒவ்வாவாய்க் கீழ்ப்படுவனவாம்.

திருக்குறள் அறத்துப்பால் பொருட்பால்களில் கூறப்படும் உவமைகள் அணி பற்றி வரும் உவமைகளாகாது, அளவை பற்றி வரும் உவமைகளேயாம். அதுபற்றியே பரிமேலழகர், அணிபற்றியதுபோலக் காணப்படும் உவமைக்குச் சிறப்புப் பொருள் கூறுவர். 'பெண்வழிச் சேறல்' என்னும் அதிகாரத் தில், "இமையாரின் வாழினும் பாடிலரே இல்லாள் - அமையார் தோள் அஞ்சு பவர்" என்ற குறளில் வந்துள்ள, "அமையார் தோள்" என்ற உவமை அணி குறித்ததுபோலக் காணப்படு கின்றது. அதனுல், 'அமையார் தோள் எனவே, அஞ்சுதற் காரணத்தது எண்மை கூறியவாறு' எனச் சிறப்புப் பொருள் கூறினர் பரிமேலழகர். மத்தளம் போல்வனவும், மலை போல் வனவும் ஆகிய மல்லர்கள் தோள்களுக்கு அஞ்சாத ஆண்மகன், தன் இல்லாளது மூங்கில்போலும் தோளுக்கு அஞ்சுதல் இழி வைத் தருவது' என்பது அவ்வுவமையால் குறிக்கப்பட்டது

என்பது அவரது கருத்து. எனவே, திருக்குறளில் மேற்கூறிய இரு பால்களிலும் வரும் உவமைகள் வெறும் புகழ்ச்சிக்காக வன்றிப் பொருளை உள்ளவாறு இனிது விளக்குதற்கு வருவன வாதல் தேற்றம்.

இங்ஙனமாகவே, முதற்குறளில் இறைவனுக்கு அகரத்தை உவமையாகக் கூறியதும், அளவை பற்றிய உவமையேயாயிற்று. சாத்திரங்களில் இறைவனுக்குக் குயவன் முதலியோரை எடுத்துக்காட்டும் உவமைகளும், ஒருவாற்ருன் ஒத்து அவனது இயல்பை ஓரளவு புலப்படுத்தி நிற்கும் உவமைகளேயாம். எனவே, இறைவனுக்கு அணி பற்றியும், அளவை பற்றியும் சொல்லப்படும் உவமைகள் ஓரளவில் உள்ளன என்பது பெறப் படுதலால், "தனக்குவமை இல்லாதான்" என்றதில், உவமை' என்றது, மேற்கூறிய உவமைகளில் ஒன்ருகாது முழுவதும் ஒத்துள்ள, 'இனம்' என்பதையே குறித்தது என்பது முடிவா யிற்று.

இனமாவது, ஒரு நிகரனவாகிய பலபொருள்களின் வகை. இதனையே, 'சாதி' என்பர். ஒரு நிகரனவாய் நிற்கும் குடங்கள் பலவும், 'குடம்' என்ற ஓர் இனத்தைச் சார்ந்தனவாதல் போல்வன இதற்கு எடுத்துக்காட்டுக்களாகும். தொல்காப்பிய ஞர் இங்ஙனம் முழுவதும் ஒத்து ஒரு நிகரனவாதலையே, 'இனம்' என்றும், சிறிது ஒப்பும், சிறிது ஒவ்வாமையும் உடையவற்றை, 'கிளை' என்றும் வழங்குதல் காணலாம். நன்னூலார், உயி ரெழுத்துக்களுள் 'குறிலும் நெடிலும் தம்முள் இனம்' என்றும், மெய்யெழுத்துக்களுள், 'வல்லெழுத்தும்' மெல்லெழுத்தும் தம்முள் இனம்' என்றும் கூறினுராயினும், தொல்காப்பியர் அங்ஙனம் கூருமை நோக்கத்தக்கது. 'ஒற்றிடை இனம்மிகா மொழியுமா ருளவே', "வல்லொற் றிறுதி கிளையொற்ருகும்" என்ற தொல்காப்பியப் பகுதிகளைக் காண்க. "தனக்குவமை இல்லாதான்" என்றதில் "உவமை" என்றது இனம் எனவே, "தனக்குவமை இல்லாதான்" என்றது, 'தன்னேடு முற்றிலும் ஒத்து ஒரு நிகர்த்தாய் நிற்கும் பொருள் வேறென்றை இல்லா தவன் என்றதாயிற்று. ஆகவே, இத்தொடர், 'இறைவன் அல்லது கடவுள் ஒருவனேயன்றிப் பலர் இல்லை' என, அவனது தனிமையைக் கூறியதாம்.

'இறைவன் ஒருவனன்றிப் பலர் இல்லை' என்பதை, "ஒன்றே குலமும், ஒருவனே தேவனும்" எனத் திருமூலரும், "ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றே பதி" என மெய்கண் டாரும் அருளிச்செய்தனர். வேதத்திலும், 'ஏகம் சத் - மெய்ப்

பொருள் ஒன்றே' எனக் கூறப்படுகின்றது. "ஒருவன் என்னும் ஒருவன் காண்க" என்பது திருவாசகம் எனவே, 'தனக்குவமை இல்லாதான்" என்றது. இறைவன் ஏகனுதலேயே குறித்ததாம். இதற்கு, 'ஒருவாற்ருனும் தனக்கு நிகரில்லாதவன்' என்று உரை கூறிய பரிமேலழகர்க்கும் இதுவே கருத்தாதல் தெளிவு. இறைவனுக்கு, 'தன்வயத்தனுதல்' முதலிய எட்டுக் குணங்கள் உள்ளனவன்ரே! 'அவற்றுள் ஒன்றேனும் பிறர் ஒருவர்க்கு இல்லை' என்பதே, 'ஒருவாற்ருனும் தனக்கு நிகரில்லாதவன்' என்றதன் பொருளாகும்.

"சிவனும் இச்சா ஞானச் செய்தியால் சிவனே டொப்ப
னுவன் என்றிடின், அனுதி மலம் இவற்றினை மறைக்கும்"

(சிவஞானசித்தி. சூ. 164)

என்பதுபோலக் கூறப்படுவனவும், 'சித்தாதற் பொதுமையால் உயிர்களும் இறைவனேடு ஒரு நிகரவாய பொருள்களாமன்ரே' என்னும் ஐயத்தை நீக்க எழுந்தனவாகும். இவற்ருலெல்லாம்' கடவுட்பொருள், தன்னேடு ஒரு நிகர்த்தாக வைத்து எண்ணு தற்கு இரண்டாவதொரு பொருளில்லாத தனிப்பொருளே யன்றி வேறில்லை என்பது தெளிவுற விளங்கும்.

இறைவன் இங்ஙனம் தன்னேடு ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தனிப்பொருளாய் விளங்குதற்கு அவனது எண்குணங் களே காரணம் எனினும், அவற்றுள், 'முடிவிலாற்றல்' என்பத னுலேயே இது தெளிவுற விளங்குவதாகும். முடிவாவது எல்லை. எல்லை, 'கால எல்லையும், இட எல்லையும்' என இரண்டு வகையினையுடையது. கால எல்லை, 'பிறப்பும் இறப் பும்' என்ற இரண்டாய் அமைவது; அவ்விரண்டும் இறைவ னுக்கு இல்லையாதலின் அவன் கால எல்லை இல்லாதவனுகின் ருன். இட எல்லை, இடமும், இடத்து நிகழ்பொருளும் ஆகிய இரண்டினுல் அமைவது. இறைவன் எங்கும், எல்லாப்பொருளி லும் நிறைந்து நிற்பதுமட்டும் அன்று; எல்லா உலகங்களையும் தன்னுள் அடக்கி அவற்றிற்கு அப்பால் நிற்பவனுதலின், இட எல்லையும் அவனுக்கு இல்லையாம். இவ்வாறு கால எல்லையை யும், இட எல்லையையும் கடந்து நிற்றலினுலேயே அவன் எப் பொருட்கும் மேலானவன் - பெரியோன் என்பது இனிது விளங்குகின்றது. எனவே, எல்லையற்று நிற்பதாகிய, 'முடிவி லாற்றல்' என்பதனுலேயே அவனது தனித்தன்மை இனிது விளங்குகின்றது. ஆதலின், 'தனக்குவமை இல்லாதான்' என்பது இறைவனது எண்குணங்களில் முடிவிலாற்றலைச் சிறப் பாகக் குறித்து நிற்பதாம். காலமும், இடமும் ஆகிய பெரும்

பொருள்களின் ஆற்றலினுலோ, அவற்றின் வழிநிற்கும் ஏனைய பொருள்களின் ஆற்றலினுலோ தடுக்கப்படாத ஆற்றல் இறைவனது ஆற்றல். ஆதலின் அதற்கு எக்காலத்தும், எவ்வகையிலும் முடிவு இல்லை. முடிவில்லாத இந்த ஆற்றல் வடமொழியில் "அநந்த சத்தி" எனப்படுகின்றது. இவ் அநந்த சத்தியால் இறைவன் தனக்குவமை இல்லாதவனுய் விளங்குகின்ருன்.

"மற்ருரும் தன்னெப்பார் இல்லாதானை"

(திருமுறை 6. 1-2)

"ஒப்புனக் கில்லா ஒருவனே"

(திருவாசகம் - பிடித்தபத்து - 5.)

என்பனபோல, இறைவன் தனக்குவமை இலனுதலை எடுத்தோதிப் போற்றும் திருமுறைப் பகுதிகள் பல. ஆகவே, அறநெறியிலும், அருள் நெறியிலும் ஒருபடித்தாக உள்ள இந்நிலையை உலகம் உணர்ந்து பயன்பெறுவதாக.

---

## பொன்மொழிகள்

செல்வம் புண்ணியத்தைச் செய்யவும் அப்புண்ணியத்தால் விளையும் நல்ல இன்பத்தை அடையவும் கிடைத்தது. அதைப் பாவத்திற் செலவிடாமல், தெய்வ கைங்கரியத்தில் பயன்படச் செய்வது சிறந்தது. அழியும்செல்வத்தால் அழியாத சிவபுண்ணியத்தைத் தேடிக்கொள்வதே அறிவுக்குப் பொருத்தம் ஆகும்.

* * * *

உயிர் வாழ்வதற்காகவே உலகம் ஆக்கப்பெற்றது என்பது எவர்க்கும் புலனுகும். உலகம் தானே தோன்றியது அன்று; உலகம் அறிவில்லாதது; சடப்பொருளாகும். அதனுல், அவ்வறிவில்லாத வொன்று ஆவதும் இருப்பதும் அழிவதும் உடையது. அது ஆக்கவும், காக்கவும், அழிக்கவும் படுவது. ஆதலால் உயிர்களாகிய நம்முடைய தேவைக்குத் தக்கவாறு இப்படி ஆக்க, காக்க அழிக்க வல்ல ஒரு தலைவன் இருக்கத் தானே வேண்டும்? அவனே கடவுள்.

— ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி.

# அறநெறியும் அருள்நெறியும்

## 9. "அறவாழி அந்தணன்"

'இறைவன், அளவிலாற்றல் உடையவன்' என்பதைக் குறிக்க, அவனை, "தனக்குவமை யில்லாதான்" எனக் கூறிய திருவள்ளுவர் பின்பு அவனை, "அறவாழி அந்தணன்" எனக் கூறுகின்றார். இதனுள் "ஆழி" என்றதற்கு, 'கடல்' என்பது பொருளாகும். சிலர் இதற்கு, 'சக்கரம்' எனப் பொருள் கொண்டு, 'தரும சக்கரத்தை உடைய அந்தணன்' என்று புத்தமதக் கடவுளைக் குறித்ததாக உரைப்பர். அது பொருந்து மாறில்லை. ஏனெனில் திருவள்ளுவர் யாதொரு சமயக் கடவுளை யும்சிறப்பாக எடுத்துத் தமது நூலில் கூறவில்லை என்பதை முன்னமே கூறினேம். அதுவன்றி அவ்வுரை பொருந்தாமைக்கு மற்றும் ஒரு சிறந்த காரணம் உண்டு.

திருவள்ளுவர், "அறவாழியந்தணன்" எனக்கூறிய திருக் குறளை முழுதும் நோக்கவேண்டும். அறவாழி யந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால் - பிறவாழி நீந்தல் அரிது" என்பது அக்குறள். 'அற ஆழி' 'பிற ஆழி' என, 'ஆழி' என்னும் சொல்இருமுறை வந்துள்ளது. அவைகளில் இரண்டாவதாக வந்துள்ள, 'ஆழி' என்பதற்கு, 'கடல்' என்பதே பொரு ளன்றி வேறில்லை' என்பது தெளிவாக விளங்குகின்றது. எவ்வாறெனில் 'பிற ஆழி நீந்தல் அரிது" என்று, 'நீந்தல்' என்னும் சொல் வந்திருப்பதால், அதற்குத் தக்க பொருள் கடலாவதன்றிச் சக்கரமாகாது. அதனால், இரண்டாவதாக உள்ள, 'ஆழி' என்பதற்கு, 'கடல்' என்பதே பொருளாம்.

இனி, அக் கடலுக்கு, "பிற" என்ற அடைமொழி கொடுத்து 'பிற ஆழி' எனப்பட்டது. 'பிற ஆழி' என்ப தற்கு, 'மற்றைய கடல்கள்' என்பது பொருள்; "மற்றைய கடல்கள்" எனக் கூறினமையால், அதற்குமுன் யாதேனும் ஒரு கடல் சொல்லப்பட்டிருக்கவேண்டும். ஏனெனில், 'மற்றை யது' என்னும் சொல், முன்பு சுட்டப்பட்ட பொருளின் இனப் பொருளையே குறிக்கும் என்பது இலக்கணமாதலின்.

---

* 10—11—68 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

" மற்றைய தென்னுங் கிளவி தானே
சுட்டுநிலை ஒழிய இனங்குறித் தன்றே"

(தொல்காப்பியம்)

" மற்றைய தென்பது சுட்டிய தற்கினம் " (நன்னூல்)

என்ற இலக்கணச் சூத்திரங்களைக் காண்க.

'பிற ஆழி' என்பதற்கு இனமாக முன்பு சுட்டப்பட்ட ஆழி எது என்று நோக்குமிடத்து. "அற ஆழி" என்பதே உள்ளது. ஆகவே, "பிற ஆழி" என்றது, 'பிற கடல்' என்றே பொருள் தருதலால், "அற ஆழி" என்பதும் 'அறக் கடல்' எனப் பொருள் தருதலன்றி, வேறு பொருள் தருதல், இயலாது. அதனால், "அறவாழி யந்தணன்" என்பதற்கு, 'தரும சக்கரத்தை உடைய அந்தணன்' என்று உரைப்பது பொருந்தா உரையாம். ஆகவே, "அறவாழி அந்தணன்" என்பதற்கு, 'அறக்கடலாகிய அந்தணன்' என்பதே பொருளாயிற்று. அப்பொருளையே பரிமேலழகர் உரைத்திருக்கின்றார்.

'இறைவன் அறக் கடலாய் இருக்கின்றான்' என்றால், என்ன பொருள்? தமிழ் கற்ற ஒருவரைச் சுட்டிக் காட்டி, 'இவர் தமிழ்க் கடல்' என்று கூறினால் என்ன பொருள்? தமிழ் முழுதும் அவரிடம் அடங்கியுள்ளது என்பதே பொருள். அது போலத்தான், இறைவனை, 'அறக் கடல்' என்று சொன்னால், 'அறம்' என்று சொல்லப்படுவன பலவும் அவனிடத்தில் அடங்கிக் கிடக்கின்றன என்பதே பொருளாம். இறைவன் அறத்தின்வழி அடையப்படுபவனன்றி மறத்தின்வழி அடையப் படுபவன் அல்லன். அதனால் அறம் இறைவனுக்கு வடிவமாகச் சொல்லப்படுகின்றது. 'அறக் கடல்' என்றதனால், எல்லா வகையான அறங்களையும் இறைவன் தனக்கு வடிவமாகக் கொண்டு நிற்கின்றான் என்பது. இதுபற்றியேகடவுளை, புண்ணிய சொரூபி, புண்ணியன், 'புண்ணிய மூர்த்தி' என்றெல்லாம் சொல்லும் வழக்கம் ஏற்பட்டது. இப் பொருளையே அறவாழி என்பது குறிக்கின்றது என்க.

இனி, 'அந்தணன்' என்பது, 'அம்+தணன்' எனப் பிரிக்கப்பட்டு, 'அழகிய தட்பத்தை உடையவன்' என்று பொருள் உரைக்கப்படும். அதனை இக் குறள் உரையில் பரிமேலழகர் கூறுவிடினும், "அந்தணர் என்போர் அறவோர்" என்னும் குறள் உரையில் கூறியுள்ளார். இதற்குப் பரிமேலழகர் உரை வேண்டுவதும் இல்லை. ஏனெனில், திருவள்ளுவரே

அதனை, “ அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும் - செந்தண்மை பூண்டொழுக லான்” என்று இனிது விளங்கக் கூறியுள்ளார். அஃதாவது, ‘அந்தணர் என்னும் பெயர் எவ்வுயிர்களிடத்தும் செந்தண்மையை உடையவரையே குறிக்கும்’ என்று கூறியுள்ளார். ‘தண்மை, தட்பம்’ என்பவற்றிற்கு, ‘குளிர்ச்சி’ என்பது பொருள். அது கருணை அல்லது அருள் என்பதைக் குறிக்கும்.

அறத்திற்குக் காரணம் இரண்டு; ஒன்று அன்பு; மற்றொன்று அருள். ‘அன்பு’ என்பது, யாதேனும் ஒரு தொடர்பு பற்றி ஒருவர்க்கு மற்றவரிடத்தில் தோன்றும் உள்ள உருக்கம். ‘அருள்’ என்பது அஃதில்லாமலே தோன்றும் உள்ள உருக்கம். அன்பு காரணமாக உண்டாகின்ற அறத்தைவிட, அருள் காரணமாக உண்டாகின்ற அறம் சிறப்புடையது. அதனால், ‘இறைவன் அருள் காரணமாகவே அறவடிவினனாய் விளங்குகின்றான்’ என்பதைக் குறிக்க, இறைவனை “அறவாழி” எனக் கூறவந்த திருவள்ளுவர், “அந்தணன்” என்பதையும் உடன் கூறினர்.

ஒருவனை, ‘அறவடிவினன்’ அல்லது ‘புண்ணிய சொரூபி’ எனக் கூறுதல், இரண்டு காரணங்கள் பற்றி உளதாகும். ஒன்று மறமாகிய பாவம் ஒன்றேனும் செய்யாது, அறங்கள் அனைத்தையும் முற்றச்செய்தல் பற்றியும், மற்றொன்று, அறம் செய்யாது மறம் (பாவம்) செய்வாரைத் துன்பத்திற்கு உள்ளாக்கி ஒறுத்து, அறம் செய்வாரைத் துன்பத்தினின்றும் எடுத்து இன்பத்தில் வாழச்செய்து அளித்தல் பற்றியுமாம். இவ்விரண்டில் முதற்கண் சொல்லிய காரணம் பற்றி ஒருவரை ‘அறவாழி’ எனக் கூறுதல் மக்களில் ஒருவராய் உள்ளவரிடத்தே நிகழ்வது. இறைவனை அறவாழி என்றல், இரண்டாவதாகக் கூறிய காரணம் பற்றியேயாம். ஆகவே, அறம் இறைவனுக்கு வடிவம் (உருவம்) என்றால், அறத்திற்கு உயிராய் இருப்பவன் இறைவன் என்பது தானே பெறப்படுகின்றது. இறைவன் அறத்திற்கு உயிராய் இருத்தலாவது, ‘இன்னதே அறம்; இதனைச் செய்க’ எனவும், ‘இன்னது மறம் இதனைச் செய்யற்க’ எனவும் அறிநெறியை வகுத்தலும், அந்நெறியின் ஒழுகுவார்க்கு அருளும், அதில் தவறுவார்க்கு ஒறுப்பும் தருதலுமாம். உயிர் உடம்பை இயக்குதல்போல, இறைவன் இவ்வாறு அறத்தை நடத்துதல் பற்றியே, ‘பல்வேறு வகைப்பட்ட அறங்கள் எல்லாவற்றையும் தனக்குவடிவாக உடையவன்’ எனச்சொல்லப் படுகின்றான். இவ்வாறு இறைவன், அறத்தை வகுத்தற்கும்,

அதனைக் குறைபடாது நடத்துதற்கும் காரணம், உயிர்களிடத்து வைத்த கருணையேயன்றிப் பிறிதில்லையாதலின், அவன் அந்தணனுமாகின்றான். எனவே பிறர் அந்தணராதல் அறத்தைச் செய்வதனால் என்பதும், இறைவன் அந்தணனாதல் அறத்தை நடத்துவதனால் என்பதும் விளங்கும்.

அறம் அறிவற்ற பொருளாதலின் அது தானே நடவாது; அஃதாவது, ஒருவர் செய்யும் நல்ல செயல்களே அவர்கட்கு நன்மையையும், தீய செயலே அவர்கட்குத் தீமையையும் தந்துவிடமாட்டா. தந்துவிடும் எனின், அரசியல் முறையில் தவறாது நடக்கும் குடிமக்கட்கு அதற்குரிய பரிசில் முதலிய வற்றையும், தவறி நடப்பவர்க்குச் சிறை முதலிய தண்டத்தையும் அந்தச் சட்டமே தந்துவிடவேண்டும். அவ்வாறின்றி அவற்றிற்குரிய அதிகாரிகளே அதனைச் செய்யக்காண்கின்றோம். அறம், மறம் என்பவைகளும் அத்தன்மையனவே யாதலால் அவைகளே தம்மைச் செய்தவர்களுக்குத் தம் பயனைத் தரும் எனக் கூறுதல், அறியாமையின் பாற்பட்டதேயாகும். ஆகவே, அறம் தானே நடவாது, இறைவன் நடத்தவே நடப்பதாகும். இதனைத் திருவள்ளுவர், “ஊழ்” என்னும் அதிகாரத்தில் “வகுத்தான் வகுத்த வகை” என்பதனாலும், ‘இரவச்சம்’ என்னும் அதிகாரத்தில், “உலகியற்றியான்” என்பதனாலும் குறிக்கின்றார். ஆகவே, அவர் இங்கு இறைவனை ‘அறவாழி’ என்றது அறத்திற்கு உயிராய் நின்று அதனை இயக்குதல் பற்றியே என்பது தெளிவாகின்றது.

“இறைவன் அறத்தை இயக்குபவன்” என்பதைக் குறிப்பிடுவதே, சைவ சமயத்தில் இறைவனுக்குச் சொல்லப்படுகின்ற விடை ஊர்தி. “அறம் வெண்மை நிறம் உடையது” எனவும், ‘மறம் (பாவம்) கருமை நிறம் உடையது’ எனவும் கூறுதல் வழக்காதலின், அதுபற்றியே இறைவனுக்கு ஊர்தியாயும், கொடியாயும் அமைந்து விடை, ‘வெள்விடை எனச் சொல்லப் படுகின்றது. “ஊர்தி வால்வெள் ளேறே; சிறந்த - சீர்கெழு கொடியும் அவ்வே றென்ப” என்று, புறநானூற்றுக் கடவுள் வாழ்த்திலும் சொல்லப்பட்டது.

‘அறமே இறைவனுக்கு விடை ஊர்தியாய் நின்று சுமப்பதாயிற்று’ என்பதற்குரிய புராண வரலாற்றைக் கந்தபுராணம் ததீசி உத்தரப் படலத்திற் காணலாம். சிவாலயங்களில் முன்னே உள்ள விடை அறக்கடவுளே (தருமதேவதையே) ‘அது கிரேதாயுகத்தில் நான்கு பாதங்களாலும், திரேதா

யுகத்தில் மூன்று பாதங்களாலும், துவாபர யுகத்தில் இரண்டு பாதங்களாலும் நடந்து, இக் கலியுகத்தில் ஒருபாதத்தால் நடக்கின்றது' என்ற முறையிலேதான் அதன் வடிவம் சிவால யங்களில் அமைந்துள்ளது. இவையெல்லாம் எதனைக் காட்டு கின்றன? 'அறத்தை இறைவனே அந்தணனாய் நின்று நடத்துகின்றான்' என்பதையே காட்டுகின்றன. ஆகவே இறைவன் அறவடிவினனாய் இலங்குகின்றான் என்பதில் ஐயம் இல்லை.

'இறைவன் அறவடிவினன்' என்பதை, "அறவன், புண்ணி யன், புண்ணிய மூர்த்தி" முதலிய சொற்களால் திருமுறைகள் பல இடங்களில் கூறுதலைக் காணலாம். இன்னும் திருஞான சம்பந்தர், "இன்னஉரு, இன்னநிறம் என்றறிவதேல் அரிது; நீதிபலவும் - தன்னதுருவாம் என நிறைந்தவன் நீதியொடு தான் அமர்விடம்" என்பதில், "இறைவன் அறங்கள் பலவற் றையும் தனக்கு வடிவமாகக் கொண்டுள்ளான்" என்று வெளிப் படையாகவே அருளியுள்ளார். மற்றும், திருமூல தேவர் தமது திருமந்திரத்தில்,

"பிறவா நெறிதந்த பேரரு ளாளன்,
மறவா அருள்தந்த மாதவன், நந்தி,
அறவாழி பந்தணன், ஆதிப் பராபரன்
உறவாகி வந்தென் உளம்புகுந் தானே"

என்று இறைவனை "அறவாழி யந்தணன்" என்றே அருளிச் செய்தார்.

அறம், "பிறப்பைத் தருவது, பிறவாமையைத் தருவது" என இருவகைப்படும். அவற்றுள் முன்னையது, "வினை" என்றும், பின்னையது, "தவம்" என்றும் சொல்லப்படும். இவற்றுள் பின்னையதே சிறப்புடையது. "இருவகை அறங்களையுமே இறைவன் தனக்கு வடிவாகக் கொண்டிருப்பினும், "பிறவாமை யைத் தருவதே அவனது குறிக்கோள்" என்பதை விளக்க, "பிறவா நெறிதந்த" என்றும், "பிறப்பைத் தருவது அருளாக, பிறவாமையைத் தருவது பேரருளாம்" என்றற்கு, "பேரரு ளாளன்" என்றும், "பிறவாமையைத் தரும் அறமாவது அவனை மறவாமை; அதுவே தவங்களிலெல்லாம் சிறந்த தவம் என்றற்கு, "மறவா அருள் தந்த மாதவன்" என்றும் அருளிச் செய்தார். எனவே, இறைவன் அறவாழியந்தணனும் முறையை எல்லாம் முன்னே விளக்கிப் பின்னே அத்தொடரை எடுத்துக்

கூறியருளினர் திருமூலர். சம்பந்தரும், "நீதி பலவும் தன்ன துருவாம் என நிறைந்த தவன்" என்று, தவத்தைக் குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறு திருவள்ளுவர் இறைவன் அறமே வடிவின னுதலைக் கூறினராயினும், அதற்குக் காரணமான பேரருளையும் "அந்தணன்" என்னும் சொல்லாற் கூறியிருத்தலின், இறைவன் பேரருள் உடையன் என்பதைக் குறித்தலே கருத்தாயிற்று. மேற்காட்டிய திருமந்திரத்தில் திருமூலரும் இறைவன் பேரருளாளனுதலைக் கூறியிருத்தல் அறிந்து மகிழற்பாலது. ஆகவே, அறநெறியும், அருள்நெறியும் ஒன்றி நிற்கும் முறையை அறிந்து மக்கள் ஒழுகுவார்களாக.



## பொன்மொழி

அன்புருவமாகிய ஆண்டவனைக்காட்டும் கருவி மொழி; அதிலும் அனுபவ மொழி; அதிலும் அனைவருக்கும் தன் பொருளைத் தயக்கமின்றி அறிவிக்கும் தாய்மொழி வாயிலாக, நமது தமிழ்நாட்டில் வாழ்ந்த நாயன்மார்களும், ஆழ்வார்களும் கடவுளைக் கண்டார்கள். தாம் அடைந்த அன்பு வெள்ளத்தை ஆயிரமாயிரம் ஆண்டுகளாகப் பெருகவைத்திருக்கிறார்கள்.

தெய்வத்தமிழோ கலைப் பொக்கிஷமாக விளங்குகிறது; எடுக்க எடுக்கக் குறையாத பொருள் வளம் உடையது; நாம் காட்டுகின்ற மேற்கோள்கள் எல்லாவற்றிற்கும் இத்தெய்வத் தமிழ் இடந் தந்து நிற்கும். நம்நாட்டுக் கலைப் பொக்கிஷங்களைப் பிறநாட்டினர் மொழி பெயர்த்தும், விரும்பிப் படித்தும் பயன் பெறுகின்றனர். ஆனல் நாமோ நம்மிடம் உள்ள கலைப் பொருளை மறந்து பிறநாட்டு மொழியாசிரியர்கள் கூற்றை மேற்கோளாக எடுத்துக் கூறுகிறோம். நம்மிடம் சரக்கு இல்லையென்றால் பிறர்கையை எதிர்பார்க்க வேண்டியதுதான். நம்மிடம் பழங்காலச் செல்வம் எவ்வளவோ இருக்கின்றது. அவைகளை வைத்துக்கொண்டு பிறர் கையை எதிர்பார்ப்பது கூடாதல்லவா?

— ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி.

## 10. “எண்குணத்தான்”

இறைவனை ‘அறவாழி யந்தணன்’ எனக் கூறும் முகத்தால் அவன் பேரருளாளனாதலைக் குறித்த திருவள்ளுவர், பின்பு அவனைக் குறிக்கக் கூறிய தொடர், “எண்குணத்தான்” என்பது. இதற்குமுன் அவர் கூறிய “தனக்குவமை இல்லாதான்” என்ற தொடரால், இறைவனோடு ஒரு நிகர்த்தான பொருள் ஒன்றும் இல்லை என்பது அறிவிக்கப்பட்டது. எனவே, அவர், ‘இறைவனுக்கு எட்டுக் குணங்கள் உள்ளன’ என்று கூறுவாராயின், ‘அக்குணங்கள் அனைத்தும் வேறு எந்தப் பொருளிலும் இல்லாது இறைவன் ஒருவனிடத்தில் மட்டுமே இருப்பனவாம்’ என்பது இனிது விளங்குகின்றதன்றோ! ‘அவ்வெட்டுக் குணங்கள் இவை என்பதைத் திருவள்ளுவர் கூறினரா, என்று கேட்டால், ‘இல்லை’ என்றுதான் சொல்லத் தோன்றுகின்றது. ஏனெனில், அவற்றை அவர் எங்கும் வெளிப்படையாக எடுத்துக் கூறித் தொகுக்கவில்லை. ஆகவே, ‘அவ்வெட்டுக் குணங்கள் இவை’ என்பதை அவரவரும், தம் தமக்கு ஏற்ற முறையில் கூற முற்படுகின்றார்கள்.

அவர்களுள் சைவ சமயத்தார் கூறும் எண்குணங்கள், ‘தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவில் ஆற்றல் உடைமை, வரம்பில் இன்பம் உடைமை’ என்பன. இவை முறையே சைவாகமத்துள், ‘சுவதந்திரத்துவம், விசுத்த தேகம், அநாதி போதம், சருவஞ்ஞத்துவம், நிராமயம், அலுப்த சத்தி, அநந்தசத்தி, திருப்தி எனச்சொல்லப்பட்டன. இவற்றையே பரிமேலழகர் தமிழில் மொழிபெயர்த்துக் கூறி, ‘இவ்வாறு சைவாகமத்துக் கூறப்பட்டது’ எனப் பிரமாணங் காட்டிச் சென்றார். திருவள்ளுவர் கூறிய எட்டுக் குணங்கள் இவைதாம் என்பதே பரிமேலழகர் கருத்து என்பது, ‘எண்குணங்களாவன’ என்று தொடங்கி, இவற்றையே கூறி, பிறவாறு கூறுவார் கொள்கைகளை, ‘உரைப்பாரும் உளர்’ எனப் பிறர் கொள்கைகளாக அவர் உரைத்தலால் இனிது விளங்கும்.

---

* 10—12—68 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

பிறர் கொள்கைகளாகப் பரிமேலழகர் குறித்தவற்றுள் முன் நிற்பன, அணிமாவை முதலாக உடையன. அவை, 'அட்டமாசித்திகள்' எனப்படும் 'அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்' என்பனவே யாம். இவை, வேத மதங்களுள் யோகமதத்தார் கூறும் சிறந்த பேறுகள். 'சிறந்த பேறுகள்' என்றால், எல்லாப் பேறுகளிலும் சிறந்த வீடுபேறே எனவே, யோக மதத்தினர் கூறும் வீடு பேறு இச் சித்திகளை முற்றப் பெற்றிருக்கும் நிலையேயாம்.

இவற்றுள், 'அணிமா' என்பது, சிறியதினும் சிறிதாய் இருத்தல். 'மகிமா' என்பது, பெரியதினும் பெரிதாய் இருத்தல். 'இலகிமா' என்பது, நொய்தினும் நொய்தாய் இருத்தல். 'கரிமா' என்பது, திண்ணிதினும் திண்ணிதாய் இருத்தல். 'பிராத்தி' என்பது நினைத்த இடத்தில் தடையின்றிச் சென்றிருத்தல். 'பிராகாமியம்' என்பது, விரும்பியவற்றை விரும்பிய வாறே பெறுதல். 'ஈசத்துவம்' என்பது, ஆக்கவும் காக்கவும், அழிக்கவும் வல்லனாதல். 'வசித்துவம்' என்பது, எப்பொருளை யும் தன்வசப்படுத்தல்.

'இவைகளை இறைவன் இயற்கையில் உடையவன்' என்பதும், அந்நிலையை உயிர்கள், 'யோகம்' என்னும் சாதனையாற் பெறவேண்டும்' என்பதும் 'பெற்றுவிட்டால் அதற்குமேல் அடையவேண்டுவது ஒன்றும் இல்லை' என்பதும் யோகமதத் தினர் கொள்கை ஆயினும், அவர்கள் கூறும் இந்த எட்டும், பிற பொருளைப்பற்றியவழி அமைவதன்றி, இறைவனுக்குத் தன் னளவில் அமைவனவாய் இல்லை. அவ்வாறாயின் இறைவனுக்கு உள்ள பெருமைஎல்லாம் பிறபொருட்சார்பினால் ஆவனவாகு மல்லது, அவனுக்கு இயற்கையாய் உள்ள பெருமைகள் ஆகா. மேலும் அவர் கூறுவன, சைவாகமத்துட் கூறப்படும் முடிவி லாற்றல், தன்வயம் முதலியவற்றுள் ஒவ்வொன்றில் அடங்கு வனவே யாதலின், அவற்றுள் ஒன்றையே வேறு வேறு குணங் களாக விரித்தலால் பயனில்லாமையோடு, விரிக்கப் புகின், இன்னும் பலவாய், 'எட்டு' என்னும் வரையறையையும், கடந்து பல்கும். இன்னும் இவ்வெட்டுச் சித்திகள் உலகத்தார் மருளும் வகையில் சிறந்து காட்டுவனவல்லது. இறைவனது உண்மைச் சிறப்பாய் அமையமாட்டா. அது பற்றியே, பரிமேலழகர் அவற்றைக் கொள்ளவில்லை

இனி இவற்றையடுத்துப் பரிமேலழகர் குறித்தவை, கடையிலா அறிவை முதலாக உடையன. அவை 'கடையிலா அறிவு கடையிலாக் காட்சி, கடையிலா வீரியம், கடையிலா இன்பம், நாமம் இன்மை,

கோத்திரம் இன்மை, ஆயு இன்மை, அழியா இயல்பு' என்பன. இவை சமண சமயத்தார் கூறுவன என்பது, பின்வரும் சூடாமணி நிகண்டுச் செய்யுளால் இனிது விளங்கும்.

கடையிலா ஞானத் தோடு
காட்சிவி ரியமே இன்பம்
மிடையுறு நாமம் இன்மை
விதித்தகோத் திரங்கள் இன்மை
அடைவிலா ஆயு வின்மை
அந்தரா யங்கள் இன்மை
உடையவன் இறைவன் என்ன
உரைக்கும் ஆருகத நூலே

இவற்றுள், கடையிலா அறிவு முதலிய நான்கும் சொல்லால் வேறன்றிப் பொருளால், சைவாகமம் கூறும் முற்றுணர்வு, முடிவிலாற்றல், வரம்பில் இன்பம் என்பனவேயாம். இறுதியிற் கூறப்பட்ட, 'அழியா இயல்பு' என்பதை வேண்டுமாயின், தனித்த ஒரு குணமாகக் கொள்ளலாம். அழியும் தன்மை அறிவில்லாத பொருளுக்கு உண்டேயன்றி, அறிவுடைய பொருளுக்கு இல்லை. ஆகவே, அஃது 'இயற்கையுணர்வு' என்பதனுள் அடங்குவதேயாம். இனி, 'நாமம் இன்மை, கோத்திரம் இன்மை, ஆயு இன்மை' என்ற மூன்றும், குணங்கள் ஆகா. ஏனெனில், ஒன்றனது இன்மை இன்னொரு பொருட்குக் குணமாதல் இல்லை. "குணமாவது யாது" என்பார்க்கு, 'பொருளை விட்டு நீங்காது அதன்கண் கிடப்பதே குணம்' என்பதே விடை. எனவே, ஒரு பொருளில் உள்ளது குண மாகுமேயன்றி, இல்லாதது குணமாகாது. இல்லாததையும் குணம் என்று கொண்டால் அதற்கு வரம்பில்லை. எவ்வா றெனின், 'பசுவின் குணம் யாது' என்று வினவினால், 'கன்று ஈனுவது, மக்கட்கேயன்றித் தேவர்க்கும் உரித்தாய பாலைத் தருவது' என்று இப்படிச் சிலவற்றைத்தான் கூறமுடியும். இவையெல்லாம் பசுவினிடத்து இருப்பனவாம். இவ்வாறு இருப் பன சிலவேயாய் அவை வரம்பிற்கு உட்படும். ஆனால், புலால் உண்ணாமை, வாய் பேசாமை, பறந்து செல்லாமை, என்று இப்படிப் பிற பொருளில் இருப்பனவற்றைக் கருத்துட்கொண்டு அவைகளின் இன்மையைப் பசுவின் குணம் எனக் கூறப் புகுந்தால், எத்தனையோ இன்மைகளைக் கூறவேண்டிவரும். அதனால், அவை வரம்பில்லனவாய் ஒழியும். "சாத்தன் கள்ளுண்ணான்; புலால் உண்ணான்" என்றாற்போலக் கூறுவன, மக்களுள் சிலர்க்கு அவற்றை உண்ணும் இயல்பு இருத்த

லால், " அத்தன்மை இவனிடம் இல்லை" என்றும் மறுக்கும் அளவிற்கே அவை கூறப்படுவன. அதனால், அவைபோல் வனவும் ஒருவாற்ருன் உண்மை கூறுவனவேயாம். ஆகவே, ஒன்றனது இன்மை மற்ருெரு பொருட்குக் குணமாதல் இல்லை என்பதேமுடிவு. " நாமம், கோத்திரம், ஆயு" என்பன மக்களிடத்து உண்மையான், " அவை இல்லாமை இறைவன் இயல்பாம்" எனின், உயிர்களிடத்து உள்ளவை நாமம் முதலிய மூன்று மட்டுமன்றி இன்னும் பலவாம். அவை அனைத்தையும், உயிர்க் குணம் இன்மை" எனப் பொதுவாகக் கூற அமையுமன்றி, சிறப்பாக எடுத்துக்கூறின் வரம்பு படுவன அல்ல. அன்றியும், " இறை எனப்படும் பொருள் எவ்வியல் பிற்று" என வினவுவார்க்கு, அதனது தன்மையைக் கூறல் வேண்டுமன்றி, " இறை, உயிரன்று" என்ற அன்மையைக் கூறுதல் விடையாகாது. ஆருகதர் கூறும் எண்குணங்களில் சில இத்தன்மையனவாய் அளவை முறைக்கு ஒவ்வாதிருத்தல் பற்றியே அவற்றையும் பரிமேலழகர் கொள்ளவில்லை.

பரிமேலழகர், ஆருகதர் கொள்கையைக் கொள்ளாதவரும் அல்லர்; சைவ சமயக் கொள்கையைக் கொள்பவரும் அல்லர். மேலும், " திருவள்ளுவர் திருமால் சமயக்கொள்கை யுடையவர்" என்பதே பரிமேலழகர் கருத்து. ஆருகதர் கொள்கையை அவர் குறிப்பாகக் கூறிய இடங்கள்போக, " இதனை ஆருகதர் உவர்ம் பென்ப" ( குறள் - 359 உரை. ) என்பதும் காணலாம்.

இவ்வாறு வேறுபட்ட கொள்கையுடையராயினும், " இறைவனது எண்குணம் சைவாகமத்துக் கூறப்பட்ட எண்குணமே' என அவர் கொண்டதற்குக் காரணம், அவற்றைவிடச் சிறந்தன வாகப் பிற இடங்களில் எவையும் சொல்லப்படவில்லை என்பதே. பிற சமயங்களில் உள்ள நல்லனவற்றை எடுத்துக்கொள்ளுதல் என்பது அறிஞர் அனைவர்க்கும் பொதுவானதே.

" அந்நிய நூலின் விதிஅவி ரோதமேல்
உன்னேல் பழுதென் றுளத்து"

என்னும் சைவசமய நெறிக்குறள், " சைவ சமயமும் இந்தப் பரந்த நோக்கத்தை யுடையதே" என்பதை நன்கு விளக்கி நிற்கின்றது.

வேற்று மதத்தவர் என்பது பற்றியே அவர்கள் கூறும் அனைத்துக் கொள்கையையும் மறுக்கவேண்டும் என்பதோ, அல்லது வேற்று மதத்தில் உள்ள சில நல்லனவற்றைக் கொள்வ

தனுலேயே ஒருவர் தங்கள் மதத்தை விடுத்து அந்த மதத்தில் சேர்ந்து விட்டார் என்பதோ இல்லே. மீமாஞ்சை, தருக்கம், யோகம், சாங்கியம் முதலிய மதங்களின் கொள்கைகளுள் தமக்கு ஏற்புடையவற்றைப் பிறமதங்களும் கொண்டமை வெளிப்படை.

" எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "

என்று திருவள்ளுவரும் கூறினர்

இம்முறையில்தான் பரிமேலழகர் இறைவனது எண்குணத் திற்குச் சைவாகமக் கொள்கையையே கொண்டார். எனவே, " திருவள்ளுவர் குறித்த எண்குணங்கள் சைவ சமயிகள் கூறும் எண்குணங்களே " என்று கொள்வதே நேர்மையாகின்றது.

திருவள்ளுவர் " எண்குணங்கள் இவை " என எடுத்துச் சொல்லாமையால், இவை அக்காலத்தில் எளியனவாக வழக்கில் இருந்தன என்பது பெறப்படும். ஏனெனில், இங்ஙனம் வழக்கில் உள்ளவற்றைப் பொதுவாகவே திருவள்ளுவர் குறித்துச் செல்கின்ருர். " இருமை வகை, இயல்புடைய மூவர், நாலோர் வளிமுதலா எண்ணிய மூன்று " ( குறள் - 23, 41, 941 ) என்ருற் போல்வனவற்றை எடுத்துக்காட்டாகக் கூறலாம். இறுதியிற் குறித்த தொடரில் "வளிமுதலா" என ஒன்றை எடுத்துக்கூறினும், மற்றவைகளைக் கூறவில்லே. இவ்வாறே தன்வயத்தனுதல் முதலிய எட்டையும் அவர் எடுத்துச் சொல்லவில்லே. என்ருலும் அவர் கடவுள் வாழ்த்தில் இறைவனுக்குக் கூறிய ஆக்கப் பெயர்கள் இக்குணங்களைத் தெரிவிப்பனவாய் உள்ளன. அவை வருமாறு :-

" ஆதிபகவன் முதற்றே உலகு " என்றதில் " உலகம் இறைவனை முதல்வனுக உடையது " என்றதனுல், அதனை அவன் தன் இச்சைப்படி செயற்படுத்துவோனுதல் பெறப் பட்டது ஆகவே அது தன்வயம் உடைமையைக் குறிக்கும். " வாலறிவன் " என்றது, " இயற்கை உணர்வைக் " குறித்தல் வெளிப்படை. மலர்மிசை ஏகினன் என்பது அருட்டிரு மேனியைக் குறிப்பதால் அது தூய உடம்புடைமையைக் குறித்ததாயிற்று " வேண்டுதல் வேண்டாமை இலான் " என்றது வரம்பில் இன்பத்தைக் குறித்தல் தெளிவு. " இறை " என்பது முற்றும் உணர்தலேக் குறிப்பதாம். " பொறிவாயில் ஐந்தவித்தான் " என்றது இயல்பாகவே பாசங்களின் நீங்கினமையைக் குறிப்பதே.

" தனக்குவமை இல்லாதான் " என்றது, முடிவிலாற்றலுடைமையை விளக்கியதாம். " அறவாழி அந்தணன் " என்பது பேரருளுடைமையைக் கூறிற்று. ஆகவே, அவற்றையே இங்கு " எண்குணம் " என்றார் என்பது சொல்லவேண்டா.

" எட்டு வான்குணத் தீசன்எம் மான்றனே "

என்று திருநாவுக்கரசரும்,

" இரும்புயர்ந்த மூவிலைய சூலத்தி னானை
இறையவனை மறையவனை எண்குணத்தினானை "

எனச் சுந்தரரும் அருளிச்செய்தனர். ஆகவே, அறநெறியும், அருள்நெறியும் ஒருபடித்தாதலை அறிந்து மக்கள் பயன்பெறுவார்களாக.



## பொன்மொழிகள்

உள்ளத்தில் கடவுளுணர்ச்சி மலர்கின்றபொழுது தான் மக்கள் மக்களாக வாழ்கிறார்கள்; இஃது இந்தியநாட்டுப் பண்பாடு. இதன் அடிப்படையில்தான் இந்நாட்டுச் சமய வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது.

* * * *

கலை - மக்கள் - வாழ்க்கை - இவற்றினூடே பிணைந்திருக்கும் கடவுளுணர்ச்சியை எந்த விஞ்ஞானியும் பிரிக்கமுடியாது.

* * * *

கிருகஸ்தர்க்குச் சிரார்த்தமும், சந்நியாசிகட்குக் குருபூஜையும் நன்றியறிதலைக் கடைப்பிடித்துச் செய்துவரும் இன்றியமையாச் செயல்கள்.

— ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி.

# அறநெறியும் அருள்நெறியும்

## 11. " நீடிய நல்வாழ்வு "

" நெறி " என்பது, " வழி " என்பதன் மறுபெயராயினும், சொற்பொருளில் இவ்விரண்டற்கும் வேற்றுமையுண்டு. "வழி" என்பது, " ஓரிடத்தை ஒருவர் எவ்வாற்ருலேனும் சென்று அடைவாராயின், பின்னர் அவ்விடத்தை அடைதற்கு ஏனையோ ரும் விரும்பிப் பற்றநிற்கும் ஆறு " என்னும் பொருளையும், 'நெறி' என்பது, அவ்வளவிலன்றி, " முன்னர் அமைந்த வழியைப் பின்னரும் நன்கு ஆராய்ந்து, சுருக்கமும், இடர்ப்பாடின்மையும் முதலிய பலவற்ருல் இனிதமைக்கப்பட்ட ஆறு " என்னும் பொருளையும் உடையன. அதனுல், கருத்துப் பொருள்களில் இவ்விருசொற்களினும், " நெறி " என்பது சிறப்புடையதாகக் கொள்ளப்படுகின்றது வழி, பின்பின் உள்ளோரும் செல்வ தாதல் பற்றி, " வழி " என்னும் சொற்கு, " பின் " என்னும் பொருளும் உளதாயிற்று.

புலனுணர்வோடு அவற்றது நன்மை தீமைகளையும் பகுத் துணரும் உணர்வுடைய பிறப்பு மக்கட் பிறப்பே. அதனுல், அப்பிறப்பை எய்தினேர், தாம் அடைய விரும்பும் பயனுக்குப் பற்பல நெறிகளை நாடிநிற்பர். மக்களாயினர் எய்தும் பயன் கள், உலகின்பமும், விட்டின்பமும் " என இரண்டு, அவற்றுள் உலகின்பம், " கல்வி, செல்வம், அதிகாரம், வெற்றி, சுற்றப் பெருக்கம், நல்லுடல், நீடிய வாழ்நாள், ஐம்புல நுகர்ச்சி " என்பன முதலாக எண்ணிறந்தன. " விட்டின்பம் " என்பது, பலவின்றி, இவ்வனைத்தினும் வேருய் நிற்கும் ஒன்றேயாம்.

மக்கள் உலகின்பத்தை அடைய முயலும் நெறிகள் பலவும் " உலகியல் " என்றும், விட்டின்பத்தை அடைய முயலும் நெறி கள் பலவும் " மெய்ந்நெறி " என்றும் சொல்லப்படும். உல கின்பம் நிலையற்றதாய்ப் போக விட்டின்பமே நிலைத்து நிற்ப தாதல்பற்றி, அது, " மெய் " எனப்படுமாதலின், அதனை அடை விக்கும் நெறி " மெய்ந்நெறி " எனப்படுகின்றது. சிறியோர் சிறுசெயலையன்றிப் பெருஞ்செயலை எவ்வாற்ருனும் செய்தல் இயலாது. ஆனல், பெரியோர் பெருஞ்செயலையேயன்றிச் சிறு செயலையும் எளிதில் செய்தல் கூடும். அதுபோல உலகியல் நெறி உலகின்பத்தையன்றி விடுபேற்றை எவ்வாற்ருனும்

---

* 10—1—69 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

தருதல் இயலாது. ஆனால் மெய்ந்நெறி வீடுபேற்றையேயன்றி உலகின்பத்தையும் எளிதில் தரும். அதனால், பெரியோர் பலரும் மெய்ந்நெறியையே சிறப்பாக வலியுறுத்துகின்றனர்.

"உலகறம், வீட்டறம்" என அறம் இருவகைப்படும். அவற்றுள் உலகறமே உலகியலும், வீட்டறமே மெய்ந்நெறியு மாகும். கல்வி, செல்வம் முதலாக மேற்காட்டியன பலவும் உலகறத்தின் வழிப்பட்டனவாம். அதனால் அவற்றைத் தரும் உலகறத்தைக் கூறும் நூல்கள் உலகியல் நூலாம். தொல்காப்பியமும், திருக்குறளும் அவற்றோடொத்த பிறநூல்களும் உலகியலைக் கூற எழுந்தனவே. அதனாலேயே, "பாக்கள் பலவும் அறமுதலாகிய மும்முதற் பொருட்கும் உரிய" என்ற இலக்கணம் தொல்காப்பியத்திலும், "அறத்துப் பால், பொருட் பால், காமத்துப் பால்" என்ற முப்பால் இலக்கியங்களே திருக்குறளிலும் காணப்படுகின்றன.

உலகியலை முற்றக் கூறும் நூல்கள், தாம் கூறும் பயன்களே முடிந்த பயன்கள் போலும் என்னும் எண்ணம் தம்மைக் கற்பார்க்கு உண்டாகாமல், "உலகியலின் பயன் மெய்ந்நெறியிற் செல்லுதலே" என அறிவித்தற் பொருட்டு, வீட்டறத்தையும் பொதுப்படச் சிறிது கூறிச் செல்லும். அங்ஙனம் கூறப்பட்டனவே தொல்காப்பியத்தில் காஞ்சித் திணையிலும், வாகைத் திணையிலும், மற்றும் சில இடங்களிலும் கூறப்பட்ட வீட்டறம் பற்றிய துறைகளும், "காமஞ் சான்ற கடைக்கோட் காலை - ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி - அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும் - சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே" எனக் கற்பியல் இறுதியிற் கூறிய சூத்திரமும், திருக்குறளில் துறவற இயலுள் "ஞானம்" என்னும் பகுதியுமாகும்.

இனி வீட்டறத்தையே சிறப்பாக எடுத்து விரித்துக் கூறும் நூல்கள் சமயநூல்களேயாம். அதனால் அவையே, "மெய்ந்நெறி நூல்" எனப்படும். மெய்ந்நெறி நூல்களும் உலகியல் நடத்தற்பொருட்டு அதனை ஒருவாற்றான் எடுத்துக்கூறும். உலகியற் பொருள்கள் பருமையுடையவாய் ஐம்பொறிகட்கும், மனத்துக்கும் அகப்படுவனவாதலின், அவற்றைக் கூறுதலில் கொள்கை வேறுபாடுகள் மிகுதியாகத் தோன்றக் காரணம் இல்லை; வீட்டுநிலை அத்தன்மையதன்றி நுண்மையுடையதாய்ச் சிந்தையும், மொழியும் செல்லா நிலைமைத்து ஆதலின், அதனைக் கூறுதலில் கொள்கை வேறுபாடுகள் மிகுகின்றன. அதனாலே சமயங்கள் பலவாயின. ஒவ்வொரு சமயமும் தான்தான்

கூறும் நெறியே மெய்ந்நெறி; ஏனைய சமயங்கள் கூறும் நெறிகள் மெய்ந்நெறியல்ல எனக் கூறுமாயினும், மெய்ந்நெறி கூறப் புகாது உலகியலே கூறும் சான்றோர், இடம்வாய்க்கும்பொழுது உண்மை மெய்ந்நெறியைப் பொதுப்படக் கூறியே செல்வர். அங்ஙனம் கூறிய சிறந்த நூல் திருக்குறளே.

'திருவள்ளுவர் மெய்ந்நெறி கூறப்புகாது உலகியலே கூறப் புகுந்தனர்' என்பதையும், 'அவ்வாறாயினும் உண்மை மெய்ந் நெறியாவது இது என்பதனையும் குறிப்பாற் கூறியே சென்றார்' என்பதையும், "சமயக் கணக்கர் மதிவழி கூறாது - உலகியல் கூறிப் பொருள்இது என்ற - வள்ளுவன்" என, 'கல்லாடம்' என்னும் நூல் இனிதெடுத்து மொழிதல் காணலாம். ஆகவே, "திருவள்ளுவர் உலகின்பம், விட்டின்பம் என்னும் இருபயனையும் ஒருங்கே தரும் மெய்ந்நெறி எது எனக் கூறுகின்றார்" என்று நோக்குவோமாயின், "ஆதி பகவன், வாலறிவன்" முதலிய பல பெயர்களால் அவர் குறிப்பாற் கூறிய இயல்பினையுடைய இறைவனது திருவடியைப் பற்றுதல் ஒன்றே மேற்கூறிய அவ்விரண்டு பயனையும் தருவது" எனக் கடவுள் வாழ்த்திலும், பிற சில இடங்களிலும் கூறிய முகத்தால், "அங்ஙனம் கூறும் நெறியே உண்மை மெய்ந்நெறி" என்பது, பெறவைத்தார். அவ்வாறு பெறவைத்தாராயினும், அவர் உலகியலையே பெரிதும் கூறினமையால் அவரது நூல் அறநூலாயும், அவரால் குறிப்பால் உணர்த்தப்பட்ட உண்மை மெய்ந்நெறியைச் சிறந்தெடுத்து இனிது விளக்கிக் கூறும் நூல்கள் அருள் நூல்களாயும் விளங்குகின்றன. திருவள்ளுவர் தமது நூலிற் கூறிய நெறியே அறநெறியும், அவர் குறிப்பாற் பெறவைத்த உண்மை மெய்ந்நெறியே அருள் நெறியும் ஆதலின், அவ்விருநெறியும் ஒருபடித்தாய் நிற்றலை முன்னர்ப் பலமுறை இறைஇயல்பு பற்றிச் சிந்திக்கும்வழிக் கண்டோம். இனி அதனை அவ் இறைவனை வழிபடும் வழிபாட்டின் பயனைச் சிந்திக்கும் வழிச் சிறிது காண்போம்.

"மலர்மிசை யேகினான்" என்னும் குறளில் திருவள்ளுவர் இறைவனது 'மாண் அடி (மாட்சிமைபட்ட திருவடிகளைச்) சேர்ந்தார் நிலமிசை நீடுவாழ்வார்' என்று கூறினர். அதில், "நிலமிசை நீடு வாழ்வார்" என்பதற்குப் பரிமேலழகர், 'எல்லா உலகிற்கும் மேலாய விட்டுலகின்கண் அழிவின்றி வாழ்வார்' எனப் பொருள் கூறினர். எனவே, 'நிலம்' என்றதற்கு 'உலகம்' என்று பொருள்கொண்டு, அது சிறப்புப்பற்றி எல்லா உலகினும் மேலாய விட்டுலகத்தைக் குறித்ததாக அவர்,

உரைத்தார்' என்பது விளங்குகின்றது. ஆயினும், "நிலம்" என்பது நிலவுலகத்தைக் குறித்தலே இயல்பாவதன்றி, எல்லா உலகங்களையும் பொதுப்படக் குறித்தல் இயல்பாவதில்லை. அங்ஙனம் குறித்தல் வேண்டுமாயின், அதற்கு முன்னுதல், பின்னுதல் யாதேனும் ஒரு சொல்லோ சொற்றெடரோ இணைதல் வேண்டும். அஃதில்லாமையால் எல்லா உலகங்களையும் அதற்குப் பொருளாகக் கொள்ளுதல் அமையாது. அன்றியும் திருவள்ளுவர் இங்கு விட்டுலகத்தைக் கூற நினைத்தாராயின் "குறித்தோன் கூற்றம் தெரித்துமொழி கிளவி" என்னும் முறைமையால் 'உயர் நிலம்', 'தூ நிலம்' என்ருற்போல யாதேனும் ஓர் அடைமொழி கொடுத்துக் கூறுதலன்றிவாளா கூருர்.

இங்ஙனமாகலின் சிலர் அவரது உரையை நிலைநிறுத்த வேண்டி, 'நிலமிசை' என்பதனை 'மிசைநிலம்' என மொழி மாற்றிப் பொருள் கொள்ளுதல் வேண்டும் என்பர். 'மிசை நிலம்' என்ருற்படும் பொருள் 'நிலமிசை' எனமாற்றிக் கூறினுல் பெரிதும் வேறுபட்டுப் போதலின், எல்லா இடங்களிலும் தான் கருதும் பொருள் திரிபின்றி இனிது விளங்கவே கூறும் திருவள்ளுவர், சிறப்புடைய இவ்விடத்தில் இங்ஙனம் திரிபுண்டாகும்படி கூருர். அவ்வாருகவும் பரிமேலழகர் அங்ஙனம் பொருள் கூறியது, 'நீடுவாழ்வார்" என்ற சொற்பற்றியேயாம். அஃதாவது, 'நீடு வாழ்தல்' என்பது கால வரம்பின்றி வாழ்தலே யாதலும், அவ்வாறு வாழ்தல் வீட்டுலகத்தின்கணன்றிப் பிறவுலகத்து இல்லாமையும் பற்றியாம்.

'நீடுவாழ்தல்' என்பதற்கு, கால எல்லையைக் கடந்து வாழ்தல்' என்பதே உண்மைப் பொருளாயினும், முகமனுரையாக, நெடுங்காலம் வாழ்தலையும் அது குறிப்பதேயாம். ஆகவே, "நிலமிசை" என்ற குறிப்பால் இம்முகமன், பொருளே கொள்ளப்படும். "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்" "வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை" என்ருற்போல, இனிது வாழும் வாழ்வே, 'வாழ்வு' எனப்படுமாகலின், "வாழ்வார்" என்றதுதானே 'இனிது வாழ்வர்' என்னும் பொருளைத்தந்து நிற்கும். அதனுல் "மலர்மிசை யேகினுன் மாணடி சேர்ந்தார் நிலமிசை நீடுவாழ்வார்" என்பது 'இறைவனடியை அடைந்தோர் (பற்றுக்கோடாகச் சார்ந்தவர்) நிலவுலகத்தில் நெடுங்காலம் இனிது வாழ்வர்' எனப் பொருள் தருவதாம். மணக்குடவர், இதற்கு இப்பொருளே கூறினர். நிலமிசை நீடு இனிது வாழ்தலும் பெறத்தக்கதொரு பயனே என்பதைத் திருவள்ளுவர், "கொல்லாமை மேற்கொண்டொழுகு

வான் வாழ்நாள் மேற்செல்லா துயிருண்ணுங் கூற்று'' "இலர் பலராகிய காரணம், நோற்பார் சிலர், பலர் நோலாதவர்", "வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம் - ஈண்டு முயலப்படும்'' எனத் துறவறவியலுள் கூறியவாற்ருன் அறியலாம்.

"வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்கு - யாண்டும் இடும்பை யில" என்னும் குறள் உரையில் பரிமேலழகர், 'அடி சேர்ந்தார்க்கும் அவ்விரண்டும் இன்மையின், அவை காரணமாக வரும்......துன்பங்களும் இலவாயின' என இடும்பை இலவாதற்குக் காரணம் விரித்துரைத்தார். அங்கு அவ்வாறுரைத்த அவர் மாணடி சேர்ந்தார், நிலமிசை நீடு வாழ்வதற்குக் காரணம் விரித்திலர். ஆயினும், திருவள்ளுவர், "பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க - நெறி நின்ருர் நீடுவாழ் வார்" என, நீடு வாழ்தற்குக்காரணத்தை அக்குறளிற் கூறினர். அங்ஙனம் கூறிய அதனுள் 'நிலமிசை' என்ருதல், பிறவாதல் கூருமையின், நிலமிசை நீடு வாழ்தல், வான்மிசை நீடுவாழ்தல், இவ்விரண்டையும் கடந்து நீடுவாழ்தல் என்னும் அனைத்து நிலைகளும் கொள்ளப்படும்.

"ஐந்தவித்தான் ஒழுக்கநெறி" என்பதற்கு, 'ஐந்தவித்தானல் சொல்லப்பட்ட ஒழுக்கநெறி என்பது பொருள். எனவே, 'இயல்பாகவே பாசங்களின் நீங்கிய இறைவன் ஒருவன் உளன்' எனவும், 'அவன் உயிர்களை உய்விக்கவேண்டிச் சொல்லிய நெறியே நல்லொழுக்கநெறி' எனவும், உணர்தலே நல்லொழுக்க நெறியின் முதற்படி என்பது விளங்கும். இவ்வாறு உணர்வோர் தங்கள் தங்கட்கு இயன்ற அளவில் நல்லொழுக்கநெறிக்கண் தவருது நிற்பாராகலின், அவற்றிற்கேற்ப அவர் அவ்விறைவனது திருவருளைப் பெறுவர். அதனல், அவர்கள் இம்மை, மறுமை நலங்களையும் ஏனையோரினும் மிக எளிதிற் பெறுவார்கள். 'இம்மை, மறுமை, வீடு' என்னும் மூன்றனுள் இம்மை முற்பட்டதாகலின் அதனைத் திருவள்ளுவர் முன்னர்க் கூறினர். நல்லொழுக்க நெறியை, 'இறைவன் வகுத்த நெறி' என உணர்ந்து அதன்கண் நிற்போர், இம்மையில் நல்வாழ்வு வாழுங்காலத்தில் வையத்துள் வாழ்வாங்கு வாழ்வாராகலின், பின்னர் அவர் வானுறையும் தேவருள் ஒருவராக வைக்கப்படுதல் உறுதி. ஆகவே மறுமைப் பயன் அவர்க்கு எளிதில் உண்டாதலும் இதனுற் சொல்லப்பட்டதேயாம். இம்மை மறுமைப் பயன்களை இவ்வாறு முதற்கண் பிரித்துக் கூறிய அவர், "பொறிவாயில்" என்னும் குறளில், 'இம்மை, மறுமை, வீடு' என்னும் மூன்றனையும் கொள்ளுமாறு பொதுப்பட, "நீடு

வாழ்வார்" என்று கூறினர். மேற்கூறிய மூன்று பயன்களுள் வீடே சிறந்ததும், முடிந்ததும் ஆதலின் அதனை இறுதியிற் கூறுவார். எனவே, எந்நிலையிலும் நீடிய நல்வாழ்வை எய்துதல் இறைவன் திருவடியையே பற்றுக்கோடாகக் கொள்ளும் நெறியினாலேயாம் என்பது இனிது விளங்கும்.

அறநூலாகிய திருக்குறளில் இவ்வாறு சொல்லப்பட்டது போலவேதான், அருள்நூல்களாகிய திருமுறைகளிலும் சொல்லப்படுகின்றது.

" நீல மாமிடற் றால வாயிலான்
பால தாயினார் - ஞால மாள்வரே. "

" ஞாலம் ஏழுமாம் - ஆல வாயிலார்
சீல மேசொலீர் - காலன் வீடவே ".

" அண்ண லாலவாய் - நண்ணி னான்றனை
எண்ணி யேதொழத் - திண்ண மின்பமே "

" ஐயன் முதுகுன்றைப் - பொய்கள் கெடநின்று
கைகள் கூப்புவீர் - வையம் உமதாமே "

" வெய்ய வினைதீர - ஐயன் அணியாரூர்
செய்ய மலர்தூவ - வையம் உமதாமே "

" எண்ணும் அடியார்கள் - அண்ணல் மருதரைப்
பண்ணின் மொழிசொல்ல - விண்ணுந் தமதாமே " (சம்பந்தர்)

" ஐய னேஅர னேஎன் றரற்றினால்
உய்ய லாம்உல கத்தவர் பேணுவர்
செய்ய பாதம் இரண்டும் நினையவே
வையம் ஆளவும் வைப்பர்மாற் பேறரே. "

" முழுத்தழல் மேனித் தவளப் பொடியன் கனகக்குன்றத்
தெழிற்பெருஞ் சோதியை யெங்கள் பிரானை யிகழ்ந்தீர்கண்டீர்;
தொழப்படுந் தேவர் தொழப்படு வானைத்தொழுதபின்னைத்
தொழப்படுந் தேவர்தம் மால்தொழு விக்குந்தன் தொண்டரையே "

" களித்துக் கலந்ததொர் காதற் கசிவொடு காவிரிவாய்க்
குளித்துத் தொழுதுமுன் னின்றஇப் பத்தரைக் [கோதில்செந்தேன்
தெளித்துச் சுவையமு தூட்டி அமரர்கள் சூழிருப்ப
அளித்துப் பெருஞ்செல்வம் ஆக்கும் ஐயாறன் அடித்தலமே "

(அப்பர்)

“ திருச்சுழியல் - நானுவிதம் நினைவார் தமை
நலியார்நமன் தமரே ”

“ திருச்சுழியல் - தொண்டேசெய வல்லாரவர்
நல்லார் ; துயரிலரே ”

“ திருச்சுழியல் - தெய்வத்தினை வழிபாடுசெய்
தெழுவாரடி தொழுவார்
அவ்வத்திசைக் காசாகுவர் அலராள் பிரியாளே ”

“ திருச்சுழியல் - அலையார்சடை யுடையான் அடி
தொழுவார் பழுதுள்ளம்
நிலையார் ; திகழ் புகழால்நெடு வானத் துயர்வாரே ”

“ இம்மை யேதரும் சோறும் கூறையும்
ஏத்த லாம் இடர் கெடலுமாம்
அம்மை யேசிவ லோகம் ஆள்வதற் கியாதும்
ஐயுற வில்லையே ” (சுந்தரர்)

என்றாற்போல வரும் திருமுறைத் திருமொழிகட்கு ஓர் அள வுண்டோ! இங்ஙனம் அருள்நெறியே அறநெறியும், அற நெறியே அருள்நெறியுமாய் இருத்தலை உணர்ந்து, மலர்மிசை ஏகினன் மாணடி சேர்ந்து அவன் நெறிநின்று, அனைவரும் நீடிய நல்வாழ்வு எய்துவாராக.

---

## பொன்மொழி

ஆன்மாக்கள் அளவற்றன. அவை பிறவிப்பிணியில் அகப் பட்டுக் காற்றாடிபோல் சுழன்றுகொண்டிருக்கின்றன. அவை அந்தப் பிணியினின்றும் நீங்க வேண்டுமானால் அதற்கும் ஒரு மருந்து வேண்டும். அந்த மருந்துதான் பஞ்சாக்கரம். மெய் கண்டார் பஞ்சாக்கரத்தைப்பற்றி சிவஞானபோதம் ஒன்பதாம் சூத்திரத்துள் மிக அழகாகக் கூறுகின்றார். கண் இல்லாத குருடன் உலகைப்பார்த்துச் சொல்லுவான்; என்ன ‘எங்கும் ஒரே இருட்டாக இருக்கின்றது; பொழுது விடிவதேயில்லையா’ என்று. அதுபோலத்தான் ஞானக்கண் இல்லாதவனும் இறை வனைக் காணமுடியாது. காண்பதற்கு உபகாரமாக இருப்பது தான் பஞ்சாக்கரம்.

— ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி.

# அறநெறியும் அருள்நெறியும்

## 12. "துன்பத் தொலைவு"

'இறைவனை வழிபடுதலால் இம்மை, மறுமை, வீடு என்னும் மூவகை யின்பமும் உளவாம்' என்று கூறிய திருவள்ளுவர், 'இறைவனை வழிபடுவார்க்கு எங்கும், என்றும், எந்தவகையான துன்பமும் இல்லை' என்றும் கூறுகின்றார்.

"வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல"

என்பது அக்குறள். இதனுள், 'யாண்டும்' என்றதற்கு 'எக் காலத்தும்' என்று பரிமேலழகர் பொருள் கூறியுள்ளார். காலத்தைக் குறிக்கவே இடமும் அதன்கண் அடங்குவதாம்.

இவ்வுலகத்தில் நமக்கு வரும் துன்பங்கள் மூவகை வழியினால் வருவனவாய், அவை, 'ஆதியான்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம்' என்பன. அவற்றுள் ஆதியான்மிகத்தை, 'தன்னைப்பற்றி வருவன' என்றும், ஆதிபௌதிகத்தை 'பிற வுயிரைப்பற்றி வருவன' என்றும் பரிமேலழகர் விளக்கினர். ஆயினும், ஞானமிர்த நூலுள், 'தன்னைப்பற்றி வருவன, பிற வுயிரைப் பற்றி வருவன' என்னும் இரண்டுமே 'ஆதியான் மிகம்' என்றும், 'ஆதிபௌதிகமாவன, மழை, வெயில், காற்று, இடி முதலியவற்றால் வருவன' என்றும் கூறப்பட்டுள்ளன. 'ஆன்மா, பூதம்' என்னும் சொற்களுக்குப் பரிமேலழகர் கொள்கையில், முறையே 'தான்' என்பதும், 'உயிர்' என்பதும் பொருள். ஞானமிர்தக் கொள்கையில் அவற்றிற்கு முறையே 'உயிர், பஞ்சபூதங்கள்' என்பது பொருள். ஆன்மிகம் - ஆன்மாவால் விளைவது. பௌதிகம் - பூதத்தால் விளைவது.

"ஆதிதைவிகம்" என்பன இவ்வுலகத்தில் ஒருவர்மீதும் குற்றம் சொல்லாது தெய்வத்தையே நொந்துகொள்ளுமாறு விளைவன. அவை, நரை, திரை, மூப்பு, சாக்காடு, வாழ்நாட் குறை, நரகம் முதலியன. பரிமேலழகர் கொள்கையில், ஞானமிர்தத்துள், "ஆதிபௌதிகம்" எனப்பட்டவைகளும் ஆதிதைவிகத்துள் அடங்குவனவாம். உலகில் இம்மூவகையானும் வரும்

---

* 10—2—69 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

துன்பங்கள் எண்ணற்றன என்பது தெளிவு. "இத்துன்பங்கள் யாவும் இறைவனை வழிபடுதலால் நீங்கும்" என்கின்றார் திருவள்ளுவர்.

"பிறப்பு எய்தினோர் பலர்க்கும் மேற்கூறிய மூவகைத் துன்பங்களும் விளைதல் உறுதியாய் இருக்க, இறைவனை வழிபடுவோர்க்குமட்டும் அவை இல்லையாதல் எவ்வாறு" என்று வினவுவோர்க்குப் பரிமேலழகர் கூறும் விடை, இறைவனை வழிபடுவோர் ஏனையோர்போல உலகப்பற்று உடையவராய் இரார் ஆதலின், அவர் இவ்வுலகில் ஒருபொருளை விரும்புதலும், இன்னொரு பொருளை வெறுத்தலும் இல்லை. விருப்பு வெறுப்புக்களே துன்பத்திற்குக் காரணம் ஆதலின், அவை இல்லையாகவே அவற்றால் வரும் துன்பங்களும் இலவாம்" என்பது. இதனைக் குறிப்பால் உணர்த்தவே திருவள்ளுவர் இறைவனை இங்கு, "வேண்டுதல் வேண்டாமை இலான்" என்று குறித்தார் என்பது அவர் கருத்து என்பது, "அடிசேர்ந்தார்க்கும் அவ்விரண்டும் இன்மையின், அவை காரணமாக வரும் மூவகைத் துன்பங்களும் இலவாயின" என்ற அவரது குறிப்பினால் நன்கு விளங்கும்.

"ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம்" என வினைகள் மூன்று நிலைகளை உடையன. வினைகள் புதியனவாய் அவ்வப்பொழுது செய்யப்படுங் காலத்தில், "ஆகாமியம்" எனப் பெயர் பெறும். அவையே காலம் வருந்துணையும் பயன் தாராது தங்கிக் கிடக்கும் பொழுது, "சஞ்சிதம்" எனப் பெயர் பெறும். அவை காலம் வந்தவிடத்து முன்வந்து பயனைத் தரும்பொழுது, "பிராரத்தம்" எனப் பெயர்பெறும். திருமுறைகளில் ஆகாமியம் "மேல்வினை" என்றும், சஞ்சிதம், "தொல்வினை" என்றும், பிராரத்தம், "ஊழ்வினை" என்றும் சொல்லப்படுதல் காணலாம். இவற்றுள் மேல்வினையாகிய ஆகாமியத்திற்கே விருப்பு வெறுப்புக்கள் காரணமாவனவன்றி, ஊழ்வினையாகிய பிராரத்தத்திற்கு அவை காரணமாவன அல்ல. ஆதியான்மிகம் முதலிய மூன்றும் பிராரத்தமேயன்றி, ஆகாமியம் அல்ல. ஆகவே, அவை மூன்றும் இல்லாதொழிதல் விருப்பு வெறுப்புக்கள் இன்மையால் ஆவதன்று. "விருப்பு வெறுப்புக்கள் இன்மையால் துன்பம் நீங்கும்" என்பதாயின், அத்துன்பத்தைப் பிறவி என்னும் துன்பமாக உரைத்தல் வேண்டுமன்றி, பிறவிக்கண்ணே வரும் துன்பமாக உரைத்தல் பொருந்துவதன்றும். பொருந்தும் எனக்கொள்ளின், "துன்பம் இல" என்றது, "துன்ப அனுபவங்கள் இல" என்று கூறியதாய் முடியும். அது கருத்தன்று.

அவ்வாருயின், "இறைவனை வழிபடுவார்க்குமட்டும் பிரா ரத்தம் நீங்குதல் எவ்வாறு" என்னும் வினவிற்கு விடை என்னை எனின், "இறைவனது திருவருள் அவற்றை விலக்கும்" என்பதே விடை. அங்ஙனமாயின், "பிரார்த்தம் ஒருபோதும் தன் பயனைத் தாராது ஒழியாது" என்பது பொய்யாய் விடுமன்றே எனின், ஆகாது. ஏனெனில், 'பிராரத்தத்தால் விளையும் துன்பங்களை வன்மையாக அன்றி இறைவன் திருவருள் மிகவும் மென்மை யாக்கிவிடும்' என்பதே 'பிராரத்தத்தை விலக்கிவிடும்' என் பதற்குக் கருத்தாகலின்.

நாவுக்கரசரைப் பல்லவ மன்னன் சமணர்களது சொல்லைக் கேட்டுப் பலவகையான துன்பத்திற்கு உள்ளாக்கினமையும், அத்துன்பங்கள் அனைத்தும் கதிரவன்முன்பனிபோல் ஆயினமை யும் நன்கறியப்பட்டவை. இவ்வனுபவத்தை அவர் நம்மனோர்க்கு உணர்த்துமிடத்து,

"மலையே வந்து விழினும் மனிதர்காள்
நிலையி னின்று கலங்கப் பெறுதிரேல்
தலைவ னாகிய ஈசன் தமர்களைக்
கொலைசெய் யானைதான் கொன்றிடு கிற்குமே"

என்று அருளுகின்றார்.

இறைவன் திருவருளையே உறுதியாகப் பற்றிநிற்கும் நிலையில் எக்காலும் கலங்காதிருத்தல்வேண்டும் என்பதையே, "நிலையினின்று கலங்கப் பெறுதிரேல்" என்றார்.

"நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது"

என்று திருவள்ளுவர் கூறியதும் இதையேயாம்.

'இறைவன் திருவருளால் துன்பங்கள் எளிதில் நீங்குவன வாகும்' என்பதை நாவுக்கரசர்,

"கவனஞ் செய்யும் கனவிடை யூர்தியான்
தமரென் றாலும் கெடும்தடு மாற்றமே"

என்று திருவாய்மலர்ந்தருளுகின்றார். அவர், மேற்கூறியவாறு இறைவன் திருவருளை உறுதியாகப் பற்றிநின்ற காரணத்தால், "அஞ்சுவது யாதொன்றும் இல்லை; அஞ்ச வருவதும் இல்லை"

"வானந் துளங்கில் என்! மண்கம்பம் ஆகில் என்" "நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்" "இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை" என்று இவ்வாறு பலவிடத்தும் பலபடியாகக் கூறுகின்றார். மாணிக்கவாசகரும், "யாம் ஆர்க்கும் குடியல்லோம்; யாதும் அஞ்சோம்" என்றும், "எங்கெழில்என் ஞாயிறு" என்றும் இன்னோரன்னவாகக் கூறுதலைக் காண்கின்றோம்.

"பொருவ னார்புரி நூலர்
புணர்முலை உமையவ ளோடும்
மருவ னார்மரு வார்பால்
வருவதும் இல்லைநம் அடிகள்;
திருவ னார்பணிந் தேத்தும்
திகழ்திரு வாஞ்சியத் துறையும்
ஒருவ னார்அடி யாரை
ஊழ்வினை நலியஒட் டாரே"

என்று சுந்தரர் மிகத் தெளிவாக அருளிச் செய்கின்றார்,

"அச்சம்மிலர் பாவம்மிலர் கேடும்மிலர் அடியார்
நிச்சம்முறு நோயும்மிலர் தாமுந்நின்றி யூரில்
நச்சம்மிட றுடையார்நறுங் கொன்றைநயந் தாளும்
பச்சம்முடை யடிகள்திருப் பாதம்பணி வாரே"

என்றாற்போல ஞானசம்பந்தர் அருளிச்செய்யும் இடங்களும் எண்ணில. இவற்றால், "இறைவனை வழிபடுவார்க்குப் பிராரத்தத்தால் வரும் துன்பங்களும் இல்லையாம்" என்பது இனிது புலப்படும். எனவே, இப்பிறப்பிலும் துன்பமின்றி வாழ்தற்கு இறைவனை வழிபடுதலே தக்கது என்க. இக் கருத்து அப்பூதியடிகள் நாயனார் வரலாற்றில்,

"நம்மையுடை யவர்கழற்கீழ் நயந்ததிருத் தொண்டாலே
இம்மையிலும் பிழைப்பதென என்போல்வா ருந்தெளியச்
செம்மைபுரி திருநாவுக்கரசர்"

என்று தெளிவிக்கப்பட்டமை காண்க.

'இறைவன் தன்னை வழிபடுவார்க்கு இவ்வாறு பிராரத்த வினைத் துன்பத்தை மிக மெலிவித்தும், ஏனையோர்க்கு அவ்வாறு செய்யாது விடுத்தும் நிற்பானாயின், அவன் ஒருபாற் கோடி நிற்கும் கோட்டமுடையனாவனன்றோ' என்ற ஐயம் எழுதல் இயல்பு. அதனைப் போக்கவே திருவள்ளுவர் மேற்கூறிய

குறளில் இறைவனை, "வேண்டுதல் வேண்டாமை இலான்" என்று குறித்தார். அஃதாவது, 'இறைவன் சிலரிடத்து விரும்பும், சிலரிடத்து வெறுப்பும் உடையனவல்லன்! யாவரையும் ஒருபெற்றியே நோக்குபவனே" என்பதாம்.

இறைவன் அத்தகையோனாயின் மேற்கூறியவாறு வேறுபடச் செய்தல் பொருந்துமோ? என்னும் வினாவிற்கு மெய் கண்டார்,

"சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல்
சார்ந்தாரைக் காத்தும் சலமிலனாய்ச் - சார்ந்தடியார்
தாந்தானாச் செய்துபிறர் தங்கள்வினை தான்கொடுத்தல்
ஆய்ந்தார்முன் செய்வினையும் ஆங்கு"

என்று நல்லதொரு விடையைக் கூறினார். அஃதாவது, 'துன்பத்தைத் துடைத்து இன்பத்தைத் தரவல்ல தலைவன் ஒருவனுக்குத் தன்னைச் சரண் அடைந்தார்க்கே அவ்வாறு செய்தல் கடனாகுமன்றி, ஏனையோர்க்கும் அவ்வாறு செய்தல் கடனாகும் என்று வாதிடுதல் எவ்வாறு பொருந்துவதாகும்? ஆகாது. அதனால் சார்ந்தாரைக் காத்தல்பற்றி அவன் கோட்டம் உடையவனாகான்' என்பதாம்.

"சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கலால்
நலமிலன் நாடொறும் நல்கு வான் நலன்"

என்று அப்பரும்,

"நலமிலன் நண்ணார்க்கு; நண்ணினர்க்கு நல்லன்;
சலமிலன்; பேர்சங் கரன்"

என்று உமாபதி சிவாசாரியரும் அருளிச்செய்தார்கள்.

எந்த ஒருபொருளின் பயனையும் அதனை அடைந்தால் பெற முடியுமே யன்றி, அப்பொருளையடையாமலே அதன் பயனைப் பெறுதல் எவ்வாறு முடியும்? முடியாது. அதுபோலவே இறைவனால் அடையத்தகும், பயனை அவனை அடைந்தவர் பெறுவரேயன்றி, ஏனையோர் எவ்வாறு பெறுதல் கூடும்? அதனால், துன்பந் தொலைதற்கு இறைவனை வழிபடவேண்டும் என்பது, அறநெறியிலும், அருள்நெறியிலும் ஒருவகையாகவே கூறப்படுதலையறிந்து அவ்வாறு செய்து அனைவரும் பயன் பெறுவார்களாக.

---

# அறநெறியும் அருள்நெறியும்

## 13. “ வினை நீக்கம் ”

இந்திய நாட்டு மதங்களில், ‘ உலகாயதம் ’ என்னும் நாத்திக மதம் தவிர ஏனைய எல்லா மதங்களும் சில பொருள்களில் ஒரே கருத்துடையனவாய் இருக்கின்றன. அப்பொருள்களாவன :—

உடம்பு உயிரன்று; உயிர் உடம்பிற்கு வேருனதே. அதனுல், உடம்பு அழிந்தபின்பும் உயிர் அழியாது நின்று, வேருேர் உடம்பை எடுக்கும்; அதுவே, “ மறு பிறப்பு ” எனப்படுவது. எடுக்கப்பட்ட உடம்பு அழிவதே “ இறப்பு ” எனப்படுகின்றது. எனவே, பிறப்பு, இறப்பு, அதன்பின் பிறப்பு, மீள இறப்பு என்று இவ்வாறு மாறி மாறி வரும் சுழற்சியில் அகப்பட்டு உயிர் உழல்வதாகின்றது.

பிறப்பிறப்புக்களும், அவற்றில் நிகழும் இன்பத் துன்பங்களும் காரணம் இன்றி இயற்கையாய் வேண்டியவாறு நிகழ்வன அல்ல. அவை அனைத்தும் “வினை” அல்லது “கன்மம்” என்னும் ஒரு பெரிய காரணத்தின்வழி நிகழ்வனவே. எனினும், வினையென்னும் காரணம் என்றும் உயிர்களைப் பற்றியிருப்பதன்று; ஒருகாலத்தில் நீங்கக் கூடியதே. அது நீங்கிஞல் உயிர் பிறப்பிறப்பாகிய சுழற்சியினின்றும் நீங்கி நிலைத்து நிற்கும். அந்நிலையே “ விடு பேறு ” அல்லது “ முத்தி ” எனப்படுவது. உயிர் நித்தியப் பொருள்; அதனுல் அழிவது உடம்பேயன்றி உயிரன்று. பிறப்பு இறப்புக்களாகிய சுழற்சியே, “ கட்டு, அல்லது “ பந்தம் ” எனப்படும். பந்தமாகிய பிறப்பு நிலை துன்பமே. விடாகிய பிறப்பற்ற நிலையே இன்பம். அதனுல், பிறப்பினின்றும் நீங்கி விடுபெற முயல்வதே அறிவுடைமையாகும். அஃதாவது, வினை நீங்காமல் பிறப்பு நீங்குதல் கூடாமையால், முன்னர் வினையினின்று நீங்கிப் பின்னர் அதுவழியாகப் பிறப்பினின்றும் நீங்குவதே அறிவுடைமை என்பதாம். இப்பொருள்கள் எல்லாம் பெரும்பாலும் இந்திய நாட்டு மதங்கள் பலவற்றிற்கும் உடன்பாடானவே. எனினும், வினையினின்றும் நீங்குதற்கு ஒவ்வொரு மதம் ஒவ்வொரு வழியைச் சொல்லுகின்றது.

---

* 10—3—69 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

பௌத்தமும், சமணமும், "தன்னலத்தின் பொருட்டு யாதோர் உயிர்க்கும் தீங்கு செய்யாது எல்லா உயிர்களிடத்தும் இரக்கம் கொண்டு அவற்றிற்குத் தன்னால் இயன்ற அளவில் நலம் செய்துவரின் வினை நீங்கும்" என்கின்றன. பிற உயிர்களிடத்தில் இரக்கம் உண்டாதலும், அவற்றிற்கு நலம் செய்தலும் உடம்பின்மீதும், அதைச்சார்ந்த பொருளின்மீதும் பற்றுக் கொள்ளாமல், உண்டி சுருக்கல், உடலை வருத்துதல் முதலிய நோன்புகளை மேற்கொள்வதனாலே நிகழும் என்பதும் அம்மதங்களின் கொள்கை. நோன்பு, பௌத்த மதத்தில் உள்ளதினும், சமண மதத்தில் மிகக் கடுமையாகக் கொள்ளப்படுகின்றது.

"மீமாஞ்சை" என்னும் மதம், "பயன் கருதாது நல்லவற்றைச் செய்தால் வினை நீங்கும்" என்கின்றது. ஆயினும், வினை நீங்குதற்கு வழியாகத் திருவள்ளுவர் என்ன கூறுகின்றார் என்று பார்த்தல் வேண்டும். "இறைவனது பொருள்சேர் புகழை எப்பொழுதும் விருப்பத்துடன் சொல்லுதல் வேண்டும்" என்பதையே அவர் வினை நீக்கத்திற்கு வழியாகக் கூறுகின்றார்.

"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"

என்பது அக்குறள். அதனுள் அவர், 'வினைசேரா' என்று மட்டும் கூறாமல், "இருவினையும் சேரா" என்று கூறியிருப்பது நன்கு நோக்கற்பாலது.

இருவினையாவன "நல்வினை தீவினை" என்பன. "புண்ணியம், பாவம்" என்பன இவையே. இவை முறையே, "அறம் மறம்" என்றும் சொல்லப்படும். "வினை, இவ்வாறு இருவகையாய் நிற்கும்" என்பது யாவரும் அறிந்தது. இவற்றுள், 'தீவினை' என்றும், "பாவம்" என்றும், 'மறம்' என்றும் சொல்லப்படுகின்ற ஒன்றே தீங்கு தருவது; அதனால் நீங்க வேண்டுவது அஃதே; நூல்களும் "ஆகாது" என விலக்குவது அதனையே என்று பலர் கருதுவதுடன் 'நல்வினை' என்றும், 'புண்ணியம்' என்றும், 'அறம்' என்றும் சொல்லப்படுகின்ற அது நன்மை தருவதொன்று; அதனால் அதனை விடாது பற்றுதல்வேண்டும் என்றும் கருதுவர். அங்ஙனமாக, திருவள்ளுவர், 'நல்வினை தீவினை' என்னும் இருவகை வினைகளுமே நீங்குதல் வேண்டும் என்று கூறுவாராயின், அது வியப்பைத்தருவதொன்றாகவன்றோ உள்ளது! அதனால் அதனை நன்கு ஆராய வேண்டுவதாகின்றது.

நல்வினையாயினும், தீவினையாயினும் 'மனம், மொழி, மெய்' என்னும் முக்கரணத்தின்வழியே நிகழும். அவற்றுள், மனத்தின்வழி நிகழும் நல்வினைகள், அன்பு, அருள், நடுவு நிலைமை, அடக்கம், பொறுமைஇன்மை, வெஃகாமை (பிறர் பொருளை விரும்பாமை) முதலியன. இவை தரும் நன்மைகள் யாவை என நோக்குமிடத்து, 'அன்பு' நண்பைத்தரும். வையக இன்பத்தையும் வானக இன்பத்தையும் தரும். அருள் இருள் சேர்ந்த இன்னா உலகம் (நரகம்) புகாது தடுத்து இன்ப உலகத்திற் சேர்க்கும். அருளாள்வார்க்த அல்லல் இல்லை. நடுவு நிலைமை யுடையவனது செல்வம் அழியாது; தன் வழியில் உள்ளார்க்கும் பயன் தந்து நிற்கும். நடுவு நிலைமை யுடையவனுக்குப் பிறக்கும் மக்கள் நன்மக்களாய் இருப்பர். அடக்கம் அமரருள் உய்க்கும். பொறுத்தார்க்குப் பொன்றுந்துணையும் புகழ். 'பொறுமை இல்லாதவர்க்குச் செல்வம் நீங்காது' வெஃகாமை செல்வத்தை அஃகாமை (சுருங்காமை) செய்யும் எனக் கூறுகின்றார் திருவள்ளுவர்.

இனி, மொழிவழியாக நிகழும் நல்வினைகள், இன்சொல், வாய்மை முதலியன. அவற்றுள் இன்சொல் வறுமையை நீக்கிச் செல்வத்தைக் கொடுக்கும். இம்மை மறுமை இன்பங்களைப் பயக்கும். வாய்மை உலகத்தார் உள்ளத்திலெல்லாம் உளனாகச் செய்யும். மனத்தூய்மையைத்தரும். மனம் தூயார்க்கு எச்சம் நன்றாகும் (மக்கட் பேறு நல்லனவாக வாய்க்கும்) என்று அவர் கூறுகின்றார்.

அப்பால், 'மெய்வழியாக நிகழும் நல்வினைகள் யாவை' என நோக்கின், விருந்தோம்பல், ஒழுக்கம், ஈகை, புலால் உண்ணாமை, கொல்லாமை, கள்ளாமை முதலியன. இவற்றுள், விருந்தோம்பலைச் செய்வான் இல்லத்தில் திருமகள் மன மகிழ்ந்து வாழ்வாள்; அதனால் அவன் வாழ்க்கை வறுமையுட் படாது செல்வச் செழிப்புடன் விளங்கும். அவன் பின்னர்த் தேவர்கட்கு நல்விருந்தினனாவான். ஒழுக்கம் விழுப்பம் தரும். ஒழுக்கம் குடிமையைத் தரும். தன் பொருளை வறியவரது பசியைத் தணிக்கச் செலவிட்டவன், அதனை மறுபிறப்பில் ஒன்றிற்குப் பன்மடங்காகப் பெறுவான். பொருளை வறியவர்க்குப் பகுத்துக்கொடுத்து உண்பவனைப் பசி என்னும் தீப்பிணி தீண்டாது புலாலை மறுத்தானைக் கைகூப்பி எல்லா உயிருந் தொழும். கொல்லாமை மேற்கொண்டொழுகுவான் வாழ்நாள் மேற்செல்லாது உயிருண்ணும் கூற்று கள்ளார்க்குப் புத்தேள் உலகும் (தேவலோகமும்) தள்ளாது (தப்பாமற் கிடைக்கும்)' என்பன திருவள்ளுவர் கூறுவன. இவை அனைத்தையும் உற்று

நோக்கும்வழி, நல்வினை தரும் நலம் என்பன எல்லாம் மண்ணுலகில் மக்களாகவேனும், விண்ணுலகில் தேவராக வேனும் பிறப்பெடுத்த பின்னர் அடையும் சிறு நன்மைகளே யன்றி, பிறவிப் பெருந்துன்பத்தை நீக்கி உயிர் அலைவின்றி என்றும் ஒரு பெற்றியாய் நிலைத்து நின்று அடையும் பெரு நன்மையல்ல என்பது தெளிவாகும். ஆகவே, பிறப்பே பெருந் துன்பம் என்று அறியும் அறிவும், அதனால் அதனை நீக்கிக் கொள்ளும் விருப்பமும் இல்லாதவர்க்கே நல்வினை நல்லதாவ தன்றி அவற்றை யுடையவர்க்கு நல்வினையும் தீவினைபோலத் தீமை தருவதேயாம் என்பது தேற்றம். ஆயினும், நூல்கள் 'நல்வினையைச் செய்க' என்று விதிப்பது, அதனையும் செய்ய மாட்டாது தீவினையே செய்து. மேற்கூறிய சிறு நன்மைகளையும் பெறமாட்டாது அதற்கு மறுதலையாய துன்பத்தை எய்தி அல்லற்படுகின்ற பொதுமக்களை நோக்கியேயாம். எனவே, திருவள்ளுவர், "இருவினையும் சேரா" என நல்வினையையும் தீவினையோடு ஒருபடித்தாகவைத்து 'நீங்கற்பாலது' எனக் கூறியது, பிறவிப் பெருந்துன்பத்தினின்றும் நீங்கிப் பேரின்பம் அடைய விரும்பும் பெருமக்களை நோக்கியாயிற்று.

நல்வினையேயாயினும், தீவினையேயாயினும் அவை உலகத் தைப் பொருட்படுத்தி நோக்கச் செய்வதன்றி உலகத்தைப் பொருட்படுத்தாது புறக்கணித்து மறக்கச் செய்வன அல்ல. தீவினை உலகத்தை வெறுப்புணர்ச்சியுடன், விடாது பற்றச் செய்கின்றது. நல்வினை உலகத்தை விருப்புணர்ச்சியுடன், விடாது பற்றச் செய்கின்றது. இவ்வளவே அவை இரண்டற்கும் உள்ள வேறுபாடு. எனவே, நல்வினை, தீவினை இரண்டும் உலக மாயையில் மேலும் மேலும் அழுந்தச் செய்வனவேயன்றி, அதினின்றும் விடுபடச் செய்வன அல்ல. அதனால், 'அவை இரண்டும் முறையே பொன்விலங்கும், இரும்பு விலங்கும் போல் வன' என்று ஆன்றோர் கூறுகின்றனர்.

ஒருவனுக்குக் கையிலும், காலிலும் விலங்கு பூட்டுமிடத்துப் பொன்னால் பூட்டினால் என்ன? இரும்பினால் பூட்டினால் என்ன? இரண்டும் அவனை அவன் விருப்பப்படி இயங்க ஒட்டாது தடுப் பனவேயாம். இதற்கு இக்காலத்தில் வேறோர்உவமை கூறலாம்.

இக்காலத்தில் குற்றவாளிகளைச் சிறைவைக்கும்பொழுது, சிலரை மேல் வகுப்புச் சிறையிலும், சிலரைக் கீழ் வகுப்புச் சிறையிலும் வைக்கின்றார்கள். எந்தச் சிறையில் வைப்பினும் சிறையேயன்றிச் சுதந்திரம் அன்று. அதுபோல, நல்வினையை 'மேல்வகுப்புச் சிறை' என்றும், தீவினையை, 'கீழ்வகுப்புச்

சிறை' என்றும் கூறலாமே தவிர, சுதந்திர நிலை என்று கூற இயலாது; அதனால்தான் இரண்டையுமே 'வினை' என்னும் ஒரு பெயரால் கூறுகின்றனர் உயர்ந்தோர். எனவே, நல்வினை, தீவினை இரண்டும் நீங்குவதே வினை நீக்கமாகும்.

'நல்வினை, தீவினை இரண்டும் நீங்குவதே வினை நீக்கம்' என்றால், அதற்கு நல்வினையைச் செய்வது எங்ஙனம் வழியாய் அமையும்? 'பயன் கருதாது செய்யும் நல்வினை இருவினையும் நீக்கும்' என்றால், பயன் கருதாமல் யாரும் எந்தச் செயலையும் செய்ய முடியாது. அவ்வாறு செய்யின், அது பித்துக்கொண்டவர் செயலாய் முடியும். எவ்வாறு எனில், விழலுக்கு நீர் இறைப்பதுபோன்ற செயல்கள்தாம் பயன் கருதாது செய்யும் செயல்களாய் இருக்கமுடியும். அப்படிப்பட்ட செயலைப் பித்துக் கொண்டவர்களே செய்வார்கள். அவை பெரும்பயனாகிய வினை நீக்கத்தை எவ்வாறு தர முடியும்? எனவே, 'பயன் கருதாது செய்தல்' என்பதற்கு, 'தன்னலம் கருதாது செய்தல்' என்பதே பொருள் எனல் வேண்டும். தன்னலம் கருதிப் பிறர்க்குத் தீங்கு செய்தல்தான் தவறாகுமன்றிப் பிறர்க்கு நன்மை செய்து தானும் நலம் அடைவதில் தவறு என்னை? எவ்வாற்றாலேனும் தான் நலம் அடைவது தவறாகுமாயின், பிறரை நலம் அடையச்செய்வதும் தவறுதானே? ஏனெனில் தனக்குத் தவறாகின்ற ஒன்று பிறர்க்குத் தவறில்லாததாதல் கூடாதன்றோ?

இதனால், 'பயன் கருதாது செய்தல்' என்பதற்கு, 'தன்னலம் கருதாது செய்தல்' என்பதே பொருள் என்றலும் கூடாமையால், அதற்கு, 'உலகப்பயன் கருதாது செய்தல்' எனப் பொருள் கூறல் வேண்டும். அங்ஙனமாயின், தனக்கேயன்றிப் பிறர்க்கு உலகப்பயன் உண்டாகுமாறு ஒன்று செய்வதும் தவறேயாம். ஆகவே அவையெல்லாம் வினையை மேலும் மேலும் வளர்ப்பன வாகுமேயன்றி வினை நீங்குதற்கு வழியாகமாட்டா. மற்றுத் தனக்காயினும் பிறர்க்காயினும் யாதொரு செயலையும், 'நான் செய்கின்றேன், செய்வேன்' என்னும் தன் முனைப்பின்றிச் செய்வதே வினை நீங்குதற்கு வழியாகும்.

ஒரு செயலை ஒருவன் செய்யும்பொழுது தன்னை அதற்குக் கருத்தாவாக நினையாதொழிந்தால், வேறு யாரைக் கருத்தா வாகக் கொள்வது? எல்லாவற்றையும் செய்தும், செய்வித்தும் நிற்கும் இறைவனையே அதற்குக் கருத்தாவாகக் கொள்ளுதல் வேண்டும் என்பது தெளிவு. இது வெறும் கொள்கைமட்டு மன்றி, உண்மையுந்தானே? ஏனெனில், உலகில் ஒவ்வொரு வரும் செய்யும் செயலுக்கு அவரவரே கருத்தராய் இருப்பின்

அவர் நினைத்தபடியே அச்செயல் முடிய வேண்டும். அவ்வாறின்றித் தான் ஒன்று கருதிச்செய்ய, அது வேறு வகையாகவும் முடிதலைப் பார்க்கின்றோம். ஆகவே, அச்செயலுக்கு உண்மைக் கருத்தா வேறொருவன் என்பதை நன்கு உணரலாம். அவனைக் கருத்தாவாக நினையாமல் அவரவரும் தம்மையே கருத்தாவாக நினைக்கின்ற குற்றத்தினால்தான் வினை என்பதே உண்டாகின்றது.

இவ்வுண்மையை அறியவொட்டாமல் மறைப்பது எது? ஆணவ மலமே. இஃது இருள்மயமானது. அதனால் 'இருள்' என்றே சொல்லப்படுகின்றது. எனவே, இந்த இருள்தான், வினைக்கே காரணம் என்பது புலனாகின்றது.

இருவினையைப் பற்றிக் கூறவந்த திருவள்ளுவர், மேற்காட்டிய குறளில், 'இருவினை' என்று வாளா கூறாது, "இருள்சேர் இருவினை" என்று கூறியிருப்பதைக் காண்கின்றோம். எனவே, இருவினைகள் ஆணவத்தினால் உண்டாகின்றன என்று அவர் குறித்துள்ளமை தெளிவு.

இருள் நீங்குவது ஒளியினால்தான். அதுபோல, ஆணவ இருளை நீக்கும் ஒளி இறை உணர்வே அதனால், இறையுண்மை நமக்கு அனுபவமாக விளங்காவிடினும் அனுபவத்தைப் பெற்றோரது அருள்மொழியின்வழி அவனை நாம் உணர்தல் வேண்டும். அவ்வுணர்வைத் தரும்செயல்கள், அவனை மனத்தால் நினைத்தலும், வாயால் வாழ்த்தலும் உடலால் பணி செய்தலும் ஆகிய இவையேயாம். ஆகவே, வினை நீங்குவதற்கு இவற்றைத் தவிர வேறு வழி இல்லை என்பது தெளிவு. இறைவனை நினைத்தல், வாழ்த்தல், வணங்கல் என்னும் மூன்றனுள் மேற்காட்டிய குறளில், "இறைவனை வாழ்த்தல்" என்பதைத் திருவள்ளுவர் எடுத்துக்கூறினார்.

நினைத்தல் புறநிகழ்ச்சி சிறிதுமின்றி அகத்தோடு ஒழிதலாலும், உடலாற் பணிசெய்தல் எல்லார்க்கும் கூடாமையாலும் இடைநிற்கும் வாயால் வாழ்த்துதல் யாவர்க்கும் உரியதாகின்றது. அதனால், அதையே மேற்காட்டிய திருக்குறளில் கூறியுள்ளார். சமயாசாரியர் நால்வரும், பிறருமாகிய அருளாளர் பலரும், தமக்கும், பிறர்க்கும் நன்கு பயன்படும் வகையில் இறைவாழ்த்துப் பாடல்களை அளவிறந்தனவாக அருளிச் செய்திருத்தல் இங்கு நன்கு நினைக்கத் தக்கது.

இறைவனை வாழ்த்தும் வாழ்த்துப் பாடல்கட்கு அவற்றின் பொருளாகிய இறைவன் பெருமைகள் இன்றியமையாதன. அவற்றைத் தருவன புராணங்கள். புராணங்களில் சொல்லப் பட்ட வரலாறுகள் இறைவன் தன் அன்பர் பலர்க்கு அவ்வப் பொழுது அருள்புரிந்த செயல்களும், அவனது இயல்புகளை எளிய வகையில் சுவைபட விளக்கும் விளக்கங்களுமாய் அமைந்தவை. அதனால், தோத்திரத் திருப்பாடல்களை அருளிச் செய்த அருளாளர்கள் அவைகளைப் பல முறையும் எடுத்தோதி யருளினார்கள். அவை மக்களைப் புகழும் புகழ்ச்சியுரை போலப் புனைந்துரையாகாது, முற்றிலும் மெய்ம்மை நிறைந்தவை. அதனால், அவற்றை, " பொருள்சேர் புகழ் " என்றும், " அவை களை எப்பொழுதும் சொல்கின்றவர்களை இருவினையும் அடைய மாட்டா " என்றும் கூறினார் திருவள்ளுவர்.

" காட்டி னாலும் அயர்த்திடக் காலனை
விட்டி னானுறை வேற்காடு
பாட்டி னாற்பணிந் தேத்திட வல்லவர்
ஒட்டி னார்வினை ஒல்லையே "

" தோலி னாலுடை மேவவல் லான்சுடர்
வேலி னானுறை வேற்காடு
நூலி னாற்பணிந் தேத்திட வல்லவர்
மாலி னார்வினை மாயுமே "

" விடையார்கொடி எந்தை வெள்ளைப்பிறை சூடும்
சடையான்கழல் ஏத்தச் சாராவினை தானே "

" ......................ஆப்பனூ ரானைப்
பரவும்மனம் உடையார் வினைபற்றறுப் பாரே "

" பகரும்மனம் உடையார் வினைபற்றறுப் பாரே "

" பாடும்மனம் உடையார் வினைபற்றறுப் பாரே "

" விடையானடி ஏத்த மேவாவினை தானே "

" சித்தம தொன்றிச் செய்கழல் உன்னிச் சிவன் என்று
நித்தலும் ஏத்தத் தொல்வினை நம்மேல் நில்லாவே "

" அரும்பு சேர்மலர்க் கொன்றையி னானடி அன்பொடு
விரும்பி ஏத்தவல் லார்வினை பாயின விடுமே "

" ஊனில் வெண்டலைக் கையுடை யானுயர் பாதமே
ஞான மாகநின் றேத்தவல் லார்வினை நாசமே "
( சம்பந்தர் )

" நின்றியூர் - உரையி னுல்தொழு வார்வினை ஒயுமே "

" குரக்குக்கா - நக்க னைநவில் வார்வினை நாசமே "

" நாகைக்கா ரோணனைச் - சொல்ல வேவினை யானவை
[ சோருமே "

" பார்த்துப் பாசம் பிடித்தெழு தூதுவர்
கூர்த்த வேலாற் குமைப்பதன் முன்னமே
ஆர்த்த கங்கை அடக்கும்வாட் போக்கியார்
கீர்த்தி மைகள் கிளர்ந்துரை மின்களே "

" அல்ல லாகஐம் பூதங்கள் ஆட்டினும்
வல்ல வாறு சிவாய நம என்று
நல்லம் மேவிய நாதன் அடிதொழ
வெல்ல வந்த வினைப்பகை வீடுமே "

" மதிதவன் நெஞ்சமே உஞ்சு போக
வழியாவ திதுகண்டாய் வானோர்க் கெல்லாம்
அதிபதியே ! ஆரமுதே ! ஆதி என்றும்,
அம்மானே ! ஆரூர்எம் ஐயா என்றும்,
துதிசெய்து துன்றுமலர் கொண்டு தூவிச்
சூழும் வலஞ்செய்து தொண்டு பாடிக்
கதிர்மதிசேர் சென்னியனே ! கால காலா !
கற்பகமே என்றென்றே கதறு நில்லே "

" பாசத்தைப் பற்றறுக்க லாகும் நெஞ்சே,
பரஞ்சோதி ! பாண்டரங்கா பாவ நாசா !
தேசத் தொளிவிளக்கே ! தேவ தேவே !
திருவாயூர்த் திருமூலட் டானு என்றும்
நேசத்தை நீபெருக்கி நேர்நின் றுள்கி
நித்தலுஞ் சென்றடிமேல் வீழ்ந்து நின்று
ஏசற்று நின்றிமையோர் ஏறே என்றும்
எம்பெருமான் என்றென்றே ஏத்தா நில்லே " (அப்பர்)

" பொன்செய் செஞ்சடைப் புண்ணி யன்புக
லூரைப் பாடுமின் புலவீர்காள்,
நெஞ்சில் நோயறுத் துஞ்சு போவதற்
கியாதும் ஐயுற வில்லையே "

" ..............பூம்புக லூரைப்பாடுமின் புலவீர்காள்
அள்ளற் பட்டழுந் தாது போவதற்
கியாதும் ஐயுற வில்லையே "

" பாட்டும் பாடிப் பரவித் திரிவார்
ஈட்டும் வினைகள் தீர்ப்பார் கோயில் — ஒற்றியூரே "

" மண்ணுல கிற்பிறந்து நும்மை
வாழ்த்தும் வழிய டியார்
பொன்னுல கம்பெறுதல் தொண்ட
னேன்இன்று கண்டொழிந் தேன் " (சுந்தரர்)

" சூழ்த்தமது கரமுரலும் தாரோயை நாயடியேன்
பாழ்த்தபிறப் பறுத்திடுவான் யானும்உன்னைப் பரவுவனே "

" பாட வேண்டும்நான் போற்றி நின்னையே
பாடி நைந்துநைந் துருகி நெக்குநெக்
காட வேண்டும்நான் போற்றி " ( மாணிக்கவாசகர் )

" ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமில்லார்க் காயிரம்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ "

" அவன்மருவும் - திருவாரூர் பாடிநாம் தெள்ளேணம்
[ கொட்டாமோ "

" தனிப்பெரியோன் - சீர்பாடல் பாடிநாம் தெள்ளேணம்
[ கொட்டாமோ "

" அம்பலத்தே ஆடுகின்ற - புண்ணியாளன் சீர்பாடிப்
[ பூவல்லி கொய்யாமோ "

" வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்தவைத்
திணங்கத்தன் சீரடியார் கூட்டமும்வைத் தெம்பெருமான்
அணங்கோ டணிதில்லை அம்பலத்தே ஆடுகின்ற
குணங்கூரப் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ "

என்றாற்போலத் திருமுறைகள் பலவற்றிலும் இவ்வாறே பரக்கக் கூறப்படுகின்றன. அதனால் அறநெறியிலும், அருள் நெறியிலும் இறைவனை மனத்தால் நினைந்து, உடலாற் பணி செய்தலுடன், வாயால் அன்பு பெருக, புகழைப் பரக்கச்சொல்லி வாழ்த்துதலே வினைநீக்கத்திற்கு வழியாகக் கூறப்படுதலை உணர்ந்து யாவரும் அவ்வழியே வினைநீங்கி உய்வார்களாக.

---

# அறநெறியும் அருள்நெறியும்

## 14. " மனக்கவலை மாற்றல் "

பல்வேறு வகைப்பட்ட பிறப்புக்களில் உள்ள உயிர்கள் அனைத்திற்கும் மனக்கவலை இருந்தே வருகின்றது. அவைகளில் மக்களிடையே உள்ள பல்வேறு வகை மனக் கவலைகளை நாம் நன்கு உணர்கின்றோம்.

" ஒருபொழுதும் வாழ்வ தறியார்; கருதுப
கோடியும் அல்ல பல "

என்னும் குறள், மக்களது கவலையின் அளவின்மையையே குறிக்கின்றது. அக் கவலைகளின் வகைகளுள் சிலவற்றை எடுத்துக்காட்டும் முகத்தால் பரிமேலழகர் மக்கட்கு உளவாகும் கவலைகட்கு அளவின்மையை அக்குறளின் உரையில் இனிது விளக்கியுள்ளார்.

" உண்பது நாழி; உடுப்பது நான்குமுழம்;
எண்பது கோடிநினைந் தெண்ணுவன - கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்துணையும் சஞ்சலமே தான். "

என்பது ஔவையார் வாக்கு. திருவள்ளுவர், ' வாழ்க்கையே நிலையில்லாதது; அவ்வாறிருக்க, அதனை அடிப்படையாக வைத்து மக்கள் தங்கள் மனக்கோட்டையை மிகமிகப் பெரிதாகக் கட்டுகின்றனர் ' என்பதற்கு, " ஒருபொழுதும் வாழ்வது அறியார் " என்று கூறினர். ஔவையார், " வாழ்கின்ற காலத் திலும் தேவைப்படுவன நாழியரிசியும், நான்கு முழச் சீலையுந் தானே ? இதற்கு ஏன் ஏராளமான மனக் கோட்டை? என்று வினவும் முறையில், " உண்பது நாழி; உடுப்பது நான்கு முழம் " என்று கூறுகின்றார். தாயுமானவரும், " ஆசைக்கோரள வில்லை " என்னும் பாடலில் ஆசையின் பெருக்கத்தைப் பலவகையாகக் குறிப்பிட்டு, ' ஆசை எவ்வளவு இருந்தால் என்ன ? அனுபவம் உண்டியும், உறக்கமுந்தானே ' என்பதற்கு " எல்லாம் யோசிக்கும் வேளையில் பசிதீர உண்பதும் உறங்குவது மாக முடியும் " என்று கூறினர். இருப்பினும் மக்கள் அடையும் மனக் கவலைக்கு ஓர் அளவுண்டோ ? 'பட்டினத்தார் பாடல்' என்னும் நூலில் உள்ள ஒருபாடல் யாவரும் அறிந்தது.

---

* 10—4—69 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

" அன்ன விசாரம் அதுவே விசாரம்: அது ஒழிந்தால்;
சொன்ன விசாரம் தொலையா விசாரம்; நல் தோகையரைப்
பன்ன விசாரம்; பலகால் விசாரம் இப் பாவிநெஞ்சுக்கு
என்ன விசாரம்வைத் தாய்இறைவா கச்சி ஏகம்பனே "

மற்றும் இத்தகைய பாடல்கள் பல.

'இவ்வாறு மக்களது மனத்தை எந்த நேரமும் வந்து வருத்திக்கொண்டிருக்கும் மனக்கவலை நீங்குதற்கு வழியே இல்லையோ ? இருந்தால் அவ்வழியாவது யாது ? என்று அறிய விரும்பும் விருப்பம் அனைவர்க்கும் உண்டாதல் இயல்பு. அதற்குத் திருவள்ளுவர் கூறுவது ஒன்றே. அஃது, 'இறைவன் திருவடியையே புகலிடமாக அடைவதுதான் உண்மையாக மனக்கவலை நீங்குதற்கு வழி; அது தவிர மற்றெதுவும் அப்பொழுதைக்குச் சிறிது அமைதியை அளிப்பதன்றி, என்றும் இன்பம் பெருகும் இயல்பினோடு ஒருஞான்றும் கவலையின்றி இருக்கச்செய்வதாகாது' என்பதே

" தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது"

என்பதே அவர் அவ்வாறு கூறும் திருக்குறள்.

உவமை இல்லாதான் - ஒப்பில்லாதவன். 'தன்னோடு ஒத்த பொருள் வேறொன்று இல்லாதவன்' எனவே, உயர்ந்த பொருள் இல்லாமையும் தானே பெறப்பட்டது. 'ஒப்பதும், மிக்கதும் இல்லாதவன்' எனவே, எப்பொருளும் அவனுக்குக் கீழ்ப்பட்ட தாதல் விளங்கிற்று. எல்லாப்பொருளையும் கீழ்ப்படுத்தி மேல் நிற்கும் அவன் எதனையும் தன் விருப்பப்படியே ஆக்கலும், அழித்தலும் செய்வானாதலின், தன்னை அடைந்த அடியவர்க்கு எவ்வகைத் துன்பத்தையும் அகற்றி எல்லா இன்பத்தையும் அருள வல்லவனாகின்றான். ஆகவே, அவனது தாளைச் சேர்ந்தோர்க்கே மனக் கவலையறுதல் முற்றிலும் முடிவ தாகின்றது. பிறர் எல்லாரும், பிற எல்லாமும் தம்மோடு ஒத்தனவும், தம்மினும் உயர்ந்தனவுமாகிய பல பொருள்களை உடைமையால் அவரை அல்லது அவற்றை அடைதல் மனக் கவலையை மாற்றும் வழியாகாதாயிற்று திருவள்ளுவர், 'தனக் குவமை இல்லாதானது தாளைச் சேர்ந்தார் மனக் கவலை மாற்றுவர்' என்று இவ்வாறு உடன்பாட்டு முறையில் கூறாது, " தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க் கல்லால் - மனக் கவலை மாற்றல் அரிது " என்று இவ்வாறு எதிர்மறை முறையாற்

யாற் கூறியது, 'மனக்கவலையை மாற்றுதற்கு வழிகள் பல உள; அவற்றுள் ஒன்று இறைவனது தாளைப் புகலிடமாக அடைதல் என்று கொள்ளாமல், 'இறைவனது தாளைப் புகலிடமாக அடைதல் ஒன்றே மனக் கவலையை மாற்றுதற்கு வழி; அது தவிர அதற்கு வேறொரு வழியில்லை' என்று கொள்ளுதற் பொருட்டேயாம். அதுபற்றியே பரிமேலழகர், 'அருமை ஈண்டு இன்மை மேல் நின்றது' எனக் குறிப்பெழுதினர்.

அஃதாவது, 'அரிது' என்பதற்குப் பொருள், 'பெரும்பான்மை இயலாது; சிறுபான்மை இயலுதலும் கூடும்' என்பது. 'இல்லை' என்பதற்குப் பொருள், 'சிறிதும் இல்லை என்பது. எனவே, 'தனக்குவமை இல்லாதான் தாளைச் சேராமலே மனக் கவலையை மாற்றிக்கொள்ளுதல் என்பது சிறிதும் இயலாது' என்பதே இக்குறளின் பொருளாயிற்று. 'அரிது' என்பது சில இடங்களில் 'இல்லை' எனப் பொருள் தருதல் உண்டு என்பதற்கு, "உறற்பால - தீண்டா விடுதல் அரிது" என்ற நாலடிச் செய்யுட் பகுதியை (109) அவர் எடுத்துக் காட்டியது முற்றிலும் பொருந்துவதே.

"நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியின் தெளிந்தனம்" (புறம் - 192)

என்றதற்கிணங்க அனைத்தும் வினைவழியே நடக்குமாயினும், அவ் வினை இறைவனை அடைந்தாரை அடைதல் இல்லை என்பதைத் திருவள்ளுவர் இதற்கு முன்பே "இருள்சேர் இருவினையும்" என்னும் குறளில் கூறிவிட்டார்; அதனால், இறைவனது தாளைச் சேர்ந்தார்க்கு மனக்கவலை இல்லை என்பது ஐயமற விளங்குவதேயாம். 'இறைவனை அடைந்தவரே மனக் கவலை மாற்றுவர்' என்றே திருமுறைகளும் முழங்குகின்றன.

"அச்சம்மிலர்" பாவம்மிலர் கேடும்மிலர் அடியார்
நிச்சம்முறு நோயும்மிலர் தாமுந்நின்றி யூரில்
நச்சம்மிட றுடையார்நறுங் கொன்றைநயந் தாளும்
பச்சம்முடை அடிகள்திருப் பாதம்பணி வாரே"

"ஆரூர் - தங்கையி னுல்தொழிவார் தடுமாற் றறுப்பாரே"

"கொடிமாடச் செங்குன்றூர்த் - தத்துவனைத் தொழுவார்
தடுமாற் றறுப்பாரே" (சம்பந்தர்)

" கவனஞ் செய்யுங் கனவிடை யூர்தியான்
தமரென் றாலும் கெடுந்தடு மாற்றமே "

" அச்சம் இல்லை நெஞ்சே அரன் நாமங்கள்
நிச்சலும் நினையாய் "

" வானந் துளங்கில்என்! மண்கம்ப மாகில்என்
மால்வரையும்
தானந் துளங்கித் தலைதடு மாறில்என்!
தண்டகலும்
மீனம் படில்என்! விரிசுடர் வீழில்என்!
வேலைநஞ்சுண்டு
ஊனம்ஒன் றில்லா ஒருவனுக் காட்பட்ட
உத்தமர்க்கே "

" மண்பா தலம்புக்கு மால்கடல் மூடிமற்
றேழுலகும்
விண்பால் திசைகெட் டிருசுடர் வீழினும்
அஞ்சல்நெஞ்சே!
திண்பால் நமக்கொன்று கண்டோம் திருப்பா
திரிப்புலியூர்க்
கண்பாவு நெற்றிக் கடவுட் சுடரான்
கழலிணையே "

" கன்னெடுங் காலம் வெதும்பிக் கருங்கடல்
நீர்சுருங்கிப்
பன்னெடுங் காலம் மழைதான் மறுப்பினும்
பஞ்சம்உண்டென்று
என்னெடும் ஊளறும் அஞ்சல் நெஞ்சே
இமையாத முக்கண்
பொன்னெடுங் குன்றம்ஒன் றுண்டுகண்டீர்
இப் புகலிடத்தே. " (அப்பர்)

" முன்னை முதற்பிறவி மூதறி யாமையினாற்
பின்னை நினைந்தனவும் பேதுற வெம்மொழியச்
செந்நெல் வயற்கழனித் தென்றிரு வாரூர்புக்
கென்னுயிர்க் கின்னமுதை என்றுகொல் எய்துவதே "

" தண்டேர்மழுப் படையான்மழ விடையான்எழு கடல்நஞ்
சுண்டேபுரம் எரியச்சிலை வளைத்தான்இமை யவர்க்காத்
திண்டேர்மிசை நின்றானவன் உறையுந்திருச் சுழியல்
தொண்டேசெய வல்லாரவர் நல்லார்துய ரிலரே "

" உம்பரான் ஊழியான் ஆழியான் ஓங்கி மலர்உறைவான்
தம்பரம் அல்லவர், சிந்திப் பவர்தடு மாற்றறுப்பார் "
(சுந்தரர்)

என்றாற்போல்வன காண்க.

" உனக்குப் பணிசெய்ய உன்றனையெந் நாளும்
நினைக்க வரமெனக்கு நீதா — மனக்கவலை
நீக்குகின்ற தென்மதுரை நின்மலனே எவ்வுலகும்
ஆக்குகின்ற சொக்கநா தா "
(சொக்கநாத வெண்பா)

என்ற ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருவாக்கும், மனக்கவலையை நீக்குபவன் சொக்கநாதனே என்று குறிப்பிடுகின்றது.

இறைவன் திருவடியைப் பற்றினோர் கவலையற்றிருந்தமையைப் பின் வருவனபோன்ற திருமுறைப்பகுதிகள் இனிது விளக்கும்.

" பண்ணி லாவிய மொழிஉமை பங்கன்எம் பெருமான்
விண்ணில் வானவர் கோன்விம லன்விடை ஊர்தி
.....................................................
அண்ணல் சேவடி அடைந்தனம் அல்லல்ஒன் றிலமே " ‡
(சம்பந்தர்)

" அஞ்சுவது யாதொன்றும் இல்லை ; அஞ்சவருவதும் இல்லை "

" நாம் ஆர்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம் "

" என்றும்நாம் யாவர்க்கும் இடைவோ மல்லோம் ;
இருநிலத்தில் எமக்கெதிரா வாரும் இல்லை ;
சென்றுநாம் சிறுதெய்வம் சேர்வோ மல்லோம் ;
சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம் ;
ஒன்றினாற் குறையுடையோ மல்லோம் "

" சிவனே என்னும்-நாவுடையார் நமைஆள உடையாரன்றே!
நாவலந்தீ வகத்தினுக்கு நாத ரான
காவலரே ஏவி விடுத்தா ரேனும்
கடவமல்லோம் "

" வந்தீர் ஆர் ? மன்னவனாவான்றான் ஆரே "

---

‡ இத் திருப்பதிகம் முழுவதும் இவ்வாறே அமைந்து, திருக்கடைக் காப்பும் அல்லல் தீர்ப்பதாகவே உள்ளது.

'சிவன்என் சிந்தைசேர்ந்திருந்தான்
தென்றிசைக்கோன் ருனே வந்து
கோவாடிக் குற்றேவல் செய்கென் ருலும்
குணமாகக் கொள்ளோம்" (அப்பர்)

"திருவும்மெய்ப் பொருளும் செல்வமும் எனக்குன்
சீருடைக் கழல்கள் என் றுன்னி
ஒருவரை மதியா துருமைகள் செய்தும்
ஊடியும் உறைப்பனுய்த் திரிவேன்" (சுந்தரர்)

"தேவர்கோ அறியாத தேவ தேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கும் மற்றை
மூவர்கோ னய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத் தெந்தை
யாவர்கோன் என்னையும்வந் தாண்டு கொண்டான்
யாமார்க்குங் குடியல்லோம்; யாதும் அஞ்சோம்,
மேவினேம் அவனடியா ரடியா ரோடும்
மேன்மேலும் குடைந்தாடி ஆடு வோமே"

"எங்கெழில்என் ஞாயிறு எமக்கு"
(மணிவாசகர்)

ஸ்ரீ குருஞானசம்பந்தரும்,

'புசிப்போம் சிவபோகம் பூரணமாய் எங்கும்
வசிப்போம் உலகில் வசியோம் — முசிப்பின்றி
வாழ்வோம் சிவத்தையுணர் மாதவர்தம் பொன்னடிக்கீழ்த்
தாழ்வோம் எமக்கார் சரி"

என்று தமது கவலையற்ற நிலைமையை அருளிச்செய்கின்ருர்.

இறைவன் திருவடியைப் பற்றினேர் எதுபற்றியும் கவலையின்றியிருத்தலேயன்றி, வருகின்ற தீமையும் அவர்கட்கு நன்மையாய் முடியும் என்பதைத் திருமுறைகள் அறிவுறுத்தக் காண்கின்ருேம். "செறுவாரும் செறமாட்டார் தீமைதானும் நன்மையாய்ச் சிறப்பதே" என்று திருநாவுக்கரசரும், 'நாள் கோள் முதலிய பலவும் அடியார்க்கு மிக நல்ல' என்று திருஞானசம்பந்தரும் அருளிச்செய்தார். அதற்கேற்ப அவர்கட்கு வந்த தீமைகள் அவர்களது பெருமை வெளிப்படுவதற்கும், அது வழியாகப் பரசமயம் வீழ்ந்து, சைவசமயம் தழைத்தோங்குதற்கும் காரணமாயின. ஆகவே, தனக்குவமை இல்லாதான் தாள்சேர்தல் ஒன்றே யாவர்க்கும் மனக்கவலை மாற்றி மாண்புறும் இன்பம் எய்தற்கு வழி என்பது அறநெறியிலும், அருள் நெறியிலும் ஒரு பெற்றியாகச் சொல்லப்படுதலை அறிந்து மக்கள் உய்திபெறுவார்களாக.

# அறநெறியும் அருள்நெறியும்

## 15. "உலகியல் நீங்கல்"

'அறிவுடையதும், அறிவில்லதும்' என உலகம் இரு பகுதியை உடையது. உயிர்கள் பலவும் அறிவுடை உலகம். ஏனைய எல்லாப் பொருள்களும் அறிவிலா உலகம். அறிவுடை உலகத்தை, 'சேதனப் பிரபஞ்சம்' என்றும், அறிவிலா உலகத்தை, 'அசேதனப் பிரபஞ்சம்' என்றும் கூறுவர். நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்புக்களாய்த் தேவர் முதலாகத் தாவரம் ஈறாக உள்ள பிறவிகள் சேதனமும், அசேதனமும் கலந்து இயங்கும் கலப்புலகம். அஃதாவது, மேற்கூறிய பிறப்புக்களில் உடம்புகள் யாவும் அசேதனம்; அவற்றிற் கலந்துநின்று அவற்றை இயக்கிநிற்கும் உயிர்கள் யாவும் சேதனம்.

இருதிற உலகத்துள் அறிவுடை உலகமாகிய உயிர்களின் அறிவு இடையறாது வளர்ந்துவரும் இயல்புடையது. ஆகவே, அவ்வளர்ச்சிக்குத் துணைபுரிந்து நிற்பனவே 'அறிவிலா உலகம்' எனப்படும் ஏனைய பொருள்கள் யாவும். அதனால், ஒருநிலையில் உயிர்கட்கு வேண்டும் பொருள்களாய்க் கொள்ளப் படும் பொருள்கள், அடுத்த மற்றொரு நிலையில் வேண்டாப் பொருள்களாய்த் தள்ளப்படும் பொருள்களாகின்றன. எடுத்துக் காட்டாக, குழந்தைப் பருவத்தில் அவற்றின் பயிற்சிக்கும், மகிழ்ச்சிக்கும் இன்றியமையாதனவாய்க் கொள்ளப்பட்ட விளையாட்டுப் பொருள்கள், அப்பருவத்தைக் கடந்த பின்பு வேண்டாப் பொருள்களாய்ப் புறக்கணிக்கப்படுகின்றன. தொடக்கப் பள்ளியில் பயிலும் இளஞ்சிறார்க்கு அப்பொழுது இன்றியமையாது வேண்டப்பட்ட சிறு புத்தகம், கற்பலகை முதலியவை அப்பள்ளியைக் கடந்து இடைநிலைப் பள்ளியை அடைந்த காலத்து வேண்டாதனவாகிவிடுகின்றன. இப்படி எத்துணையோ உதாரணங்களைக் கூறலாம்.

சில விளையாட்டுப் பொருள்களை வைத்து விளையாடி மகிழ்கின்ற குழந்தை ஒன்று, ஒன்றிரண்டு ஆண்டுகள் சென்ற பின்பும் அதனை வெறுத்து ஒதுக்காமல் விருப்பங்கொண்டு பற்றியிருக்குமானால் அச்செயல் அதன் பெற்றோர்களுக்கோ, மற்றவர்களுக்கோ மகிழ்ச்சியைத்தராது; மாறாக வருத்தத்தைத் தருவதாகும். ஏனெனில், அந்நிலை குழந்தையினது வளர்ச்சி

---

* 10—5—69 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

யின்மையையே காட்டுவதாமாதலின். அவ்வாறே தொடக்கப் பள்ளியிற் பயின்ற இளஞ்சிறுன் ஒருவன், அங்குப் படித்த புத்தகத்தை விடுத்து அதனினும் சிறந்த புத்தகத்தை விரும்புதல் இன்றி மீண்டும் அதனைப் படிப்பதிலேயே விருப்பம் உடையவனாய் இருப்பின், அதுவும் வருத்தத்திற்குரியதே. இஃது உலகியல் முறைமை. ஆன்மிகத் துறையிலும் இந்நிலைதான் உள்ளது.

'அறம், பொருள், இன்பம், விடு' என மக்கள் அடையும் உறுதிப் பொருள்கள் நான்கு. இவைகளை இவ்வரிசையில் கூறுவது ஒரு முறையாயினும், 'இன்பம், பொருள், அறம், விடு' எனக் கூறும் மற்றொரு முறையும் உண்டு. இம்முறையே மக்களின் அறிவு வளர்ச்சி முறைக்கு ஏற்றது. அஃதாவது, எல்லா உயிர்கட்கும் இன்பத்தை விரும்புதல் இயல்பாதலின், மக்களும் அதனை விரும்பிநிற்றல் தொடக்க நிலையேயாம். 'இன்பம்' என்பது, உலகின்பமாகிய சிற்றின்பத்தையே. எனவே, அதனை விரும்புதல் அறிவு வளர்ச்சி பெறாத காலத்தே யாம்.

எல்லா உயிர்களும் இன்பத்தை விரும்புகின்றன என்றாலும் அதனை நன்கமைத்துக்கொள்ளும் வழியை அவைகள் உணர்வதில்லை. மக்களாய்ப் பிறந்தோரே அதனை அறிந்து அமைத்துக் கொள்கின்றனர். அவ்வழியாவது பொருளை ஈட்டி வைத்துக் கொள்ளுதலாம். ஆகவே, எல்லாம் பொருளினால் வரும் என்பது அறிந்து அதனை விரும்புதல் அறிவு வளர்ச்சியின் இரண்டாவது நிலை எனலாம்.

பொருள் இம்மை இன்பத்தை மட்டுமே தருவது. அறம், மறுமையிலும் வந்து இன்பத்தைத் தருவதாகும் என்று அறத்தின் இயல்பை அறிந்து, பொருளால் இன்பத்தை மட்டும் நுகர்ந்துவிட்டுப் போகாமல் அறத்தைத் தேடிக்கொள்ளுதல் வேண்டும் என விரும்புதல் அறிவு வளர்ச்சியின் மூன்றாம் நிலையாகும். இம்மை, மறுமை என்னும் இரண்டும் சில உலகங்களிற் பிறந்து அடையும் பயன்களேயாதலின், அவற்றைத் தருவனவாகிய 'அறம், பொருள், இன்பம்' என்னும் மூன்றும் 'உலகியல்' எனப்படும்.

பொருள் இன்பங்களால் இம்மைப்பயனை மட்டும் அடைந்தொழியாது அறத்தினால் மறுமைப் பயனையும் அடைய விரும்பிய பின், இம்மையாயினும், மறுமையாயினும் பிறவித் துன்பத்தில் நின்றே அடையப்படுவன என்பதை உணர்ந்து,

அத்துன்பத்தினின்றும் நீங்கி வீட்டை அடைய விரும்புவது அறிவு வளர்ச்சியின் நான்காவது நிலையாகும். இதுவே அறிவின் முடிந்த வளர்ச்சி. எனவே, இவ்வளர்ச்சியைப் பெருதவர்க்கு உலகியல், வேண்டப்படும் பொருளாயும், பெற்றவர்க்கு அது வேண்டாது வெறுக்கத்தக்க பொருளாயும் நிற்கும். ஆகவே, உலகியல் ஒருகாலத்தில் வேண்டப்படுவதே யாயினும், அஃது எக்காலத்தும் பற்றி நிற்கத்தக்கதன்ரும். ஆகவே, ஒவ்வொருவரும் ஒருகாலத்தில் அதனின்றும் நீங்கியே ஆகவேண்டும்.

பற்றுங்காலத்து ஒன்றைப்பற்றிஞல் விடுங்காலத்து அதனை நாம் விடவேண்டிஞலும் அது நம்மை விடுவதில்லை. அது பொழுது நாம் அதனை விடுதற்கு வேண்டிய உபாயங்களால் விடுதல்வேண்டும். அஃதாவது உடல் நலத்தின்பொருட்டுச் சில மருந்து எண்ணெயை உடம்பிற் பூசிக்கொண்டவன் பின்பு அதனைப் போக்க நினைத்தாலும் போகாது. மாற்றுப் பொருள் களைக்கொண்டு முயன்று தேய்த்துப் போக்கிக்கொள்ளுகின்ருன். அதுபோல, ஒரு காலத்தில் பற்றிக்கொண்ட உலகியலைப் பின்ஞெரு காலத்து விடநினைத்தாலும் அது விடுவதில்லை. அதற்கு மாற்றுப் பொருளாய் உள்ளது இறைவன் திருவருளே. அதனைப் பற்றிநின்றுதான் உலகியலில் நீங்கி வீடு பெறுதல் வேண்டும். அதனல், அத்திருவருளைப் பற்ற மாட்டாதார் உலகியலாகிய ஆழ்கடலினின்றும் கரையேற மாட்டாது அத னுள்ளே அழுந்தியொழிவர். இதனையே திருவள்ளுவர்,

“ அற ஆழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிற ஆழி நீந்தல் அரிது ”

என்ருர்.

‘அறம்’ என்பது, பொதுவாக இம்மை மறுமையாகிய உலக இன்பத்தைத் தரும் உலகியல் அறத்தையே குறிப்ப தாயினும், விடுபேற்றைத் தருவதாகிய மெய்யுணர்வையும் அறத்துள் அடக்கி, ‘அறம்’ என வழங்குவர். அஃதாவது, ‘இல்லறம், துறவறம்’ என அறத்தை இருகூருக்கி, இல் லறத்தையே, ‘உலகியல்’ என்றும், துறவறத்தை ‘மெய்ந்நெறி’ எனவும் கொள்வர். மெய்ந்நெறி யொழுக்கத்தின் பயன் மெய்யுணர்வு. அதனல், அஃது ‘அறம்’ என்றும் சொல்லப் படுகின்றது.

இன்பம், பொருளின் வழிப்பட்டது; பொருள் அறத்தின் வழிப்பட்டது; அறம், இறைவன் வழிப்பட்டது. ஆதலின்,

எல்லாப் பொருளும் இறைவன் வழிப்பட்டனவே. அதனால், ஒன்றைப் பெறவேண்டினாலும், நீங்கவேண்டினாலும் இறைவனது திருவருளையே துணையாகப் பற்றுதல்வேண்டும், அம்முறையில் உலகியலைப் பெறுவதற்கு, ''மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார் - நிலமிசை நீடுவாழ்வார்'' எனக் கூறிய திருவள்ளுவர், அதனின் நீங்குதற்கு ''அறவாழி யந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால் - பிறவாழி நீந்தல் அரிது'' எனக் கூறினார். இதனுள், இறைவனை ''அற ஆழி'' எனக் கூறியது, மேற்குறித்தவாறு, இறைவன் அறத்தின்வழி எல்லாப் பொருள்களையும் ஆள்பவன் என்பதைக் குறித்தற்கேயாம். ''அறம்'' என்றது இங்கு மெய்யுணர்விற்குக் காரணமான துறவறத்தையும் உட்படுத்தியேயாம். 'எல்லாப்பொருள்களையும் ஆள்பவன்' எனவே அவனே தலைவனாதல் பெறப்பட்டது. 'எப்பொருட்கும் தலைவன்' என்பதோடு, 'அருள் மிக்கவன்' என்பதைக் குறித்தற்கே ''அந்தணன்'' என்றும் கூறினார். 'இறைவன் எப்பொருட்கும் தலைவனாயும் பேரருள் உடையவனாயும் உள்ளான்' எனவே, 'அவனது அருளைப் பெற்றவர்க்கு அரியதொன்று இல்லை' என்பதனோடு, 'அவனது அருளையின்றி ஒன்றையும் பெறுதல் இயலாது' என்பதும் போந்தது. ஆகவே அறிவு முதிர்ந்த நிலையில் உலகியலின் நீங்கவேண்டின் அதன் பொருட்டும் அவனது திருவருளையே பெறல்வேண்டும் என்பது விளங்கிற்று. அருளைத்தான் திருவள்ளுவர், 'தாள்' என்றும், 'அடி' என்றும் குறிக்கின்றார்.

'முதற்கண் ''அற ஆழி'' என்று கூறிப் பின்னர் ''பிற ஆழி'' என்றதனால், அத்தொடர் அறம் ஒழிந்த பொருள் இன்பங்களையே குறிக்கும். 'பொருளும், இன்பமும் உலகியல்' என்பது தெளிவு. எனவே பிற ஆழி நீந்தல் என்பது, 'உலகியலைக் கடத்தல்' என்பதும், 'அஃது இறைவன் தாள் சேர்ந்தார்க்கே இயலும்; ஏனையோர்க்கு இயலாது' என்பதும் மேற்காட்டிய ''அற ஆழி அந்தணன்'' என்னும் குறளால் அறியப்படும். பொருளும், இன்பமும் ஆகிய உலகியல்கள் அவற்றிற்கு ஏதுவாகிய அறம் இன்றி ஆகாமையின், காரியமாகிய அவற்றினின்றும் நீங்குதல் கூறவே, காரணமாகிய உலகியல் அறத்தினின்றும் நீங்குதல் தானே பெறப்பட்டு, மெய்யுணர்விற்கு ஏதுவாகிய மெய்ந்நெறி, அறம் ஒன்றையே பெற்று நிற்றல் பெறப்படும். இதனை வேறொரு வகையில் சுருங்கக்கூறுவோமாயின், ''இறைவனடியைச் சார்ந்தவரே அஞ்ஞானத்தின் நீங்கி மெய்ஞ்ஞானத்தைப் பெறுவர்; அல்லது கட்டு நீங்கி வீடு பெறுவர்'' என்று கூறலாம். ஆகவே, திருவள்ளுவர் கூறும்

ஞானநெறி எது என்பது நன்கறியப்படும். திருமுறைகளும், சைவ சாத்திரங்களும் இதைத்தான் கூறுகின்றன.

" ஞானத் திரளாய் நின்ற பெருமான்
நல்ல அடியார்மேல்
ஊனத் திரளை நீக்கும் அதுவும்
உண்மைப் பொருள்போலும் "

" நஞ்சமுது செய்தமணி கண்டன் நமை
ஆளுடைய ஞான முதல்வன் "

" விளையாததொர் பரிசில்வரு பசுபாச வேதனையொண்
தளையாயின தவிரவ்வரு தலைவன் "

" நீரார் நிமிர்புன் சடைஎம் நிமலனை
ஓரா தவர்மேல் ஒழியா ஊனமே "

" பாச மான களைவார்
பரிவார்க் கமுத மனையார் "

" வீடும் ஞானமும் வேண்டுதி ரேல்விர தங்களால்
வாடின் ஞானம் என்னுவதும் எந்தை வலஞ்சுழி
நாடி ஞானசம் பந்தன் செந்தமிழ் கொண்டிசை
பாடும் ஞானம்வல் லார்அடி சேர்வது ஞானமே "

— சம்பந்தர்.

" நல்லக விளக்கது நமச்சி வாயவே "

" நன்னெறி யாவது நமச்சி வாயவே "

" நமச்சி வாயவே ஞானமும் கல்வியும் "

" ஞானங் காட்டுவர் நன்னெறி காட்டுவர்
தானங் காட்டுவர் தம்மடைந் தார்க்கெலாம்
வானங் காட்டுவர் போல்வன்னி யூரரே "

" திருவிழி மிழலையானைச் சேராதார் தீநெறிக்கே
சேர்கின் றாரே "

— அப்பர்.

" இலையால் அன்பால் ஏத்து மவர்க்கு
நிலையா வாழ்வை நீத்தார் "

" மலமெலாம் அறும் இம்மையே;
மறுமைக்கும் வல்வினை சார்கிலா
...............எங்கள் சங்கரன் வந்து
தங்கும்ஊர் - புறம்பயந்தொழப் போதுமே "

" ...............கழற்சேவடி என்றும்
கலந்துனைக் காதலித் தாட்செய்கிற் பாரை
ஆண்டு நம்பிஅவர் முன்கதி சேர
அருளும் நம்பி "

" ஊன மாயின தீர்க்கவல்லான் "

" மேவியவெந் நரகத்தில் அழுந்தாமை நமக்கு
மெய்ந்நெறியைத் தான்காட்டும் வேத முதலானை "

" நாள்தொறும் வணங்கு வார்க்கு
அறிவினைக் கொடுக்கும் ஆரூர் அப்பன் "

' மெள்ள நின்றவர் செய்வன வெல்லாம்
வாராமே தவிர்க்கும் விதியானை " — சுந்தரர்.

இன்னோரன்னவாகத் திருமுறைகளில் காணப்படுவன எண்ணிறந்தன. இங்ஙனம் அறநெறியிலும், அருள்நெறியிலும் உலகியலின் நீங்கி மெய்ந்நெறியைப் பெறுதற்குரிய வழி ஒரு வகையாகவே சொல்லப்படுதலை அறிந்து அவ்வழியில் நின்று அனைவரும் பயன்பெறுவாராக

---

## 16. "பிறவி நீக்கம்"

உயிர்கள் நுகரும் நுகர்ச்சி அல்லது அனுபவிக்கும் அனுபவம், 'இன்பம், துன்பம்' என இரண்டு. இவ்விரண்டில் ஒவ்வொன்றும் எத்துணையோ வகையாக அமைகின்றது. குழல் இன்பம், யாழ் இன்பம், குரல் இன்பம், சொல்லின்பம், பாட்டின்பம் முதலாகச் செவியால் நுகரப்படும், இன்பங்கள் பல. நீர் இன்பம், நிழல் இன்பம், பூச்சின்பம், அணை இன்பம் முதலாக மெய்யால் நுகரப்படும் இன்பங்கள் பல. அணி இன்பம், ஆடை இன்பம், மணி இன்பம், ஒளி இன்பம், உரு இன்பம் முதலாகக் கண்ணால் நுகரப்படும் இன்பங்கள் பல. கனி இன்பம், கட்டி இன்பம், பால் இன்பம், தேன் இன்பம் முதலாக நாவால் நுகரப்படும் இன்பங்கள் பல. களப இன்பம், கத்தூரி இன்பம், மலர் இன்பம், நறும்புகை இன்பம் முதலாக மூக்கால் நுகரப்படும் இன்பங்கள் பல. இவை எல்லாம் உடல் இன்பங்களே. கல்வி இன்பம், கேள்வி இன்பம், புகழ் இன்பம், பொருள் இன்பம், வெற்றி இன்பம் முதலியன எல்லாம் உள இன்பங்களாம். இன்பங்கள் பலவற்றிற்கும் எதிராய் வருவன துன்பங்கள். எனவே, இன்பங்களும் எண்ணிறந்தன; துன்பங்களும் எண்ணிறந்தன. இவற்றுள் உயிர்கள் இன்பம் என்பன பலவற்றையும் அடைய விரும்புகின்றன; துன்பம் என்பவற்றுள் ஒன்றையும் விரும்பாது வெறுக்கின்றன.

ஓர் இன்பத்தை அடைந்த உயிர் அதனோடு நில்லாமல் ஏனைய இன்பத்தையும் அடைய விரும்புவதே இயற்கையாய் உள்ளது. அஃது ஏன் என்று நோக்கும்பொழுது, முன் அடைந்த இன்பம் நிறைவுடைய இன்பம் அன்று என்பது விளங்கும். இவ்வாறே ஒரு துன்பத்தினின்றும் நீங்கிய உயிர் அதனோடு துன்பமின்றி வாழ்தல் என்பது இல்லாமல் பிறிதொரு துன்பத்தை அடைந்து அதனினின்றும் நீங்க முயல்வதும் அனுபவத்திற் காணப்படுவதே. அதனால், முன்பு நீங்கிய துன்பம் முழுத்துன்பமன்றி, சிறுகூறான துன்பமே என்பதும் தெளிவு. ஆகவே, குறைவற்ற நிறைந்த இன்பம் எது எனவும், அதற்கு எதிராய் அதனைத் தடுத்து நிற்கும் பெருந்துன்பம் எது எனவும் ஆராய்ந்து, நீங்குதற்கரிய அப் பெருந்துன்பத்தினின்

---

* 10—6—69 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

றும் நீங்கி, அடைதற்கரிய நிறைவுடைய அப் பேரின்பத்தை அடைய விரும்புதலே அறிவுடைமை என்பது விளங்குகின்றதன்றே!

உயிர்கள் அடையும் துன்பங்கள் பலவற்றையும் ஆராய்ந்தால், அவையனைத்தையும் தனது கூறுகளாகக் கொண்டு நிற்கும் பெருந்துன்பம் எது என்பது விளங்கும். உயிர்கள் தமது சிற்றறிவு காரணமாக உலக இன்பத்தையே விரும்புகின்றன. உலக இன்பம் உடம்புகொண்டே நுகரப்படுவது. உடம்பு பசியும், பிணியும், மூப்பும், சாக்காடும் உடையதாய் இருப்பதன்றி, இவற்றுள் யாதொன்றும் இன்றி இனிமையும், உறுதியும் உடையதாய் நிலைத்திருப்பதன்று. ஆகவே, பசியாலும், பிணியாலும், மூப்பாலும், சாக்காட்டாலும் துன்பங்கள் இடையறாது வருதலோடு, அத்துன்பத்தைத் தவிர்க்கச் செய்யும் முயற்சிகளால் மேலும் துன்பத்தை அடையவேண்டியுள்ளது.

பசியை ஒருமுறை தணித்தால் அது மறுமுறை வராமல் இல்லை. "பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொப்ப" என்றபடி ஒருநாளும் ஒழியாமல் ஒவ்வொரு நாளிலும் பன்முறை தோன்றும் பசியைத் தணிக்கப் பாடுபடுவதிலேயே வாழ்நாள் முழுதும் கழிகின்றது. அதன்பின் வெயிலாலும், மழையாலும், பனியாலும் உடல் நலிவுறுதபடி காத்தற்கு உறையுளும், போர்வையும் தேட வேண்டியுள்ளது. உண்டி, உறையுள், போர்வை என்பவற்றால் பாதுகாப்பினும் இடையிடையே எவ்வாற்றாலேனும் வந்து நலியும் நோயைப்போக்க மருந்தும் வேண்டுவதாகின்றது. பசியும், பிணியும் ஒருவாறு போக்கப்படினும், மூப்பும், சாக்காடும் தவிர்க்கமுடியாதவையாகின்றன. இத்துணை இன்னல்களுக்கிடையே புகழும், போகமும், சுற்றத்தொடர்பும் பெறுவதில் விருப்பம் செல்வதால் அவற்றைப் பெறமுயல்வதாலும், அம் முயற்சி இடையூறு படுதலாலும், முயற்சி முற்றுப்பெற்ற வழியும் அவற்றாற் பெறும் பயன் சிறிதாய் நிலையாதொழிதலாலும் வரும் துன்பங்கட்கு ஓர் அளவில்லை. எனவே எல்லையற்ற இத் துன்பங்கள் எல்லாவற்றிற்கும் காரணம் உடம்பே என்பது இனிது விளங்குதலால், துன்பங்கள் பலவற்றையும் தனது கூறாக உடைய பெருந்துன்பம் உடம்பொடு கூடி நிற்றலே என்பது தெளிவாகின்றது. உடம்பொடு கூடி நிற்கும் நிலை, 'பிறப்பு' எனப்படுதலாலும், பிறப்பற்ற நிலை, 'விடு' எனப் படுதலாலும், துன்பங்கள் எல்லாவற்றிற்கும் அடிநிலையான பெருந்துன்பம் பிறவித்துன்பமே என்பதும், இன்பங்கள் எல்லாவற்றிலும் மேலான பேரின்பம் விட்டின்பமே என்பதும் பெறப்படுகின்றன. "பிறவியால் வருவன கேடுள" என்னும்

திருஞானசம்பந்தர் திருமொழி, 'துன்பங்கள் பலவும் பிறவி என்னும் ஒரு துன்பத்தினலே வருவன' என அறிவுறுத்துகின்றது. "பிறந்தார் உறுவது பெருகிய துன்பம்-பிறவார் உறுவது பெரும்பே ரின்பம்" என்கின்றது மணிமேகலை.

இப்படிப்பட்ட பிறவிப் பெருந்துன்பத்தினின்று நீங்கிப் பேரின்பமாகிய விட்டின்பத்தை அடையும் வழி யாதென்று நோக்கும்பொழுது, இறைவன் திருவடியை மன மொழி மெய்களால் வழிபடுதல் ஒன்றே அதற்கு வழியன்றி வேறில்லை என்கிருர் திருவள்ளுவர்.

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர்; நீந்தார்
இறைவ னடிசேரா தார்."

என்பது அக்குறள்.

பிறவியைத் திருவள்ளுவர் கடலாக உருவகம் செய்து காட்டும் முகத்தால் பல உண்மைகளை நாம் உணரவைக்கின்ருர். கடல் எல்லை இல்லாத அகலத்தையும், ஆழத்தையும் உடையது. முத்து முதலிய சில அரிய பொருள்களைத் தன்னிடத்தே உடையதாயினும், காற்ருல் எழும் அலைகளையும், பல சுழல்களையும், முதலை சுருமின் முதலிய கொடிய பல உயிர்களையும் கொண்டிருப்பது. எனவே, பிறவியும் அதுபோல எல்லையற்ற காலத்தையும், புல் பூடு புழு மரம் மக்கள் தேவர் விலங்கு முதலிய வகைகளில் எண்ணற்ற வேறுபாடுகளையும் உடையது. கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியும் ஐம்புல வகையில் சிறிது இன்பத்தை உடையதாயினும், பசி, பிணி, பகை, வறுமை, முயற்சி, மூப்பு, இறப்பு முதலிய அளவற்ற துன்பங்களை உடையது. முத்து முதலிய சில அரும் பொருள்களைப்பெற வேண்டினல் ஆழ்ந்த நீரில் உள்ள முதலை முதலிய கொடிய உயிர்களுக்குத் தப்பிச்சென்று பெறுவதுபோலப் பிணி, வறுமை, பகை முதலிய இடுக்கண்களினின்றுந் தப்பியே செல்வம், நுகர்ச்சி என்னும் இன்பங்களைச் சிறிது பெறுதல் வேண்டும். கடலினின்றும் முத்து முதலியவற்றைப் பெற்ருேர், கரையைச் சேர்ந்தே இன்புறல் வேண்டுமன்றிக் கடலிலே இருந்து இன்பம் பெறுதல் இயலாது. கடலிலே இருப்பின் அதன்கண் அமிழ்ந்தொழிதல் தவிர வேறில்லை. அதுபோலவே, பிறவி நிலையில் ஐம்புல இன்பங்களைச் சிறிது நுகரினும், பிறவியினின்றும் நீங்கினலன்றி இன்பம்இல்லை. இத்தகைய சிந்தனைகள் பலவற்றைத் திருவள்ளுவர் பிறவியைக் கடல் என்று கூறும் முகத்தால் நமக்குத் தருகின்ருர்.

பிறப்பு நிலையில் உயிர்கள் அடையும் சிறிய இன்பத்தை ஞானசம்பந்தர்,

“செடிகொள்நோய் யாக்கையைம் பாம்பின்வாய்த்
தேரைவாய்ச் சிறு பறவை
கடிகொள்பூந் தேன்சுவைத் தின்புற
லாமென்று கருதி னுயே”

என்று விளக்கியருள்கின்றார். ‘துன்பந் தரும் நோய்மிக்க உடம்பின்கண்ணே நின்று ஐம்புலன்களால் இன்புறலாமென்று கருதுகின்றுயே. நெஞ்சமே; இது பாம்பின்வாயில் உள்ள தேரையின் வாயில் அகப்பட்டுள்ள வண்டு பூவில் உள்ள சிறிது தேனை உண்டு இன்புறுதல் போல்வதன்றோ’ என்பது இதன் பொருள். பாம்பு தேரையை விழுங்குவதற்கு முன்னே தேரை வண்டை உண்டுவிடும் ஆதலின், வண்டு தேனை உண்டு இன்புறு தற்கு உள்ள நேரம் எவ்வளவு உளதாகும்! அதுபோல நோய் உடம்பை அழிக்கும் முன்பே உடம்பு உயிரைச் செயலற்றதாக்கி விடும். அஃதாவது மூப்புமிக்கு நாச்செற்று, விக்குள் மேலிட்டுச் சொல்லும், செயலும் அற்றொழியும். ஆகவே, அதற்குள் நீ ஐம்புல இன்பங்களைத் துய்த்தல் எந்த அளவிலே நிகழும் என்று தமது நெஞ்சிற்கு அவர் அறிவுறுத்துகின்றார். அதனால், பிறவியில் உள்ளது துன்பமேயன்றி இன்பம் இல்லை என்பது பொருளாகின்றது.

இன்னும் திருவள்ளுவர் பிறவியை, ‘கடல்’ என்று வாளா கூறாமல் “பெருங்கடல்” என்று கூறியது, கடலைக் கடப்பது எளிதில் பலரால் இயல்வது; பிறவியைக் கடத்தல் அவ்வாறன்றி அரியதினும் அரியது என்றற் பொருட்டேயாம்.

இத்துணைப் பேரிடரினதாகிய பிறவி என்னும் பெருங் கடலைக் கடத்தற்கு இறைவனுடைய திருவடி ஒன்றே புணையா வதன்றி வேறில்லை என்பதை மேற்காட்டிய திருக்குறளில் தெளி வாகக் காண்கின்றோம். பிறவியாகிய கடலின் தன்மைகளையும் அதனைக் கடத்தற்குரிய புணை இது என்பதையும் மணிவாசகர் தமது திருவாசகத் திருப்பாடலில் மிக அருமையாக விளக்கி யுள்ளார்.

“தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையால் எற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயார் என்னும் காலால்
கலக்குண்டு காமவான் சுறவின் வாய்பட்

டினிஎன்னே உய்யுமா றென்றென் றெண்ணி
அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின்றேனை
முனைவனே முதல்அந்தம் இல்லா மல்லற்
கரைகாட்டி ஆட்கொண்டாய் மூர்க்க னேற்கே."

என்பது அத் திருப்பாட்டு. இதனுள், 'பிறவியாகிய கடலில் துன்பமாகிய அலைகளால் மோதுண்டு, மகளிராகிய காற்ருல் சுழற்றப்பட்டு, காமமாகிய சுருமீனின் வாயில் அகப்பட்டுக் கரையேறமாட்டாது இடர்ப்படும் நிலையில் அஞ்செழுத்தாகிய புணை தமக்குக் கிடைத்தது என்று அருளிச்செய்கின்ருர். இறைவனது அடி என்றும், அருள் என்றும், அஞ்செழுத்து என்றும் எவ்வாறு கூறினுலும் பொருள் ஒன்றே. அதனுல், இறைவனது திருவடியைத் தவிரப் பிறவிக் கடலைக் கடப்பிக்கும் புணை வேறில்லை என்க.

'பிறவியாகிய கடலில் மனம் என்னும் தோணியில் செல்வார் சிலர் உளர்; அத்தோணி அவர்களைக் கரை ஏற்றமாட்டாது பாறையில் தாக்கி உடைந்தொழியும்' என்பதை அப்பர் பெருமான் பின்வருமாறு அருளிச்செய்கின்ருர்.

மனமெனும் தோணி பற்றி மதிஎனும் கோலை ஊன்றிச்
சினமெனும் சரக்கை ஏற்றிச் செறிகடல் ஓடும்போது
மதன்எனும் பாறை தாக்கி மறியும்போ தறிய ஒண்ணு
துணையுனும் உணர்வு நல்காய் ஒற்றியூ ருடைய கோவே,

சினம் என்னும் சரக்கை மனம் என்னும் தோணியில் ஏற்றி வாணிபம் செய்யச் செல்பவர்க்கு அவற்றிற்கேற்ற உலக அறிவே கோலாகும். அது மதன் எனும் பாறையிலே கொண்டு போய்த் தோணியை மோத விடுமேயன்றிக் கரையிலே கொண்டு போகாது. மனமாகிய தோணியும் மதனுகிய பாறையால் உடைந்தொழியுமேயன்றி உறுதிபெற்று நில்லாது. ஆகவே, அந்தத் தோணியும், கோலும் பிறவிக் கடலைக் கடப்பிக்கமாட்டா. அஞ்செழுத்தாகிய புணையும், அதை அறியும் அறிவுமே பிறவிக் கடலைக் கடப்பிக்கும் தோணியும், கோலும் ஆவன என்க.

சித்திப் பரியன சிந்திப் பவர்க்குச்
சிறந்து செந்தேன்
முத்திப் பொழிவன முத்தி கொடுப்பன
மொய்த் திருண்டு

பந்தித்து நின்ற பழவினை தீர்ப்பன
    பாம்பு சுற்றி
அந்திப் பிறையணிந் தாடும் ஐயாறன்
    அடித்தலமே.

துன்பக் கடலிடைத் தோணித் தொழில்பூண்ட
    தொண்டர்தமை
இன்பக் கரைமுகந் தேற்றுந் தகையன
    மாற்றயலே
பொன்பட் டொழுகப் பொருந்தொளி செய்யுமப்
    பொய் பொருந்தா
அன்பர்க் கணியன காண்க ஐயாறன்
    அடித்தலமே.

பேணியநற் பிறைதவழ்செஞ் சடையி னானைப்
    பித்தராம் அடியார்க்கு முத்தி காட்டும்
ஏணியை, இடர்க்கடலுட் சுழிக்கப் பட்டிங்
    கிளைக்கின்றேற் கக்கரைக்கே ஏற வாங்கும்
தோணியைத் தொண்டனேன் தூய சோதிச்
    சுலாவெண் குழையானைச் சுடர்பொற் காசின்
ஆணியை ஆவடுதண் டுறையுள் மேய
    அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந்தேனே.

என்று இவ்வாறு பிறவிப் பெருங்கடலைக் கடத்தற்குத் துணை யாவது இறைவன் திருவடியே எனக் கூறும் திருமுறைப் பாடல் கள் அளவுட்படுவனவோ! அறநெறியிலும் அருள்நெறியிலும் பிறவி நீங்குதற்கு வழி இவ்வாறு ஒருபடித்தாகவே சொல்லப் படுதலை அறிந்து அறிஞர் பயனடைவார்களாக.

---

# அருள்நெறியும் அறநெறியும்

## 1. "இல்லென வேண்டா" *

"இல்லை என்கிற வீட்டில் பல்லியும் சேராது" என்பது ஒரு பழமொழி. இது, "வறுமையால் வந்து இரப்பவர்க்கு இல்லை என்னாது இயன்ற அளவு ஈதல் வேண்டும்" என்பதை வற்புறுத்துவது. "இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதல் - குலனுடையான் கண்ணே உள" என்னும் திருக்குற ளுக்கு இப்பொருளும் பொருள் எனக் கொள்ளப்படுகின்றது.

> "ஈஎன இரத்தல் இழிந்தன்று; அதன் எதிர்
> ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று"

என்பன புறநானூற்று வரிகள். அறுபான்மும்மை நாயன்மார் களுள் ஒருவர் இல்லையே என்னாத இயற்பகையார் என்பது யாவரும் அறிந்தது ஆயினும், "இசையா ஒருபொருள் இல் என்றல் யார்க்கும் - வசையன்று வையத்தியற்கை" என்கின்றது நாலடியார். எனவே, இருப்பதை இல்லை என்று மறைத்துச் சொல்வதுதான் வசையாகுமன்றி, இல்லாததை இல்லை என்று சொல்வது வசையாகாது என்பது விளங்கும். என்றாலும், "நம்மிடம் இல்லாததை ஒருவன், 'ஈ' என இரக்க, நாம் அதனை, "இல்லை" என்று சொல்லும் நிலை உண்டாகுமாயின், அதைவிட வாழ்க்கையில் நமக்கு வரக்கூடிய துன்பம் எதுவும் இல்லை; இறப்புத் துன்பங்கூட இத்துன்பத்திற்கு ஈடாகாது" என்கின்றார் திருவள்ளுவர்.

> "சாதலின் இன்னாதது இல்லை; இனிது அதூஉம்
> ஈதல் இயையாக் கடை"

இல்லாததை இல்லை என்று சொல்வதே இத்துணைக் கொடிய தாகுமானால்; உள்ளதை இல்லை என்று சொல்வது எத்துணைக் கொடியதாகும்! எனினும், இங்கு நாம் குறிப்பிடுவது இரப்ப வர்க்கு இல்லை என்று சொல்வதை அன்று; வேறொன்றை. அஃதாவது, "உலகத்தார் உண்டென்பது இல்லென்பான் வையத்து - அலகையா வைக்கப் படும்." எனத் திருவள்ளுவர் வேறோரிடத்தில் கூறியதையே நாம் இங்குக் குறிப்பிடுகின்றோம்.

---

* 10—7—69 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

இதனுள், "உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே" என்னும் விதிப்படி, "உலகத்தார்" என்றது உயர்ந்தோரைக் குறித்தது. பருப்பொருள்களை அறிதல்போல நுண்பொருள்களை அறிதல் எல்லார்க்கும் இயல்வதன்று; அறிவிலும் அனுபவத்திலும் முதிர்ந்த உயர்ந்தோர்க்கே அது கூடுவதாம். அதனுல், நுண்பொருள்களைப் பற்றிய கொள்கைகளில் உயர்ந்தோர் சொல்லியுள்ள சொற்களாகிய உரையளவையின்வழி ஏனையோர் நிற்றல் வேண்டுமன்றி, அதற்கு மாருகத் தாம் சிலவற்றைக் கூற முற்படுதல், தாய்க்கு மகள் வாழ்க்கைமுறை கற்பித்தல் போல்வதாம்.

அஃகி அகன்ற அறிவுடைய ஆன்ருேர் தமது பேரறிவாலும், அனுபவத்தாலும் நுண்பொருள்கள் பலவற்றைக் கண்டு உலகிற்குக் கூறுகின்ருர்கள். அவற்றை அவர்கள் கண்டவாறே பிறர் காண இயலாவிடினும், அவர்கள் உரையை அமைதியுடன் கேட்டுப் பின் ஆய்ந்துணர்தல் வேண்டும். அவர்கள் அவ்வாறு உயிர்க்கு உறுதி பயக்கும் வகையில் கண்டு கூறிய நுண்பொருள்கள் பல. அவை, 'உலகிற்கு முதல்வனுகிய இறைவன் ஒருவன் உளன்; காணப்படாத அக்கடவுட்கு வேருயும், காணப்படுகின்ற பலவகை உடம்புகட்கு வேருயும் உயிர் என்பன பல உள. அவற்றிற்குப் பிறப்பு ஒன்றேயாகாது, எடுத்த உடம்பு பின்நீங்க மற்ருேர் உடம்பு வருதலாகிய மறுபிறப்புக்கள் பல உள. அப்பிறப்புக்களுக்கும் அவற்றில் வரும் இன்பத் துன்பங்கட்கும் காரணமாக நல்வினை தீவினை என்னும் இருவினைகள் உள்ளன. அவற்ருல், உயிர்கள் சுவர்க்கம், நரகம், பூமி என்னும் மூன்றுலகங்களிலும் சென்று தாம் செய்த இரு வினைப்பயனை நுகரும். இருவினையொப்பு வந்தபொழுது மெய்யுணர்வு பெற்று விடு (முத்தி) அடையும்' என்பனவும், பிறவுமாம்.

உயர்ந்தோர், "கடவுள் உண்டு; உயிர் உண்டு; இருவினை உண்டு; மறுபிறப்பு உண்டு" என்று இவ்வாறு "உண்டு, உண்டு" எனக் கூறுவனவற்றை இல்லை எனக் கூறுதல் கூடாது என்பதையே மேற்காட்டிய குறளில் திருவள்ளுவர் கூறினுர்.

உண்டு என்பது "அத்தி" என்றும், இல்லை என்பது "நாத்தி" என்றும் வடமொழியில் சொல்லப்படும். அதனுல், உயர்ந்தோர் உண்டு எனக் கூறியவற்றை உண்டு என்றே கொள்ளும் கொள்கை "ஆத்திகம்" என்றும் "இல்லை" எனப் பிணங்கும் கொள்கை "நாத்திகம்" என்றும் சொல்லப்படும்.

ஆத்திகம் உள்ள அன்றே நாத்திகமும் உடன்இருந்து வந்தது என்றாலும், நாத்திகத்தைக் கூறும் நூல் எதுவும் பழமையாகக் காணப்படவில்லை. கல்வி அறிவு ஒழுக்கங்களால் சிறப்பெய்திய பெரியோர் யாவரும் ஆத்திகத்தையே தழுவிநின்றனர். சான்றோர் மொழியாக உள்ள நூல்கள் அனைத்திலும் ஆத்திகமே காணப் படுவதோடு, நாத்திகத்தை மறுத்துரைக்கும் பகுதிகளும் காணப் படுகின்றன.

"நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே
படைகள் போல்வரும் பஞ்சமா பூதங்கள்
தடைஒன் றின்றியே தன்னடைந் தார்க்கெலாம்
அடைய நின்றிடும் ஆனைக்கா அண்ணலே"

என்பது அப்பர் திருமொழி.

"நல்லதன் நலனும் தீயதன் தீமையும்
இல்லை என்போர்க்கு இனனா கிலியர்"

என்று, "உறையூர் முதுகண்ணன் சாத்தனார்" என்னும் சங்கப் புலவர் ஒருவர் "சோழன் நலங்கிள்ளி" என்னும் பெரு வேந்த னுக்கு அறிவுறுத்தினார். இதனுள் "நல்லதன் நலன்" என்பது ஒருவர் செய்யும் நற்செயலுக்குப் பயனாகப் பின்னர் அவருக்கு விளையும் நன்மை. "தீயதன் தீமை" என்பது அங்ஙனமே அவர் செய்த தீய செயலுக்குப் பயனாகப் பின்னர் விளையும் தீமை. இவைகளை "இல்லை" என்போர் - அஃதாவது இருவினையும் இல்லை; அவற்றால் நன்மை தீமைகள் விளையும் என்பதும் இல்லை" என்று கூறுவோர் நாத்திகர். "அவரது கூட்டுறவு உனக்கு வேண்டா" என்பது அப்புலவர் அறிவுறுத்திய அறிவுரை. "கடுவன் இளவெயினனார்" என்னும் மற்றொரு புலவர் முருகனைப் பாடுமிடத்து "மறுபிறப்பு இல்லெனும் மடவோரும் சேரார் நின்நிழல்" என்று பாடுகின்றார். இவற்றால் எல்லாம் சான்றோர் சென்ற நெறி ஆத்திகமே என்பது இனிது விளங்கும். இந்நெறி பற்றியே திருவள்ளுவரும், "உலகத்தார் உண்டென்ப தில்லென்பான் வையத் - தலகையா வைக்கப்படும்" என்றார்.

இவ்வாறு சான்றோர் ஆத்திக நெறியில் நின்று, 'உண்டு, உண்டு' எனக் கூறிய பலவற்றுள் முதலாவது பொருள் கடவுள். அதனை உண்டு எனக் கொள்ளின், ஏனைய பொருள்கள் உண்டு என்பது தானே பெறப்பட்டுவிடும். அதனால், கடவுள் உண்மை

யையே பெரியோர் முதன்மையாக வற்புறுத்துகின்றனர். மூவாயிரம் ஆண்டுகள் சிவயோகத்திலே அமர்ந்திருந்து ஆண்டுக்கு ஒரு மந்திரமாக மூவாயிரம் திருமந்திரங்களை அருளிச்செய்த திருமூலர், 'யோக சமாதியினலும், ஞான அனுபூதியாலும் உயர்ந்தோர் கண்டு கூறிய முழுமுதற் பொருளாகிய இறைவனை இல்லென வேண்டா' என்று பரிந்துரைக்கின்ளுர் :

"வல்லவன் வன்னிக் கிறையிடை வாரணம்
நில்லென நிற்பித்த நீதியுள் ஈசனை
இல்லென வேண்டா; இறையவர் தம்முதல்
அல்லும் பகலும் அருளுகின் ருனே."

'இறைவன் எல்லாம் வல்லவன்; அதனுல் மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட பூதபௌதிகங்களாகிய அனைத்துப் பொருள்களையும் தன் இச்சை வழியே அமைக்கின்ருன். எல்லையில்லாத கடல்நீரை 'வடவா முகாக்கினி' என்னும் தீயிடை வைத்துக் கரையின்றியே நிற்கச்செய்தான். (வன்னிக்கிறை - வடவைத் தீ. வாரணம் - கடல்.) இஃதொன்றே அவனது அளவில் ஆற்றலுக்கும், அவனுலேயே இவ்வுலகம் நடைபெறுகின்றது என்பதற்கும் போதிய சான்ருகும். ஆகவே அத்தகைய ஈசனை (ஐஸ்வரியம் உடையவனை - எல்லாப் பொருளையும் தன்னுடையனவாக உடையதலைவனை) இல்லை என்று கூறிப் பிணங்குதல் வேண்டா. ஏனெனில், தேவர் முதல் எல்லா உயிர்கட்கும் அவற்றது தகுதிக்கேற்ப அவன் அல்லும் பகலுமாக இடையருது உடனுய்நின்று அருள்புரிந்து வருகின்ருன்' என்பது இத் திருமந்திரத்தால் அறியும் அரும்பொருள். நாவுக்கரசரும்,

"அந்திவட் டத்திளங் கண்ணியன், ஆறமர் செஞ்சடையான்
புந்திவட் டத்திடைப் புக்குநின் ருனையும் பொய்யென்பனே
சந்திவட் டச்சடைக் கற்றை அலம்பச் சிறிதலர்ந்த
நந்திவட் டத்தொடு கொன்றை வளாவிய நம்பனையே"

என்று, நம்போலும் அனுபவம் உடையார்க்கு அனுபவப்பொருளாய் நிற்கும் இறைவனை இல்லை என்று கூறிப் பிணங்கல் வேண்டா என்று அருளிச்செய்தார்.

"உன்னும்;உளது; ஐயம் இலது; உணர்வாய் ஓவாது
மன்னுபவம் தீர்க்கும் மருந்து"

என்று திருவருட்பயன் தெளிவிக்கின்றது. எங்கள் ஆதிபரமாசாரியராகிய ஸ்ரீ குருஞானசம்பந்தர்,

"ஈச னடியில் இருக்கையிலே எங்கெங்கும்
ஈசனடி தேடி இளைத்தேனே — பேசரிய
பொற்பதத்தன் செங்கமலப் பொற்பாதன் றன்னுடைய
நற்பதத்தைக் காணுமுன் நான்"

என்று அருளிச்செய்தார். அஃதாவது, 'நாம் இருப்பதே ஈசன் திருவடி நிழலில்தான்; ஆனால் நாம் அதனை அறியாமல் ஈசன் எங்கேயிருக்கின்றான் என்று தேடி அலைகின்றோம்' என்பதாம். எனவே, ஈசனடியின் கீழே இருந்துகொண்டே ஈசன் எங்கே என்று தேடி இளைப்பது, வெள்ளத்துள் நாவறண்டு நிற்பது போன்றதும், பகலிலேநின்று கதிரவன் எங்கே என்று தேடுவது போன்றதும் ஆகும் என்பது கருத்தாயிற்று. இதனையே,

"வெள்ளத்துள் நாவற்றி எங்கும் விடிந்திருளாம்
கள்ளத் தலைவர் கடன்"

என்கின்றார் உமாபதி சிவாசாரியார். அருள் நெறியில் இங்ஙனம் வற்புறுத்தப்படுகின்ற இக்கடவுள் உண்மையையே திருவள்ளுவரும் தமது அறநூலாகிய திருக்குறளில் முதற் குறளிலே வற்புறுத்திக் கூறினார்.

"அகர முதல எழுத்தெல்லாம்; ஆதி
பகவன் முதற்றே உலகு"

இதனுள் 'முதற்றே' என்ற தேற்றேகாரம், 'உலகிற்கு முதல்வனாகிய கடவுள் இருக்கவே இருக்கின்றான்; ஆதலின் உளனோ இலனோ எனச் சிறிதும் ஐயுற வேண்டுவதில்லை' என்பதை விளக்கிநிற்கின்றது. இவ்வாறு அருள்நெறிப் பொருளை அறநெறியிலும் இருத்தலை அறிந்து இறைவன் உண்மையை யாவரும் உணர்ந்து பயன் பெறுவார்களாக.

---

# அருள்நெறியும் அறநெறியும்

## 2. "திருவடியே தஞ்சம்" *

மக்கள் தோன்றியது முதல் மறையும் வரையில் யாரையேனும் அல்லது பொருளையேனும் தஞ்சமாக நினைந்தே வாழ்க்கையை நடத்துகின்றனர். பிறந்த குழந்தை சிறிது அறிவு பெற்றவுடன் தன் தாயைத் தஞ்சமாக - பற்றுக்கோடாகக் கொண்டு வாழ்கின்றது. இதனை, ஒரு குழந்தை தன் தாயை விட்டுச் சிறிதும் பிரியாதிருக்க விரும்புவதிலிருந்து அறியலாகும். மேலும் சிறிது அறிவுபெற்ற பின்பு தந்தையையும் அது தஞ்சமாகக் கொள்கின்றது. பின்னர் வயது வந்து கட்டிளமை பெற்றபின்னர்க் கட்டிளங் காளையாயினும், கன்னிகையாயினும் தனது உடல்வலிமை, அழகு முதலியவற்றையே உறுதிப் பொருளாக நம்பிச் செயற்படத்தொடங்குகிறார்கள். அது பொழுது அவர்கள் மனைவி, அல்லது கணவர், மக்கள் ஏனைய உறவினர்களையே உறுதிச் சுற்றமாகக் கொள்கின்றனர். முடிவாக, பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை; எனவே பொருள் இருந்தால் யாவும் கைகூடிவிடும் என்னும் கருத்தால் செல்வத்தையே தஞ்சமாகக்கொண்டு வாழ்க்கையைச் செலுத்துகின்றனர். ஆயினும் அறிவின் வளர்ச்சிக்கு ஏற்ப வேறு வேறாக அவ்வப் பொழுது மாற்றிக்கொள்ளப்பட்ட அப்பற்றுக்கோடுகளில் ஒன்றேனும் உண்மைப் பற்றுக்கோடாக உள்ளதா என்பதனை ஊன்றி உணர்தல் வேண்டும் என்று ஆன்றோர் அறிவுறுத்துகின்றனர்.

தாய்தந்தை முதலாகச் செல்வம் ஈறாக மேற்சொல்லப்பட்ட அனைத்தும் நமக்கு இந்த உடம்பின் வழியாகத் தொடர்புபடும் பொருள்களல்ல என்பது வெளிப்படை. அதனைத்தான் ஆன்றோர் நமக்குப் பலவகையாலும் அறிவுறுத்துகின்றார்கள்.

"தந்தை யார்! தாய் யார்! உடன் பிறந்தார்,
தாரம் ஆர்! புத்திரர் ஆர் தாந்தாம் ஆரே"

என்று அப்பரும்,

"எம்மான் எம்மனையென் றெனக்கு
எட்டனைச் சார்வாகார்"

---

*10—8—69 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

என்று சுந்தரரும் அருளிச் செய்கின்றனர். இவரெல்லாம் உற்றதுணை ஆகாமைக்குக் காரணம், இவரோடு நமக்கு உள்ள தொடர்பு உடம்புவழியாக உள்ள தொடர்பேயாதலும், அவ் வுடம்பு நிலையற்றதாய் நீங்குந் தன்மையது ஆதலும், அவ்வாறு அது நீங்குங்காலத்து அவராலேனும், நம்மாலேனும் அதனை நீங்காது நிலைநிறுத்திக் கொள்ள இயலாது போதலுமேயாம். இதனையே அப்பர் பெருமானார்,

“ உற்றார் ஆர் உளரோ, உயிர்
கொண்டு போம்பொழுது
குற்றா லத்துறை கூத்தன்அல் லால்நமக்கு
உற்றார் ஆர் உளரோ ”

என்று அருளினார். உயிரை உலகத்தோடு இணைக்கிற உடம்பு எந்த நேரத்திலும் உயிரைவிட்டு நீங்கும் தன்மையுடையது என்பதைத் திருமூலதேவ நாயனார்,

“ அடப்பண்ணி வைத்தார் ; அடிசிலை உண்டார் ;
மடக்கொடி யாரொடு மந்தணங்கொண்டார் ;
இடப்பக்க மேஇறை நொந்ததிங் கென்றார் ;
கிடக்கப் படுத்தார் ; கிடந்தொழிந் தாரே. ”

என்று சித்திரித்துக் காட்டுகின்றார். இதனையே திருவள்ளுவ நாயனார்,

“ நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ் வுலகு ”

என்றார். உலக முழுதும் ஒருகுடைக்கீழ் ஆளும் சக்கிரவர்த்தியே ஆயினும், பிறரேயாயினும் இந்நிலையாமையை நீக்கிக்கொள்ளுதல் இயலாது என்பதை அவர்,

“ நாட்டுக்கு நாயகன், நம்மூர்த் தலைமகன்
காட்டுச் சிவிகையொன் றேறிக் கடைமுறை
நாட்டார்கள் பின்செல்ல, முன்னே பறைகொட்ட
நாட்டுக்கு நம்பி நடக்கின்ற வாறே ”

என்று அருளினார்.

“ முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள் ளோரும்
முடிவில் ஒரு
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவதும் கண்டு ”

என்பது பட்டினத்தார் கூறுவது.

" மலைமிசைத் தோன்றும் மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையா—நிலமிசைத்
துஞ்சினர் என்றெடுத்துத் தூற்றப்பட் டாரல்லால்
எஞ்சினர் இவ்வுலகத் தில் "

என்னும் நாலடிச் செய்யுள் இங்கே நினைக்கற் பாலது.

உலக இன்பங்கள் அனைத்திற்கும் முதல்வாயிலாகிய உடம்பு நிலையாமை யுடைத்தாகாது ஓர் எல்லையளவு நிலைத்துள்ள தென்றே வைத்துக்கொண்டாலும் செல்வம் உடையவர்க்கே இவ்வுலகம் பயனுடைய உலகமாகும்; செல்வம் இல்லையேல் இவ்வுலகம் தொல்லைதரும் உலகமேயாய்விடும். மனைவியே யாயினும், மக்களேயாயினும் உடன்பிறந்தாரேயாயினும் ஒருவன்பால் விரும்புவது பொருளே என்பதைத் திருமூலர்,

" வாழ்வும் மனைவியும் மக்கள் உடன்பிறந்
தாரும் அளவே தெமக்கென்பர் ஒண்பொருள் "

என்று விளக்கினர். வறுமை உடையவனை அவன்தாயும் விரும்ப மாட்டாள் என்பதை,

" அறம்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும் "

என்று கூறுகின்றார் திருவள்ளுவர். பெற்றதாயே புறக்கணிப் பாள் என்றால், பிறர் புறக்கணிப்பதைச் சொல்லத்தேவையில்லை யன்றோ!

உலக வாழ்க்கைக்கு இன்றியமையாத இச்செல்வத்தைப் பெறுதல் எல்லார்க்கும் கூடுவதன்று. கூடினும், அச்செல்வம் அவர்க்குக் கடைசி வரையில் இருந்து உதவும் என்னும் உறுதி யில்லை.

" மகிழ்கின்ற செல்வமும் மாடும் உடனே
கவிழ்கின்ற நீர்மிசைச் செல்லுங் கலம்போல் "

என்கிறார் திருமூலர். வானத்தைக் கீழ்மேலாகக் கவிழ்த்தது போலக் கட்டுக்கடங்காது பெருகியோடுகின்ற வெள்ளத்தில் அகப்பட்ட ஓடம் அதனைக் கடப்பிக்க மாட்டாது கவிழ்வது போல்வதே, அளவறியாது நடத்தும் ஆரவார வாழ்க்கையில் அகப்பட்ட செல்வமும் என அவர் குறிப்பாற் காட்டுவதை உணர்தல் வேண்டும்.

" அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்ருக் கெடும் "

என்று செல்வம் மெல்ல மெல்ல மறைதலைக் குறித்த திருவள்ளுவர். செல்வம் வருங்காலத்தில் பல்வேறு வகையில் வந்து குவிவதுபோலவே போகுங் காலத்திலும் பல்வேறு வகையாய் இருந்த இடந்தெரியாமற் போய்விடும் என்பதைக் கூத்துக்கு வந்து போகின்ற கூட்டமாகிய நல்லதோருவமையால் நன்குவிளக்கினர்.

" கூத்தாட் டவைக் குழாத்தற்றே பெருஞ் செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று "

" மிடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம்
விடுக்கும் வினையுலந்தக் கால். "

என்கின்றது நாலடியார். இத்தன்மைத்தான செல்வம் எங்ஙனம் ஒருவர்க்குத் தஞ்சமாகும் !

இனி, இச்செல்வம் ஒருவற்கு வாழ்நாளளவும் உள்ளதேயாயினும் செல்வத்தாற் பயனடையும் காலம் பெரும்பான்மையும் இளமைக்காலமேயாம். அதனல், முதுமையில் வந்த செல்வம் கொழுநன் இல்லாப்பெண்ணிற்கு உண்டான அழகுபோல்வது என்ருர் ஔவையார். ஆகவே, இளமை உள்ளபொழுதுதான் செல்வம் பயனுடைய ஒன்ருகும். ஆயினும், இளமை வாழ்நாளில் சிலகாலமே நிற்பதன்றி என்றும் நிற்பதன்று. நாள்தோறும் காண்கின்ற சூரியனது நிலையே இதனை நமக்கு நன்கு விளக்கும். காலையில் தோன்றுகின்ற சூரியன் இளவெயில் பரப்பிச் செக்கச் சிவந்த நிறத்துடன் அழகாய்க் காணப்படுகின்ருன். இஃது அவனது குழவிப் பருவமாகும். நண்பகற்போதில் கடுவெயில் எறித்துத் தன்னைக் காணவும் ஒட்டாது. தன்முன் நிற்கவும் ஒட்டாது கடுநிலையுடையவனய் இருக்கின்ருன். இதனை அவனது கட்டிளமைக் காலம் என்னலாம். மாலைப்பொழுதில் மஞ்சள் வெயில் காட்டி மெல்ல மெல்லச் சாய்ந்து, போன திசை தெரியாவண்ணம் மறைந்து போய்விடுகின்ருன். இதுவே அவன் மூத்துக் கழியும் நிலை. எனவே, கடுவெயில் எறித்துத் தனது ஆட்சியை அவன் மிக்க வன்மையுடன் செலுத்தி நிற்பது எத்துணை நேரம் ! இதனைப் பார்த்தும் உண்மையை உணரவில்லை என்ருல், அவர்கள் கண்ணிருந்தும் குருடர்தாமே ?

இன்னும் நாம் அறிந்த அளவில் ஒரு பசுவின் வயிற்றிற் பிறந்த கன்று வளர்ந்து காளைகள் கூட்டத்தில் காளையாய்த் திரிவது எத்துணைக் காலம்! அத்தகைய காளைகள், பின் பலர் சேர்ந்து தூக்கிவிடும் அளவிற்கு மூப்படைந்து போதலை எத்தனை இடத்திற் கண்டிருக்கிறோம்? இவற்றின் நிலைமை தானே மக்கட்கும் உள்ளது? அதனை மறந்து இளமையைத் தஞ்சம் எனக் கொள்ளுதல் எவ்வாறு கூடும்! இவைகளை யெல்லாம் நமக்கு எடுத்துக் காட்டுகின்றார் திருமூல தேவர்.

கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே
விழக்கண்டுந் தேறார் விழியிலா மாந்தர்;
குழக்கன்று மூத்தெரு தாய்ச்சில நாளில்
விழக்கண்டுந் தேறார் வியனுல கோரே

இளமையில் மாதரால் விரும்பப்பட்ட அவனே, பின் முதுமையில் அவரால் வெறுக்கப்படுவதைத் திருமூலர் தம்மேல் இட்டுக் கூறும் திருமந்திரம் இது;

விரும்புவர் முன்என்னை மெல்லியல் மாதர்
கரும்பு தகர்த்துக் கடைக்கொண்ட நீர்போல்;
அரும்பொத்த மென்முலை ஆயிழை யார்க்குக்
கரும்பொத்துக் காஞ்சிரங் காயுமொத் தேனே

இளமை நீங்கி முதுமை வந்த காலத்தில் செயலற்றுப் போதலேயன்றிச் சொல்லும் அற்றொழியும். அந்நிலையில் யாரைக் கொண்டு என்ன செய்ய இயலும் என்பதைத் திருவள்ளுவர்,

“ நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும் ”

என்பதனால் விளக்கினார்.

யாக்கையும் செல்வமும் இளமையும் நிலையுடையன அல்ல என்பதும், அவை விரைவில் நீங்குவன என்பதும் காட்சியளவையிலே நன்கறியப்படுவனதாம்; இவற்றிற்கு உரையளவைகளாயுள்ள நூல்களைக் காட்டவேண்டுவதில்லை. ஆயினும், நிலையில்லாத இவற்றையொழித்து நிலையுடையது ஏதேனும் ஒன்று உண்டோ? உண்டாயினன்றோ இவைகளைத் தஞ்சம் எனக் கொள்ளாது அதனைத் தஞ்சம் எனக்கொள்ளலாம் என வினவ விரும்புவர் சிலர். அதற்கு யாக்கையும் ‘ இளமையும், செல்வமும் என்னும் இவை தவிர வேறு என்ன இருக்கின்றது?

ஒன்றும் இல்லை; அதனால் இவற்றது நிலையாமையைப் பேசிப் பயனில்லை; இவை உள்ளவரையில் இவற்றைப்பற்றி வாழ்ந்து, இவை நீங்கிப்போனால், நாமும் போய்விடுவதுதான் செய்யத் தக்கது' என்பர் சிலர். அவர்கட்கு நாம் ஒன்றும் சொல்ல இயலாது. ஆயினும், 'மனம்பற்றிக் கேட்பார் உளராயின் கேட்டுப் பயனடையட்டும்' என்று அருளாளர் சிலர் தாம் அனுபவத்தில் கண்ட அரும்பொருள்கள் சிலவற்றை அரிய தங்கள் அருண்மொழிகளிற் பொதிந்து வைத்து அருளிச் சென்றனர். அவைகளையே ஆன்றமைந்த சான்றோர் பலரும் அறநெறிகளாக எடுத்துக் கூறிப் போந்தனர். அவ்வகையில் மேற்கூறியவாறு நிலையாமைகள் பலவற்றையும் எடுத்துக் கூறிய திருமூலர், நிலைத்த ஒன்று இறைவன் திருவடியே; ஆதலின், அதுவே அனைவர்க்குந் தஞ்சமாதற்கு உரியது என்று அருளிச் செய்கின்றார்.

திருவடி யேசிவ மாவது; தேரில்
திருவடி யேசிவ லோகம்; சிந்திக்கில்
திருவடி யேசெல் கதியது; செப்பில்
திருவடி யேதஞ்சம்; உள்தெளி வார்க்கே.

கிழக்கெழுந் தோடிய ஞாயிற்றுக்கு உள்ளதுபோலவே எல்லாப் பொருட்கும் தோற்றமும் மறைவும் இருப்பினும், அவை இரண்டும் இல்லாத ஒரு பொருள் இறைவனே. அதனால் அவனது திருவடியே தஞ்சமாதற்கு உரியது. இறைவனது என்றும் உளனாதல் தன்மையைத் திருமூலர்,

"பிறப்பிலி, பிஞ்ஞகன் பேரருளாளன்,
இறப்பிலி, யாவர்க்கும் இன்பம் அருளும்
துறப்பிலி தன்னைத் தொழுமின்; தொழுதால்
மறப்பிலி மாயா விருத்தமும் ஆமே"

என்றும்,

"ஆதியு மாய்அர னாய் உட லுள்நின்ற
வேதியு மாய்விரிந் தார்ந்திருந் தான் அருட்
சோதியு மாய்ச்சுருங் காததோர் தன்மையுள்
நீதியு மாய்நித்த மாகிநின் றானே"

என்றும்,

"கண்ணுத லான்ஒரு காதலின் நிற்கவும்
எண்ணிலி தேவர் இறந்தார்"

என்றும் விளக்கினர். இத்தகைய அருள் நெறியை உணர மாட்டாதார் பொருட்டு அறநெறியையே கூறப் புகுந்த திருவள்ளுவரும்,

" நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை "

என்பதனால் ' நிலைத்த பொருளும் ஒன்று உண்டு ' என்பதையும்,

" பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்; மற்று
நிலையாமை காணப் படும் "

என்பதனால், ' நிலைத்த பொருள் கிடைப்பது இந்நிலையாப் பொருள்களில் உள்ள பற்று நீங்க வழியே; அப்பற்று நீங்காதவர்க்குக் கிடைப்பன இந்நிலையாப் பொருள்களே, என்பதையும் உணர்த்தினர். நிலைத்த பொருள் யாது என்று கேட்பவர்கட்கு அவர், தாம் எடுத்துக்கொண்ட நூற்கேற்ப,

" அன்றறிவாம் என்னாது அறம்செய்க; மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை "

எனக் கூறுராயினும், ' அறமாவது யாது ' எனக் கேட்பவர்க்கு,

" அறவாழி யந்தணன் தாள் சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது "

என்பதனால், ' இறைவனுக்கு ஏற்புடைய செயலே அறம்; ஏலாதனவெல்லாம் மறம் என்பதுணர்த்தி, அதனால் பிற பிற வழியிற் சென்று அலையாது அவனது திருவடியே புகல் என அடைதல் தக்கது ' என்று கூறினர்.

' பிறவிப் பெருங்கடல் நீந்துவர்; நீந்தார்
இறைவனடி சேரா தார் "

என்பது, ' இறைவனது திருவடியே தஞ்சம் ' எனத் திருவள்ளுவர் அறுதியிட்டளிக்கும் தீர்ப்பு.

எங்கள் ஆதிபரமாசாரிய சுவாமிகளும்,

" மின்போலத் தோன்றி விடும்உலக வாழ்வனைத்தும்
என்போ லிகள்திரம்என் றெண்ணுவார் — தன்போதம்
இல்லார், சிவபோகம் என்றும் அருந்தியிடும்
நல்லார் திறம்இதுஎன் னுர் "

என்றும்,

" தேசம்ஊர் பேர்காணி சீர்வரிசை சாதியெனும்
ஆசையால் நெஞ்சே அலையாதே — நேசப்
பொருப்பானை, நின்னறிவிற் போக்கு வரவற்
றிருப்பானைப் பார்த்தே இரு "

என்றும் அருளிச்செய்தார்கள். இவற்றையெல்லாம் நன்கு உணர்ந்த குமரகுருபரர்,

" நீரிற் குமிழி இளமை ; நிறைசெல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள் : — நீரில்
எழுத்தாகும் யாக்கை ; நமரங்காள் என்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று "

என்றார்.

இவ்வாறு அருள்நெறியே அறநெறியாய் இருத்தலை உணர்ந்து அனைவரும் ஆண்டவனது திருவடியே தஞ்சம் என்று உணர்ந்து உய்வார்களாக.

---

---

## பொன்மொழி

பராசக்தியை வழிபடுதல் வேண்டும். வழிபட்டால் என்ன தருவாள்? தனம் தரும். பொருள் இருந்தால் போதுமா? அறிவோடு அதனைப் போற்ற வேண்டாமா? அதற்காகக் கல்வி தரும். அது போதுமா? அதனோடு மனம் கோழையாக இருந்தால் பயன்படுமா? ஒருநாளும் தளர்வறியா மனம் தரும். இவை எல்லாம் இருந்தாலும் ஒரு நல்ல தோற்றம் வேண்டாமா? தெய்வ வடிவும் தரும். இவ்வளவுமிருந்தும் நல்ல இனம் வேண்டாமா? நெஞ்சில் வஞ்சமில்லா இனம்தரும். இப்படியே ஒன்று ஒன்றாகச் சொல்வானேன். நல்லன எல்லாம் தரும்.

— ஸ்ரீலஸ்ரீ கபிலைக் குருமணி

# அருள்நெறியும் அறநெறியும்

## 3. ஒழுக்க வகை *

'யாவும் இறைவனது அருளாணையின் வண்ணம் நடைபெறு கின்றன ; அதனால் அவன் அருளைப்பெற முயல்வதே தக்கது' என்பது அருள்நெறி. இறைவனது அருள் உண்மையைத் தெளியமாட்டாது, 'அறமே எவ்வாற்றானும் நன்மை பயப்பது; அதனால், அறத்தைப்பெற முயல்வதே தக்கது' என்பது அறநெறி. அருள் நெறியால் பிறப்பற்ற வீடுபேறு உண்டாகும். அறநெறியால் நற்பிறப்பும், அப்பிறப்பில் நன்மையும் உளவா கும்; 'இவ்விருநெறிகளில் அறநெறியில்தான் ஒழுக்க வகை வற்புறுத்தப்படுகின்றது. அருள்நெறியில் ஒழுக்கவகை வற்புறுத் தப்படுவது இல்லை. இறையன்பு ஒன்றே வற்புறுத்தப்படு கின்றது' என்பது போலச் சிலர் நினைக்கின்றனர். உயிர்கள் வீடுபேறாகிய மேல்நிலையை அடைதற்கு அறநெறி கீழ்ப்படியும், அருள்நெறி மேற்படியுமாய் அமைந்துள்ளனவன்றி, இவ்விரு நெறியும் ஒன்றுக்கொன்று தொடர்பே இல்லாத வேறு வேறு நெறிகள் அல்ல. ஆகவே, அறநெறியின்றி அருள்நெறியிருத்தற் கில்லை என்பதும், அருள்நெறியை யன்றி அறநெறிக்கு உரிய உண்மைப்பயன் வேறில்லை என்பதும் இனிது விளங்கும்.

இவ்வாறாயினும் அறநெறியில் இறையருள் சிறப்பாக விளங்காது, அறமே சிறப்பாக விளங்கி நிற்றலும், அருள்நெறி யில் அறம் சிறப்பாக விளங்காது இறையருளே சிறப்பாக விளங்கி நிற்றலும் அவற்றின் இயல்பால் அமைந்தனவாம். ஆகவே, இறைவன் அருளைப்பெறும் அளவிற்குத் துணைசெய்யும் ஒழுக்கவகை, அருள்நெறியில் அங்ஙனமே முற்ற எடுத்தும், அறநெறியில் அவ்வாறன்றி அறத்தைப் பெறும் அளவிற்கு மட்டுப்படுத்தியும் கூறப்படும் என்று உணரலாகும். ஒழுக்க வகையை அறத்தைப்பெறும் அளவிலே கூறினும், இறைவன் அருளைப்பெறுதற்கு அது துணையாமாற்றிற்குத் தோற்றுவாய் செய்து நிற்பதே உண்மை அறநெறியாகும். திருவள்ளுவர் செய்துள்ள திருக்குறள் அவ்வாறு அமைந்திருத்தலாலே அஃது உண்மை அறநூலாய் விளங்குகின்றது. 'அறம், பொருள், இன்பம், வீடு' என்னும் உறுதிப்பொருள் நான்கனுள் வீடு தவிர ஏனைய மூன்றையே அவர் கூறியதனால் அவர் அறநூலே

---

* 10—9—69 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

செய்யப்புகுந்தார் என்பதும், வீட்டைத் தனிப்பட எடுத்து விரித்துக் கூருதொழியினும், பாயிரத்துள் கடவுள் வாழ்த்தும், அறத்துப்பாலின் இறுதியில் 'ஞானம்' என்னும் பகுதியாகச் சில அதிகாரங்களும் வைத்து அவற்றுள்ளும் பொதுப்படவே வீட்டைக் கூறிச்சென்றமையால், அருள் நெறிக்கு அவர் தோற்றுவாய் செய்து போந்தார் என்பதும் இனிது விளங்குவனவாம். ஆகவே, ஒழுக்கவகை அருள் நெறியில் பொது அளவிலும் இருத்தல் காணலாம்.

அருள்நெறியை அருளிச்செய்த திருமூல நாயனர்,

" கொலையே, களவு, கள், காமம், பொய் கூறல்
மலைவான பாதக மாம்; அவை நீக்கித்
தலையாம் சிவனடி சார்ந்தின்பம் சார்ந்தோர்க்கு
இலையாம் இவைஞானு னந்தத் திருத்தலே "

என " கடிவன கடிந்தொழுகிஞேரே சிவனடி சேர்தற்கு உரியவர் ' எனக் கூறியதைக் காண்கின்ருேம்.

" ஐம்பெரும் பாவங்கள் " ( பஞ்ச மாபாதகம் ) எனப்படும் ஐந்தையும் ஓரிடத்திலே இங்ஙனம் தொகுத்துக் கூறியதேயன்றி அவற்றுட் சிலவற்றை வேறு வேருக வகுத்தும் கூறி விலக்கினர் திருமூலர்.

கொல்லாமை ;

" குருபூசைக்கும், சிவபூசைக்கும் சிறப்பாக உரிய மலர், பிறிதோர் உயிரைக் கொல்லாமை " என்பதை அவர்,

" பற்ருய நற்குரு பூசைக்கும் பன்மலர்
மற்ருேர் அணுக்களைக் கொல்லாமை ஒண்மலர் "

என்பதனுல் வெளியிட்டார்.

புலால் உண்ணுமை :

பிறிதோர் உயிரைக் கொல்லாதிருந்தால் மட்டும் போதாது; பிறரால் கொல்லப்பட்டுவரும் புலாலையும் உண்ணலாகாது என்பதனை,

" பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாரும் காண இயமன்றன் தூதுவர்
செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தில்
மல்லாக்கத் தள்ளி மறித்துவைப் பாரே "

எனக் கூறுதல் காணலாம். இத்திருமந்திரப் பொருள்,

" உண்ணாமை யுள்ள தூயிர்நிலை; ஊன்உண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு "

என்னும் திருக்குறளில் நயம்பட அமைந்து நீற்றல் காணலாம்.

கள்ளுண்ணாமை :

" கள்ளுண்பவர் ஒன்றையும் அறியமாட்டாது மயங்கிக் கிடப்பார், ஆதலின் அவர்கள் பசு பாசங்களின் இயல்பை ஒர்ந்துணருமுகத்தால் உயிர்க்குயிராய் உள்ள இறைவனை அறிந்து அவனோடு ஒன்றுதல் எவ்வாறு" என்று திருமூலர் இரங்கிக் கூறும் திருமந்திரம் இது :

" உள்ளுண்மை ஒரார்; உணரார் பசுபாசப்;
வள்ளன்மை நாதன் அருளினில் வாழ்வுறார்;
தெள்ளுண்மை ஞானச் சிவயோகம் சேர்வுறார்;
கள்ளுண்ணும் மாந்தர் கருத்தறி யாரே "

" வாமம் " என்கின்ற சத்தி சமயத்தோர் (சாத்தேய மதத்தினர்) " சத்திக்கு விருப்பமானது கள் " என்று சொல்லிக் கட்குடத்தை நிவேதித்துப் பின்பு அதனை உண்டு களித்துக் கூத்தாடுவர். அவரது அறியாமையைத் திருமூலர் வெளியிடும் பாங்கு அறியற்பாலது.

" சத்தியை வேண்டிச் சமயத்தோர் கள்ளுண்பர்;
சத்தி அழிந்தது தம்மை மறத்தலால்;
சத்தி சிவஞான ந் தன்னில் தலைப்பட்டுச்
சத்திய ஞான ஆனந்தத்திற் சார்தலே. "

" சத்தியாவது சிவஞானமேயாக அதனையறியாது கள்ளைச் சத்தி என்று உண்டு சத்தி கெட்டுத் தள்ளாடுவது ஏனோ" என்கின்றார் திருமூலர். " வாமத்தோர் தாமும் மதுவுண்டு மாள்பவர்" என்பதும் அவர் வாக்கு.

பிறன் இல் விழையாமை :

பிறன் இல் விழைதலும், பொது மகளிரை விரும்பலும் போல்வனவே பஞ்சமா பாதகங்களுள் ஒன்றாகச் சொல்லப்பட்ட மிக்க காமம் என்பதுபற்றி அவற்றையும் திருமூலர் வேறெடுத்தோதி விலக்குதல் காணலாம்.

" ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைக் காமுறுங் காளையர்
காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாறே "

என்பது பிறன்மனை நயத்தலைக் கடிந்துரைக்கும் மந்திரங்களுள் ஒன்று. இதனுள் ஒவ்வொருவனும் தனக்கு உரியவளாக மணந்துகொண்ட மனையாளை, 'ஆத்த மனையாள்' என்று திருமூலர் குறித்திருத்தல் பொருள் நிறைந்த ஒன்று. அஃதாவது மனவியை 'அறம், பொருள், இன்பம்' என்னும் மூன்றிற்கு மட்டுமே துணையாகக் கருதுதல் அறநெறி முறைமை; ஆயினும், அவற்றோடு வீட்டிற்கும் துணையாகக் கருதுதலே அருள் நெறி முறைமை. பெரிய புராணத்துட் சொல்லப்பட்ட நாயன்மார்களுள் திருநீலகண்டர்தம் மனைவியார் கூறிய சூள் மொழி, சின்னாட்களே இனிது செல்லற்பாலனவாய அவர்களது அரும் பெறல் இளமைப் பருவத்தைப் பயனில்லாது ஒழியச் செய்ததாயினும், சிவபக்தி மிக்க செம்மலாராகிய நாயனாரது பெருமைக்குச் சிறிதும் ஏலாத இன்பத் துறையினில் எளியராய்க் கண்டார்கண் தாமும் இயல்பினைத் தடுத்து அவரது நிலையின் [illegible]ரியாது அடங்கி நிற்கும் பெருமையை நிலைநிறுத்தியதோடு, [illegible] என்றும் மாறா இளமை பெற்றுச் சிவலோகத்தில் பன்னெடுங்காலம் தூய இன்பந் துய்த்திருக்கச் செய்ததென்றால் அவ்வம்மையார் போலும் ஆத்த மனையார் பிறர் இருப்பரோ!

இவ்வாறே இயற்பகையார், இளையான்குடிமாறர், சிறுத்தொண்டர் முதலிய நாயன்மார்கள், தம் துணைவியரும் தம் தம் கொழுநரொடு தாமும் வீட்டுலகிற் சென்று தூய இன்பந் துய்த்து நீடுவாழத் துணை செய்த ஆத்த மனைவியராய் நின்றமை வெளிப்படை அவர்களுள் மங்கையர்க்கரசியார் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர். ஏனெனில், அவரது துணையில்லையேல் அவர்தம் கணவனாகிய கூன்பாண்டியன் உடற்கோட்டத்தோடு உள்ளக் கோட்டமும் நீங்கிச் செல்கதிக்கு அணியனாகும் நிலையைப் பெற்றிருத்தல் இயலாதன்றோ! எனவே, திருமூலர், ஒருவன் தனக்கு உரியவளாகக் கொண்ட மனைவியை 'ஆத்த மனையாள்' என்றது எத்துணை ஆழ்ந்த பொருளுடையது என்பது அறியலாகும்.

'ஆத்த மனையாள்' என்பதற்கு, 'உறுதுணையாய மனைவி' என்பது பொருள். அப்பொருளை, 'அறமுதலிய மூன்றற்கும் உறுதுணை' என்ற அளவில் மட்டுப்படுத்தியும் கொள்ளலாம்.

அவ்வாறன்றி 'விடுபேற்றிற்கும் உறுதுணை' எனப் பெரிய அளவினும் கொள்ளலாம். மேற்கூறியவாற்ருல், விரிந்த பொருளைக் கொள்ளுதலே திருமூலரது திருவுள்ளமாகும். ஆகவே, அத்தகைமைகொண்ட மனையாளை விடுத்து ஒருவன் பிறள் ஒருத்திபால் உள்ளத்தைச் செலுத்துவனுயின், அவன் பிறப்பால் மகனுயினும், குணத்தால் விலங்கெனவே படுவான். விலங்கிற்கும், அறம் முதலிய பொருள்கட்கும் சிறிதும் இயைபில்லாததுபோலப் பிறன் மனை விழைபவனுக்கும், அறம் முதலிய பொருள்கட்கும் சிறிதும் தொடர்பில்லை என்பதையே திருவள்ளுவர்,

" நலக்குரியார் யாரெனின், நாமநீர் வைப்பின்
பிறர்க்குரியார் தோள்தோயா தார் "

என்னும் குறளால் கூறினர்.

பொது மகளிரை விரும்பாமை :

" வையகத் தேமட வாரொடுங் கூடிஎன் ?
மெய்யகத் தோர்உளம் வைத்த விதியது "

என்பது பொது மகளிர் கூட்டத்தைத் திருமூலர் விலக்கிய பகுதி. இதில், 'மடவார்' என்றது விலைமாதரை. 'பொருள் கொடுப்பவனை விரும்பாது பொருளை மட்டும் விரும்புகின்ற பொது மகளிரிடத்தில் சிலர் இன்பங் காண்பது எப்படியோ' என்று வினவி, 'அஃது அவர்கட்கு ஏற்பட்ட விதி' என்று விடையிறுக்கின்ருர் திருமூலர். அதனை அவ்வளவில் நிறுத்தாது,'கொண்ட மனைவி இருக்கக் கொள்கையில்லாப் பெண்டிரொடு கூடுவோர், கருப்பஞ்சாறு கையிலிருக்க அதனை உண்ணுமல் வேப்பெண்ணெயை விலைக்கு வாங்கி உண்கின்றவராவர்' என்பதை,

" கையகத் தேகரும் பாலையின் சாறுகொள்
மெய்யகத் தேபெறு வேம்பது வாமே "

என அவர் கூறுகின்ருர்.

வாய்மை :

வாய்மையுடையார்க்கன்றிப் பொய்ம்மை யுடையோர்க்கு இறைவனை அடைதல் எவ்வாற்ருனும் இயலாது என்பதைத் திருமூலர் 'வாய்மை' என்ற தலைப்பில் பலபடியாகக் கூறியுள்ளார். சிவபெருமான், "பொய்கலந்தாருள் புகுதாப் புனிதன்"

"பொய்யொ ழிந்தார்க்கே புகலிடம்" என்றாற்போல்வன அவற்றுட் சில.

இங்ஙனம் மாபாதகங்களை எடுத்துக்கூறி விலக்கியதேயன்றி, நடுவு நிலைமை, அன்புடைமை, பொறையுடைமை, ஈகை முதலியவற்றைத் திருமூலர் விதித்தும் இருக்கின்றார்.

நடுவு நிலைமை :

நடுவுநிலைமை தவறாதவர்களை, 'பிரம்மா, விட்டுணு, உருத்திரன்' என்ற மும்மூர்த்திகளுக்கு நிகராகக்கூடக் கூறலாம் என்கின்றார் திருமூலர். காரணம், நடுவு நிலைமை இல்லாத ஒன்றினாலேதான், பிறர்பொருள் வெளவல், பிறன்மனை விழைதல், பிறவுயிர்க்குத் தீங்கு நினைத்தல் முதலிய அனைத்துக் குற்றங்களும் நிகழ்கின்றன. அதனால், நடுவுநிலைமையுடையோர் எக்குற்றமும் இல்லாதவராவர். அவர்களைத் தேவர் என்றும், தேவரிலும் உயர்ந்த மூவர் என்றும் கூறலாம் என்பதே.

"நடுவுநின் றான்நல்ல கார்முகில் வண்ணன் ;
நடுவுநின் றான்நல்ல நான்மறை ஓதி ;
நடுவுநின் றார்சிலர் ஞானிக ளாவோர் ;
நடுவுநின் றார்நல்ல நம்பனும் ஆமே."

அன்பு :

அன்பு என்பது மிக உயர்ந்த ஒன்று என்பதற்கு, 'அன்பே சிவம்' என முதற்கண் அருளிச்செய்தவர் அருள்நெறித் தலைவராகிய திருமூலரே.

ஈகை :

"ஆர்க்கும் இடுமின் ; அவர் இவர் என்னன்மின் ;
பார்த்திருந் துண்மின் ; பழம்பொருள் போற்றன்மின் ;
வேட்கை யுடையிர், விரைந்தொல்லை உண்ணன்மின் ;
காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே."

என்பது அவர் ஈகையை வலியுறுத்திய இன்னருள் மொழி. அறவுள்ளம் உடையார்க்கு அறம்செய்யச் செல்வம் வேண்டுவதில்லை. செல்வம் இல்லாதோரும் எளிதில் அறத்தைச் செய்ய இயலும் என்பதை வெளியிடும் திருமூலர் திருமந்திரம்,

"யாவர்க்கும் ஆம் இறை வற்கொரு பச்சிலை;
யாவர்க்கும் ஆம்பசு வுக்கொரு வாயுறை;
யாவர்க்கும் ஆம் உண்ணும் போதொரு கைப்பிடி;
யாவர்க்கும் ஆம்பிறர்க் கின்னுரை தானே."

என்பது.

அருள்நெறிக்கண் மிகப்பெரிய அளவில் குறிப்பிடப்பட்ட ஒழுக்க வகைகளே அறநெறியில் ஓர் எல்லைக்குட்பட விரித்துப் பேசப்படுதலைக் காண்கின்றோம். ஆதலின் அறநெறியோடு அருள் நெறியையும் கைக்கொண்டு நின்று மக்கள் நன்னிலை எய்துவார்களாக.



---

## அட்டவிரட்டங்கள்

"பூமன் சிரங்கண்டி, அந்தகன் கோவல், புரம்அதிகை,
மாமன் பறியல், சலந்தரன் விற்குடி, மா வழுவூர்
காமன் குறுக்கை, யமன் கடவூர், இந்தக் காசினியில்
தேமன்னு கொன்றையுந் திங்களுஞ் சூடிதன் சேவகமே."

| | | | |
|---|---|---|---|
| 1. | திருக்கண்டியூர் | ... | பிரமன் சிரங்கொய்தது. |
| 2. | திருக்கோவலூர் | ... | அந்தகாசுரனைச் சங்கரித்தது. |
| 3. | திருஅதிகை | ... | திரிபுரத்தை எரித்தது. |
| 4. | திருப்பறியலூர் | ... | தக்கன் சிரங் கொய்தது. |
| 5. | திருவிற்குடி | ... | சலந்தராசுரனைச்சங்கரித்தது. |
| 6. | வழுவூர் ( வைப்புத்தலம் ) | ... | யானையை உரித்தது. |
| 7. | திருக்குறுக்கை | ... | காமனை எரித்தது. |
| 8. | திருக்கடவூர் | ... | யமனை உதைத்தது. |

# அருள்நெறியும் அறநெறியும்

## 4. கல்வி கேள்வி அறிவு *

அருள்நெறியில் உலகியல் நோக்கு இல்லை எனச் சிலர் கருதுவர்; அவ்வாறில்லை "உலகியல் பலவும் அருள்நெறியைக் குறிக்கோளாகக் கொண்டனவாயிருத்தல் வேண்டுமல்லது, உயிரின்பத்தையே பயனாகக் கொண்டிருத்தல் கூடாது" என்பதே அருள்நெறிக்கொள்கை. இக்கொள்கையையுடைய அறநூலே உண்மை அறநூலாம்.

உலகியலில் முதன்மையானது அரசியல். அது நன்கமைதல் வேண்டும் என்பது அருள்நெறியிலும் வற்புறுத்தப் படுவது. "வாழ்க அந்தணர் வானவர் ஆனினம் - வீழ்க தண்புனல்" என்று அருளிய திருஞானசம்பந்தர், 'வேந்தனும் ஓங்குக" என அரசனையும் வாழ்த்தினர். அவரது அருள் வாழ்த்தினல் பாண்டிநாட்டு அரசன் அருளும், பொருளும் பெற்று ஓங்கியதேயன்றி, பிறப்பிலே அமைந்த உடற்கூனும் நீங்கப்பெற்று ஓங்கினன்.

"ஞானசம்பந்தர் அரசனை வாழ்த்தியதும், மக்களது இம்மை மறுமை நலம் அனைத்திற்கும் முதலாயுள்ள திருக்கோயில் களையும், அவைகளில் நடைபெறும் நித்திய நைமித்திக வழி பாடுகளையும் செவ்வனே காத்தற்கு உரியவன் அவன் என்னும் கருத்தினலேதான்" என்பதைச் சேக்கிழார்,

> "ஆளும் மன்னனை வாழ்த்திய தற்சனை
> மூளும் மற்றிவை காக்கும் முறைமையால்"

என விளக்கினர்.

> "அந்தணர் நூற்கும்............ஆதியாய்
> நின்றது மன்னவன் கோல்"

என்ற திருவள்ளுவருக்கும் கருத்து இதுவேயாதல் தெளியப் படும்.

திருமூல நாயனரும் தமது திருமந்திர நூலுள் நாட்டை ஆளும் அரசன் நல்லவனய் அமைதல் வேண்டும் என்கின்ருர்.

---

* 10—10—69 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

வேந்தன் உலகை மிகநன்று காப்பது
வாய்ந்த மனிதர்கள் அவ்வழி யாநிற்பர்;
பேர்ந்திவ் வுலகைப் பிறர்கொள்ளத் தான்கொள்ளப்
பாய்ந்த புலியன்ன பாவகத் தானே.

"அரசன் நாட்டை நன்முறையில் ஆள்வானேயாயின், 'மன்னன் எவ்வழி மன்னுயிர் அவ்வழி' என்றபடி மக்களும் நன்முறையில் நிற்க, அவ்வாட்சி தனக்கும், பிறர்க்கும் மிக்க நன்மை பயப்பதாய் அமையும்; அவ்வாறன்றி நாட்டைப் பகைவர் நலியத் தானும் நலிந்து கொடுங்கோல் செலுத்துவா னுயின், கிடைத்த விலங்குகளை யெல்லாம் அடித்துக் கொல் கின்ற இரக்கம் அற்ற புலிபோல்பவனுய், நாட்டையும் இழப் பான்" என்பது இத்திருமந்திரத்தின் பொருள்.

"ஆக்களையும், பெண்டிரையும், துறவிகளையும், சிவனடி யார்களையும் இடையூறின்றி வாழுமாறு காத்தல் அரசனுக்குத் தலையாய கடமை; அக்கடமையை அவன் ஆற்ருதொழியின், மறுமையில் அவனுக்குக் கிடைப்பது மீளா நரகம்" என அவர் கூறும் திருமந்திரம் இது;

ஆவையும், பாவையும், மற்றற வோரையும்,
தேவர்கள் போற்றுந் திருவேடத் தாரையும்
காவலன் காப்பவன்; காவா தொழிவனேல்,
மேவும் மறுமைக்கு மீளா நரகமே.

சிவாலயங்களே நாட்டிற்கு உயிராய் அமைந்தவை ஆதலின், அரசன் அவற்றில் நிகழ்தற்குரிய நித்திய நைமித்தி கங்கள் தவருது நடைபெறச் செய்தல் வேண்டும். செய்யா விடில், அரசனும் பகைவரை வெல்லும் ஆற்றலை இழந்து, நாடும் பாழாகும் என்கின்றன பின்வரும் திருமந்திரங்கள்.

ஆற்றரு நோய்மிக் கவனி மழைகுன்றும்;
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்;
கூற்றுதைத் தான்திருக் கோயில்க ளானவை
சாற்றிய பூசைகள் தப்பிடிற் ருனே.

முன்னவ ஞர்கோயிற் பூசைகள் முட்டிடின்,
மன்னர்க்குத் தீங்குள; வாரி வளங்குன்றும்;
கன்னங் களவு மிகுத்திடுங் காசினி;
என்னரு நந்தி எடுத்துரைத் தானே.

சிறப்புப்பற்றிச் சிவாலயத்திற்குக் கூறிய இது, ஏனைய தேவர் கோட்டங்கட்கும் ஒப்பதேயாம். பண்டைத் தமிழ்க்காப்பியங் களாகிய சிலப்பதிகாரம், மணிமேகலை என்பவற்றிலும் அரசன் இந்திரவிழா எடுப்பித்த காலத்துச் சிவபிரான் கோயிலை முதன்மையாக வைத்து ஏனைத் தேவர் கோட்டங்கள் பலவற் றினும் விழா எடுப்பித்தமை சொல்லப்பட்டது.

"அரசன் தான் எச்சமயத்தவனுயினும் பல சமயத்தவரை யும் ஒப்ப நாடி அவரவரை அவரவர் சமய நெறியினின்றும் வழுவாதொழுகச் செய்தல் அவனுக்குரிய நெறிமுறை" என் பதைத் திருமூலர் பின்வருமாறு தெரிவிக்கின்ருர் :

"தத்தம் சமயத் தகுதிநில் லாரை
அத்தன் சிவன்சொன்ன ஆகம நூல்நெறி
எத்தண்ட மும்செய்யும் அம்மையில்; இம்மைக்கே
மெய்த்தண்டம் செய்வதவ் வேந்தன் கடனே."

இதனுல் சமயிகள் பலரும் பிற சமயத்தைப் பழிப்பதில் தம் கருத்தைச் செலுத்தாது, தம் சமயநெறி நிற்றலில் கருத்தைச் செலுத்தல் வேண்டும் என்பது நன்கு புலனுகும்.

இவ்வாறு தனது கடமைகள் இவை என்பதை நன்கு உணர்ந்து செய்தற்கு அரசன் சிறந்த கல்வியுடையவனுதல் வேண்டும் என்கின்ருர் திருமூலர். கல்வியில்லாத அரசன் காலனுக்கு நிகராவான் – ஏன்? காலனையே ஒரு வகையில் நல்லவன் எனலாம். ஏனெனில், காலன் கொடியவர்களைத் தான் துன்புறுத்தி நரகத்தில் இடுவான்; நல்லவரை நலிய மாட்டான். கல்லா அரசனே நல்லவர் இவர்; தீயவர் இவர் என்பது அறியாமல் அனைவரையும் துன்புறுத்துவான். அதனுல், கல்லா அரசன் காலனிலும் கொடியவன் என்று கல்வியை வற்புறுத்துகின்ருர் திருமூலர்:

"கல்லா அரசனும் காலனும் நேரொப்பர்;
கல்லா அரசனிற் காலன் மிகநல்லன்;
கல்லா அரசன் அறம்ஓரான், கொல்லென்பான்;
நல்லாரைக் காலன் நணுகிநில் லானே"

திருவள்ளுவர் கல்வியை அரசியலில் வைத்து வலியுறுத்தி யிருத்தல் யாவரும் அறிந்தது.

அரசன் கல்வியுடையனுதல் இன்றியமையாததாயினும், கல்வி அனைவர்க்கும் வேண்டற்பாலதே. கல்வி உலகினுக்கு மட்டு

மன்று; இறைவன் திருவருளைப் பெறுதற்கும் இன்றியமையாததே என்றும் திருமூலர் கூறுவதைக் காணலாம்.

நில்லா நிலையை நிலையாக நெஞ்சினுள்
நில்லாக் குரம்பை நிலையென் றுணர்வீர்காள்!
எல்லா உயிர்க்கும் இறைவனே யாயினும்
கல்லாதார் நெஞ்சத்துக் காணஒண் ணாதே.

கல்லாத மூடரைக் காணவும் ஆகாது;
கல்லாத மூடர்சொல் கேட்கக் கடனன்று;
கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லராம்;
கல்லாத மூடர் கருத்தறி யாரே.

பற்றது பற்றிற் பரமனைப் பற்றுமின்;
முற்றது எல்லாம் முதல்வன் அருள்பெறின்
கிற்ற விரகிற் கிளரொளி வானவர்
கற்றவர் பேரின்பம் உற்றுநின் றாரே.

"கல்லார் நெஞ்சின் – நில்லான் ஈசன்" என்று திருஞானசம்பந்தரும் அருளுதல் காணலாம்.

கல்வியே யன்றிக் கேள்வியும் வேண்டற்பாலது என்பது திருமூலர் அறிவுரை.

அறம்கேட்டும், அந்தணர் வாய்மொழி கேட்டும்,
மறம்கேட்டும், வானவர் மந்திரங் கேட்டும்,
புறம்கேட்டும், பொன்னுரை மேனிஎம் ஈசன்
திறம்கேட்டும் பெற்ற சிவகதி தானே.

'சிவகதி கிடைப்பது, முதலில் அறம் இது, மறம் இது என்று கேட்டும், பின் அந்தணர்களது வேதத்தின்வழித் தெய்வத் துதிகளைக் கேட்டும், பின்னர்த் தமக்கு விருப்பமான தெய்வத்தை வழிபடும் மந்திரம் முதலிய முறைகளைக் கேட்டும், பின்னர் இம்மை மறுமைகளைப் பயக்கும் விரதம் முதலியவற்றைக்கேட்டும், கடைசியாகப் பொன்னர் மேனியனாகிய சிவபெருமானது அருட் டிறங்களைக் கேட்டும் உணர்வதனாலேயே' என்பது, மேற்குறித்த திருமந்திரத்தின் பொருள்.

"தேவர் பிரானைத் திவ்விய மூர்த்தியை
யாவர் ஒருவர் அறிவார்? அறிந்தபின்
ஓதுமின்; கேண்மின்; உணர்மின்; உணர்ந்தபின்
ஓதி உணர்ந்தவர் ஓங்கிநின் றாரே"

என்பதிலும் கேள்வி வற்புறுத்தப்படுகின்றது. ‘கற்றல், கேட்டல், இரண்டையும் உடையவரே பெரியார்’ என்பது திருஞானசம்பந்தர் வாக்கிலும் காணப்படுவது.

கல்வி கேள்விகளின் பயன் அறிவேயாதலின், அதனைப் பெற்றவரே எல்லாம் பெற்றவர் என்பதைத் திருமூலர் திருமந்திரம்,

“ அறிவுடை யார்நெஞ் சகலிட மாவது ;
அறிவுடை யார்நெஞ் சருந்தவ மாவது ;
அறிவுடை யார்நெஞ்சொ டாதிப் பிரானும்
அறிவுடை யார் நெஞ்சத் தங்குநின் ருனே ”

என வெளியிடுகின்றது. “அறிவுடையார் எல்லாம் உடையார் ; அறிவிலார் – என்னுடைய ரேனும் இலர் ” என்னும் திருவள்ளுவர் திருக்குறளை அறியாதவர் இல்லை.

யாவராலும் விரும்பப்படுவது அறிவும், வெறுக்கப்படுவது அறியாமையும் என்பது வெளிப்படை. ஆயினும், தன்னை அறிந்து பின் தலைவனை யறியும் அறிவே உண்மை அறிவு என்பதையும், அவ்வறிவுக்குத் தடையாய் நிற்பதே உண்மை அறியாமை என்பதையும் பலர் அறிவதில்லை. அந்நிலையில் அறிவு அறியாமைகளைச் சிறிதளவில் அறிந்து நிற்பது உலகியலாம்; ஆகவே திருமூலர்,

“ அறிவறி வென்றங் கரற்றும் உலகம் ;
அறிவறி யாமை யாரும் அறியார் ;
அறிவறி யாமை கடந்தறி வானல்,
அறிவறி யாமை அழகிய வாறே ”

எனவும்,

“ என்னை யறிந்திலேன் இத்தனை காலமும்;
என்னை யறிந்தபின் ஏதும் அறிந்திலேன்;
என்னை யறிந்திட் டிருத்தலும் கைவிடாது
என்னையிட் டென்னை உசாவுகின் ருனே ”

எனவும் கூறுகின்ருர். ஆகவே, அருள்நெறியில் பெரிய அளவில் அமைந்துள்ள அவைகளே அறநெறியில் ஓரளவில் அமைந்துள்ளன என்பதை உணர்ந்து, அவற்றை மக்கள் முறையே பற்றியொழுகிப் பயனடைவார்களாக.

---

# அருள்நெறியும் அறநெறியும்

## 5. அறவுணர்வு *

மக்கள் உள்ளத்தில் தோன்றுகின்ற உணர்வுகளை மூன்ருகப் பிரிக்கலாம். அவை, விலங்குணர்வு, மக்கள் உணர்வு, தெய்வ உணர்வு என்பன. விலங்குணர்வு பின் விளைவைச் சிறிதும் உணராமல் அவ்வப்பொழுது உண்டாகும் சூழ்நிலையை மட்டும் உணர்ந்து, அந்தச் சூழ்நிலை எதுவாயினும் அதனேடே ஒன்றுபட்டுப் போவது. இதுவே 'புலன் உணர்வு' எனப் படும். இதனை யாவரும் – எந்த உயிரும் விரும்புவதில்லை. ஒவ்வோர் உயிரும் தனக்கு உண்டாகின்ற புலன் உணர்வில் தான் மயங்கி நிற்பினும், பிற உயிர்கள் அதை விரும்பாது வெறுக்கின்றன. ஒவ்வொருவனும் தன்தன் பசிக்குத் தான் பிறரைத் துன்புறுத்தி உண்டு வாழ நினைப்பினும், அதனை அவனையொழிந்த பிறர் விரும்பாது வெறுக்கின்றனர். எல்லா ருடைய நிலைமையும் இதுவே. ஒவ்வோர் உயிரும் தன்தன் பசிக்குத் தான் பிற உயிரைக் கொன்று தின்ன விரும்பும் பொழுது, கொல்லப்படும் உயிரின் இனங்கள் அதனை விரும்பாது வெறுக்கின்றன. எனவே, வெறும் புலனுணர்வு எல்லா உயிர் களாலும் வெறுக்கப்படுதல் தெளிவு. அதனல், வெறும் புல னுணர்வு, 'விலங்குணர்ச்சி' எனப்படுகின்றது. ஆகவே, வெறும் புலனுணர்வு மட்டும் உடையோர், பிறப்பால் மக்களே யாயினும், உணர்வால் விலங்குகளாகவே எண்ணப்படுகின்றனர். பிற உயிருக்கு வரும் துன்பத்தைத் தனக்கு வரும் துன்பத்தோடு ஒப்ப மதிக்கும் நிலைமை இல்லாதபொழுது மக்களறிவிற்கு என்ன சிறப்பு உண்டாகும்! ஒரு சிறப்பும் உண்டாகாது என் பதையே திருவள்ளுவர்,

> "அறிவினன் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
> தன்நோய்போல் போற்ருக் கடை"

எனக் கூறினர். இதுபற்றியே, பிற உயிருக்குத் துன்பம் செய்தல், கொலைசெய்தல், புலால் உண்ணல் முதலிய செயல் கள் விலங்குச் செயல்களாக எண்ணி வெறுக்கப்படுகின்றன. வைதல், புறங்கூறல், வஞ்சித்தல், நடுவுநிலையின்மை போல் வனவும் ஓரளவு விலங்குணர்ச்சிகளின்பாற் படுவனவே. இவற்றை எந்த நன்மகனும் மதிப்பதில்லை; விரும்புவதில்லை.

---

* 10–11–69 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

இவ் விலங்குணர்ச்சி உடையவர்களையே உலகம், 'கீழ்மக்கள்' எனக் கூறும்.

இவ் விலங்குணர்ச்சிகளின் இழிவை உணர்ந்து அவற்றை வெறுத்தொதுக்கும் நிலையே அற உணர்வின் (தரும சிந்தனையின்) முதற்படியாகும். இது, தன்னால் பிற உயிருக்கு நன்மை இல்லையாயினும், தீமையேனும் உண்டாதல் கூடாது என்று எண்ணும் நிலைமையாம். இதனையே சங்கப் புலவர் ஒருவர்,

"நல்லது செய்தல் ஆற்றி ராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்"

என்று கூறினர். எனவே தான் வாழ நினைக்கும்பொழுது, பிற உயிருக்குத் தீங்கு சிறிதும் இல்லாது வாழ நினைப்பது அற உணர்வின் முதல் நிலையாகும். இதனையுடைய மக்களே மக்களாக மதிக்கப்படுவர். இவ்வுணர்வில், தனக்குத் தீங்குசெய்யும் உயிர்க்குத் தான் தீங்குசெய்தல் தவறெனப்படாது. எனவே, இவ்வுணர்வே மக்களுணர்வின் பொது நிலையாம். இதனை உடையோர், 'பொது மக்கள்' எனப்படுவர்.

இனி, 'தான் நலம் பெறுதல் பெரிதன்று; தனது நலத்தினும் பிற உயிர்களின் நலமே பெரிது' என மதித்துப் பிற உயிர்களது நலத்தின் பொருட்டுத் தனது நலத்தினைத் துறக்க முற்படுதல் அற உணர்வின் இடைநிலையாம். அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை இகழ்வாரைப் பொறுத்துக் கொள்ளும் பொறை, தன்னுயிர் நீப்பினும் தான் பிறிதின் உயிரை நீக்காமையாகிய கொல்லாமை, இன்னா செய்தார்க்கும் இனியவே செய்தல், ஊருணி நீர்போலத் தனது பொருளை யாவரும் எந்தத் தடையும் இன்றிப் பயன்படுத்திக்கொள்ள வைக்கும் ஒப்புரவு முதலியன எல்லாம் அறத்தின் இடைநிலையாகிய உணர்வினால் விளைவனவாம் இவற்றை உடையவர்களையே,

"தமக்கென வாழாப் பிறர்க்குரி யாளர்"

"தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுநர்"

"ஒப்புரவாளர்"

என்றெல்லாம் உலகம் உயர்த்திப் பேசும்; 'தெய்வத்தின் அவதாரம்' என்று சொல்லி வணங்கவும் செய்யும். மக்களுணர்வின் சிறப்பு நிலையான இதனை யுடையோர், 'நன்மக்கள்' என உயர்த்திச் சொல்லப்படுவர். பொது மக்கட்கும்,

நன்மக்கட்கும் உள்ள புலனுணர்வு வெறும் புலனுணர்வாகாமை யால், அவை விலங்குணர்வு எனப்படாது மக்களுணர்வேயாகும். ஆகவே, இவர்கள் ஈட்டும் பொருளே 'பொருள்' என்றும்' நுகரும் இன்பமே 'இன்பம்' என்றும் சொல்லப்படும். இவற்றைத் திருவள்ளுவர்,

" திறன் அறிந்து — தீதின்றி வந்த பொருள் "

என்றும்,

" அறத்தான் வருவதே இன்பம் "

என்றும் கூறினர்.

பொதுமக்களும், நன்மக்களும் என இருவகையினராகச் சொல்லப்படுவோர் அனைவரும் மறு பிறப்பைப் பற்றியோ, சுவர்க்க நரகங்களைப் பற்றியோ உறுதியான நம்பிக்கை கொண்டிருப்பவர்கள் எனக் கூற இயலாது. இவைகளில் உறுதியான நம்பிக்கை கொண்டு, தமக்கும், பிறர்க்கும் இம்மை நலத்திற்குமட்டுமன்றி மறுமை நலத்திற்கும் ஆவன செய்வோரே, 'பெருமக்கள்' அல்லது 'பெரியோர்' என்று சொல்லப்படுவர். மறுமையில் நம்பிக்கை உடையோர் எவரும் வினையில் நம்பிக்கை உடையோராய் இருப்பர். அதனால் அவர்கள் இயல்பாகவே தீநெறியின் நீங்கி நன்னெறியில் நிற்பர். புறநானூற்றுப் புலவர் ஒருவர், " நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர் – முறைவழிப் படூஉம் என்பது திறவோர் – காட்சியின் தெளிந்தனம் " என வினையில் நம்பிக்கையுடைமையால், " பெரியோரை வியத்தலும் இலமே – சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே " என்றது இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். " ஆருயிர் முறைவழிப் படுதலைத் தெளிந்தனம் " என்றமையால், இவர் மறுமையை நன்கு தெளிந்தவராதல் வெளிப்படை. வினையிலும், மறுமையிலும் நம்பிக்கை உள்ள நிலை அறஉணர்வின் முடிந்தநிலையின் முற்பகுதியாம்.

வினையில் நம்பிக்கை இருப்பினும், இல்லாதொழியினும் வினை தன் பயனைக் கொடுத்தே தீரும். ஆயினும், வினை பயன் தருவது இறைவனது அருளாலன்றித் தன்னாலே ஆகாது. ஆகவே, பயனைத் தருவிப்பதாகிய இறைவன் திருவருளை உணர்ந்து அதன்வழி நிற்போர், 'அருட்பெருமக்கள்' எனப் படுவர். 'இவ்வருட்பெருமக்கள் இறைவன் திருவருளில் இருப்பதால் அறவுணர்வு உடையராய் இருப்பரோ' எனச் சிலர் ஐயுறுகின்றனர். அங்ஙனம் ஐயுறக் காரணம் இல்லை. ஏனெனில் அவர்கள், " அஞ்சுவது, யாதொன்றும் இல்லை; அஞ்ச வருவதும் இல்லை " எனக் கூறுதல், இறைவனை அடையாத

முன்பு செய்த வினை அடைந்தபின் வந்து தாக்காதவாறு அவனது திருவருள் காக்கும்' எனக்கூறுதலேயன்றி, 'அவனை அடையப்பெற்ற பின்னர் எதனைச் செய்யினும் அவன் வாளா இருப்பான்' என்னும் கருத்தினுலன்று. இதனை இனிது விளக்கவே சுந்தரமூர்த்தி நாயனரது வாழ்க்கையில் அவர் சங்கிலியார்க்குச் செய்துகொடுத்த சூள் பிழைத்தமை காரணமாகக் கண்ணொளி மறைந்த ஓர் நிகழ்ச்சி நிகழ்ந்தது. இதனை அவர் தாமே,

"பிழையுளன பொறுத்திடுவர் என்றடியேன் பிழைத்தக்கால்
பழியதனைப் பாராதே படலம்என்கண் மறைப்பித்தாய்"

என்று வெளிப்படையாக எடுத்தருளிச் செய்தார். ஆகவே இறைவனது திருவருள் கைவரப்பெற்ற அருட்பெருமக்கள் உள்ளத்தில்தான் 'நல்லதற்கு நன்மையும், தீயதற்குத் தீமையும் இறைவன் தப்பாது தருவான்' என்னும் அறவுணர்வு பெரிதும் விளங்கி நிற்பதாம். இதைத் திருமூலர் திருமொழியொன்ருல் நன்குணரலாம்.

தான்முன்னம் செய்த விதிவழி தானல்லால்
வான்முன்னம் செய்தங்கு வைத்ததோர் மட்டில்லை
கோன்முன்னம் சென்னி குறிவழி யேசென்று
நான் முன்னம் செய்ததே நன்னில மானதே.

இதில் திருமூலர் திருக்கயிலையிலிருந்து அகத்தியரைக் காணப் புறப்பட்ட தாம் விரைவில் அதனை முடித்துக்கொண்டு மீண்டும் திருக்கயிலையை அடைய வேண்டுவது முறையாய் இருக்க, அவ்வாறின்றி, 'மூலன்' என்னும் ஆயனது உடம்பில் புகுந்து ஆவடுதுறையில் நெடுங்காலம் தங்கவேண்டி வந்ததற்குக் காரணம் தாம் செய்த வினையே என்பதைக் குறிப்பிடுகின்ருர். சேக்கிழார் இவ்வாறு கூருது, "சிவபெருமான் தாம் தந்த ஆகமப்பொருளைத் தமிழால் செய்தற்பொருட்டுத் திருமூலரை இவ்வாறு நிலவுலகில் தங்கச்செய்தார்" என்று கூறினும், திருவாவடுதுறைப் புராணம் மேற்காட்டியவாறே கூறுகின்றது. 'பெரியோரை உலகநலத்தின் பொருட்டு மண்ணுலகிற்கு அனுப்ப நினைக்கும்பொழுதும் இறைவன் யாதேனும் ஒரு முன்னிலையால் அனுப்புவதன்றி, வாளா அனுப்புவதில்லை' என்பது சுந்தரரது வரலாற்ருல் இனிது விளங்குதலின், திருவாவடுதுறைப் புராணம் கூறுதல் சேக்கிழாரது திருமொழிக்கு மாருனதன்று. ஆகவே, அருட்பெருமக்களது திருவுள்ளத்தில் அறவுணர்வு எத்துணைச் சிறந்து விளங்குகின்றது என்பது தெளிவாகும்.

அருட்பெருமக்களது உள்ளத்தில் அறவுணர்வு இறைவன் அருளுணர்வோடு ஒன்றி விளங்குகின்றது. இதுவே அற வுணர்வின் முடிந்தநிலை. "வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி - தொகுத்தார்க்குந் துய்த்த லரிது" என்னும் திருக்குறள் இந்நிலைக்கு வழி வகுத்துத் தருகின்றது. எனவே, முதற்கண் விலங்குணர்ச்சியைப் போக்கி மக்கட் பொதுப் பண்பினை உண் டாக்கியும், பின்னர் நன்மக்கள் நிலையை அடைவித்தும், அதன் பின்னர்ப் பெருமக்கள் இயல்பை வருவித்தும், இறுதியாக அருட்பெருமக்களது நிலைக்கு வழிவகுத்தும் நிற்பதே உண்மை அறநூல் என்பது இனிது விளங்கும். இவை அனைத்தும் திருக்குறளில் அமைந்திருத்தல் ஊன்றி நோக்கின் விளங்குவ தாம். இறுதியிற் கூறிய இருபெருமக்களது உணர்வே தெய்வ உணர்வாம்.

அருளுணர்வைக் கொள்ளாது அறவுணர்வை மட்டுமே உடையவர், வினையாகிய கட்டினைமட்டும் உணர்வரன்றி, அதனினின்றும் மீளும் வழியை உணரமாட்டார். அருளுணர் வையும் உடன்கொண்டவரே அவ்வழியை உணர்வர். அதனை யும் திருமூலரது திருமந்திரத்தில் காண்கின்றோம்.

செத்திலென்! சீவிலென்! செஞ்சாந் தணியிலென்!
மத்தகத் தேஉளி நாட்டி மறிக்கிலென்!
வித்தகன் நந்தி விதிவழி யல்லது
தத்துவ ஞானிகள் தன்மைகுன் றாரே.

வானின் றிடிக்கிலென்! மாகடல் பொங்கிலென்!
கானின்ற செந்திக் கலந்துடன் வேகிலென்!
தானொன்றி மாருதம் சண்டம் அடிக்கிலென்!
நானொன்றி நாதனை நாடுவன் நானே.

என்றாற்போலும் திருமந்திரங்களைக் காண்க. "வானந் துளங் கிலென் மண்கம்ப மாகிலென்" என்பது முதலாக வரும் அப்பர் திருமொழியும் இவ்வாறே உள்ளன. இவற்றையே,

"இருள்சே ரிருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"

"தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது"

என்னும் குறள்கள் தெரிவிக்கின்றன. இதனால் அருள்நெறியில் அருளுணர்வோடு கூடிநிற்கும் அறவுணர்வே, அறநெறியில் தனித்தெடுத்து விரித்துரைக்கப்படுகின்றது என்பதை உலகம் உணர்ந்து உய்வதாக.

# அருள்நெறியும் அறநெறியும்

## 6. இறைவழிபாடு *

மக்களுள் பெரும்பாலும் உலக வாழ்க்கையில் மயங்கி அதனையே பொருளாகக் கொண்டு வேறொன்றையும் நினையாது காலம் கழிப்பினும், உண்மையில் அவர்கட்கு உள்ளது துன்பமே என்று சிறிது ஆய்ந்து ஓய்ந்து பார்த்தால் விளங்கும். முதலாவது இவ்வுடம்பு நிலைபெறுவதற்கு வேண்டப்படுவது உணவு. "உண்டி முதற்றே உணவின் பிண்டம்" என்றார் சங்கப் புலவர் ஒருவர். இந்த உணவை உடலுக்கு ஒருநாள் இட்டால் போதுவதில்லை. ஒருநாளிலும் ஒருவேளை இட்டால் போதுவதில்லை. குறைந்தது மூன்று வேளையாயினும் இடவேண்டியுள்ளது.

"ஒருபோது யோகியே; ஒண்டளிர்க்கை மாதே
இருபோது போகியே யென்ப; — திரிபோது
ரோகியே; நான்குபோ துண்போ னுடல்விட்டுப்
போகியே யென்று புகல்"

என்று நீதிநூல் கூறியபோதிலும், மூன்று போதாயினும் உண்டல் பெரும்பான்மை வழக்கமாய் அமைந்துவிட்டது. திருவிழிமிழலையில் அப்பரும், சம்பந்தரும் அடியார்கட்கு இரண்டு பொழுதே உணவளித்ததாகச் சேக்கிழார் அருளியுள்ளார். அயரா அன்பின் அரன்கழல் பணியும் அடியவர்கட்கு இரண்டு வேளை உணவே போதியதாய் இருந்தது. ஆனால், ஏனையோர்க்கு அந்நிலை கூடுமோ! திருவள்ளுவரும், 'வயிற்றுக்குச் சிறிது உணவே ஈயவேண்டும்' என்றார். ஆயினும், அதன்படி இருப்பவர் யாவர்!

மக்கள் வாழ்க்கையில் இந்த உணவைத் தேடுவதில்தான் பெரும்பொழுது கழிந்துவிடுகின்றது என்பது வெளிப்படை. தனிமனிதர் மட்டுமன்று; அரசுகள் கூட மக்களுக்கு வேண்டிய உணவை உண்டாக்குவதைத்தான் முக்கியக் குறிக்கோளாகக் கொண்டு இயங்குகின்றன. அவ்வாறு இயங்கினும், அவை அத்துறையில் வெற்றி காண்பது அரிதாகின்றது. அரசுகளின் நிலைமையே இது என்றால், தனிமனிதர் நிலைபற்றிச் சொல்ல வேண்டியது என்ன இருக்கின்றது.

---

* 10—12—69 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

" சாணும் வளர்க்க அடியேன் படுந்துயர் சற்றல்லவே "

என்ருர் பட்டினத்துப் பிள்ளையார். எனவே, உணவை முதன்மையாகக்கொண்ட இவ்வுலக வாழ்க்கை என்றும் நிரம்பாமல், பெரிய அல்லலையே விளைப்பதாம் என்பது சொல்லவேண்டுவது இல்லையன்றே !

" அல்லல் வாழ்க்கை உய்ப்பதற் கவத்தமே பிறந்துநீர்
எல்லையில் பிணக்கினிற் கிடந்திடா தெழுமினே
பல்லில்வெண் டலையினிற் பலிக்கியங்கு பான்மையான்
கொல்லை வெள்ளை யேற்றினன் கோலக்காழி சேர்மினே "

என்று அறிவுறுத்துகின்ருர் ஞானசம்பந்தர்.

உணவைத் தேடுவதனல் உண்டாகின்ற பெருந்துன்பத்தை ஔவையார் பின்வருமாறு வெளியிடுகின்ருர் :-

ஒருநா ளுணவையொழி யென்ரு லொழியாய்
இருநாளைக் கேலென்ருல் ஏலாய் — ஒருநாளும்
என்நோ வறியா இடும்பைகூர் என்வயிறே
உன்னேடு வாழ்தல் அரிது.

இன்றியமையாது வேண்டப்படுகின்ற உணவை ஒரு வகையாகத் தேடி வைத்துவிட்டாலும், அதனேடு துன்பந் தொலைந்ததில்லை. நோயும், பிறவும் வந்து வருத்துகின்றன. இவற்றிற்கெல்லாம் ஈடு கொடுப்பதில் எஞ்சியுள்ள நேரத்தைச் செலவிடவேண்டி நேரிடுகின்றது. இவ்வாறு சிந்தனை செய்து பார்க்கும்பொழுது, இவ்வுலக வாழ்க்கையில் உள்ளதுதான் என்ன என்று நினைக்கவேண்டியுள்ளது. ஆனல், உலக வாழ்க்கையை விட்டு எங்கே போக முடியும்? முடியாது. ஆகவே, உலகத்தில் இயன்ற அளவு வாழ்க்கையை நடத்திக்கொண்டு, உண்மையான வேருெரு பயனைப் பெற முயல்வதே அறிவுடைமையாகும்.

" உண்மையான வேருெரு பயன் " என்பது ஆன்மலாபம். அஃதாவது, உண்டியும், மருந்தும், உறையுளும் போன்றவற்ருல் உடம்பைப் பாதுகாப்பதோடு நின்றுவிடாமல், உயிர் தன்மை அடைதற்கு வேண்டுவனவற்றைச் செய்தலாம். உயிருக்கு வரும் துன்பம் எல்லாம் உடம்பினுலாம். ஆகவே, உயிர் உடம்பொடு கூடாதநிலை பிறவியற்ற நிலையே. இதைத் தருவது இறைவன் திருவடியே. இதனை, " நீங்காப் பிறவி நிலை கெடுத்துக் — கழலா வினைகள் கழற்றுவ.........ஐயாறன் அடித்

தலமே" என்று அப்பரும், "கடந்தொறும் நின்ற உயிர்கரை காணில் - திடம்பெற நின்றான் திருவடி தானே" என்று திருமூலரும் அருளிச்செய்தல் காணலாம். திருவள்ளுவரும்;

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்"

என்றும்,

"அறவாழி யந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்த லரிது"

என்றும் இவ்வாறே கூறினர். எனவே, இறைவன் திருவடியைப் பற்றுதல் ஒன்றே பிறவித்துன்பம் நீங்குதற்கு வழியாகின்றது.

இறைவன் திருவடியைப் பற்றுதல் எவ்வாறு? இறைவனது திருவடியை மனத்தால் நினைத்தலும், வாயால் வாழ்த்தலும், உடம்பால் பணிதலுமே அதனைப் பற்றுதலாகும். நினைத்தல், வாழ்த்தல், வணங்கல் என்னும் இவைகளே 'வழிபாடு' அல்லது 'பூசை' எனப்படுகின்றது. எனவே, பூசையைத்தவிர உயிர்களுக்கு நன்மையைத்தருவது வேறொன்று இல்லையாம். ஆகவே, உலகில் உணவு முதலியவற்றைத் தேடும் முயற்சிகளுக்கு இடையே இயன்ற அளவு மக்கள் இறை வழிபாட்டினைச் செய்தல் வேண்டும். பெரிய அளவில் பூசையைச் செய்ய இயலாவிடினும், சிறிய அளவில் செய்தல் யாவர்க்கும் இயலும் என்பதைத் திருமூலர், "யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை" என்று குறிப்பிடுகின்றார்.

பூசைக்கு முதற்கண் இன்றியமையாது வேண்டப்படுவன பூவும் நீரும். இவை அரிய பொருள்களல்ல; மிக எளிய பொருள்களே. இவற்றைக்கொண்டு இறைவனை வழிபட்டால் அவன் அரிய பேற்றைத் தருகின்றான். அவ்வாறிருக்க, 'வழிபாடு எங்களால் இயலாது' என்று சொல்லிச் சிலர் ஒதுங்கிப் போவார்களாயின், அவர்களைப்பற்றி நாம் என்ன சொல்வது என்பதைத் திருமூலர்,

"புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு; நீருண்டு;
அண்ணல் அதுகண் டருள்புரி யாநிற்கும்;
எண்ணிலி பாவிகள் எம்மிறை ஈசனை
நண்ணறி யாமல் நழுவுகின் றாரே"

என்று கூறினர். பூவும், நீரும் என்பவற்றுள் பூச் சிறிது அருமையான பொருள்! அது கிடைக்கவில்லை என்றால், பச்சிலையே கொள்ளலாம் என்பதை, "யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை" என மேற்காட்டிய திருமந்திரத் தொடர் உணர்த்துகின்றது. "பச்சிலையும், நீரும் கிடைக்கவில்லை என்றாலும், மனத்தினாலாவது அவைகளைக் கருதிக்கொண்டு அகத்தே வழிபடலாம்; வழிபடவேண்டும் என்னும் அன்பே இன்றியமையாதது" என்று பட்டினத்தடிகள் அருளிச்செய்யும் பாடல் இது :-

"போதும் பெறாவிடிற் பச்சிலை யுண்டு புனலுண்டெங்கும்
ஏதும் பெறாவிடில் நெஞ்சுண்டன்றே இமையாதவெற்பும்
ஊதும் பெருமலை பங்கர்தென் தோணிபுரேசர்வண்டின்
தாதும் பெறாத அடித்தா மரைசென்று சார்வதற்கே."

தூவித் தொழுதற்குப் பூவேயன்றிப் பச்சிலைதானும் கிடைக்கவில்லை என்றாலும், மனத்தால் அவைகளைக் கருதிக் கொண்டு வழிபடுதற்கு மனம் நிலைபெறவில்லை யென்றாலும் வாயினால் ஐயனே, அரனே, சிவனே என்று இறைவன் திருப் பெயர்களைச் சொல்லுதலும் வழிபாடேயாம். அதனையும் மக்கள் செய்யாது ஒழிவராயின், அவர்கள், தாம்உள்ளவரை இறையைத் தேடாமல் உடலுக்கு இரையையே தேடிவிட்டுப் பின்பு தம் உடலைக் காக்கை, கழுகு முதலியவற்றுக்கு இரையாக இட்டு ஒழிகின்றவரேயாவர் என்பதனை அப்பர் பெருமான் அறிவுறுத் தருளும் அரிய திருப்பாடல் அறிந்து பயன்பெறத்தக்கது.

"பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்;
நாக்கைக் கொண்டரன் நாமம் நவில்கிலார்;
ஆக்கைக் கேஇரை தேடி அலமந்து
காக்கைக் கேஇரை யாகிக் கழிவரே."

'பிறவி நீக்கத்தையேயன்றிப் பிற எல்லாப் பயன்களையும் தரவல்லது இறைவழிபாடே' என்பதைச் சேரமான் பெருமாள் நாயனார்,

"உலகா ளுறுவீர் தொழுமின்! விண் ணாள்வீர்
பணிமின் நித்தம்!
பலகா முறுவீர் நினைமின்! பரமனொ
டொன்றலுற்றீர்
நலகா மலரால் அருச்சிமின்!"

என்று அறிவுறுத்தருள்கின்றார். இறைவழிபாடு உயிர்கட்கு இத்துணை இன்றியமையாததாய் இருத்தல் பற்றி, அம்பிகையே அதனைச் செய்துகாட்டிய தலங்கள், பல இடங்களில் உள்ளன. அருள்நெறியின் முடிந்த முடிபாகிய இந்த இறைவழிபாட்டினைத் தான், அறநெறியும் தனது முடிந்த முடிபாகக் கூறுகின்றது.

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்"

"கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை"

என்னும் குறள்கள், 'இறைவழிபாடில்லாத மக்கட் பிறப்பு பயனற்ற பிறப்பேயாய் விடுகின்றது' என்பதை அறுதியிட் டுரைக்கின்றன. "மலர்மிசையேகினான் மாணடி சேர்ந்தார்" முதலியவற்றால் மனவழிபாடும், "இருள்சேர் இருவினையும் சேரா இறைவன் — பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு" என்பதனால் மொழி வழிபாடும், "கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத் தான் — தாளை வணங்காத் தலை" என்பதனால் மெய் வழிபாடும் திருக்குறளில் வலியுறுத்தப்படுகின்றன. எனவே, அருள்நெறி யின் முடிந்த முடிபாகிய இறைவழிபாடே, அறநெறியின் முடிந்த முடிபுமாதலை உணர்ந்து, மக்கள் தம் மன மொழி மெய்களால் இயன்ற அளவு இறைவழிபாடு செய்து எல்லாப் பயனும் எய்து வார்களாக.

---

## சப்தவிடங்கத் தலங்கள்

"சீரார் திருவாரூர் தென்னாகை நள்ளாறு
காரார் மறைக்காடு காறாயில் — பேரான
ஒத்ததிரு வாய்மூர் உவந்ததிருக் கோளிலி
சத்த விடங்கத் தலம்."

1. திருவாரூர் – விதிவிடங்கர் – அசபா நடனம்
2. திருநள்ளாறு – நகவிடங்கர் – உன்மத்தநடனம்
3. திருநாகைக்காரோணம் – சுந்தரவிடங்கர் – பாராவாரதரங்க நடனம் – விசிநடனம்.
4. திருக்காறாயில் – ஆதிவிடங்கர் – குக்குடநடனம்.
5. திருக்கோளிலி – அவனிவிடங்கர் – பிருங்கநடனம்.
6. திருவாய்மூர் – நீலவிடங்கர் – கமலநடனம்.
7. திருமறைக்காடு – புவனிவிடங்கர் – அம்ஸபாதநடனம்.

# அருள்நெறியும் அறநெறியும்

## 7. புலனடக்கம் *

நன்மை தீமைகளைப் பகுத்தறியும் அறிவைப் பெற்ற மக்கள், தீமையை நீக்கி நன்மையைப் பெறுதற்குக் கண்ட வழிகள் பல. அவைகளே உலகில் 'மதங்கள்' அல்லது 'சமயங்கள்' என்னும் பெயரால் வழங்கப்படுகின்றன. ஒவ்வொரு சமயத்திலும் உள்ள கொள்கைகள், பிற சமயத்திற்கு ஒத்த பொதுக்கொள்கையும் சமயங்கட்கு உடன்பாடல்லாத சிறப்புக்கொள்கையும் என இரு வகைப்பட்டிருக்கும். அவற்றுள் 'புலனடக்கம்' என்பது, 'உலகாயதம், வாமம்' என்னும் இருமதங்கள் தவிர ஏனைய எல்லா மதங்கட்கும் ஒருபடித்தாக ஒத்த ஒரு கொள்கையாகும்.

'புலன்' என்பது 'நிலம்' அல்லது 'இடம்' என்னும் பொருளை உடையது. இதனை, 'புலம்' என்றலும் பொருந்துவதே. விளைநிலத்தை, 'விளைபுலம்' என்றல் உலக வழக்கிலும் உள்ளது. "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு-ஐம்புலத்தாறு ஓம்பல் தலை" என்னும் குறட்பாவிலும், 'தென்புலம்' என்பது 'தெற்கில் உள்ள இடம்' என்றும், 'ஐம்புலம்' என்பது, 'ஐந்து இடம்' என்றும் பொருள் தந்து நிற்றலைக் காணலாம். 'புலம் விசாரிக்கிறார்' என்பதில் புலம் ஆகுபெயராய் இடத்தில் நிகழ் நிகழ்ச்சியைக் குறிக்கும். எனவே, 'புலன்' அல்லது 'புலம்' என்பதற்கு 'இடம்' என்பதே பொருளாதல் தெளிவு. தத்துவக்கொள்கையில் 'புலன்' என்பது, அறிவு செல்லுதற்குரிய இடத்தைக் குறிக்கும் குறியீடாகும். வடமொழியில் இது, 'விடயம்' (விஷயம்) எனப்படுகின்றது. இதைத் தமிழில் மொழிபெயர்த்தால், 'பொருள்' என்று மொழிபெயர்க்கலாம்.

உயிர்களின் அறிவு புறத்தே செல்லுதற்கு இடமாக உள்ளவை ஐந்து. அவை, 'ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம்' என்பன. வடமொழியில் முறையே, 'சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம்' எனப்படும். "சுவையொளி ஊறோசை" என்னும் குறளில் திருவள்ளுவர் இவற்றைச் செய்யுளுக்கேற்ப மாற்றிக் கூறினர்.

---

* 10—1—70 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

உயிர் எந்த ஒன்றையும் தானே அறியமாட்டாது. வேறொரு பொருளைத் துணைக்கொண்டுதான் அறியும். அத்தகைய துணையும் ஒன்றிற்கு ஆவது மற்றொன்றிற்கு ஆகாது. அதனால், ஐந்து புலங்களை அறிவதற்கு ஐந்து துணை வேண்டப்படுகிறது. அவையே, 'செவி, தோல், கண், நாக்கு, மூக்கு' எனப்படுவன. இவை முறையே மேற்சொல்லிய ஓசை முதலியவற்றை அறியும் கருவிகள் என்பது வெளிப்படை. இவை தாமே இயங்குவனபோல எளிதில் விரைவாகச் செயற்படுதலின், 'பொறிகள்' எனப்படுகின்றன. பொறிகளை வடமொழியாளர், 'இந்திரியம்' என்பர். எனவே, செவி முதலிய பொறிகள் ஐந்தும் வடமொழியில் 'பஞ்சேந்திரியங்கள்' எனப்படுகின்றன. பொறிகள் அறிவனவும், புலன்கள் அறியப்படுவனவுமாகலின், அடக்கப்படவேண்டியவை பொறிகளேயன்றிப் புலன்கள் அல்ல. ஆகவே, 'புலனடக்கம்' என்பதில் 'புலன்' என்பது ஆகுபெயராய்ப் பொறிகளையே குறித்துநிற்கும். "ஐம்புல வேடரின் வளர்ந்தெனை" என்ற சிவஞானபோதத்தின் உரையைக்காண்க. வடமொழியில் புலனடக்கம் ஆகுபெயரின்றி, 'இந்திரிய ஜயம்' என்று நேரே கூறப்படுகின்றது. இவ்வாற்றால், 'புலனடக்கம்' என்பது, ஐம்பொறிகளை அடக்குதல் என்றே பொருள்படும் என்பது பெறப்பட்டது. இனி, ஐம்பொறிகளை அடக்குதல் என்பது யாது என்று நோக்குதல் வேண்டும்.

'செவி, தோல், கண், நாக்கு, மூக்கு' என்னும் ஐம்பொறிகளும் பயன்தரும் கருவியாகத்தானே உள்ளன? அவைகளை ஏன் அடக்குதல் வேண்டும்? என்ற ஐயம் அறிவுடையோர்க்கு இயல்பாக எழவே செய்யும். அதற்குத் தக்க விடை காணுதல் இன்றியமையாதது.

பொறிகள் இல்லையேல், உயிர் புலன்களை உணர வழி இல்லை. புலன்களுள் ஒன்றையும் உணராவிடின், உயிர் சடமேயாய்விடும். ஆகவே, 'புலன் அடக்கம்' என்றால்; ஐம்பொறிகளை அழித்துவிடுவது என்பது பொருளன்று. மற்றுப் பொறிகளின் வழியாக நுகரப்படும் புலன்களின்மேல் உள்ள அவாவை - ஆசையை அடக்கவேண்டும் என்பதே பொருள். அஃதாவது, பொறிகளால் ஓசை முதலிய புலன்களை அறியக்கூடாது என்பதில்லை. அறியுங்காலத்து அப்புலன்களில் அழுந்தித் தன்னை மறந்து அவற்றின் வசமாகிவிடுதலும், அப்புலன்கள் கிடைக்காத பொழுது அவற்றைப் பெறுதற்கு ஏக்கற்று அல்லற் படுதலும் கூடா என்பதே பொருள். 'புலன்களை அறிதலில் தவறில்லை; அவற்றில் அழுந்துதலும்,

அழுந்த விரும்புதலுமே தவறு' என்பது ஏன் எனின், புலன்களை அறிவதால் உயிரினது அறிவு முதிர்ச்சியுற்று நலந் தீங்குகளை அறிய வல்லதாகின்றது. அவற்றில் அழுந்துதலாலும், அவற்றை அடைய அவாவுதலாலும் உயிரினது அறிவு திரிந்து அறியாமையுட் படுகின்றது. அதனாற்றான் புலன்களை அறிதல் தவறன்று எனவும், அவற்றுள் அழுந்துதலும், அழுந்த அவாவுதலுமே தவறு எனவும் கூறப்படுகின்றன. "பொறிவாயில் ஐந்து அவித்தான்" என்ற குறளில், "ஐந்து" என்றதற்குப் பரிமேலழகர், 'ஐந்து அவா' என்றே பொருளுரைத்தலும் இங்கு அறியத்தக்கது.

இன்னும், புலன்களில் நல்லனவும் உள; தீயனவும் உள; நல்லன, உயிரறிவில் உள்ள மாசினைப் போக்கித் தெளிவைத் தருவன. தீயன, அறிவை மாசுபடுத்தி மயக்குவன. அவற்றுள் தீய புலன்களை அவாவுதலே குற்றம்; நல்ல புலன்களை அவாவுதல் குற்றமன்றாதலோடு, அவற்றை அவாவுதல் இன்றியமையாததுமாகின்றது. பொறிகள், நல்லன தீயன என்னும் இருவகைப் புலன்களையுமே அறிவதற்குக் கருவியாய் அமைந்துள்ளன. அதனால், அவற்றை அடியோடு கெடுத்துவிட்டால், நல்லனவற்றையும் அறிய வழியில்லாமற் போகும். ஆகவே, 'புலனடக்கம்' என்பது, தீய புலன்களின்மேல் எழும் அவாவை அடக்குதல் என்பதேயன்றிப் பொறிகளை அடியோடு அழித்துவிடுவதென்பதன்று என்பது தெளிவாகும். இக்கருத்தைத் திருமூல நாயனார் தமது திருமந்திரத்துள் அழகுபடப் பற்பல வகையாக அருளிச்செய்யும் முறை ஆழ்ந்துணரற்பாலது.

"அஞ்சும் அடக்கடக் கென்பர் அறிவிலார்;
அஞ்சும் அடக்கும் அமரரும் அங்கில்லை;
அஞ்சும் அடக்கில் அசேதனமாம் என்றிட்டு
அஞ்சும் அடக்கா அறிவறிந் தேனே."

இத்திருமந்திரத்துள், 'ஐப்பொறிகளை அடக்குக' என்பாரைத் திருமூலர், 'அறிவிலார்' என்று இகழ்ந்து, 'ஐம்பொறிகளை அடக்குதல் நடவாத ஒன்று என்றும், 'நடவாத அதனை நடத்திக்காட்டும் முறையில் அவற்றை அடக்கிவிட்டால், உயிர் அசேதனம் - அறிவில்லாத சடமாவதைத்தான் பயனாகப் பெறமுடியுமேயன்றிப் பிறிதொரு பயனும் பெறப்படாது' என்றும், 'அதனால், நான் ஐம்பொறிகளை அடக்காமலே மெய்யறிவைப் பெறும்வழியைக் கண்டுள்ளேன்' என்றும் கூறுதலைப் பார்க்கின்றோம். இவற்றுள் அஞ்சும் அடக்கா அறிவு - அஃதாவது ஐம்பொறிகளை அடக்காமலே மெய்யறிவு

பெறுவது எவ்வாறு என்பதைப் பின்வரும் திருமந்திரத்தால் அவர் அறிவிக்கின்றார்.

“ போற்றிசைத் துப்புனி தன்திரு மேனியைப்
போற்றிசெய் மீட்டே புலனைந்தும் புத்தியால்;
நாற்றிசைக் கும்பின்னை யாருக்கும் நாதனை
ஊற்றுகை உள்ளத் தொருங்கலு மாமே.”

இதனுள், ‘இறைவனது திருவுருவை விரும்பி, பிறவிடத்துச் செல்லும் ஐம்பொறிகளை மீட்டு அத் திருமேனியிடத்தே நல்லறிவால் நிறுத்தினால், எல்லா உயிர்க்கும் முதல்வனாகிய அவனோடு ஒன்றுபட்டு, அவனது இன்ப ஊற்றில் திளைத்தல் கூடும்’ என்கின்றார். எனவே, பொறிகளை ஏனைய புலன்களிற் செல்லாது தடுத்து இறைவனது திருமேனியின்பாற் செல்ல விடுதலே புலனடக்கம் அல்லது பொறியடக்கம் என்று அவர் கூறுகின்றார் என்பது தெளிவாகின்றது. நாவுக்கரசரும் இவ்வாறுதான் அருளிச் செய்கின்றார்.

கண்களை, ‘காணவேண்டா’ என்று அவர் சொல்லவில்லை; “காண்மின்கள்; ஆனால், கடல்நஞ்சுண்ட கண்டன்றன்னைக் காண்மின்கள்; பிறிதொன்றைக் காணவேண்டா” என்கின்றார். இக்காட்சியையே, கண்ணினால் அவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்” என்று சேக்கிழாரும், இத்தகைய பொலிவினைக் காணாதே போதியோ பூம்பாவாய்” என்று ஞானசம்பந்தரும் அருளிச்செய்கின்றார்கள். இவ்வாறே செவிகளையும், ‘கேட்க வேண்டா” என்னாது, “கேண்மின்கள்; எரிபோல் மேனிப் பிரான்திறம் கேண்மின்கள்” என்கின்றார் நாவரசர். எனவே, “ஏனைய பொருள்களைக் கண்டு அவற்றின் அழகில் ஈடுபடு கின்ற கண்களை அவ்வாறு செய்யாதபடி மீட்டு, இறைவரது திருமேனியில், பாற்கடலில் தோன்றிய நஞ்சினை உண்டு தேவர்களை அமரராய் வாழச் செய்த அளவற்ற கருணையைப் புலப்படுத்தும் நீலமணிபோலும் கண்டத்தின் அழகு முதலிய வற்றைக் கண்டு களிக்கச்செய்தலும், வெறுங் குழலிசை, யாழிசை, மிடற்றுப்பாடல் முதலியவைகளைக்கேட்டு அவ்விசை இன்பத்தில் ஈடுபடும் செவிகளை அவ்வாறு செய்யாதபடி மீட்டு இறைவனது பொருள்சேர் புகழொடு கூடிய உரையும் பாட்டும் ஆகியவற்றைக் கேட்டு இன்புறச் செய்தலும் போல்வனவே பொறிகளை அடக்கும் முறை என்பது நன்கு பெறப்படுகின்றது.

“ ஆமாத்தூரரனே என்றழைத்தலும் – தேமாத் தீங்கனி போலத்தித் திக்குமே” எனவும் “விலையிலி சாந்தம் என்று

வெளிநீறு பூசி விளையாடும் வேட விகிர்தர் " எனவும் அருளிய வாற்ருல், இறைவனை வாழ்த்தலும், அவனது திருநீற்றைப் பூசுதலும் உள்ளத்திற்கு மட்டுமன்றி நாவிற்கும், உடற்கும் இன்பம் பயப்பனவாதல் அறியப்படும். இறைவனது திருமேனியில் இயற்கையாகவும், அமரரும் அடியவரும் சூட்டும் மலர் முதலியவற்ருல் செயற்கையாகவும் எழும் மணங்கள் மூக்கிற்கு இன்பந் தருவனவாக உள்ளனவாம். இவ்வைம்புல இன்பங்கள் ஆன்ம அறிவின் மலத்தை அகற்றி அருள்தெளிவை உண்டாக்குவன ஆதல் அறிந்துகொள்க.

உலகப்பொருள்களில் செல்லும் ஐம்பொறிகளை அவ்வாறு செல்ல ஒட்டாது தடுத்து இவ்வாறு இறைவழிபாட்டிற் செலுத்துதல் எளிதான செயலன்று. மதங்கொண்ட யானையை - ஓர் யானையையல்ல; ஐந்து யானைகளை ஒருபாகன் அடக்கிச் செம்மையான வழியில் செலுத்துதல் போலும் மிக அரிய செயல் என்பதையும் திருமூலர்,

" ஆக மதத்தன ஐந்து களிறுள;
ஆக மதத்தறி யோடணை கின்றில;
பாகனும் எய்த்தவை தாமும் இளைத்தபின்
யோகு திருந்துதல் ஒன்றறி யோமே. "

எனக் குறிக்கின்ருர். ஐம்பொறிகளும் ஆக மதத்தன - மிக மதம்கொண்ட ஆண்யானைகள். அவை அம்மிக்க மதத்தால் தறியருகில் - இறைவன்பால் செல்ல மறுக்கின்றன. அவைகளை அடக்கி அத்தறியில் கட்டமாட்டாமல் பாகன் - உயிர்க் கிழவன் இளைத்து விடுவானுனல், பின்பு அவைகளும் இளைத்து - இறப்பு வந்து இணங்கித் தொழில் புரியும் பயன் - சிவபோகம் இல்லாமலேயே போய்விடும் என்பதாம். ஞானசம்பந்தரும் திருக்கேதாரத் தலத்தை, " தொண்டர் அஞ்சு களிறும் அடக்கிச் சுரும்பார் மலர் - இண்டைகட்டி வழிபாடு செய்யும் இடம் " என்று வியந்தருளிச் செய்கின்ருர்.

ஐம்பொறிகளையும் அடக்கும் முறை அருள்நெறியில் இவ்வாறு விளக்கமாகச் சொல்லப்படுவதுதான் அறநெறியில்,

" உரன் என்னும் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரன் என்னும் வைப்பிற்கோர் வித்து "

எனவும்,

" ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்க லாற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து "

எனவும் குறிப்பாகச் சொல்லப்படுகின்றது. இக் குறட்பாக்களில் " உரன் " என்றது அருளாசிரியர் அருள்மொழிவழி நிற்கும் அறிவையும், " ஆமைபோல் " என்ற உவமையால் பெறுவிக்கப் பட்ட அதன் ஓடு, மேல் திருமூலர், " தறி " எனக் குறித்த இறைவன் திருவருளையும் குறிப்பனவாம்.

ஐம்பொறிகளைத் திருமூலர் மற்றொரு திருமந்திரத்தில் " சிங்கம் " எனக் கூறி, அவைகளைக் கொன்றுவிடுதல் கூடாது; அவற்றின் நகங்களை அறுத்துப் பற்களைப் பிடுங்கிவிட வேண்டும்; அவ்வாறு செய்தால், அவற்றையே ஊர்திகளாகக் கொண்டு இறைவனிடம் சொல்லலாம் என்றார்.

" அஞ்சுள சிங்கம் அடவியில் வாழ்வன ;
அஞ்சும்போய் மேய்ந்துதம் அஞ்சக மேபுகும் ;
அஞ்சின் உகிரும் எயிறும் அறுத்திட்டால்,
எஞ்சா திறைவனை எய்தலு மாமே "

மற்றோரிடத்தில் ஐம்பொறிகளைப் பாற்பசுக்களாகக் கூறும் முறையும் கண்டு மகிழத் தக்கது.

" பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு;
மேய்ப்பாரு மின்றி வெறித்துத் திரிவன;
மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினால்
பார்ப்பான் பசுஐந்தும் பாலாச் சொரியுமே. "

இங்ஙனம் பாலாச் சொரிவதைத்தான் திருவள்ளுவர் எழுமைக்கும் உள்ள ஏமாப்பாகக் கூறினார். எனவே, இத் துணைப் பயனுடைய ஐம்பொறிகளை மிகவும் கொடியன என்று அழிக்கக் கருதுபவர்களைத்தான் திருமூலர், மேல் " அறிவிலார் " என்று குறித்தார். எனவே, ஐம்பொறிகளை அழிக்கக் கருதாது அவற்றின்வழி எழும் ஆசையை அடக்கி இறைவனிடத்தில் அன்பு செலுத்துதலே தக்கதாம். எங்கள் ஆதிபரமாசாரியர் ஸ்ரீ குருஞானசம்பந்தரும் இந்த ஐம்புல ஆசையை அறுக்க வேண்டும் என்றே அருளிச் செய்கின்றார். ஐம்புல ஆசை அற்றால்தான் உலகப்பற்று விடும். இவ்விரண்டிற்கும் வழி, ஆன சிவபூசை செய்தல். அஃதாவது கண், காது, அனைத்துக் கருவிகளையும் இறைவன் பணியிற் செலுத்துதல். அஞ்செழுத்தை அன்புடன் நெஞ்சில் நினைத்தலும், நாவால் சொல்லுதலும்

இறைவன்பால் அன்பைப் பெருக்குவனவாம். ஐம்புல ஆசை இருப்பின் அவை கிடைக்காதபொழுது சினம் மிகும். ஆகவே, ஆசையையறுத்துப் பாசத்தையும் விட்டால் சினம் என்பதே இல்லாது சாந்தமே வடிவாகலாம். இவ்வனைத்துப் பயன்களை யும் எளிதில் தருவது திருமுறைப் பாராயணம். இவைகளைச் செய்யாமலே சிலர் பெரியகாரியம் செய்து விட்டவர்கள் போலப் பெருமை பேசிக்கொள்வார்களானல், அவருக்கு நாம் என்ன சொல்ல முடியும்? மக்களை நோக்கி இவ்வாறு தாம் கூற நினைத்ததைத் தம்மனத்தை நோக்கிக் கூறுகின்ருர் எங்கள் குரு முதல்வர்.

ஆசையருய்; பாசம்விடாய்; ஆனசிவ பூசைபண்ணுய்;
நேசமுடன் ஐந்தெழுத்தை நீநினையாய்—சீசீ
சினமே தவிராய் திருமுறைகள் ஓதாய்
மனமே உனக்கென்ன வாய்.

இத்தகைய அருள்நெறி முறையே அறநெறியிலே அமைந் திருத்தலை அறிந்து, ஐம்புல ஆசையை அடக்கி அனைத்துக் கரணங்களாலும் ஆண்டவனை வழிபட்டு, அவன்பால் அன்பைப் பெருக்கி, அனைத்து நலனையும் மக்கள் அடைவார்களாக.



---

## சப்தஸ்தான க்ஷேத்திரங்கள்

1. திருவையாறு
2. திருப்பழனம்
3. திருச்சோற்றுத்துறை
4. திருவேதிகுடி
5. திருக்கண்டியூர்
6. திருப்பூந்துருத்தி
7. திருநெய்த்தானம்

“ நெய்த்தானம் பூந்துருத்தி நேர்கண்டி வேதிகுடி
துய்த்தார்சேர் சோற்றுத் துறைபழனம்—மெய்த்தான
மானதிரு வையா றததனேடேழுதலங்கள்
மானதிரு மத்தன் மனை.”

# அருள்நெறியும் அறநெறியும்

## 8. மெய்யறிவு *

உலகில் வாழும் உயிர்கள் எண்ணற்றவை. ஆயினும் அவை ஒரு நிகரனவாயில்லாது பல்வேறு வகையாய் ஏற்றத் தாழ்வுடன் இருத்தலைக் காண்கின்றோம். இவ் ஏற்றத்தாழ்வு எதனால் ஆயது என்று உற்றுநோக்கின், அறிவு வேறுபாட்டால் ஆயதே என்பது தெளிவு. ஓரறிவுயிர், ஈரறிவுயிர் முதலாக ஆறறிவுயிர் ஈறாக அறிவுபற்றியே உயிர்கள் வகுத்துக் கூறப்படுதலை நாம் நன்கறிவோம். ஐந்தறிவோடு மற்றைய உயிர்கட்கில்லாத ஆறாவது அறிவைப் பெற்றிருத்தல் பற்றியே மக்களுயிர் ஏனை எல்லா உயிர்களினும் சிறப்புடையதாய் விளங்குகின்றது. மக்களாய்ப் பிறந்தும் அறிவு குறைந்தவராயின், அவர்களை உலகம் மக்கள் என்னாது மாக்கள் என்றே கருதுகின்றது. ஆகவே, 'உலகனைத்தும் விரும்புவது அறிவையே' என்பது விளங்கும்.

அறிவுக்கு எதிராய் உள்ளது அறியாமை. அறிவையே விரும்புகின்ற உலகம், அதற்கு எதிரான அறியாமையை வெறுத்தல் சொல்லவேண்டுவது இல்லை. உலகம் அறியாமையை வெறுத்து, அறிவை விரும்புதற்குக் காரணம், அறியாமையால் துன்பமும், அறிவால் இன்பமும் விளைதலேயாகும். அறியாமையாவது யாது என்று வினவுவோர்க்கு, நல்லதைத் தீயது என்று விரும்பிக் கைக் கொள்ளுவதுதான் அறியாமை என்று விடை கூறுகின்றார் திருவள்ளுவர்.

"பேதைமை என்பதொன் றியாதெனின், ஏதங்கொண்டு
ஊதியம் போகவிடல்".

இன்னும் அவர்,

"பொய்படும் ஒன்றோ புனைபூணும் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்."

என்கிறார். அறியாமையின் விளைவு இவ்வாறாக இருக்குமாயின், அதனை உடையவர்களுக்குத் துன்பம் உண்டாகாமல் வேறென்ன உண்டாகும்? அதனால், உலகம் அறியாமையை வெறுத்து அறிவைப்பெற விரும்புகின்றது.

---

* 10—2—70 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

அறிவைப்பெறவே அனைவரும் விரும்பினாலும், எது அறிவு, எது அறியாமை என்பதைத் தெரிந்துகொள்வதற்கே அறிவு தேவைப்படுகிறது. இதனைத் திருமூலர்,

"அறிவறி வென்றங் கரற்றும் உலகம்;
அறிவறி யாமை யாரும் அறியார்;
அறிவறி யாமை கடந்தறி வானால்,
அறிவறி யாமை அழகிய வாறே."

என்று நயம்பட விளக்குகின்றார்.

எல்லாரும் அறியாமையை நீக்கி அறிவைப் பெற வேண்டும்; பெறவேண்டும் என்றுதான் ஓயாமற் சொல்லி வருகிறார்கள். ஆனாலும், 'எது அறிவு. எது அறியாமை' என்பதை உண்மையாக அறிந்தவர் உலகில் எத்துணைப்பேர்? ஒருவரும் இல்லையென்றே சொல்லிவிடலாம் என்று முதலில் குறிப்பிடுகிறார் திருமூலதேவர்.

இப்படிக் குறிப்பிட்ட அவர் பின்பு, 'அறியாமையை நீக்க வேண்டும், என்று யாவரும் விரும்புவதனால், எல்லாருடைய அறிவும் அறியாமையோடு கூடியனவாக உள்ளனவே என்பது புலனாகின்றது. 'அறிவு' என்று சொல்லப்படுவது மெய்யான அறிவாய் இருக்குமானால் அஃது அறியாமையோடு கூடவேண்டுவதில்லையன்றோ? எல்லாருடைய அறிவும் அறியாமையோடு கூடியனவேயாகலின் 'அவையனைத்தும் மெய்ம்மையான அறிவல்ல' என்பதும் முடிவாகின்றதன்றோ? எல்லாருடைய அறிவும் மெய்யறிவாக இல்லையென்றால், நம் எல்லாரினும் வேறாக மெய்யறிவுடைய ஒருவன் இருத்தல் வேண்டும் என்பதும் தானாகவே அமைவதாகின்றது. ஏனெனில், மெய்யறிவுடையவனாக ஒருவனும் இல்லை என்றால் 'அறிவு அறிவு' என்று அறிவைச் சிறப்பித்துப் பேசுவதால் என்ன பயன் உண்டாகும்? ஆதலால், ஒருவன் மெய்யறிவுடையவனேயாய் இருத்தல் வேண்டும். அவ்வொருவன் தான் இறைவன் - கடவுள். தன்னைப்போல வேறு ஒருவரேனும் இல்லாத காரணத்தால் அவன், 'ஒருவன்' என்றே சொல்லப் படுகிறான். இதனையே திருவள்ளுவர், "தனக்குவமை இல்லாதான்" என்று சொல்லி, அவன் ஒருவனே மெய்யறிவுடையவன், என்பதை, "வாலறிவன்" என்பதனாற் குறிப்பிட்டார். இந்த ஒன்றை - அதாவது, 'ஆன்மாக்களாகிய நம் அறிவெல்லாம் அத்தகையன அல்ல' என்பதை அறிந்து விட்டால், அறிவு அறியாமைகளைப் பற்றி நாம் முதலில் நன்கு அறிந்தவர்களாவோம்.

இவ்வாறு அறிந்தால் அதன்பின்பு அவ்வறிவினுல் நல்லதொரு பயன் விளையும். அஃதாவது, மெய்யறிவாகிய இறைவனது அறிவுதான் எல்லாவற்றையும் அறிதலேயன்றிப் பிற எல்லா அறிவுகளிலும் கலந்துநின்று அவற்றை அறிவித்தும் நிற்கின்றது. ஆகலின், அதனைக் கேள்வி வாயிலாக நாம் அறிந்தபின்னர்ப் பிற பொருளை அறிதலை விடுத்து நம் அறிவுக்கறிவாய் நின்று அறிவித்து வருகின்ற அவ்வறிவையே நோக்கிநிற்கும் நிலை உண்டாகும். அங்ஙனம் உண்டாகுமானுல், எந்தப்பொருளை அறிகின்ருேமோ அந்தப்பொருளின் தன்மையாகிவிடுவதே நம் அறிவின் தன்மையாதலால், பிற பொருள்களை விடுத்து மெய்யறிவாகிய இறைவனது அறிவை அறிகின்ற பொழுது நம் அறிவும் அறியாமை என்பதின்றி அந்த மெய்யறிவேயாகிவிடும். அவ்வாறு ஆவதுதான் அறிவு அறியாமைகளைப் பற்றி நாம் நன்குணர்ந்ததன் பயனுகும். இதனைத்தான் திருமூலர் மேற்காட்டிய திருமந்திரத்துள்,

"அறிவு, அறியாமை கடந்து, அறிவானுல்,
அறிவு, அறியாமை அழகிய வாறே"

என்று விளக்கினுர். எனவே, ஒருவர் உண்மையாக அறியாமையின் நீங்கி மெய்யறிவைப் பெறுதல் என்பது இதுவேயாதல் வெளிப்படை. இம் மெய்யறிவைப் பெற்றவரது உள்ளத்தைத்தான் இறைவன் தனக்குரிய இடமாகக்கொண்டு அங்கே நீங்காது நிலைபெற்று விளங்குகின்ருன்.

"அறிவுடை யார்நெஞ் சகலிட மாவது;
அறிவுடை யார்நெஞ் சருந்தவ மாவது;
அறிவுடை யார்நெஞ்சொ டாதிப் பிரானும்
அறிவுடை யார்நெஞ்சத் தங்குநின் ருனே"

என்பது திருமந்திரம். எனவே, 'அறிவு, அறிவு' என்று அனைவராலும் சிறப்பித்துப் பேசப்படும் அறிவு மெய்யறிவேயன்றிப் பிற அறிவுகளல்ல என்பது தேற்றம். திருவள்ளுவரும்,

"அறிவுடையார் எல்லாம் உடையார்; அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்"

என்று அறிவு ஒன்றையே சிறந்த பொருளாகக் கூறினுர். அதன் பின்பு 'அறிவாவது யாது' என்று வினவுவார்க்கு,

"சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்ப தறிவு"

என்று, 'மனத்தை அது சென்றபடியே செல்ல விடாமல், தீய தினின்றும் நீக்கி, நல்லதிற் செலுத்துவதே அறிவு' என்று கூறினார். அதன்பின்பு நல்லதாவது 'பிறிதோர் உயிர்க்கு வரும் துன்பத்தைத் தனக்கு வந்ததுபோல நினைத்து, அத் துன்பத்தை நீக்கி அதற்கு நலம் செய்வதே' என்பதை,

" அறிவினான் ஆகுவ துண்டோ, பிறிதின்நோய்
தன்நோய்போல் போற்றாக் கடை "

என்று விளக்கினார். அதன்பின்பு,

" நில்லா தவற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை "

என்றார். அஃதாவது, 'தனக்காயினும், பிறர்க்காயினும் நிலைத்த பொருளைத் தேட நினையாமல், நிலையாத பொருளைத் தேட நினைப்பது அறிவிற்கு இழுக்காகும்' என்றார். 'இந்த இழுக் கினாற்றான் நீங்காப் பெருந்துன்பமாய் உள்ள பிறவிப் பெருந் துன்பம் விளைகின்றது' என்பதை,

" பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும்
மருளானாம் மாணாப் பிறப்பு "

என்று விளக்கினார். பொருளல்லன - நிலையாதன; பொய்ப் பொருள். பொருள் - நிலைத்தது; மெய்ப்பொருள். இம்மெய்ப் பொருளை உணரும் உணர்வையே திருவள்ளுவர் 'மெய்யுணர்வு' என்கிறார்.

சிலர், 'ஐம்புலன்வழிச் செல்லாது மனத்தை ஏதேனும் ஒன்றில் நிறுத்தினால் போதும்; அதுவே, தாரணை, தியானம், சமாதி என்பனவாய் வீடுபேற்றைத் தந்துவிடும் என்று நினைக்கின்றார்கள். 'அந்த அளவில் நிற்பதால் பயனில்லை என்பதைத் திருவள்ளுவர்,

" ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயம்இன்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு "

என்று கூறி,

" பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு "

என்று, 'செம்பொருளாகிய இறைவனை அறிவுக்கறிவாக அறிவினுள்ளே அறிந்து நிற்பதுதான் உண்மையான அறிவு' என்று முடிவு கூறினர்.

" அறியாமை அறிவகற்றி அறிவி னுள்ளே
அறிவுதனை அருளினால் அறியாதே அறிந்து
குறியாதே குறித்து அந்தக் கரணத்தி னோடே
கூடாதே வாடாதே குழைந்திருக்க "

வேண்டும் என்கின்றது சிவஞானசித்தி. இந்த அருள் நெறியையே குறிக்கோளாகக் கொண்டது அறநெறி என்பதை மேற்கூறியவற்றால் உணர்ந்து உலகம் பயனடைவதாக.



## பாடல்பெற்ற
## சிவதலங்களின் நாடு முதலிய விவரம்

| | நாடு | | | தலங்கள் | | பதிகங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1. | சோழநாடு காவிரிக்கு வடகரை | | | 63 | ... | 238 |
| | சோழநாடு காவிரிக்குத் தென்கரை | | | 127 | ... | 318 |
| 2. | ஈழநாடு | ... | ... | 2 | ... | 3 |
| 3. | பாண்டிநாடு | ... | ... | 14 | ... | 34 |
| 4. | மலைநாடு | ... | ... | 1 | ... | 1 |
| 5. | கொங்குநாடு | ... | ... | 7 | ... | 9 |
| 6. | நடுநாடு | ... | ... | 22 | ... | 62 |
| 7. | தொண்டைநாடு | ... | ... | 32 | ... | 68 |
| 8. | துளுவநாடு | ... | ... | 1 | ... | 2 |
| 9. | வடநாடு | ... | ... | 5 | ... | 14 |
| | | | | 274 | | 749 |
| | பொதுப் பதிகங்கள் | ... | | | ... | 48 |
| | ஆகப் பதிகங்கள் | ... | | | ... | 797 |

# அருள்நெறியும் அறநெறியும்

## 9. செம்பொருட் காட்சி *

நாம் புறப்பொருள்களை அறியுமிடத்து மெய், வாய், கண் மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகள் வழியாக ஊறு, சுவை உருவம், மணம், ஓசை என்னும் ஐம்புலன்களாக அறிகின்றோம். என்றாலும், கண் என்னும் பொறி வழியாக அதன் உருவத்தை அறியாமல், பிற பொறிகள் வழியாகப் பிற புலன்களை மட்டும் அறிந்தால், பொருளை அறிந்ததாக நமக்குத் தோன்றுவதில்லை. உதாரணமாக ஒரு மாம்பழத்தின் உருவத்தைக் கண்ணால் காணாமல், அதன் ஊறு, மணம், சுவை என்பவற்றை அவற்றிற்குரிய பொறிகளால் அறியினும், மாம்பழத்தை அறிந்ததாக நமக்கு மனநிறைவு உண்டாவதில்லை. அதனால், அவ்வாறு அறிந்த மாம்பழத்தைக் கண்ணால் காணுதல் வேண்டும் என்னும் ஒரு பேரவா நம் உள்ளத்தில் எழுகின்றது. இனி, ஒரு மாம்பழத்தைக் கண்ணால் மட்டும் கண்டு, பிற பொறிகளால் அறியாவிடினும், அப்பொருளை அறிந்துவிட்டதாக நாம் மனநிறைவு பெறுகின்றோம். ஆகவே, புறப்பொருளை அறியும் அறிவுகளில் கண்ணால் அறியும் அறிவே சிறந்தது என்பது தெளிவு. இதனால்தான் "காட்சி" என்பது கண்ணால் காண்பதற்கு மட்டுமே உரிய பெயராய் இருப்பினும், அதனை ஏனைய பொறிகளால் உறுதல், சுவைத்தல் முதலியவற்றிற்கும் உரிய பெயராகச் சில வேளைகளில் சொல்லப்படுகின்றது. பொறிகளுக்கு அகப்படக் கூடிய பொருளை, "காட்சிப் பொருள்" என்று கூறும் வழக்கமே இதற்குப் போதிய சான்றாகும்.

இனி, "காட்சி" என்பது இவ்வாறு பருப்பொருள்களை ஐம்பொறிகளால் அறிதற்குப் பெயராய் வழங்குதலேயன்றி, நுண்பொருள்களை அறிவால் அறிதற்கும் உரிய பெயராய் வழங்குதல் அறியத்தக்கது. "புன்மையில் காட்சி, நடுக்கற்ற காட்சி, மாசறு காட்சி," என்றெல்லாம், அறிதலை, "காட்சி" என்று திருவள்ளுவர் பல இடங்களில் கூறுதல் காணலாம். அறிதல், "காட்சி" எனவே, அறிவு, "கண்" ஆதல் தானே பெறப்படுகின்றது.

"முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள் !
அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்"

---

*10—3—70 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

என்று திருமூலர் கூறுவதைப் பார்க்கின்றோம். உடம்பிற் பொருந்தியுள்ள கண்ணை, "ஊனக்கண்" என்றும், உயிரில் பொருந்தியுள்ள அறிவை, "ஞானக்கண்" என்றும் கூறும் வழக்கத்தை யாவரும் அறிவர்.

"ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினில் சிந்தை நாடி"

என்று மெய்கண்டாரும் வேறொரு வகையின் கூறினர். ஆகவே, பருப் பொருள்களைக் காணும் பொறிக்காட்சியிலும், நுண் பொருளைக் காணும் அறிவுக் காட்சியே சிறந்தது என்பதும், அவ்வறிவுக் காட்சி இல்லாதோர், புறக் கண் இருப்பினும் கண்ணில்லாதவராகவே கருதப்படுவர் என்பதும் விளங்கும். இதனைத் திருவள்ளுவர்,

"கண்ணுடையர் என்பவர் கற்றோர்; முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்"

என்று குறிப்பாற் கூறுகின்றார்.

"கண்ணுடையர் என்பவர் கற்றோர்" என்று கூறும் முகத்தால் கல்வியை, "கண்" என்று கூறிய திருவள்ளுவர், அக்கல்வியை நல்லாசிரியரை அடுத்து, "உடையார் முன் இல்லார்போல் ஏக்கற்று" நின்று கற்கவேண்டும் எனக் கூறினர். ஆகவே, ஞானக் கண் அல்லது அறிவுக் கண்ணைத் தருபவர், கல்வி கற்பிக்கும் ஆசிரியர் என்பது தெளிவாகும்.

கல்வியால் பெற்ற அறிவுக்கண்ணைக் கொண்டு காணும் அறிவுக் காட்சிகள் எண்ணிறந்தன. அவை யாவும், "இன்பம் பொருள், அறம்" என்னும் முத்திறத்துள் அடங்குவனவாம். அவற்றுள் இன்பக் காட்சியாவது, கண்முதலிய பொறிகளின் வழிப் பொருள்களைக் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறிந்து பெறும் உலக இன்பங்களை அறிதல். பொருட் காட்சியாவது, இன்பத்தைத் தரும் பொருள்கள் இவை எனவும், அவற்றைப் பாதுகாக்கும் முறைகள் இவை எனவும் அறிதலாம். அறக் காட்சியாவது, 'இன்பமும், அதற்குக் காரணமான பொருளும் அறத்தின்வழி அமைவனவேயன்றி, அறமின்றி அமையா' என அறிந்து, 'அவற்றைத் தரும் அறங்கள் இவை' எனவும், 'அவற்றைச் செய்யும் முறைகள் இவை' எனவும் அறிதலாம்.

இம்மை, மறுமை உலகங்களில் உள்ள பொருள் இன்பங்களைத் தரும் அறக்காட்சியின் முதிர்ச்சியில், அவ்வறத்தின் பயனாகக் கிடைக்கும் பொருள் இன்பங்கள் நிலைபேறுடையன வாய் இல்லாமல், சகடக் கால்போலச் சுழன்றோட, வறுமை,

துன்பம் என்பனவும் ஒருதலையாக உடன் நிகழ்தல் விளங்கும். அது விளங்கவே, நிலைபேறுடைய பொருளைப் பெற்று, அதனால் விளையும் நிலைத்த இன்பத்தைப் பெற அவா உண்டாகும். மாற்றம் இன்றி என்றும் ஒருபெற்றியாய் நிற்கும் பொருளே மெய்ப்பொருள் எனப்படும். மெய்ப்பொருளையும், அதன் இன் பத்தையும் பெற அவா உண்டாயபொழுது, அவ் இன்பத்தைப் பெறும் வழியை அறிவிக்கும் ஆசிரியரை அடையும் வேட்கை மிகும். அது மிக, அவரை அடைந்து பெறும் அறிவுக்காட்சியே மெய்ப்பொருளையும், அதன் இன்பத்தையும் தருவதாகும். இதனையும், 'துறவறம்' என அறத்தின் ஒரு பகுதியாக உல கியல் நூல்கள் கூறினும், விட்டு நூல்கள் இதனை 'ஞானம்' என வேறுவைத்துக் கூறும். எனவே, இம் மெய்ப்பொருளைக் காணும் அறிவுக்கண்ணே உண்மையான அறிவுக்கண் என் பதும், இந்த அறிவுக்கண்ணால் காணும் மெய்ப்பொருட் காட்சியே உண்மையான அறிவுக் காட்சி என்பதும், இவ் அறிவுக் காட்சியைப் பெறுதலே மக்கட் பிறவியின் மாண்புறு பயன் என்பதும் புலனாகும். மெய்ப்பொருளே 'செம்பொருள்' என்றும் சொல்லப்படும்.

கல்வியாகிய கண் அதனைக் கற்பிக்கும் ஆசிரியர் இன்றி அமையாதது போல, ஞானமும் அதனை உள்ளவாறு உணர்த் தும் ஆசிரியர் இன்றி அமையாது. அதனால் ஆசிரியர் அரு ளுரையின்வழி அறிவுக்கண் பெற்றுச் செம்பொருளைக்காணும் காட்சியைப் படிப்படியாகப் பெறுதல் வேண்டும். அப் படிகள், 'கேட்டல், சிந்தித்தல், தெளிதல், அழுந்தல்' என நான்கு வகையாக அமையும். அழுந்துதலே, 'நிட்டை' எனப்படுகின்றது.

"கேட்டலுடன் சிந்தித்தல் தெளிதல் நிட்டை
கிளத்தல்என ஈரிரண்டாம் கிளக்கில் ஞானம்
விட்டை அடைந்திடுவர் நிட்டை மேவினோர்கள்
மேவாது தப்பினவர் மேலாய் பதங்கட்கு
ஈட்டியபுண் ணியநாத ராகி இன்பம்
இனிதுநுகர்ந் தரனருளால் இந்தப் பார்மேல்
நாட்டியநற் குலத்தினில்வந் தவதரித்துக் குருவால்
ஞானநிட்டை அடைந்தடைவர் நாதன் தாளே."

என்பது சிவஞான சித்தி. இதில் 'நிட்டை' என்னும் அழுந்து தற் காட்சி ஒன்றே பிறவாமையைத் தரும் என அறுதியிட்டுக் கூறியிருத்தல் காணலாம்.

"விழுப்பமும் கேள்வியும் மெய்ந்நின்று ஞானத்
தொழுக்கமும் சிந்தை உணர்கின்ற போது

வழுக்கி விடாவிடில் வானவர் கோனும்
இழுக்கின்றி எண்ணிலி காலம தாமே."

எனத் திருமூலரும் அருளினர்.

திருவள்ளுவரும் செம்பொருட் காட்சி நான்கு படிநிலைகளாக நிகழும் எனக் கூறியிருத்தல் அறியத்தக்கது.

" கற்று ஈண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்று ஈண்டு வாரா நெறி "

" ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு "

" பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு "

" சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய் "

என்னும் நான்கு குறள்களும் கேட்டல் முதலிய நான்கையும் முறையே குறிப்பன. பரிமேலழகர் வைதிக முறையையே பின்பற்றி மேற்காட்டியவற்றுள் முதல் மூன்று குறள்களையே கேள்வி, விமரிசம், பாவனை என்பவற்றைக் கூறுவனவாகக் குறித்தாராயினும், திருவள்ளுவர் கருத்து மேற் கூறியவாறு அமைந்ததே என்பதைப் பின்வரும் திருக்களிற்றுப்படி வெண்பா நன்கு விளக்கும்.

சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் என்றமையால்
சார்புணர்தல் தானே தியானமுமாம் ; — சார்பு
கெடஒழுகின் நல்ல சமாதியுமாம் ; கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று.

மேற்குறித்த குறள்களில் " கற்று " என்றது, 'கேட்டு' என்னும் பொருளதே. ஓர்த்தல் - ஆராய்தல். இது சிந்தித்தலே என்பது வெளிப்படை. காண்டல் - பெறுதல். இது தெளிதலேயன்றிப் புதிதாகப் பெறுதலன்று. பிற சார்புகள் கெடத் தனக்கு என்றும் சார்பாயுள்ள பொருள் ஒன்றையே உணர்ந்து ஒழுகுதல், அழுந்துதல் என்னும் நிட்டையே. ஆகவே, சிவதரிசனத்தின்பின் சிவயோகம் பெற்றுச் சிவபோகத்தை அடைதலே மானுடப் பிறவியின் பயன் எனக் கூறும் அருள்நெறியே, அறநெறியிலும் மெய்ப்பொருள் காண்டல், உள்ளது உணர்தல், செம்பொருள் காண்டல், சார்புணர்ந்து சார்பு கெட ஒழுகல் எனக் கூறப்படுகின்றது என்பதை மக்கள் அனைவரும் உணர்ந்து நற்பயன் பெறுவார்களாக.

# அருள்நெறியும் அறநெறியும்

## 10. நீத்தார் பெருமை *

மக்கட்குப் பெருமை தருவன கல்வி, செல்வம், தலைமை, ஒழுக்கம் முதலாகப் பல. ஆகவே, அவற்றுள் ஒன்றையோ பலவற்றையோ அடைந்தவர் பெருமையுடையவர் ஆகின்றனர். ஆயினும், எல்லாரது பெருமையையும்விட, நீத்தாரது பெருமையே உயர்ந்தபெருமையாம். நீத்தார் உலகியலைத் துறந்தவர் ‡ 'துறவிக்கு வேந்தன் துரும்பு' என்பது பழமொழி.

உலகில் பெறத்தக்க பயன்களை முற்றிலும் பெற்றுவாழ்பவன் வேந்தன். ஒருவேளை உணவுக்குக்கூட கையில் ஒன்றும் இல்லாது இருப்பவர்களே துறவிகள்.

> "இயல்பாகும் நோன்பிற்கொன் றின்மை; உடைமை
> மயலாகும் மற்றும் பெயர்த்து"

என்று திருவள்ளுவர் துறவின் நிலைமையை இனிது விளக்கினர். இப்படி எல்லாப்பொருளும் உடைய அரசனைவிட, ஒருபொருளும் இல்லாத துறவிகள் மிக்க பெருமை உடையவராதல் எப்படி என்பதை விளக்க, பட்டினத்து அடிகளைப்பற்றிய வரலாறு ஒன்று உண்டு.

> "பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்போல்
> ஆரும் துறக்கை அரிதரிது"

என்று தாயுமானவர் கூறுகின்றபடி, பட்டினத்தடிகளைப்போலத் துறவுபூண்டவர் உலகத்து மிகச்சிலரே. பெரும்பான்மையான துறவிகள் தங்கள் இல்லற வாழ்க்கையில் அடைந்த துன்பம் காரணமாகவே துறவுநிலையை எய்தினவராய் இருப்பர். அத்துன்பம், வறுமை, குடும்பத்தில் ஒற்றுமை இன்மை அல்லது தங்கட்குக் குடும்பத்தில் அதிகாரம் இன்மை முதலிய காரணங்களுள் ஏதாவது ஒன்றால் விளைந்ததாக இருத்தல்கூடும். ஆனல், பட்டினத்தடிகளுக்கு அவரது இல்லற வாழ்வில் யாதொரு

---

* 10–4–70 ஞானசம்பந்தம் இதழுக்கு வழங்கியருளியது.

‡ உயிர் நீத்தவரை 'நீத்தார்' என்று இப்பொழுது சிலர் சொல்லுதல் மரபுக்கு மாறானதாகும்.

குறையும் இல்லை. நிறைந்த செல்வம் உடையவர், கடல் வாணிகத்தில் சிறந்து விளங்கினர். அவை அனைத்திற்கும் தாமே தலைவர். மனைவியார் அருந்ததியே எனத் தக்க கற்பிற் சிறந்தவர். அவ்வாறிருந்தும் 'இல்வாழ்க்கை வேண்டா' என்று சொல்லித் தம்மிடம் இருந்த செல்வத்தை எல்லாம் அனைவரும் கொள்ளையாகக் கொண்டு போகும்படி தெருவில் அள்ளி அள்ளி எறிந்துவிட்டுக் கையில் ஒன்றும் இல்லாத ஆண்டியானர். காரணம் வேறென்றில்லை. இவருக்குச் சில்லாண்டுகள் திருமகனராக வந்திருந்த மருதவாணர், "காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே" என்ற ஓர் உபதேச மொழியை எழுதி இவரிடம் சேர்ப்பித்து மறைந்ததே இவர் துறவுபெறக் காரணமாயிற்று.

இவரது மாளிகையின் நுழைவாயிலில் வெள்ளித்தூண்களும், வெள்ளிக்கதவும் வைக்கப்பட்டிருந்தனவாம். அவ்வழியாக உலாச்சென்ற அரசன் அதைக்கண்டு, 'குடிமக்களுள் ஒருவர் இல்லத்தில் இவ்வாறிருப்பதுகுற்றம்' என்று, அவைகளை உடனே எடுத்துவிடுமாறு உத்தரவிட்டானும். அதை யறிந்த வெண்காடர் (பட்டினத்து அடிகள்) வெள்ளித் தூண்களையும், கதவையும் எடுத்துத் தெருவில் எறிந்துவிட்டுப் பொன் தூண்களையும், கதவையும் பொருத்தியிருக்க, மறுநாள் அவ்வழியாக வந்த அரசன் இச்செயலைக்கண்டு வெட்கம் உற்றானும்.

இத்தகைய பெருஞ் செல்வத்தில் இருந்த இவர், சில்லாண்டுகளுக்குப் பிறகு ஒன்றும் இல்லாத ஆண்டியாய் ஒரு மரத்தடியில் உட்கார்ந்திருந்தபொழுது அரசன் சென்று வணங்கிக் கைகட்டி வாய்புதைத்து நின்று, 'அளவற்ற செல்வத்தை அள்ளி அள்ளி இறைத்துவிட்டு இங்குவந்து என்ன அடைந்தீர்' என்றுகேட்க, அதற்கு அடிகள், 'நாம் இருக்க, நீர் நிற்க உள்ள நிலைமையை அடைந்தோம்' என்று கூறினர் என்பது ஒரு செவிவழிச் செய்தியான வரலாறு. பெருஞ்செல்வத்தில் இருந்தபொழுது அடிகள் அரசன் கட்டளைக்குக் கீழ்ப்படிய வேண்டியிருந்தது. ஆண்டியானபொழுது அரசன் அவருக்குப் பணியவேண்டிய நிலை உண்டாயிற்று. இதுதான் துறவின் பெருமை.

பட்டினத்து அடிகளது துறவு போன்ற உண்மைத் துறவு, ஞானத்தினலே உண்டாவதாகும் என்பது அவரது வரலாற்றிலேயே தெரிகின்றது. ஞானமாவது, 'நிலைத்த பொருள் இது; நிலையாத பொருள் இது' என்று உள்ளவாறு உணர்ந்து நிலையாத பொருளை விடுத்து, நிலைத்த பொருளைப் பற்றுவதாகும்.

இவ்வாறு உணர்ந்து பற்றும் நிலை நல்லாசிரியர் வழியாக அன்றி வாராது என்பது பட்டினத்தடிகட்கு மேற்சொல்லிய வாறு கிடைத்த உபதேசத்தால் விளங்கும். ஆகவே, நல்ல ஆசிரியரை அடைந்து உண்மை ஞானம் பெற்று நிலைத்த பொருளைப் பற்றப்பற்ற, நிலையாத பொருளில் உள்ள பற்று முற்றிலும் நீங்குவதாகும்.

" பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு "

என்கின்றார் திருவள்ளுவர்.

" பற்றை அறுப்பதோர் பற்றினைப் பற்றில்அப்
பற்றை அறுப்பரென் றுந்தீபற "

என்பது திருவுந்தியார். பற்றற்றான் பற்றினை விடாதுபற்றிக் கொண்டிருந்தால் உலகப்பற்றுப் பற்றாதொழியும்; அவனைப் பற்றும் பற்றுச் சிறிது நழுவினாலும் உலகம் வந்து பற்றும். ஆகவே, பற்றற்றான் பற்றினை விடாது பற்றுகின்றவரே உலகப் பற்றுநீங்கினவராவர் என்பதைத் திருவுந்தியார் என்னும் சீரிய நூல்,

" எட்டுக்கொண் டார்தமை தொட்டுக்கொண் டேநின்றார்
விட்டார் உலகம்என் றுந்தீபற;
விடேவி டாகுமென் றுந்தீபற "

என்பதனால் விளங்குகின்றது. இந்நிலையே சார்புணர்ந்து சார்புகெட ஒழுகும் நிட்டை நிலையாகும்.

" தலைப்பட்டார் தீரத் துறந்தார்; மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர் "

என்னும் குறளில், " தலைப்பட்டார் " என்றும், " தீரத் துறந்தார் " என்றும் சொல்லப்பட்டவர் மேற்கூறிய நிலையை அடைந்தவரே.

இத்தகைய முற்றத் துறந்த முனிவர்கள் உலகத்தையே ஆக்கவும், அழிக்கவும் ஆன பேராற்றல் உடையவராய் இருப்பர் என்பதைத் திருமூலர்,

" தானே படைத்திட வல்லவ னாயிடும்;
தானே அளித்திட வல்லவ னாயிடும்;
தானே சங்காரத் தலைவனு மாயிடும்;
தானே சிவன்எனும் தன்மைய னாமே "

என்று விளக்குகின்ருர். இத்தகைய ஆற்றல் இருப்பினும் அதனே அவர்கள் கையாள்வதில்லே என்பதை,

“ எல்லாம் அறியும் அறிவுறினும் ஈங்கிவர்ஒன்
றல்லா தறியார் அற ”

என்னும் திருவருட் பயனுல் அறியலாம்.

‘ஞானிகள் உறங்கினுல் உலகம் உறங்கிவிடும். ஞானிகள் விழித்தால் உலகம் விழிக்கும். ஞானிகட்குச் சினம் உண்டாகாது; உண்டாகுமாயின் உலகம் தாங்காது’ என்பதை,

“ தாம்அடங்க இந்தத் தலம்அடங்கும்; தாபதர்கள்
தாம்உணரின் இந்தத் தலம்உணரும் — தாம்முனியில்
பூமடந்தை நில்லாள்; புகழ்மடந்தை போயகலும்;
நாமடந்தை நில்லாள் நயந்து ”

என்று விரிக்கின்றது திருக்களிற்றுப்படியார். இதனேயே,

“ குணமென்னும் குன்றேறி நின்ருர் வெகுளி
கணமேயும் காத்த லரிது ”

என்றும்,

“ ஏந்திய கொள்கையார் சீறின், இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும் ”

என்றும் கூறினர் திருவள்ளுவர். இதனுள் “ வேந்தன் ” என்றது இந்திரனே என்பதும், ‘அவன் கெடும்’ என்றது நகுடன் வரலாறு பற்றி என்பதும் பரிமேலழகர் உரையான் உணர்க. இன்னும்,

“ ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி ”

“ நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும் ”

என்னும் குறள்களால் ஞானிகளது பெருமையைத் திருவள்ளுவர் இனிது விளக்குகின்ருர்.

ஞானிகட்குப் பிறர்வழிபாடு செய்யினும், இடையூறு செய்யினும் அவைகளே இறைவன் தனக்குச் செய்யப்பட்டனவாகவே கொண்டு அவற்றிற்குரிய நன்மை தீமைகளே அவர்கட்கு மிக விளேப்பான் என்பதைத் திருமந்திரம்,

" சிவனும்இவன் செய்தியெலாம் என்செய்தி என்றும்
செய்ததெனக்த இவனுக்குச் செய்ததென்றும் "

எனக் கூறுகின்றது. இவற்றிற்கு இலக்கியமாக ஞானசம்பந்தர் மதுரையில் எழுந்தருளியிருந்த திருமடத்தில் தீயிட்ட சமணரது செயலுக்கு உடந்தையாயிருந்தமைபற்றி, அத் தீ பாண்டியனைச் சென்று பற்றினமையை அறிகின்றோம். அவர் பின்பு அப் பாண்டியன்மேல் அருள்நோக்கம் வைத்து வெப்புநோயை நீக்கி "வேந்தனும் ஓங்குக" என்று வாழ்த்தியபொழுது, 'ஓங்குக' என்னும் சொல்லாற்றலால் அவனது உடம்பில் இருந்த கூனும் நீங்கி 'நெடுமாறன்' ஆயினமையும் அறியற்பாலது.

இவற்றால் மெய்யுணர்வால் உலகத்தை முற்றத் துறந்த நீத்தாரது பெருமையே எல்லாப் பெருமைகளினும் சிறந்தது என்பது இனிது விளங்குதல் பற்றி,

" இருமை வகைதெரிந்து ஈண்டு அறம்பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு "

என்றார் திருவள்ளுவர். ஆகவே, அருள் நெறியில் போற்றப் படும் ஞானிகளது பெருமையே அறநெறியிலும் சிறந்ததாகப் போற்றப்படுதலை உணர்ந்து ஞானம் ஒன்றையே விரும்பி உலகம் உய்வதாக.



## பன்னிரு ஜோதிர்லிங்கத் தலங்கள்

சௌராஷ்ட்ரே ஸோமநாதம் ச ஸ்ரீசைலே மல்லிகார்ஜுனம்
உஜ்ஜயின்யாம் மஹாகாளம் ஓங்காரம் அமலேச்வரம்
பரல்யாம் வைத்யநாதம் ச டாகின்யாம் பீமசங்கரம்
ஸேதுபந்தே து ராமேசம் நாகேசம் தாருகாவனே
வாராணஸ்யாம் து விச்வேசம் த்ரயம்பகம் கௌதமீதடே
ஹிமாலயே து கேதாரம் குஸ்மேசம் ச சிவாலயே
ஏதாநி ஜ்யோதிர்லிங்காநி ஸாயம் ப்ராத: படேன்நர:
ஸப்த ஜன்மக்ருதம் பாபம் ஸ்மரணேன விநச்யதி.

மடாதிபதி

திருவாவடுதுறை ஆலயம்

# "ஞானசம்பந்தம்" திங்கள் இதழ் சந்தாதாரர்களுக்கு ஓர் அறிவிப்பு.

"ஞானசம்பந்தம்" திங்களிதழ் சைவமும் தமிழும் தழைத்தினிதோங்க, தக்க வகையில் பணி ஆற்றி வருவதைத் தமிழ்மக்கள் நன்கு அறிவர். ஞானசம்பந்தத்திற்கு முப்பத்திரண்டு ஆண்டு நிறைவுபெற்று முப்பத்துமூன்றாவதாண்டு நடைபெற்று வருகிறது என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக்கொள்கிறோம்.

காகிதவிலை உயர்வு முதலிய சில இன்றியமையாத காரணங்களால் சந்தாத்தொகை சிறிது உயர்த்தப் பெற்றுள்ளது. ஞானசம்பந்தம் சந்தாதாரர்கள் வழக்கம்போல் சந்தா செலுத்தி ஞானசம்பந்தம் பெற்று நலமடைய வேண்டுகிறோம்.

இன்றுவரை சந்தா அனுப்பாதவர்கள் தனி அறிவிப்பை எதிர்பாராமல் உடன் சந்தா செலுத்த வேண்டுகிறோம்.

| | | | |
|---|---|---|---|
| ஆயுள் சந்தா | .... .... | ரூ | 100—00 |
| ஆண்டுச் சந்தா (உள்நாடு) | | ரூ. | 5—00 |
| ,, (வெளிநாடு) | | ரூ. | 7—00 |
| தனி இதழ் | .... ... | பைசா. | 0—50 |

கட்டணம் அனுப்பவேண்டிய முகவரி:-

செயலாளர்,
ஞானசம்பந்தம் செயலகம்,
தருமபுரம், மாயூரம் 609001
தஞ்சை மாவட்டம்.